அண்ணுமலைப் பல்கலைக்கழக சரித்திர வெளியீடு-16.

# இந்திய வரலாறு

## கி. பி. 1200-வரை.

முதற்பாகம்.

ஆக்கியோர் :-

*வரலாற்றுப்பேராசிரியர்*

R. சத்தியநாதய்யர், எம். ஏ.,

*வரலாற்றுவிரிவுரையாளர்*

D. பாலசுப்பிரமணியம், எம். ஏ.,




அண்ணுமலைப் பல்கலைக்கழகம்

1959.

# ஆக்கியோருரை.

நாட்டுமொழியில் நாட்டம் மிகைபெற்றுவரும் இந்நாளில், கல்லூரி மாணவர்கட்குப் பயன்படும் வகையில் இயற்றப் பெற்ற "இந்திய வரலாறு" என்னும் இத்தமிழ் நூலை அண்ணுமலைப் பல்கலைக்கழகம் வெளியிடுகிறது. இப்பணியை தமிழுலகம் வரவேற்குமென நம்புகிறோம்.

ஆக்கியோர்.

# பொருளடக்கம்.

## அதிகாரம் 1.

### முன்னுரை.



## அதிகாரம் 2.

### வேதகாலம்.

[சுமார் கி. மு. 2000 – 600]

## அதிகாரம் 3

### சிசுநாகர் நந்தர் காலப் பகுதி.



## அதிகாரம் 4.

### மோரியர் பேரரசு (கி. மு. சுமார் 325—188)

## அதிகாரம் 5.

### கி. மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி. பி. மூன்றாம் நூற்றாண்டு வரை.



## அதிகாரம் 6.

### குப்தர்காலம்.

## அதிகாரம் 7.

### கி பி. 600-முதல் 900-வரை இந்திய வாலாறு.

## அதிகாரம் 8.

## இந்தியா (900-முதல் 1200-வரை.

## அதிகாரம் 9.

### கடல்கடந்த இந்திய நாகரிகம்.



## நாட்டுப்படங்கள்.



---

# இந்திய வரலாறு.

## (கி. பி. 1200 வரை)

### அதிகாரம் 1

## முன்னுரை.

பகுதி-1

***நில அமைப்பும், வரலாறும்:*** மக்கள் வாழ்க்கை, சூழ்நிலையால் மாறுதலடைகின்றது. ஆனல் நாகரிக முன்னேற்றத்தின் விளைவாக, மக்கள், இயற்கை முறைகளை மாறுபடுத்தியும் பயன்படுத்தி வருவது கண்கூடு. ஆயினும் விஞ்ஞானம் இயற்கையை ஓரளவே கட்டுப்படுத்த இயலும். இக்காலத்திலும் வரலாற்றின் போக்கு பூகோள நிலையினல் சிறிதளவேனும் மாறுதலடைவதில்லை என்று கூறமுடியாது. வாணிகத்தின் பொருட்டு மூலப்பொருள்கள் ஒரு குறிப்பிட்ட அளவுக்கே உண்டுபண்ண முடியும். மேலும் தாதுப்பொருள்கள் கண்டுபிடிக்கப்படுகின்றனவே யன்றி புதிதாகத் தோற்றுவிக்கப் படக்கூடியனவல்ல. ஒரு நாட்டின் இயற்கைநிலை எத்துணை அளவு மாற்றப்பட இயலாதோ அத்துணை அளவு மக்களின் செயல் கட்டுப்படுத்தப்படும். ஆதலால் வரலாற்றறிஞர்கள் பல்வேறு நாடுகளின் இயற்கை அமைப்புகளையும் நிலநூல் வரலாற்றையும் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகின்றது. குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் மட்டுமேயன்றி அவற்றின் கால முறையையும் வரலாறு என்னும் சொல் குறிப்பிடும். ஆகவே நில இயல்பால் வரலாறு ஓரளவுக்கு மாறுபாடு அடைவது உண்மையாயினும் செயற்கைச் சக்திகளே அதனைச் சிறப்பாக உருப்படுத்துகின்றன. இனத்தைப் பற்றிய பண்புகள் பூகோளப் பண்புகளுடன் இணைக்கப்பட்டிருப்பினும் இரண்டும்

வெவ்வேருனவை என இன்று ஒத்துக்கொள்ளப்படுகின்றது. பூகோளம், இனம், இவற்றைத் தவிர மக்கட் கூட்டத்தின் இயக்கமும் ஆராய்வதற்குரிய ஒன்ருகும். மக்கட் கூட்டம் சீர்மையுற்ருலன்றி ஒருவன் நாகரிகமாக வாழமுடியாது. நம் முடைய செயல்கள் பிறமக்களால் விரிவுறச் செய்யப்படுவதோ அல்லது அடக்கப்படுவதோ இயல்பு. ஆகவே, இதனுல் ஒரு நாட்டின் வரலாறு மற்ருெரு நாட்டின் வரலாற்றினுல் நன்மை அல்லது தீமையை அடைவது தெளிவாகும். எடுத்துக் காட்டாக. கீழ்நாடுகளின் இக்கால மறுமலர்ச்சி மேல்நாடுகளின் பேரரசு விருப்பத்தினுலும், ஜப்பானின் எழுச்சியாலும் உருவாக் கப்பட்டதென்பது நோக்கத்தகும்.

**இந்தியா – ஆசியாவின் இத்தாலி:** இந்தியா, ஆசி யாவின் இத்தாலி என்று கூறப்படும். பூகோள அமைப்பைப் பொறுத்தவரை இவ்வொற்றுமை தகுதியுடையதன்று என்பதற் கில்லை ஆல்ப்ஸ் மலை அங்கிருப்பதுபோல் இமயமலை இந்தி யாவில் அமைந்துளது. இருநாடுகளிலும் வடகிழக்கு வழியை விட வடமேற்கு வழிகள் பிறரால் துன்பந்தரும் நிலையிலுள்ளன. போஆற்றுச் சமவெளியைப் போலவே கங்கை வெளியும் அயலார் விரும்பி படையெடுக்கத் தக்கனவாயமைந் திருந்ததும் குறிப்பிடத்தகும். ஒருவகையில் இத்தாலிய வரலாறும், இந்திய வரலாறும் அந்நாடுகளைச் சூறையாடியவர் களின் கதைகளை மிகுதியாகக் கொண்டிருப்பதும் நோக்கற் பாலது. இத்தாலியின் அப்பின்னைன் மலைத்தொடரும் இந்தியாவின் விந்தியமலையும் உருவத்தில் வேறுபட்டிருப்பினும், இருநாடு களின் அமைப்பிலும், கண்டப் பகுதி (Continental division) தீபகற்பப் பகுதி என்ற பிரிவுகளைக் காண்கிறோம். தென்னிந்தி யாவின் கிழக்கு ஆற்றுப் படுகைகள், இத்தாலியின் எட்ருரியா, லாட்டியம், காம்பேனியா சமவெளிகளை ஒத்துள்ளன. கூமே முதல் டாரண்டம் வரையுள்ள கடலோரத்தின் அமைப்பு, சிறிதளவு, மலையாளம், சோழமண்டலக் கரையோரங்களை ஒத்ததாகும். இலங்கைத் தீவு, சிசிலித்தீவுக்கு ஒப்பாகும் இத்தாலியும், இந்தியாவும் மத்தியதரைக் கடலிலும், இந்துப்பேராழியிலும் முறையே இடைப் பகுதியிலுள்ளன

டஸ்கன் கடலும், அட்ரயாடிக் கடலும், அரேபியன் கடலே யும், வங்காளக்குடாக் கடலேயும் நமக்கு நினேவூட்டும். பெரும் பான்மையாக இருநாடுகளும் உழவுத் தொழிலினுல் வளம் பெறுபவை. இருநாடுகளும் காலப்போக்கில், போர், வறுமை முதலிய இடுக்கண்களினின்று அடிக்கடி நீங்கி விரைவாக முன்னேறி வந்துள்ளன. இரண்டும் கடல் வலிமையைவிட சிறப்பாக நிலப்படை வலிமைமிக்க நாடுகளாகவே திகழ்ந்து வந்துள்ளன. மிக இன்றியமையாத காலங்களில் மட்டுமே கடற்படை அமைக்கப்பட்டதை இருநாட்டு வரலாறுகளிலும் காண்கிறோம். இக்கால ஐரோப்பிய நாகரிகத்திற்கு இத்தாலி வழிகாட்டியா யிருந்தது. இந்தியா, ஆசிய நாகரிகத்தின் சிகர மாக கருதப்படலாம். ஆனுல் இத்தாலியில் ரோம் நகரம் சிறப்புப் பொருந்தியிருந்ததுபோல் இந்தியாவில் ஓர் தலேநகர் நிலேயாக ஏற்பட்டிருக்கவில்லே. ஒரு அயல்நாட்டு அறிஞரால், 16-ம் நூற்றுண்டில் விஜயநகரம், இந்தியாவின் ரோம் என்று புகழப் பெற்றிருப்பினும், அதன் உயர்நிலே இந்தியாவின் ஒரு பகுதியில் மட்டுமே ஏற்பட்டிருந்தது. மேலும் ரோமாபுரியைப் போல், விஜயநகரம், உள்நாட்டு வெளிநாட்டு அலுவல்களில் அத்துணே சிறப்பான நிலேயை எய்தவில்லே

**மலேத்தொடர்கள் :** வாடையினின்றும் வடக்கிலிருந்து வரும் படையெடுப்பாளரிடமிருந்தும் இந்தியாவை இமயமலேத் தொடர் காப்பாற்றியுள்ளது. வட இந்தியாவின் தட்ப வெப்ப மும் அம் மலேத் தொடரினுல் ஏற்றதாகச் செய்யப்பட்டுள்ளது. சீனுவையும் இந்தியாவையும் இஃது பிரிப்பதையும் காண்கி ரோம். முப்பெரும் ஆறுகள் ஓடுவதற்கும் வேறு பல வகை யான பொருள்கள் விளேவதற்கும் இமயமலேத் தொடர் காரணமாகும். உலகினர் அதன் உயரத்தை அளவிட முயன் றும் வெற்றிபெறவில்லே. சிவன், பார்வதி ஆகிய இந்து கடவுள்களின் இருப்பிடமாக இமயம் கருதப்படுகிறது. இமய மலேயைச் சூழ்ந்த நாடுகள் தனித்த அரசியலுடன் கூடியதாக இருந்தன. காஷ்மீரம் மட்டில் கடந்துபோன வரலாற்றில் சிறப்பான நிலேயைடைந்துள்ளது. விந்திய மலே, தென்னிந்தியாவை வடக்கினின்று பிரிக்கும் ஓர் சுவர்போல

இருக்கின்றது. வடநாட்டு ஆதிக்கம் தெற்கிலும் தென்னுட்டு ஆதிக்கம் வடக்கிலும் நீண்டகாலம் ஒருபொழுதும் நிலையாக ஏற்பட்டிருக்கவில்லை. இருபெரும் பிரிவுகளான வட இந்தியா விற்கும், தென்னிந்தியாவுக்கும் ஏற்படும் உறவைத் தடை செய்யும் ஓர் அரணுக விந்தியமலை நின்றது இதனுல் வட இந்தியாவிலேற்பட்ட அரசியல் குழப்பங்கள் தெற்கில் பரவாது தென்னிந்தியா காப்பாற்றப்பட்டு வந்தது. மேற்குத் தொடர்ச்சி மலையும் கிழக்குத்தொடர்ச்சி மலையும் முக்கோண வடிவான பீடபூமி (தென்னிந்தியா)யைச் சுற்றி அமைந்துள் ளன. மேற்குக் கடற்கரை குறுகியிருப்பதும் கிழக்குக் கடற் கரை அகன்றிருப்பதும் நன்கு புலப்படுகிறது. தென்னிந்திய பீடபூமி மேற்கிலுயர்ந்தும், கிழக்கில் பள்ளமாகவுமிருக்கின்றது. இதனுல் ஆறுகளின் நீரோட்டமும் மேற்கிலிருந்து கிழக்காகவே செல்கிறது. கிழக்குக்கரையில் பல பெரும் ஆற்றுக்கழிகளி ருப்பதும் இதனுலேயே ஆகும். மலைத்தொடர்களும் ஊடுருவிச செல்லமுடியாத காடுகளும் இந்தியாவில் பலவகை யான கலைப்பண்புகள் நிலவுவதற்கு ஓர் காரணமாயுள்ளன. அரசியல் முன்னேற்றத்திற்கும் அறிவு வளர்ச்சிக்கும் உதவும் சில பொருள்களை அவை ஈன்ற போதிலும், மாறுபாடான வகையில் முன்னேற்றத்தைத் தடைப்படுத்தவும் அவை காரண மாயின என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**ஆறுகளும் சமவெளிகளும் :** ஆற்றுப்படுகைகளில் நாகரிகம் தோன்றி வளர்வது இயற்கை. இந்திய வரலாற்றி லும் இப் பண்பை காண்கிறோம். இந்தியா என்ற சொல் சிந்து என்ற ஆற்றின் பெயரிலிருந்து தோன்றியதாகும். சிந்து மாகாணமும் அவ்வாற்றினின்றே அப் பெயரைப் பெற்றது. தம்முடைய இன்றியமையா வளத்திற்காக இயற்கையுடன் போராட வேண்டிய நிலையிலுள்ள ஒரு மக்கட் கூட்டம் நாகரிகத்தில் மிக உயர்ந்த நிலையை எய்துவது இயலாத தாகும். இன்றியமையாத் தேவைகளைப் பெற்று வளமான வாழ்க்கை நிலையை யுடையவர்களே, தம் கருத்தை சிறப்பான பல்வேறு செய்திகளில் செலுத்தக்கூடும். ஆதலால் நல் வாழ்க்கை என்பது செல்வம் வாய்ந்த நாடுகளிலும் பேரரசு

களிலுமே அமையும். பெரும் ஆறுகளால் பயனடையும் அகன்ற சமவெளிகள் அல்லது வண்டல் படிந்த ஆற்றுக்கழி கள், ஒரு குறிப்பிட்ட நாட்டின் அரசியல் மேன்மைக்கும், பொருளாதார, கலைப்பண்பு, உயர்வுக்கும் சிறந்த காரணமா கும் ஆகவே நம்முடைய வரலாற்றில், சிந்து கங்கைச் சமவெளி. பேரரசு வளர்ச்சிக்கும் அறிவு முன்னேற்றத்திற் கும் ஏற்றதாக அமைந்துள்ளது. மகாநதி, கோதாவரி, கிருஷ்ணு, காவிரி, வைகை, பொருநை முதலிய ஆற்றுக்கழி கள் தென்னிந்திய வரலாற்றில் சிறப்பான பல நன்மைக்கு இடமாயிருந்தன. மேற்குக் கடலோரத்திலுள்ள சிறிய சம வெளிகள் பல குறுநில மன்னர்களின் எழுச்சிக்குக் காரண மாயின. கி பி. 17 18-ம் நூற்றுண்டுகளில் காணப்பட்ட மகாராஷ்டிர நாடு போதுமான செல்வத்தையும் வளத்தையும் இயற்கையில் பெற்றிருததால் கொள்ளைகளின் மூலம் வளர்ச்சியுற வேண்டியதாயிற்று. பேரரசு, நாகரிகம் முதலியவற்றின் வளர்ச்சியாலேற்படும் செலவுகளை சமவெளிப் பகுதிகளே தாங்கமுடியும் ஆனல் சமவெளிகள் சடாதார மான உயர்வுக்குக் **(Material prosperity)** காரணமாயின போதிலும் குடியாட்சி முறைக்கும் உள்நாட்டு உரிமைக்கும் பகையாயிருந்தமை குறிப்பிடத்தகும்.

கி. மு. 6-ம் நூற்றுண்டில் சாக்கியமலைநாட்டுக்குடியரசு, புத்தர் என்ற குடியாட்சி ஆதரவாளரைத் தோற்றுவித்தது. ஆனல் சிறிது சிறிதாக வளமான அடிப்படைகளைக் கொண்ட முடியாட்சி இராச்சியங்கள் தோன்றி குடியாட்சி முறையை அழித்தன. இதுபோலவே பண்டைய கிரீசின் பெரும் நகர இராச்சியங்கள், இரண்டாம் பிலிப், அலெக்சாந்தர் ஆகியோரின் கீழ்வளர்ந்த மாசிடோனிய அரசினுல் கவரப்பட்டதும் நினைவு கூரத்தகும். ஆறுகள், எல்லைகளாகவும் அமைவதால் அவற்றின் சிறப்பு மிகுதியாகும். வாணிகத்துறையிலும் அரசியல் துறை யிலும் அவற்றின் சிறப்பு புறக்கணிக்கப்படக் கூடியதல்ல. இந்தியாவின், பண்டைய, இடைக்கால வரலாற்றில் கிருஷ்ணு, துங்கபத்திரை எல்லை அமைப்பு சிறப்பான பெருமை பெற்றிருக் கின்றது. பாடலிபுத்திரம், கனேசி, டெல்லி காஞ்சி,

தஞ்சாவூர், உறையூர், மதுரை முதலிய பெரும் தலைநகர்கள் சமவெளிகளில் அமைந்திருப்பதும் நோக்கற்பாலது. விசய நகரம் இதற்கு விலக்காகும். இந்தியாவின் பெரிய பாலை வனம் பண்டைக் காலத்தில் வட இந்தியாவைக் காப்பாற்றவும், சிந்துவெளியை நாட்டின்மற்ற பகுதியினின்று பிரிக்கவும் உதவியது.

**கடற்கரையும் தட்ப வெப்ப நிலையும்:—** வேறு சில நாடுகளுடன் ஒப்பிடுமிடத்து இந்தியாவின் கடற்கரை உடை படாதிருப்பதாகவே கூறவேண்டும். மேலும், இந்தியாவுக்கும் பிறநாடுகளுக்கும் தொடர்ந்து கடல் வாணிகம் நடைபெற்று வந்த போதிலும், கடல் வலிமை மிக்க இந்திய நாடுகள் மிகவும் குறைவாகவே இருந்தன. சோழர்; சேரர், சிறிதளவு மகா ராஷ்டிரர் ஆகியோரே விதிவிலக்காக கடல் வலிமை பெற்றிருந் தனர். இந்தியாவின் வெப்பமானநிலை மக்களின் ஆழ்ந்த முயற்சிக்கு ஏற்றதாக இல்லை. ஆனால் வேறுவகையான தட்ப வெப்பநிலையில் வாழ்ந்தோருக்கே இந்தியாவின் வெப்பம் அதிக துன்பத்தைத் தந்தது. இந்தியாவில் படையெடுத்த கொடிய பல இனத்தினர் இந்தியாவின் தட்ப வெப்ப நிலை யினால் அமைதிபெறலாயினர். ஆனால் காலப் போக்கில் அவர் களிடம் காணப்பட்ட சீர்கேடுகள் வேறு காரணங்களைப் பொறுத்ததாகும் கி பி. 12-ம் நூற்றாண்டின் முடிவில் இந்தியா பெருந்தோல்வியை யடையுந் தருவாயிலும் மக்களின் ஆண் மையும் வீரமும் குன்றவில்லை தட்ப வெப்ப நிலையினாலேற் படும் விளைவுகளை, பெரும்பான்மையாக மக்களின் ஒழுங்கான முயற்சிகளால் மாற்றிவிட முடியும் என்பது இதனால் தெளிவா கிறது. இந்தியர் அரசியல் துறையில் மிகுந்த கருத்தைச் செலுத்தாதிருந்தமைக்கு தட்பவெப்பநிலை காரணமாகுமென்பது சிலர் கூற்று. சிலர், நமது அருஞ்செயல்கள் பலவற்றிற்கும் இந்தியாவின் பூகோள அமைப்பே காரணமென்றும் கருதுவர். நமது நற்செயல்களும் இழுக்கான செயல்களும் மிகப்பெரியன என்பதில் ஐயமில்லை. ஆனால் அவற்றை நிலையில்லா மற்றய பண்புகளுடன் இணைப்பதில் யாதும் பயனில்லை.

---

## பகுதி-2.

### இனம், மொழி ஆகியவற்றின் பாகுபாடுகள்.

### *மக்கள் ஏழுவகையினர் என்ற கோட்பாடு.*

*இந்தியாவின் மக்கள் ஏழு வகையினராகக் கூறப்படும். 1. காஷ்மீரம், பஞ்சாப் இராசபுதனம் முதலிய இடங்களில் வாழும் இந்தோ ஆரியர்; 2. சென்னை ஹைதராபாத், மத்திய மாகாணங்கள், சோடாநாகபுரி, மத்திய இந்தியா ஆகியவற்றில் வாழும் திராவிடர். 3. பர்மா, நேபாளம், அஸ்ஸாம் ஆகிய இடங்களில் வாழும் மங்கோலியர். 4. பீஹாரிலும், ஐக்கிய மாகாணங்களிலும் வாழும் ஆரியத் திராவிடர். 5. வங்காளம், ஒரிசா ஆகிய விடங்களில் வாழும் மங்கோலியத் திராவிடர். 6. மகாராட்டிரத்தில் வாழும் சித்தியத் திராவிடர். 7. பெலூசித்தானம், வடமேற்கு எல்லை மாகாணம் ஆகியவற்றில் வாழும் துருக்கிய இரானியர் நிறம், உடலமைப்பு, தலை, மூக்கு முதலியவற்றின் அளவு முதலான பண்புகளைக் கொண்டே இவ்வகையான பாகுபாடு ஏற்பட்டுள்ளது. இத் தகைய வேறுபாடுகளுக்கு அயலார் வருகையும் படையெடுப்பு களும் காரணங்களாகும். ஆகவே, இக்கால நிலை, கடந்த காலத்தை நமக்கு நினைவூட்டுகிறது ஆனால் இப்பாகுபாடு சிறப்பான சில கூறுகளையொட்டியே ஏற்பட்டதாகும். மக்கட் பிரிவுகளின் பெயர்களும் இனத் தோற்றத்தைப் பற்றிய சில கோட்பாடுகளைப் பொறுத்தே அமையப் பெற்றன மொழியை அடிப்படையாகக் கொண்டு இனவேறுபாடு செய்வது தவறு என்றும் சிலர் கூறுப. எடுத்துக்காட்டாக, தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய பல மொழிகள் பேசும் கூட்டத் தினருக்குத் திராவிட இனத்தவர் என்றபெயர் வழங்கக் காண் கிறோம். இம்மொழிகள் பேசுவோரிடம் இன ஒற்றுமை காணப் படுவதும் நோக்கத்தக்கது. மேலும், மகாராட்டிரர் வங்கா ளியர் ஆகிய வகுப்பினரின் இனத்தில் முறையே, சித்தியர், மங்கோலியர் ஆகியோரின் இனப் பண்புகள் இணைந்துள்ளன என்ற கோட்பாடு சிலரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. தவிர, நாம் குறிப்பிட்ட ஏழுவகைப் பிரிவில் திராவிடருக்கு முந்தி*

யிருந்த இனத்தினரைப் பற்றி யாதும் குறிப்பிடப்படவில்லை. சிலர், உடலமைப்புவேறுபாடுகள், நிலையுள்ளன அல்ல வென்று கருதுவர். சிலமக்கள் செயற்கை முறையில் உடலமைப்பில் மாறுபாடுகளை ஏற்படுத்திக் கொள்கின்றன ரென்றும் அவர்கள் குறிப்பிடுவர் ஆனால் இக்காரணங்களைக் கொண்டு இந்தியாவில் கலப்பு இனம் ஏற்பட்டதை மறுக்க முடியாது. பரந்த நோக்குடன் ஆராயுமிடத்து மூன்று பிரிவுகள் புலப்படும். திராவிடருக்கு முந்தியிருந்தோர், — (மலை காடு களில் வாழ்ந்தவர்கள்.) திராவிடர், இந்திய ஆரியர் என் பனவாம்

**ஆரிய திராவிட மொழிகள்:-** மொழிவழிப் பிரிவில், ஆரியர், திராவிடர், முண்டர் ஆகிய மூன்று சிறப்பான கூட்டத் தினர் குறிப்பிடத்தக்கோர். முண்டர் என்பார். ஒரிஸ்ஸாவில் வாழ்பவராவர். மராத்தியும் ப்ராஹுயி (Brahui) மொழியும் நீங்கலாக மற்றய தென்னிந்திய மொழிகளனைத்தும் திராவிடப் பிரிவைச் சேர்ந்தன. சமஸ்கிருதம் முதலான வடமொழிகளும் மராத்தியும் ஆரியப் பிரிவைச்சாரும். மொழி. வேறுபாடுகள், ஆரியரும் திராவிடரும் இந்தியாவில் படையெடுத்தவர்களாவ ரென்ற கோட்பாட்டை வலியுறுத்தும். திராவிடர் என்பார் இந்தியாவிலேயே தோன்றியவர்களல்ல வென்றும், மத்திய தரைக் கடற்பகுதியைச் சார்ந்த இனத்தவரென்றும், புதிய கற்காலத் தொடக்கத்தில் ஈண்டு வந்தனரென்றும் சில அறிஞர்கள் கூறுவர்.†

## பகுதி-3

### இந்திய வரலாற்றின் காலப்பகுதிகள்.

இந்திய வரலாறு, இந்து, முஸ்லிம், ஆங்கிலேயப் பகுதிகளென மரபாகப் பிரிக்கப்பட்டு வரும் முறையை இக் காலத்திய பல அறிஞர் ஏற்றுக்கொள்ளவில்லை, குறிப்பிட்ட காலத்தில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய அரசிய

† V. Rangacharya, History of Pre-Musalman India I (1929) pp. 69–89.

லாரின் பெயரைக்கொண்டு காலப்பகுதிகள் பிரிக்கப் படலாம். ஆனல் அவ்வாறு செய்வதில் சில கட்டுப்பாடுக ளிருப்பதையும் நோக்குதல் இன்றியமையாததாகும். எடுத்துக் காட்டாக. இந்துக்களின் ஆட்சிப் பகுதி, அரேபியர் சிந்து நாட்டை வென்றதுடனே அல்லது முகம்மது கஜினியின் பல படையெழுச்சிகளுடனே முடிவுற்றதாகக் கூற முடியாது. கி பி. பனிரெண்டாம் நூற்றுண்டின் முடிவில் முகம்மது கோரியின் இறுதியான வெற்றியுடன்தான் முன் குறிப்பிடப்பட்ட காலப் பகுதி முடிவுற்றதாகக் கருதவேண்டும். முகமதிய ஆட்சிப் பகுதியின் முடிவும், கி பி. 1700ல் ஔரங்கசீப்பின் தோல்வி யுடன் ஏற்பட்ட மகாராட்டிரரின் உயர்நிலையும் ஒரே காலத்தில் அமைந்திருப்பது நோக்கத்தக்கது கி. பி பதினெட்டாம் நூற்றுண்டு (1772 வரை) மகாராட்டிரரின் சிறப்பான நிலையைக் குறிக்கும். ஆனல் அந்நூற்றுண்டு. வெல்லஸ்லி என்ற ஆங்கிலேய அதிகாரி (கவர்னர் - ஜெனரல்) ஆங்கிலேய அதிகாரத்தை நிலைபெறச் செய்ததுடன் முடிவடைந்தது. 1708ல் ஆங்கிலேயக் கிழக்கிந்திய ('கம்பெனிகள்") வணிகக் குழுக்கள் ஒன்ருக இணைக்கப் பெற்றது, அவர் ஆட்சியின் விரைவான வளர்ச்சியைத் தொடக்கியதாகக் கூறலாம்

அரேபியர் சிந்து வெளியில் புகுந்தது முதல். முகம்மதிய ஆட்சி தொடங்கியதாகக் கூறமுடியாதது போலவே, 1600ல் ஆங்கிலேயக் கிழக்கிந்தியச்சங்கம் (கம்பெனி) ஏற்பட்டது முதல் அவர்தம் ஆட்சிக் காலம். இந்தியாவில் தொடங்கிய தாகக் கூறமுடியாது. வட இந்தியாவில் முகம்மதிய ஆட்சி ஏற்பட்ட ஒரு நூற்றுண்டுக்குப் பின்னரே தென்னிந்தியாவில் அஃது ஏற்பட்டதும் நோக்கற்பாலது. தென்னிந்திய முகம்மதிய ஆட்சியின் சிறப்பு வேறுவகையானது. விஜயநகரப் பேரரசும் மகாராட்டிரர் எழுச்சியும், இஸ்லாமின் வளர்ச்சியை மிகவும் தடைப்படுத்தின. ஒரு வகையில் தென்னிந்திய வரலாற்றில் முகம்மதிய ஆட்சிப்பகுதி என தனித்த ஒன்று இல்லை எனலாம். முடிவாக இந்து, முகம்மதிய, ஆங்கிலேய, ஆட்சிப் பகுதிகள் என மூன்று வகையாகப் பிரிக்கும் முறை, குறைபாடு களுடைய தெனினும், மற்ற முறைகளைவிடச் சிறந்ததென்பதில் ஐயமில்லை.

**மற்றொரு முறை:** ஐரோப்பிய வரலாறு பண்டைக் காலம், இடைக் காலம், புதிய காலம் என மூவகையாகப் பிரிக்கப்பெறும். பண்டைக்கால நாகரிகத்தை முடிவுறச்செய்து, இருண்ட காலம் கி. பி ஐந்தாம் நூற்றாண்டில் தொடங்குவதும், மறுமலர்ச்சி, கி. பி. பதினாறும் நூற்றாண்டில் தோன்றுவதும் யாம றிந்ததே. அதே முறையை இந்திய வரலாற்றில் பின்பற்றுவது நலமன்று. முதல் (காலப்) பகுதியின் இறுதியான ஆண்டை முடிவுசெய்வதில் அறிஞரிடை, கருத்து வேறுபாடுகள் உள. கி பி. 100, 300, 600. 647, 900. 1200 என்ற பல ஆண்டுகள் பல்வேறு அறிஞர்களால். முதல் பகுதியின் முடிவுக்காலமாகக் கருதப்படும் இந்தியாவில் முகம்மதிய ஆட்சி ஏற்பட்டகாலம், பண்டைக் காலத்தை முடிவுறச்செய்து இடைக்காலத்தைத் தொடங்குவதாகவும், ஆங்கிலேய ஆட்சியின் தொடக்கம் புதிய கால ஆரம்பத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம் ஆகையால் கி. பி 1200 வரை முதற்பகுதி எனவும் 1200 முதல் 1700 வரை இரண்டாம் பகுதி எனவும் 1700 முதல் இந்நாள் வரை மூன்றாம் பகுதி எனவும் இந்திய வரலாறு பிரிக்கப்படலாம்.

**உட்பிரிவுகள்:** மேலே குறிப்பிடப்பட்ட ஒவ்வொரு பகுதியையும் பல உட்பிரிவுகளாக வகுப்பதில் சில இடையூறுக ளேற்படுகின்றன. வரலாற்று நிகழ்ச்சிகளைப் பொருட்படுத்தாது ஒவ்வொரு நூற்றாண்டாகவோ, மூன்று அல்லது ஐந்து நூற்றாண்டுகளாகவோ. பாகுபாடு செய்யும் முறை ஓரளவு ஏற்றுக்கொள்ளத் தக்கதே. வட இந்திய வரலாற்றையும், தென்னிந்திய வரலாற்றையும், பிரித்து எழுதுவது ஓரளவு இன்றியமையாததாகும். இந்திய வரலாறு, வட இந்திய வரலாறு என்றும் தக்கணம், தக்கணத்தின் தெற்கு நாடுகளின் வரலாறுகள் எனவும் மூன்று வகையாகப் பிரிக்கப்படுவது விரும்பத்தக்கதன்று. ஏனெனின், தென்னிந்திய வரலாற்றில் மிகுந்த ஒற்றுமையைக் காண்கிறோம். சிலர். தென்னிந்தியாவை தக்கணத்தினின்று வேறுபடுத்தியும், தமிழ்நாட்டுடன் ஒன்று படுத்தியும் பேசுவர். தக்கணம் என்ற சொல் "தட்சிண பதம்" என்ற கிரேக்க சொல்லின் மாறுபாடாகும். வட

இந்தியா, உத்தரபதம் எனவும் இமயமலையைக் கடந்த பகுதி "உத்தரம்" எனவும் வழங்குவது ஈண்டு நோக்கத்தகும். ஆகவே, முடிவாக, தீபகற்ப இந்தியா, அல்லது விந்தியமலையின் தென்பகுதி, (மகாராட்டிரம், தெலுங்கு, கன்னடம், தமிழ், மலையாளம் முதலிய பகுதிகளைக் கொண்டது) தென்னிந்தியா என்று கருதப்படலாம். தக்கணத்திற்கு தனிச் சிறப்பு உண்டென்பதும் ஏற்றுக்கொள்ளத் தக்கதே.

## பகுதி 4.

### வரலாற்றில் அரசியல், கலைப்பண்பு இயல்புகள்

வரலாறு, தனித்த அரசியல் நோக்குடன்மட்டும் கருதப் பட்ட காலம் இப்பொழுது மாறிவிட்டது. ஆயினும், மக்கள் வாழ்க்கையின் எல்லாவிதமான கூறுகளையும், வரலாற்றில் இணைப்பது வரலாற்றின் தன்மையை சிக்கலுறச் செய்வதாகும். எனினும் இந்தியாவின் பொது வரலாறு என்பது, சமயம், பொருளாதாரம், இனம், கலை முதலிய பல்வேறு வகையான மக்கட் பண்புகளைப்பற்றிக் கூறவேண்டியதாகும். ஆனால் அரசியல் பண்புமட்டுமே சிறப்பான நிலையைப் பெறும். போர்க்காலத்திலும், அமைதிக்காலத்திலும் அரசியலாரின் அலுவல்களை ஆராய்வதற்கு, அரசியல் முறைக்கும் மற்றய பண்புகளின் வளர்ச்சி, வீழ்ச்சிக்கும் உள்ள உறவைப்பற்றிக் கூறவேண்டியது இன்றியமையாததாகிறது. பெருங் கல்விமான்களைப் பொறுத்தவரை, அரசியலுக்கு அவர்கள் அடங்கி யிருந்தமையும் அரசியலில் அவர்களுக்குக் குறைவான செல்வாக்கு இருந்தமையும் புலப்படுகின்றது. மேலும் பொதுவான வரலாற்றில், கலை இயல்பைப்பற்றிக் கூறுமிடத்து பல ஆசிரியரின் நூல்கள், கட்டிடங்கள் முதலியவற்றின் எண்ணிக்கையே விரிவடையும். ஆகவே, அரசியலையும், கலைப்பண்புகளையும்பற்றிக் கலந்து கூறும் ஒரு வரலாற்றில் அரசியல் சிறப்பு அழிவுறாமலும், கலைப்பண்புகளின் விளக்கம் குறைவுபடாமலும் இருத்தல் இன்றியமையாததாகும். கலைப்பண்புகளைக் கூறுமிடத்து, சிறிதும் குறைவுபடாது முற்றிலும் கூறி சுவையற்றுப்போகும்படி செய்வதைவிட சிறப்

பான செய்திகளைக் கூறிச் செல்வதே மேலானதாகும். கால முறையான வரலாற்றினின்றும் குலங்களின் வரலாற்றினின்றும், கலைப்பண்பு முன்னேற்றத்தைப் பிரிப்பது முறையாகாது. சிலர் அரசியல் வரலாறு சுவையற்றதென்று கருதி இனம் கலைப்பண்பு ஆகியன பற்றிய வரலாற்றில் மிகுந்த கருத்தைச் செலுத்துவர் ஆனால் வாழ்க்கை கூறுபடுத்தத் தக்கதன்று. மக்கள் தன்மை, வாழ்க்கையின் பல பிரிவுகளில், வெவ்வேறு வகையாக மாறுவதில்லை. இன்றியமையாக் கலைப்பண்பு முன்னேற்றமும், வளமான இன வாழ்வும், சிறப்பாக அரசியல் வளர்ச்சியைப் பொறுத்தவை என்று கௌடில்யர் கொண்ட கருத்தை நாம் புறக்கணிக்கலாகாது.

## பகுதி 5.

### சில தவறான கொள்கைகள்.

***மச்ச நீதி:*** பெரிய மீன் சிறிய மீனை விழுங்கி வாழும் முறை—க்கு, இந்திய வரலாறு எடுத்துக்காட்டாகுமென்று கூறப்பட்டுள்ளது. அஃதேபோல், சுந்தன்—உபசுந்தன் நீதி — (இருவர் இறக்கும் வரை தமக்குள் போரிடும் முறை) மகாபாரத காலத்திலிருந்து, முகம்மதியரின் இந்தியப்படையெடுப்புவரை, இந்நாட்டில் ஏற்பட்டிருந்ததாகக் கூறப்படுகிறது. இந்நீதிகள் வரலாற்றிற்கே, பொருந்துவனவாயிருக்க, இந்திய வரலாற்றுக்கு மட்டும் அவற்றை எடுத்துக்காட்டாகக் கூறுவது தவறாகும். இந்தியாவில் போராட்டங்களின் விளைவாக, நீண்டகாலக் குழப்பங்களும், கேடுகளும் ஏற்பட்டனவென்று, பெரும்பான்மையில் கூறுவதற்கில்லை. இந்தியா. ருஷ்யா நீங்கலாக உள்ள ஐரோப்பாவுக்கு ஒப்பான நிலப்பரப்பை உடையதென்பதை, கல்லூரி மாணவர் யாவருமறிவர். முகம்மதியர் வருகைவரை இந்தியவரலாறு குழப்பமும் கேடுகளும் மிகுந்திருந்த காலப்பகுதியாகக் கொண்டால், ஐரோப்பிய வரலாறும், பண்டைய கிரீசின் வரலாறும் அதேவகையில் கொள்ளப்படவேண்டும். இக்காலத்தில், பன்னாட்டு முறையில், மக்கள் கருத்து பரந்துள்ளது. ஆனால் பண்டைக்காலத்திலும், இடைக்காலத்திலும், இனப்

பற்றும் குறுகிய நாட்டுப்பற்றும் எளிதில் வெல்லப்படக் கூடியனவாக இல்லை. ஒரு துணைக்கண்டமான இந்தியாவை ஒரே அரசியலுடன் கூடிய ஒருநாடாக்கருதுவது முறையன்று இந்தியாவின் பல பிரிவுகளை அரசியல் கேடுகளின் அடையாளங் களாகக்கொள்வதும் தவறாகும். எல்லைப்பரப்பிலும் அரசியல மைப்பிலும் சிறப்பு வாய்ந்த மோரியரின் பேரரசு வியக்கத் தக்கதென்பதில் ஐயமில்லை. சிலர், இந்திய மண்டலங்களின் வரலாறுகளை, பெருஞ்சிறப்பு வாய்ந்தனவல்ல என்று புறக் கணிப்பர். இந்தியாவின் பரந்த எல்லைகளையும் மிகுந்த மக்கட்டொகையையும் கருதுமிடத்து அவ்வாறு கூறுவதற்கில்லை. ஐரோப்பிய வரலாறு அதே முறையில் கருதப்படுமாயின் அஃது, சீசர் அல்லது நெப்போலியனின் கொள்கைகளின் வரலாறாகவே சுருங்கி அமையும்.

**இந்தியாவின் ஒற்றுமை:** இந்தியாவில், பல அரசியல் பிரிவுகளும் கலகங்களும் காணப்பட்டதெனினும், காலப்போக்கில் இந்நாட்டுக் கலைப்பண்புகள் ஒற்றுமையுற்றி ருப்பது நோக்கற்பாலது இந்தியப்பேரரசுகள், பல இந்திய நாடுகளை அடக்கி ஆதிக்கம் செலுத்தும் முறையை அடிப் படையாகக்கொண்டு எழுந்தவை. அண்மைக்காலம் வரை, இந்தியாவின் ஒற்றுமை அரசியல் முறையைப் பொறுத்த தென்று கூறுவதற்கில்லை. சாதிப்பிரிவினை, இன ஒற்றுமை யைக்குலைப்பதற்குக் காரணமாகியது. மொழி, இனம் ஆகிய வற்றிலும் வேறுபாடுகள் மிகவும் மிகைப்படுத்திக் கூறப்பட் டிருப்பினும் அவை இல்லை என்று மறுக்க முடியாது இந்து மதம் ஒற்றுமையை விளைவிக்க மிகுதியாக உதவியதென்றும் கூறுவதற்கில்லை. வாழ்க்கையைப்பற்றி மக்களின் பொதுவான நோக்கும், முன்னோரிடமிருந்து இந்தியர் பெற்ற கலைச் செல்வமுமே இந்தியாவின் ஒற்றுமைக்குக் காரணங்களாகக் கூறலாம். இத்தகைய சிறந்த ஒற்றுமைப்பண்பு, இந்தியா வைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பட்ட கேடான நிலையைப் பொய்யாக்குகிறது. மேலும் மெகஸ்தனீஸ் முதல் சர்தாமஸ் மன்றோ வரை, பல அயல்நாட்டினர் இந்தியரைப்பற்றி நல்ல மதிப்புரைகள் வழங்கியிருப்பதும், மேற்கூறிய கருத்தை வலி

யுறுத்தும். "வரலாறு என்பது மக்களின் குற்றங்களும் அறி வற்ற செயல்களும், இடையூறுகளும், குறிப்பிடப்பட்ட ஒரு அட்டவணை" என்று கிப்பன் ஒருசார்பாகக் கூறியிருக்கும் முடிபு, பண்டைய இந்திய வரலாற்று நிகழ்ச்சிகளுக்குப் பொருந்தாது.

**கிருதயுக உளப்போக்கு:** கடந்தகாலத்தை மிகப்புகழ்ந் தும் நிகழ்காலத்தைக் குறைவுபடுத்தியும் கூறும் மக்களியல்பின் விளைவாக வேறு சில தவருன கொள்கைகளும் தோன்றி யுள்ளன கடந்த காலத்தைப்பற்றி மிகுதியாகத் தெரியாத இடங்களில், மக்கள் தமது யூகத்திஞல் முடிவுகள் செய்து கொள்வர். வரலாற்றறிஞர்கள், வரலாறு தோற்றுவிக்கவும் தலைப்படுகின்றனர். நிகழ்காலச்செய்திகளை நாம் மிகுதியாகக் குறைகூறுகிருேம்; ஆனுல் கடந்த பண்டைக்காலச் செய்தி களைப்பற்றி அவ்வாறு பேசுவதில்லை. பண்டைய காலத்தைப் பற்றி ஐயப்பாடுகளைக் குறையற்ற முறையில் முடிவுசெய்வதும் நம் இயல்பு மேலும் இந்தியரின் நோக்கத்தின்படி. சமயத் துடன் தொடர்புருத செய்திகள் இல்லை என்றே கூறலாம் அர்த்தசாத்திரம் என்னும் நூலை எழுதிய 'கௌடில்யரும் பாராட் டப்படுவது நோக்கத்தக்கது. அவர்நூலை, அறநூல் என்றும் சிலர் புகழ்வர் பண்டைய நூலாசிரியரையும், வரலாற்றுமுறையில் குறை கூற நாம் விரும்புவதில்லை. ஆகவே, பெரும்பாலும் பண்டைக் காலத்தினரைப் புகழ்வது நம் இயல்பு. வரலாற்றறிஞர், வேதம் முதலிய நூல்களை மக்களின் செயல்களாகக் கருதுவார்களேயன்றி இறைவனருளியவை என்று கருத மாட்டார்கள் ராங்கே (Ranke) என்ற அறிஞன், தான் முதலாவதாக, ஒரு வரலாற்ருசிரியரென்றும் அடுத்தபடியாகவே ஒரு கிறித்தவனென்றும் கூறியிருப்பது ஈண்டு நினைவு கூரத்தகும்.

## பகுதி 6.

### இந்திய வரலாற்றுக்குரிய முதற் சான்றுகளும் கால விளக்க முறையும்.

***மூலாதாரங்களின் தன்மை:*** இந்திய வரலாற்றின் முப்பகுதிகட்குமுள்ள மூலாதாரங்கள், தன்மையிலும் அள

விலும் ஒன்றுடனென்று வேறுபடும். முகம்மதியரின் இந்திய வருகைக்கு முன்னர் உள்ள காலப்பகுதியை எழுதும் வரலாற்றறிஞன் பலவகையான இடையூறுகளைப் பெறுகிறான். போதுமான, நம்பத்தக்க சிறந்த மூலாதாரங்களின் குறைவே அதற்குக் காரணமாகும். சில சமயங்களில், வைக்கோல்போர் நிறைந்த இடத்தில் குண்டூசி தேடும் நிலையை ஒப்ப அவன் ஆராயவேண்டியதாகிறது. கி. பி. 1200 வரை உள்ள காலத்திய ஆதாரங்கள், பிந்திய காலத்தியவற்றைவிட மிகவும் வேறுபாடுகளுடன் கூடியதாக உள்ளன. முரண்பாடான பல்வேறு கூற்றுகளைக் கொண்டு குறிப்பிட்ட ஒரு செய்தியை ஆராய வேண்டியது, இந்திய வரலாற்றறிஞனுக்குக் கடமையாகும். மேலும் சிதறுதலாக உள்ள செய்திகளை இணைக்க வேண்டிய நிலையும் அவனுக்கு ஏற்படுகிறது. தவிர, ஆதாரங்கள், பல மொழிகளிலும், பலவகை எழுத்துக்களிலும் இருக்கின்றன. இந்திய மொழியும் பிறமொழிகளும் எடுத்தாளப்பட வேண்டிய நிலை ஏற்படுகிறது ஆகையால் முகம்மதியப் பகுதிக்கு முந்திய காலத்தை வரையும் அறிஞன், பல மொழிகளறிந்தோனாகவும், கல்லிலும் ஏட்டிலும் நாணயங்களிலும், பொறிக்கப் பெற்றிருக்கும் எழுத்துக்களை நன்கு உணரும் ஆராய்ச்சியாளனாகவும் இருத்தல் வேண்டும். சாசரின் (Chaucer)[1] ஆங்கில மொழிக்கும், ஷேக்ஸ்பியரின் ஆங்கிலத்திற்கும் உள்ள வேறுபாடுகளைவிட மிகுதியாகவே, வேதகால வடமொழிக்கும் பிற்கால இலக்கிய வடமொழிக்கும், வேறுபாடுகள் உள.

## பாகுபாடு: இலக்கியம்.

ஆதாரங்கள் உள்நாட்டுச் சான்றுகள் வெளிநாட்டுச் சான்றுகள் என இருவகைப்படும். இரண்டும். ஒன்றுக்கொன்று உதவுந் தன்மையைப் பெற்றுள்ளன. இலக்கியம், நம்நாட்டு இலக்கியம் பிறநாட்டு இலக்கியம் என இரண்டு வகையாகும். பரந்த இந்தியாவின் வரலாற்றைப் பொறுத்த மூலாதாரங்களைத் தவிர்த்து, மற்ற பிறநாட்டுச் சான்றுகள் யாவும் இலக்கிய உருவாகவே உள்ளன. கல்வெட்டுகளும் பண்டைய இந்திய நாணயங்களும், கட்டிடங்களும் பழைய நாகரிகங்களைக் காட்டுவனவாகவுள்ள

1. ஆங்கில இலக்கியத்தில் புதிய சகாப்தத்தைத் தொடங்கியவர் [1340-1400]

வேறு பல பொருள்களும் சிறந்த மூலாதாரங்களாகக் கருதப்படும். நம் நாட்டு இலக்கியத்தை மூவகையாகப் பிரிக்கலாம். அவையாவன: வரலாற்றுடன் ஒற்றுமைப்பட்டவை, வரலாற்றுடன் ஓரளவு ஒற்றுமைப்பட்டவை, அதனுடன் ஒற்றுமைப் படாதவை என்பனவாகும். வழிவழியாக வந்த இந்து, பௌத்த சமணக் கதைகள் வரலாற்றுக்கு ஓரளவு பயன் படுவனவாகும். பதஞ்சலி எழுதிய மகாபாஷியம்: கர்கி (Gargi) எழுதிய சம்ஹிதை. காளிதாசனின் இரகு வம்சம், தண்டியின் தசகுமாரசரிதம். இராஜசேகரனின் காவியமீமாம்சம். முதலிய வரலாற்றுக்குப் புறம்பான நூல்களிலும் சரித்திரத்துக் குப் பயன்படும் செய்திகள் பொதிந்து கிடக்கின்றன. இந்து, புத்த. சமண சமயநூல் களிலும், புராணங்கள், இதிகாசங்கள், விசாகதத்தனின் முத்திராராக்ஷசம் காளிதாசனின் மாளவி காக்னிமித்திரம் முதலிய பலநூல்களிலும், மூவகையான இந்திய வரலாற்றுக்கதைகள் இணைந்துள்ளன. கௌடில்யரின் அர்த்த சாத்திரமும், கல்ஹணனின் இராசதரங்கிணியும் உண்மையான வரலாற்று நூல்களாம். பாணரின் ஹர்ஷசரிதமும், பில்ஹண னின் விக்கிரமாங்க சரிதமும், குறைபாடுகளுடன் கூடிய வரலாற்று நூல்களாகக் கருதப்படலாம். இலக்கிய ஆதாரங் களில், வரலாற்றுக்குப்பயன்படும்செய்திகள் இருந்தபோதிலும், அரசியல் வளர்ச்சியும், தொடர்ச்சியான வரலாற்று நிகழ்ச்சிக்குறிப்பும் காண்பதரிதாகும். வேறு சிறந்த சான்றுகள் இல்லாத நிலையில் இவற்றையே வரலாற்றறிஞன் பயன்படுத்திக்கொள்ள வேண்டியதாகிறது. இந்தியாவில்ஒருதூஸிடிடீஸ்[1] (Thucydides) இல்லை என்ற குறை கல்ஹணனின் பெருமையின் மூலம் நீக்கப் படலாம் என்று கூறப்படுகிறது. பண்டைய வரலாற்றறிஞரில், கல்ஹணன் மிகுந்த சிறப்பு வாய்ந்திருப்பினும், இந்தியாவின் பொதுவான வரலாற்றுக்கு அவன் அதிகம் பயன்படவில்லை. கல்ஹணன் முகம்மதியரின் செல்வாக்கு ஓங்கியிருந்தகாலத்தில் வாழ்ந்தானென்பதையும் நோக்குதல் வேண்டும். இந்தியாவில் ஒரு தூஸிடிடீஸ் இல்லை என்ற கூற்றுக்கு, கேள்விகளால்தான் விடையளிக்க முடியும். இந்தியாவில் ஒரு ஆஸ்கிலஸ்[2] (Acschylus) ஏன்தோன்றவில்லை? கிரீசில் ஒரு பாணினி தோன்

1. கிரேக்க வரலாற்றறிஞன்.
2. கிரேக்க நாடகாசிரியன்.

றின்ை? உரோம், குடியரசாக இருந்தகாலத்தில் ஒரு தூஸிடிடீசைத்தோற்றுவித்ததா? உரோமின் சிறந்த வரலாற்றறிஞனை **பொலிபியஸ்**, ஒரு கிரேக்கன் என்பது ஈண்டு நினைவு கூரத்தகும்.

## கல்வெட்டுக்கள்.

மக்களுக்கும், பல நிலையங்களுக்கும் அளிக்கப்பட்ட நன்கொடைகள், பலவகையான கொண்டாட்டங்கள், அரசியல், சமய நிகழ்ச்சிகள் முதலான பல செய்திகள், கற்களிலும் செப்பேடுகளிலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. வரலாற்றறிஞனுக்கு அவை, மிகுதியாகப் பயன்படும். அவை, - வரலாற்றுத் தொடர்புடையன, சமயத்தைப்பற்றியவை, நன்கொடைகளைப்பற்றியன எனப் பலவகைப்படும் செப்பேடுகளைத் தவிர்த்து வேறு உலோகத் தகடுகளிலும் பொதுவானதும் தனிப்பட்டதுமான செய்திகள் காணப்பெறும். ஆனல் அசோகன், காரவேலன், முதலாம் உருத்திரதாமன், சமுத்திரகுப்தன், யசோதர்மன் (மாளவம்) முதலியோரின் கல் வெட்டுக்களைக்கொண்டு, நாம், பொதுவாகக் கல்வெட்டுக்களின் வரலாற்றுச் சிறப்பை, மிகைப்படுத்திக் கூறலாகாது. அவை குறிப்பாக (அசோகன் காலத்தவை தனிச்சிறப்பு வாய்ந்தவை. இவ்வாறே, சோழர்காலத்திய கல்வெட்டுக்களும் சிறப்பானவை. கல்வெட்டுக்களில் பெரும்பாலும் **சக** அல்லது **விக்கிரம** ஆண்டுகள், அல்லது அவரவர் ஆட்சிக் காலத்தைக் குறிக்கும் ஆண்டுகள் அல்லது சிற்சில இடங்களில் கலியுக ஆண்டுகள் எண்ணிக்கையில், கால வரையறை காணப்பெறும் பெரும்பான்மையான் கல்வெட்டுக்கள் ஒரே காலத்தவையாகும். இலக்கிய ஆதாரங்களில் காணப்பெறும் ஐயப்பாட்டுக்குரிய வரலாற்றுச் செய்திகள், தொடர்ச்சியான நிகழ்ச்சிக் குறிப்பின்மை (வரலாற்று நிகழ்ச்சி) முதலிய குறைபாடுகள் கல்வெட்டுக்களில் இல்லையென்று கூறலாம். ஆனல் கல்வெட்டுச் செய்திகள், துண்டு துண்டானதாகவும் செழிப்பற்றதாகவுமுள்ளன. சில இடங்களில்மட்டுமே அவை வரலாற்றறிஞனுக்குச் சிறந்த நம்பத்தக்க ஆதாரங்களாகும்

கவர்ச்சியற்ற வெறும்வரலாற்று நிகழ்ச்சிகள் மிகுதியாக, கல்வெட்டுக்களிலிருந்து கிடைக்கின்றன. ஆதலால் பல குல வரலாறுகள் சுவையற்றனவாயுள்ளன. ஆயினும் பிற ஆதாரங்களால் அறியமுடியாத பல குலங்களின் வரலாறு அச்சான்றுகளிலிருந்து அறியப்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை. ஆனால் பலவிடங்களில், மக்களைப்பற்றியும், பொருள்களைப் பற்றியும் சரியான முடிவு கூறுவதற்கு அவை உதவிபுரியவில்லை. அசோகர்காலத்திற்கு முற்பட்ட வரலாற்றுப் பகுதிக்குரிய நம் நாட்டுக் கல்வெட்டுக்கள் கிடைத்தில. ஹர்ஷனைப் பற்றிய கல்வெட்டுக்களும் அதிகமில்லை. சில கல்வெட்டுக்களில் சில மன்னர்கள் தம்மைப்பற்றிக்கூறும் புகழுரையை வேறு சில மறுக்கின்றன. பெருமைசால் ஹர்ஷனும், தான் இரண்டாம் புலிகேசியால் தோற்கடிக்கப்பட்டதை வெளியிடவில்லை ஆனால் அச்செய்தி யுவான் சுவாங்கினால் உறுதி செய்யப்படுகிறது மேலும், முந்தியிருந்தோரின் பட்டங்களைப் பின்வந்தோர் சூட்டிக்கொள்வதும், அவர்கள் அருஞ்செயல்களைத் தம்முடன் இணைத்துப் புகழ்ந்து கொள்வதும், மரபாயிருந்தபடியால், கல்வெட்டுச் செய்திகள் சிலவற்றை அறிவதில் குழப்பமேற்படுகிறது சோழர் கல்வெட்டுக்களில் மன்னர் பட்டத்துக்குரியோராயிருந்த காலத்தின் எண்ணிக்கை, அவர் பட்டமேற்ற பின் உள்ள ஆட்சிக்காலத்துடன் இணைத்துப் பேசப்பட்டிருப்பதும் நோக்கற்பாலது. விசயநகர அரசன் கிருட்டினதேவராயனின் பெருமை பொருந்திய ஆட்சிக்கும் அவன்பின் போந்த அச்சுத ராயனின் வருந்தத்தக்க ஆட்சிக்குமுள்ள வேறுபாடுகளை இலக்கியச் சான்றுகளின்றி (பிற நாட்டு இலக்கியமும்) நாமறிய இயலாது. நாம் வரலாற்றின் பல பகுதிகளைப்பற்றி முழுதும் அறிந்துகொள்ள முடியாததில், போதுமான இலக்கியச் சான்றுகளின்மையால் ஏற்பட்டதாகும். கௌடில்யரின் அர்த்தசாத்திரமும், கல்ஹணனின் இராஜதரங்கிணியும் அளித்துள்ள சிறந்த செய்திகளை எத்துணை நீண்ட கல்வெட்டுக்களும் அளிக்க முடியாது என்பதும் நோக்கற்பாலது இந்திய வரலாற்றில் முஸ்லிம் பிரிட்டிஷ் காலப்பகுதிகளை முழுவதுமுணர, வரலாற்றிலக்கியமும் அரசியல் பத்திரங்களும் பெரிதும் பயன்படுகின்றன.

## பண்டைய நாணயங்கள்.

கல்வெட்டுக்களுடன் ஒப்பிடுமிடத்து, நாணயங்கள் மிகச் சிறிய அளவுக்கே வரலாற்றுக்குப் பயன்படுவனவாக உள்ளன. இந்திய நாணயங்கள், நம் நாட்டிற்றோன்றிய கல்வெட்டுக்களைப்போலன்றி, அயல் நாட்டினரால் மாறுதலடையலாயின. நாணயங்களில் பொறிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்கள், கல்வெட்டு வரிசையில்வைத்துக் கருதப்படுமானால் சிறப்பான வரலாற்றுதாரம் என்ற பெருமை நாணயங்களுக்கு இல்லாமற்போகும். நாணயங்களின் உருவங்களும், பிற அடையாளங்களும், கலைப்பண்பு என்ற தலைப்பின்கீழ் கொணரப்படும். ஆயினும் சில குலங்களின் வரலாற்றை உயிர்ப்பித்தும், சிலவற்றைப்பற்றி நமதறிவைப் பெருக்கியும் நாணயங்கள் உதவிபுரிந்துள்ளன. அரசியலிலும், கால விளக்க முறையிலும், ஆட்சி முறை சமயம், பொருளாதாரம் கலைப்பண்பு முதலிய வரலாறுகளிலும் நாணயங்களின் மதிப்பையும் பயனையும் மறுப்பதற்கில்லை. ஆனால் அச்சான்றுகள் பிறவற்றிற்குத் துணைபுரிவதாகவும் சில செய்திகளை உறுதிப்படுத்துவனவாகவுமேயுள்ளன வரலாறு என்கிற கட்டடத்திற்கு, மறையாணி (nuts) களையும் சுரியாணிகளையும் (screws) பண்டைய நாணயங்கள் அளிப்பதாகக் கருதலாம். மிக மிகப் பழங்காலத்திலேயே துளையிடப்பட்ட நாணயங்களிருந்தபோதிலும் அசோகன் இறந்த பிறகே காசுகள் வரலாற்றுக்குப் பயன் படக்கூடிய சான்றுகளாக அமைகின்றன. இந்தோ–கிரேக்கர், சகர் குஷானர், குப்தர் ஆகியோரின் காசுகள் மிகவும் புகழ் வாய்ந்தவை. இந்தோ கிரேக்கர், சகர், இந்தோ பார்த்தியர் ஆகியோர் இருமொழிகளில் (கிரேக்க மொழியும், இந்தியமொழியும்) பெயர் பொறிக்கப்பட்ட நாணயங்களை வெளியிட்டனர். அவற்றின் உதவி கொண்டு இந்தியக்கல்வெட்டுக்கள் படித்தறியப்பட்டன என்பதும் நோக்கற்பாலது. கேடுற்ற நாணயங்களும் முழுநிலை அடையாத காசுகளும் அவற்றின் வரலாற்றைத் தாமே அறிவிக்கின்றன தென்னிந்தியாவில் கிடைக்கப்பெற்ற உரோம நாணயங்கள், கிறித்தவ ஆண்டின் ஆதிநூற்றுண்டுகளில் நிலவிய இந்திய உரோமானிய வாணிக உறவை அறிய உதவும்.

## பண்டைப் பழம்பொருள்களைப்பற்றிய ஆராய்ச்சி.

முன் கூறப்பெற்ற கல்வெட்டுக்கள், நாணயங்கள், ஆகிய வற்றை நீக்கி பழைய கல்லறைகளையும் மக்கள் உழைப்பினு லேற்பட்ட பிற அடையாளப் பொருள்களையும் பற்றிய ஆராய்ச்சியே இத்தலைப்பில் குறிப்பிடப்படுகிறது. வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட இவ்வாராய்ச்சி. பண்டைய நாகரிகத்தின் பண்புகளைப்பற்றியதாகும். வரலாற்றுக் காலத்திய ஆராய்ச்சி, மக்களின் தெளிவான சிறந்த கலைத்தொண்டுகளைப் பற்றிய தாகும். ஆகவே, பண்டைய இந்தியாவில் ஒரு வடிவமோ கட்டடமோ முன் கூறப்பட்ட பழம்பொருளாராய்ச்சியின் கீழ் கொணரப்படும் ஆனால் அவற்றைப்பற்றிய ஒருநூல், இலக்கி யம் என்ற பாகுபாட்டின் கீழ் அமையும் எந்த ஆசிரியராலும், அறிவிக்கப்படாத, பண்டைக்காலத்தை அறிய மிகவும் நேர்மை யான சான்ருக, பழம்பொருள் ஆராய்ச்சி அமைகிறது. வரலாற்றுக்கு முற்பட்ட பகுதியை அறிய, அச்சான்றையே நாம் முழுவதும் நம்ப வேண்டியதாகிறது. வரலாற்றுக் காலத்தில், இஃது மிகவும் சிறப்புடையதாயும், இன்றியமையாததாகவு மிருந்தபோதிலும் பிற சான்றுகளுக்குத் துணைபுரிவதாகவே உளது

நாகரிகத்தின் சில பண்புகளை இவ்வாராய்ச்சி நன்கு தெளிவு படுத்துகிறது. கற்பனையிற் சிறந்த இலக்கியங்களாலும் இதை விடச் சிறப்பாக அவற்றைத் தெளிவுபடுத்த இயலாதென்றும் கூறலாம். மற்ற சான்றுகள், அதிகம் பயன்படாவிடத்து, இப் பழம்பொருள் ஆராய்ச்சி மிகுந்த சிறப்பைப்பெறும். ஆனல் மறைந்த அரசியல் வரலாற்றை அறிவதற்கு இஃது மிகுதி யாக உதவி செய்யாது கால விளக்க முறையில் சிற்சில வற்றைப் புலப்படுத்திய போதிலும் அதனல் பெரும்பயன் ஏற்படவில்லை. அவ்வாறு புலப்படுத்தப்பெற்ற செய்திகள் உறுதியற்றதாயும், உய்த்துணரத் தக்கனவாயு முள்ளன. ஆகவே கற்பனையான கோட்பாடுகளுக்கு இடமளிக்கப்படுகி றது நிலத்தின் மேற்புறத்தில் செய்யப்படும் புதைபொருள் ஆராய்ச்சிகளையும் தற்செயலாகக் கண்டுபிடிக்கப்படுவனவற் றையும் தவிர்த்த மற்ற ஆராய்ச்சிகளுக்கு இலக்கியம், வழி

காட்ட வேண்டியது இன்றியமையாததாகும். கிரீஸ் நாட்டிலும் ட்ராய் (Troy) என்றவிடத்திலும், பேரறிஞர் ஸ்கிளீமென்என்பார் புதைபொருள் ஆராய்ச்சிகள் நடத்துவதற்கு, ஹோமர் என்ற கவி மூலகாரணமாயிருந்தது ஈண்டு குறிப்பிடத்தக்கது அகிமீனியப் பேரரசுக்காலத்தில் சிந்துவெளி பெற்றிருந்த வளத்தையும் செல்வத்தையும் பற்றிய இலக்கியக் குறிப்புகள், ஒரு வகையில் சிந்துவெளி புதை பொருளாராய்ச்சிக்குக் காரணமென்றும் கூறலாம். ஐரோப்பா, எகிப்து, மேற்கு ஆசியா ஆகிய இடங்களிலேற்பட்ட வியக்கத்தக்க ஆராய்ச்சி விளைவுகள் இந்தியாவில் பழம்பொருள் ஆராய்ச்சியின் வெற்றிக்கு வழி காட்டின. ஆயினும் இந்தியாவில், சிறப்பாக, தென்னிந்தியாவில் இவ்வாராய்ச்சி தொடக்க நிலையிலேயே உள்ளது. சுருங்கக்கூறின், வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தை அறிய சிறப்பான வழிகாட்டியாக இருப்பதன்றி, பழம்பொருள் ஆராய்ச்சி, நாகரிக வளர்ச்சியை அறிய முயலும் வரலாற்றறிஞனுக்குப் பலவகைகளில் உதவுகின்றது கனிஷ்க மன்னனுடைய காலத்தை உறுதிசெய்வதில் ஏற்பட்ட குழப்பத்தை (இலக்கியச் சான்றுகளால் முடிவுசெய்யப்படாத ஒன்றை) புதைபொருள் ஆராய்ச்சி பெரும்பாலும் நீக்கியிருப்பதை நோக்குதல் வேண்டும். இதனால் காட்பிஸிஸ் மன்னர்கள், கனிஷ்கனுக்கு முற்பட்டவர் என முடிவு செய்யப்படுகிறது. பிராமணர், பௌத்தர், சமணர் ஆகியோரின் பலவகையான பண்டைய சின்னங்கள், அவரவர்களின் வரலாறுகளையும், நாகரிக முன்னேற்றத்தையும் விளக்குகின்றன.

## பிறநாட்டவர் தரும் சான்றுகள்.

அயல்நாட்டவர் அளிக்கும் ஆதாரங்களின் சிறப்பு, அவர்களுடைய கல்வித்திறமை, ஒழுங்காகவும், நடு நிலையாகவும் செய்திகளை நோக்கும் பயிற்சி, அவர்தம் குறிக்கோள், இந்தியாவில் அவர்கள் தங்கிய கால அளவு, தங்கிய காரணங்கள் முதலிய பலவற்றைப் பொறுத்ததாகும். அவர்களது பொதுவானதும் தனிப்பட்டதுமான தவறான எண்ணங்களும் நிகழ்ச்சிகளைப்பற்றிய ஒரு சார்பான கொள்கைகளும், பொருட்படுத்தப்

படாமலிருப்பதற்கில்லை அவர்களது சான்றுகள், அவர்கள் நம்பத்தக்க மக்களிடமிருந்து செய்திகளை அறிந்ததையும் தாமே நேரில் கண்டதையும், அவர்கள் இந்நாட்டில் தங்கிய காலப் பகுதியையும் பொறுத்தவரை, சிறப்புக்குரியனவே.

அலெக்சாந்தர் சிந்துவெளியை வென்றதின் விளைவாக இந்தியாவைப்பற்றி கிரேக்கர் அறிந்த செய்திகள், மெகஸ்தனீ ஸால் மிகுதியாக்கப்பெற்றன. கிரேக்கப் படையெடுப்புக்கு முன்னர், எரதோதஸ்ஸும்[1] பிறரும், இந்தியாவை அற்புதம் நிறைந்த பழைய வாணிக நாடாகவே கருதினர். பெரிப்ளூஸின் ஆசிரியரும் ஸ்ட்ராபோ, ப்ளினி, தாலமி ஆகிய நிலநூல் அறிஞர் களும், இந்தியாவுக்கும் மேற்கு நாடுகளுக்கும் இடையே வாணிகத்தைப்பற்றியே சிறப்பாகத் தம்கருத்தைச் செலுத்தினர். பின்னர் சீன யாத்திரிகர் இந்தியாவைப்பற்றிய ஆராய்ச்சியில் விருப்பம் கொண்டனர். சிறப்பாக பாகியன், யுவான்சுவாங், இட்சிங் ஆகிய மூவரும் குறிப்பிடத்தக்கவர். இந்தியாவில் புத்த சமயத்தின் நிலையை அறிய அவர்தம் குறிப்புக்கள் உதவு கின்றன. மேலும் முந்திய இருவரும் ஆட்சிமுறையை அறியவும் மூன்றுமவர் இலக்கிய வரலாற்றை அறியவும் உதவுவர். பாகியனும், இட்சிங்கும் இந்தோனேசிய சமய வரலாற்றை அறிய உதவியளிப்பர். சீன, திபெத்திய வரலாற்றுக் குறிப்புக்கள், சிற்சில சமயங்களில் நமக்கு உதவிபுரிகின்றன. சிறப்பாக வெளிநாடுகளில் இந்தியரின் அருஞ்செயல்களை சீனக் குறிப்புக்கள் அறிவிக்கும். கி. பி. எட்டாம் நூற்றுண்டில் அரே பியர் இந்தியாவுக்குவரத் தொடங்கியவுடன், அரேபிய வரலாறு களின் வரிசை தொடங்குகிறது. அரேபியமொழி வடமொழி இரண்டிலும் வல்லுநரான அல்பருனி என்ற அரேபிய அறிஞன் எழுதிய அரியதோர் நூல் (Kitab-ul-Hind) பண்டைய இந்திய கலைப்பண்புகளைப்பற்றி மிகுந்த விளக்கத்தைத் தருகிறது. அபுல்பாசல் தனது நூலான 'அய்னி அக்பரி'யில் முன்குறிப் பிடப்பட்ட நூலின் செய்திகளை எடுத்தாண்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

1. Herodotus, known as "the father of History": சிறந்த கிரேக்க வரலாற்றறிஞர்.

**கால விளக்க முறை.** *(தொடர்ச்சியான வரலாறு)*

நிலநூலறிவும், தொடர்ச்சியான காலவரலாறும், வரலாற்றின் "இரு கண்கள்" என்று கூறப்பட்டிருக்கிறது. நில அமைப்பைப் பொறுத்தவரை அக்கூற்று ஓரளவு உண்மையாகு மென்று முன்னர் விளக்கப்பட்டது. இரண்டாவதாக உள்ள கால விளக்க முறையும் வரலாற்றுக்கு இன்றியமையாத அடிப்படை யாகும். காலவரலாறு இக்கால வரலாற்றறிஞனின் முடிவான இலக்காக இல்லாதபோதிலும் தொடர்ச்சியான காலக் குறிப்புகளில்லாவிடில் அவ்வறிஞன், நீரினின்று பிரிக்கப்பட்ட மீனுக்கு ஒப்பான நிலையை எய்தவேண்டியவனாகிறான். நிகழ்ச்சிகளின் காலம் எத்துணை அளவு குழப்பமின்றி திட்டமாக அறியப்படுகின்றதோ அத்துணை அளவு வரலாற்றின் அடிப்படையான அமைப்பு உறுதியாகவும் பிற்கால வளர்ச்சி திண்மையாகவும் இருக்கும். வரலாறு எழுதுபவர் நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியையும் ஒன்றுக்கொன்று முன்பின் மாறுபடாமலுமுள்ள நிலையையும் அறிந்துகொள்ளவேண்டியது இன்றியமையாததாகும்.

அசோகன், புத்தருக்குமுன் வாழ்ந்தவனென்று கருதப்பட்டால் ஏற்படக்கூடிய விளைவுகளை கற்பனைசெய்து பாருங்கள்! காலக் குறிப்புகளில்லாவிடில் நிகழ்ச்சிகளின் உண்மையான காரணங்களின் தொடர்பு கிடைப்பது அரிதாகும். மேலும் அவையின்றி, முற்பட்டவருக்குப் பிற்பட்டோர் எத்துணை அளவு கடப்பாடுடையவர் என்று ஆராயமுடியாது. அல்பருனியின் நூலிலிருந்து, அபுல்பாஸல் செய்திகளை எடுத்தாண்டுகொண்டு அதனை ஒப்புக்கொள்ளாதிருந்தது பின்னவனின் பேரறிவுக்கு ஒரு இழுக்கை அளிக்கின்றது. பாஸர் (Bhasa) எழுதிய சாருதத்தம் என்ற நூல் கண்டுபிடிக்கப்பட்டபின், சூத்திரகர் (Sudraka) என்னும் வடமொழி நாடக ஆசிரியரின் பெருமைக்கு இழுக்கு ஏற்பட்டுள்ளது. அஃதேபோல் வேங்கட மாதவனின் வேத வியாக்கியானம், அறியப்பட்டபின், சாயனர் என்ற அறிஞரின் பெருமைக்குக் குறைபாடு ஏற்பட்டுள்ளது. ஒரு சில அறிஞர்கள், கால விளக்க முறையைக் கேவலமாகக்கருதி இகழ்வர். வரலாற்று மாணவனின் இறுதியான இலக்கு, நிகழ்ச்சிகளைக் கால

முறையில் அமைப்பது ஒன்றே அன்று. ஆயினும் சிறப்பான வரலாற்றாய்ச்சிக்கு அஃது முதற்படி என்பதில் ஐயமில்லை. சரியான காலகுறிப்பின்மையால், வட இந்திய வரலாற்றின் வளர்ச்சி, மோரியர் காலம்வரை அடிக்கடி தடைப்படுகிறது. அதே காரணத்தால், தென்னிந்திய வரலாற்றின் போக்கு, கிறித்தவ ஆண்டின் தொடக்கம்வரை தடைப்படுகிறது. காலக்குறிப்புகளில்லாதுபோயின் வரலாறு என்னும் ஆடவன் குருடாக இருப்பதுடன் முதுகெலும்பற்றவனாகவும் ஆகிறான்.

கால விளக்கமுறை, நமது வரலாற்றாதாரங்களின் தன்மைக்குத் தக்கவாறு மாறுபாடடைகிறது. வேதகாலத்தைப் பொறுத்தவரை, பழைய ஒழுங்கற்ற (வரலாற்றுக் காலத்திற்கு முந்திய) கால விளக்கமுறை கைவிடப்பட்டு இலக்கியம் முதலிய பல சான்றுகளைக்கொண்டு தொடர்ச்சியான கால வரலாறு - அறியப்படுகிறது. காலம் செல்லச் செல்ல அச் செய்தியைப் பற்றிய நமது தடைகளும் நீங்குகின்றன சிசுநாக, நந்தகுலங்களின் கால வரலாறு இன்றும் ஒழுங்கு முறையாக அமையவில்லை. மோரியர் காலந்தொட்டு ஆண்டுகளும் அவற்றின் ஒற்றுமையும் வரலாற்றறிஞனுக்கு மிகுந்த தெளிவை அளிக்கின்றன. சந்திரகுப்த மோரியன், மகா அலெக்சாந்தர், செல்யூகஸ் நிகட்டார் ஆகியோரின் காலங்கள் ஒற்றுமைப்பட்டிருப்பதும், அசோக மன்னனின் காலமும் (அந்தியாகஸ்தியாஸ்) முதலிய சில மேற்கு நாட்டு மன்னர்களின் காலமும் ஒன்றியிருப்பது நோக்கற்பாலது. மோரியர் காலப்பகுதியையும். அதற்கு முற்பட்ட பகுதியையும் சிறிதளவு மோரியருக்குப் பிந்திய காலத்தையும் உணர மேற்கூறிய கால ஒற்றுமை "இறுதியான ஆதாரமாகும்". (Sheet Anchor) மற்றும் சாதவாகனருடன் மேற்கு சத்திரபரும், சேரன் செங்குட்டுவனுடன் ஈழவேந்தன் முதலாம் கயவாகுவும், சமுத்திரகுப்தனுடன், ஈழநாட்டு மேகவர்ணனும் காலத்தால் ஒற்றுமைபெற்றிருப்பதும் சிறப்பாகக் குறிப்பிடத் தகும். விக்கிரம, சக, கனிஷ்க, குப்த ஹர்ஷ. ஆண்டுகள் குறிப்பிடப்பட்ட அறிக்கைகள் பல, தெளிவான காலத் தொடர்ச்சியை விளக்கா நிற்கும். மேற்கூறிய ஆண்டுகளின் தொடக்கத்தை, அறிஞர்கள் ஆராய்ந்து முடிவு செய்துள்ளனர்.

ஆதலால் பல இந்தியக் குலங்களின் தொடர்ச்சியான கால வரலாறு அறியப்படுகிறது. நமது பண்டைய இலக்கியங்கள், வாழ்க்கையின் பல்வேறு துறைகளைப்பற்றிய செய்திகளை மிகுதியாகப் பெற்றிருந்த போதிலும் சிறப்பாக அவற்றின் குறைபாடு, தொடர்ச்சியான கால வரலாறு அறியப்படாமை யேயாகும்.

## பகுதி 7.

### கற்காலங்களும் இரும்புக்காலமும்

பூமியின் தோற்றம் அமைப்பு ஆகியவற்றைப்பற்றிய வரலாறு முப்பகுதிகளையுடையது. முதற்பகுதியில் இந்தியா காணப்படவில்லை. இரண்டாவது மூன்றும் பகுதிகளில் இந் நாடு உருவடைந்து உயிர்கள் தோன்றி வளரலாயின. இறுதியில் மக்களின் தோற்றம் நிகழ்ந்தது. ஆதிக்குடிகளின் தோற்றத்தைப்பற்றிய கற்பனையில், ஆப்ரிக்கா, ஜாவா, முதலிய நாடுகளுடன் இந்தியாவுக்கும், குறிப்பாக தென்னிந்தியாவுக்கும் சிறப்பான இடமளிக்கப்பட்டுள்ளது மக்கள் போர்க்கருவிகள் செய்யவும் இல்லற வாழ்க்கைக்கேற்ற கலன்கள் செய்யவும் பயன்படுத்திய பொருள்களுக்குத் தக்க வாறு வரலாற்றுப் பகுதிக்கு முற்பட்ட காலங்கள் பெய ரளிக்கப்பட்டுள்ளன. கற்காலம். மிகப் பழைய கற்காலம், பழைய கற்காலம் புதுக்கற்காலம் என மூவகைப்படும் முதலாவது காலம் இந் நாட்டில் இருந்ததென்பதைச் சிலர் மறுப்பர். அஃதேபோல் உறைபனிக் காலமும் சிலரால் மறுக்கப்படும்.

### பழங் கற்காலம்

மதுரை, திருச்சிராப்பள்ளி தஞ்சாவூர், வடஆர்க்காடு, செங்கல்பட்டு, பெல்லாரி, கடப்பை, நெல்லூர், கோதாவரி ஆகிய மாவட்டங்களிலும் மைசூரிலும் பழங்கற்கால மக்களின் சின்னங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன. கர்னூல் மாவட்டத்தில் பழங்கற்காலக் குகைகள் கண்டுபிடிக்கப்பெற்றன. ஹைதரா பாத், பம்பாய் மண்டலம், கூர்ச்சரம், இராசபுதனம் ஆகியன வும் பிறவும் பழங்கற்கால நாகரிகத்தின் உறைவிடங்களா

யிருந்தன. பழங்கற்கால மனிதன் இரங்கற்பாலதான வாழ்க்கையை நடத்திவந்தான். இயற்கையின் செயல் அவனுக்கு மிக இன்றியமையாததாயிருந்தது. தன் சிற்றறிவுக்கு எட்டிய வகையில் கூர்மையான கல் துண்டுகளைப்பொறுக்கி ஒன்றோடொன்று மோதி கருவிகள் செய்துகொண்டான். தீ மூட்டும் முறையை அவன் கண்டுகொண்டானென்று அறியப்படுகிறது. அவன் பயன்படுத்திய மரச்சீப்பு குண்டக்கல்லில் கண்டெடுக்கப்பட்டது. சிங்கன்பூரில் * ( மத்திய மாகாணம் - ரெய்கார் நாட்டிலுள்ள ஒரு ஊர் ) பழங்கற்கால மனிதனின் குகை ஓவியங்கள் காணப்பட்டன. அவற்றின் வண்ணங்கள் போற்றற்குரியன. விலங்குகளின் உருவங்களும் வேட்டையாடும் காட்சிகளும் ஆண்டு காணப்பெறும். ஆனால் அவற்றின் காலத்தை உறுதியுடன் கூறமுடியவில்லை. கி. மு. 35.000 முதல் கி. மு. 10,000 வரை உள்ள காலம் பழங்கற்காலத்தின் இறுதியான பகுதியாகக் கூறப்படும். ஆப்ரிக்க - நீக்ரோவரை ஒத்தவரும் திராவிடரின் முதாதையருமான ஒரு வகுப்பினர் அதே காலத்தில் காணப்பட்டவராகலாம். அவர் வழியினர் இன்றும் மலைவாசிகளாயுள்ளனர். பழங்கற்காலத்துக்கும் புதுக்கற்காலத்துக்கும் நடுவில் நீண்ட கால இடைவெளி இருந்ததாக அறிஞர்கள் கருதுவர்.

## புதுக் கற்காலம்.

முன் கூறப்பெற்ற பழங்கற்காலத்தினர் பயன்படுத்திய கல்லைப்போலல்லாது, பலவகை வண்ணங்களுடன் கூடிய சிறந்த கருவிகள் செய்யக்கூடியதான புதியவகைக் கற்கள் கிடைப்பதைக்கொண்டு புதுக்கற்காலத்தினர் வாழ்ந்த இடங்கள் உறுதி செய்யப்படுகின்றன. சேலம் கடப்பை, அனந்தபூர், பெல்லாரி, கர்னூல் மாவட்டங்களிலும், ஹைதராபாத், கூர்ச்சரம் கத்தியவார் ஆகிய விடங்களிலும் சிறப்பான புதுக்கற்கால நாகரிக இடங்கள் காணப்படுகின்றன. அக்காலத்தில் (கி. மு. 10,000—கி மு. 5000) இந்தியநாகரிகம் பெரும்பான்மையில்

* P. N Mitra. Prehistoric India (1927) p. p. 458 - 68.

திராவிடரால் அடிகோலப் பட்டிருக்கலாம். புதுக்கற்கால மனிதன் நாகரிகத்தில் மிகவும் முற்போக்கடைந்திருந்தான். இன்றைய மூடநம்பிக்கைகளில் பல அன்று தோன்றலாயின. முந்தியகாலத்திய நாடோடி வாழ்க்கை சிறிது சிறிதாக மாறி, நிலைபெற்ற வாழ்க்கை மேற்கொள்ளப்பட்டது. மக்கள், பயிர்த் தொழிலை மேற்கொண்டனர். பலவகையான விலங்குகளைச் செயலுக்குப் பழக்கிப் பயன்படுத்திக்கொண்டனர். இறந்தோர் புதைக்கப்பட்டனர். மட்கலங்கள் செய்யப்பட்டன. மக்கள் நெய்து உடை அமைத்துக்கொண்டனர். அவர் தம் போர்க் கருவிகளும் பல்வகைக் கலன்களும் போற்றற்குரிய கலை நுட்பத்தைப் பெற்றிருக்கின்றன. மக்களிடை பல பிரிவுகள் காணப்பட்டன. ஆனால், பிற்காலத்திய சாதிமுறையை இதனுடன் இணைத்துப்பேசுவது. இருகாலங்களின் இன அமைப்புக் களிடை உள்ள சிறந்த வேறுபாடுகளைப் பொருட்படுத்தாதது போலாகும்.

## உலோக காலம்.

புதிய கற்காலத்துக்குப்பின் வட இந்தியாவில் செப்புக் காலமும் தென்னிந்தியாவில் இரும்புக்காலமும் தோன்றின. தென்னிந்தியாவில் இதுகாறும் கண்டுபிடிக்கப்பட்டதுள் ஆதிச்ச நல்லூர் (திருநெல்வேலி மாவட்டம்) மிகவும் விரிந்த வரலாற்றுக் காலத்துக்கு முந்திய நாகரிகத்தைக் கொண்ட இடமாகும். இங்கு காணப்பட்ட பெரும் முதுமக்கள் தாழிகளில் மக்களின் முழு எலும்புக்கூடுகள் உமி, வண்ணமிடப்பட்ட மட் கலன்கள், இருப்புக்கருவிகள். தங்கம், வெங்கலம் ஆகியவற்றாலான அணிகலன்கள் எருமையின் உருவங்கள் முதலிய பல அடங்கியுள்ளன. பெரம்பூரில் (செங்கல்பட்டு மாவட்டம்) மட்கலன்கள், இருப்புக்கருவிகள் முதலியன காணப்பெற்றன. தலைச்சேரியின் அண்மையில் (மலையாள நாடு) இருப்புக் காலத்திய கற்குகைகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றில் மட்கலன்கள், இருப்புக் கருவிகள், தீட்டுங்கற்கள், உலக்கைகள், சிவப்பு வண்ணந் தீட்டப்பட்டு நான்கு கால்களுடன் கூடிய பெரும்சாடி முதலிய பொருள்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

## பகுதி-8

### சிந்துவெளி நாகரிகம் : நாகரிகத்தின் இயல்பு.

சிந்து ஆற்றின் வலக்கரையில் மொகஞ்சதாரோவில் (லர் காணு மாவட்டம்-சிந்து) மிகுதியாகவும், ஹரப்பாவில் (மாண்ட் கோமரி மாவட்டம்-பஞ்சாப்) சிறிதளவும் கண்டுபிடிக்கப்பெற்ற பல பழம்பொருள்கள், சிந்துவெளி நாகரிகத்தின் தன்மையை அறிய உதவுகின்றன. சிந்து, பஞ்சாப் மற்றும் சில இடங்களில் நடைபெற்ற புதைபொருள் ஆராய்ச்சிகளின் பயனுக அச்சிறந்த நாகரிகம் அறியப்படுகிறது. அக்கால மக்களின் பொன்னணிகளை ஆராய்ந்து அப்பொன், வெள்ளியோடு கலந்துள்ளது என்றும், அவ்வகைப்பொன் கோலாரில்தான் (மைசூர்) கிடைக்கிறதென்றும் அறிஞர் கூறுவர். மேலும் அம்மக்கள் பயன் படுத்திய சில உயர்ந்த பச்சைக்கற்கள் நீலகிரியிலன்றி வேறெங்கும் கிடைக்கப்பெறவில்லை. ஆகவே சிந்து நாகரிகம், இந்தியாவின் மற்ற பாகத்துடன் தொடர்புகொண்டிருந்தது புலனுகும். வியப்புக்குரிய இந்நாகரிகத்திற்கு "இந்தோ-சுமேரிய நாகரிகம்" என்ற பெயர் பொருத்தமென முதலில் கருதப்பட்டது. ஆனல் பின்னர் சிந்து நாகரிகத்தின் தனித்த சில பண்புகள் காரணமாக அக்கருத்து தகுதியற்றதென முடிவு செய்யப்படலாயிற்று. ஆனல் சுமேரியாவுடன் அம்மக்கள் வாணிக உறவுகொண்டிருந்தது குறிப்பிடத்தக்கது சிந்து நாகரிகம் என்பதை இந்திய நாகரிகம் என்று பொதுப்படையாகக் கூறுவதற்கு மேலும் சான்றுகள் தேவை. இம்மக்களின் போர்க்கருவிகளும் பலவகைக் கலன்களும் கல்லினலும், செம்பினலும் ஆக்கப் பெற்றிருப்பதால், செம்பு - கல் நாகரிக காலம் என்ற பெயர் அக்காலத்திற்கு வழங்கப்பெறும். ஆனல் கல்லினலாகிய பொருள்கள் சிறப்பு வாய்ந்திருக்கவில்லை என்பதும் நாகரிகம் மிகவும் முதிர்ச்சி அடைந்திருந்ததென்பதும் நோக்கற்பாலன.

### கண்டுபிடிக்கப்பட்ட பொருள்கள்.

சுட்ட செங்கல்லாலாகிய இல்லங்கள், அழகுச் சிறப்புக்களுடன் கூடியதாக இல்லாதபோதிலும், கழிவுநீர் வழிகள்

மாடிகள், குழாய்கள். மற்றும் சில உயர்வான நாகரிக வாழ்க்கையின் அடையாளங்கள் முதலியவற்றுடன் விளங்குகின்றன. இருமருங்கிலும் நீரோடிகள் கட்டப்பட்ட அகன்ற தெருக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. நீரோடிகள் வீடுகளிலிருந்து வரும் கழிவுநீரை ஊர்ப்புறம் கொண்டு சேர்ப்பதற்காக அமைந்தவை குளியலறையுடன் கூடிய கிணறுகளும் பல அறைகளும், கூடங்களும் நீச்சு நீர் நிலையமும் காணப்பட்டவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. சதுரமானதும் சற்று நீளமானதும் உருண்டையானதுமான பல்லாயிரக்கணக்கான முத்திரைகளும் தாயத்துக்களும் அங்குக் கிடைத்துள்ளன. இவற்றில் ஒற்றைக் கொம்பு விலங்கு கூனலான எருது, புலி, யானை. மீனை உண்ணும் முதலை பல செடிகொடிகள் மக்கள் கடவுள் வடிவங்களின் பல ஓவியங்கள் காணப்படுகின்றன. அவற்றில் காணப்படும் ஒருவகை எழுத்து அறிஞரால் தெளிவாக அறியப்படவில்லை தவக்கோல முறையில் அமைந்த கல் வடிவங்களும், வெங்கலத்தால் செய்யப் பெற்ற ஒரு நடனமாடும் பெண்ணின் உருவமும் வியக்கத்தக்க சிறு சிலையுருவங்களும், கணக்கற்ற களிமண்ணாலாகிய ஆடவர். பெண்டிர், விலங்குகளின் உருவங்களும், போர்க்கருவிகளும், இல்லறத்திற்கேற்ற கலன்களும் பிறவும் கிடைக்கப்பெற்றுள்ளன.

## காலம்.

சிந்துவெளி மக்களின் முத்திரைகளுக்கும் சுமேரியரின் முத்திரைகளுக்கும் ஒற்றுமை இருப்பதாலும், சுமேரிய நாகரிக காலம் சுமார் கி. மு. 3000 என நம்பப்படுவதாலும் சிந்துவெளி நாகரிககாலம் கி. மு. 3250-க்கும் 2750-க்கும் இடைப்பட்ட காலப்பகுதி ஆகலாமென சர் ஜான் மார்ஷெல் கூறுவர். மாக்கோ (Mackay) இக்கருத்துடன் சிறிது வேறுபடுவர். மொஹஞ்சதாரோ நாகரிகத்தின் முற்பகுதிக்கும், பாபிலோனியாவின் ஆதி குலங்களின் காலப்பகுதிக்கும் (கி. மு. 2550) காலத்தால் ஒற்றுமை இருப்பதாலும் வேறுசில ஆராய்ச்சிகளாலும், கி மு 2550-க்குச் சுமார் முன்னூறு ஆண்டுகட்கு முன்னரே சிந்து நாகரிகம் நிலவியிருக்கவேண்டும் என்று இவர் கருதுவர்.§

§ E. Mackay, The Indus Civilisation (1935) P. 11.

## கலைப்பண்பும் எழுதும் முறையும்.

ஹரப்பாவில் காணப்பெற்ற வடிவங்கள் அடிவயிறு அமைப்பைத்தவிர்த்து, மற்றவகைகளில் சிறந்த கிரேக்கக் கலைப்பண்புகளை ஒத்துள்ளன. நடமாடுகிற நிலையில் இயற்றப் பெற்ற ஓர் உருவம் கூத்தப்பிரான் என்றுகருதப்படுகிறது. அதன் சிற்பவேலையுடன் பிற்காலத்திய எந்த இந்தியச்சிற்பமும் போட்டியிடமுடியாது. உடற்கூறு விளக்கம், போற்றற்குரிய முறையில் அதில் அமைந்துள்ளது. இல்லறத்திற்கான கலன்கள், உறுதியும் அழகும்பெற்று ஆடம்பரமற்றதாக இருக்கின்றன.) எழுதும் முறை, வலப்பக்கமிருந்து இடப்பக்கமாகவும் சிற்சில சமயங்களில் வலமிருந்து இடம், இடமிருந்து வலம் வரிக்குவரி மாற்றியும் உளது. அக்கால எழுத்திலிருந்து அசோகன் காலத்திய 'ப்ராமி' என்ற எழுத்துத் தோன்றியதாக லாங்டன் என்ற பேராசிரியர் உறுதியுடன் கூறுவர். மிகுந்த முயற்சி செய்யப்பட்டும் அவ்வெழுத்து நன்கு அறியப்படுவதற்கு வழி ஏற்படவில்லை. சிந்துவெளிக் காலத்தியமொழி, சுமேரியமொழி எனவும், தமிழ் முதலிய திராவிடமொழிகளின் மூலமெனவும், ஓரளவு வடமொழி எனவும், இந்து-ஐரோப்பியப் பண்புகளின் கலப்புமொழி எனவும் பலவாருகக் கருதப்படுகிறது.

### சமயம்.

ஆதித்தாய் (பராசக்தி) வணக்கம் சிறப்பாக வழக்கிலிருந்தது காணப்படும் வடிவங்கள் இதனை வலியுறுத்தும். அத்தெய்வத்திற்கு நரபலியும் கொடுக்கப்பட்டது. ஒரு முத்திரையில் காணப்பெறும் வடிவம், சிவனுடையது என்று கருதப்படுகிறது. அஃது தவக்கோல முறையில் அமைந்துள்ளதாகும். அதன் இருமருங்கிலும் நான்கு விலங்குகளின் உருவங்கள் உள. அத்தெய்வத்தின் தலையில் பிறைவடிவாயுள்ள இரண்டு கொம்புகள் காணப்படும். அவையே, பிற்காலத்தில் சூலமாக மாறியிருக்க வேண்டுமென்று யூகம் செய்யப்படுகிறது. அது விலங்குகளைக் காக்கும் சிவனுடைய வடிவமே என்று நம்பப்படுகிறது. சிவலிங்க வழிபாடும் மக்களிடம் நிலவியது. தவிர, விலங்குகள், மரங்கள் முதலியனவும் வழிபடப்பெற்றன. தண்ணீருக்கு,

தூய்மைத்தன்மை அளிக்கப்பட்டிருந்தது. குளித்தல் மிகவும் இன்றியமையாததாகவும், சிறப்பானதாகவும் கருதப்பட்டது. சுருங்கக்கூறின், சிந்துவெளி நாகரிகம் இந்துசமயத்தின் பெரும் பழமையை நிலை நிறுத்துவதாகும்.

## இன வாழ்க்கை.

சிந்துவெளி மக்கள் மேற்கு ஆசியாவுடனும், கங்கைச் சமவெளியுடனும், தென்னிந்தியாவுடனும் வணிக உறவு பூண்டிருந்தனரென்பது, கண்டுபிடிக்கப்பட்டுள்ள உலோகங்களாலும் நிறக்கற்களாலும் அறியப்படுகிறது. நகர வாழ்க்கையும் கலப்பான பண்புகளும் பொருந்திய இந் நாகரிகம் வாத்ஸியாயனர்போன்ற ஒரு ஆசிரியரால் விளக்கப் படவில்லை. ஆராய்ச்சியின் பயனுய் அணிகலன்கள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. பலவகை, கை, கால், காதணிகளும் சங்கிலிகளும், மோதிரங்களும் கோவைகளும், தங்கம் வெள்ளி செம்பு எலும்பு முதலியவற்றில் செய்யப்பட்டிருக்கின்றன. சில சமயங்களில் காப்புகள் தோள்பட்டைவரை அணியப்பட்டிருந்ததென அறியக்கிடக்கிறது. இல்லறத்துக்கான கலன்கள், பெரும்பான்மையாக, மண்ணுல் செய்யப் பட்டவை செம்பு. வெண்கல, கலன்கள் அருமையாகும். பலவகை வண்ணங்களால் கலங்களை அழகுபடுத்துவதிலும் அவற்றிற்குப் பளபளப்பு அளிப்பதிலும் அக்காலத்தினர் திறமைபெற்றிருந்தனர். சிந்துவெளியில், ஊதுகுழல் சிறு வண்டி ஆண் - பெண் பறவை, விலங்கு, வடிவங்கள் முதலிய விளையாட்டுப் பொருள்கள் (மண்ணுல் ஆக்கப்பெற்றவை) கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.) பாய்ச்சிகைகள், வெண்கல் முதலியவற்றைக்கொண்டு பல விளையாட்டுகள் நடைபெற்றன. அக்கால மக்கள் பயன்படுத்திய போர்க்கருவிகள், (வில், அம்பு. வேல், மழு. தண்டு) முதலியனவாம். கோதுமை, வாற் கோதுமை மாடு ஆடு, பன்றி ஆகியவற்றின் இறைச்சி, மீன், கோழி. முதலிய பலவகை உணவுகளை அவர்கள் அருந்தினர். பருத்தி நூற்றல், உழவு, வாணிகம் முதலியன சிறப்பான அவர்தம் தொழில்களாகும். இறந்தோரின் உடல்கள் பலவகையாகப் புதைக்கப்பெற்றன. சுருங்கக் கூறின்,

மொகஞ்சதாரோ மக்கள், வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட வர் என்று நம்புவது எளிதாக இல்லை.

## வேதகாலத்தின் முற்பகுதியில் காணப்பட்ட நாகரிகமும், சிந்துவெளி நாகரிகமும் ஒப்பிடப்படுதல்.

சிந்துவெளி நாகரிகம் நகர வாழ்க்கையைப் பொறுத்த தாகவும் சிக்கல்களும், பெரும் போக வாழ்க்கை முறையும் நிறைந்ததாகவுமிருக்கையில், வேதகால வாழ்க்கை, உழவை யும், சிற்றூர் அமைப்பையும் பொருந்தியதாயும், பகட்டான தோற்றமற்றதாகவும் இருந்தது முன்னையதில் இரும்பு அறியப்படவில்லை, பின்னையதில் போர்க்கருவிகள் அதிக மிருந்தன. புலால் உணவு, பல உலோகங்கள் ஆகியன இரு காலங்களுக்கும் பொது. வேதகாலத்தில் மீன் உணவு வெறுக்கப்பட்டது. ( சிந்து வெளியில் காளைமாடு, புலி, யானை முதலியன காணப்பட்டன, குதிரை கிடையாது. வேதகாலத் தில், பசு குதிரை முதலிய விலங்குகள் அதிகம். மக்கள் புலியைப்பற்றி அறிந்திலர். யானையைப்பற்றியும் சிறிதளவே அறியப்பட்டது ஆண் தெய்வங்கள் (சிறப்பாக 'அக்கினி'') வழிபடப்பட்டன. ஆனால் சிந்துவெளியில் இலிங்கவழி பாடும் பெண் தெய்வ வணக்கமும் இருந்தன. இத்தகைய வேற்றுமை விளக்கத்தை மறுத்துப் பின்வரும் கோட்பாடுகள் சில அறிஞ ரால் வெளியிடப்பட்டுள்ளன. அவை யாவன :- வேதச் சொல்லான் பூர் (**Pur**), கோட்டை என்பதுடன் ஒற்றுமைப் படுத்தப்படுவது ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று.; உரல் உலக்கை போன்ற சில கலன்கள் வேதகாலத்தில் பயன் படுத்தப் பெற்றன. மீன் உணவு, அக்காலத்தில் வெறுக்கப் பட்டதென்பது ஆதாரமற்றது சிவ வழிபாடு, உருவங்கள், தவக்கோலமுறை, யாவும் வேதங்களில் குறிப்பிடப்பட்டுள் ளன என்பனவாகும் ஆனால் ஒன்றும் கூறப்படாமையால் ஏற்படும் விளைவுகளையும் சான்றுகளின்மையையும், வருங் காலத்தில் சான்றுகளேற்படக்கூடும். என்ற கோட்பாட்டை யும் கருதாது நோக்கினோமானால் இதுகாறும் கிடைத்துள்ள பழம்பொருள் ஆராய்ச்சி முடிவுகளும் இலக்கியச் சான்று


வரலாற்றுக்
காலத்துக்கு
முற்பட்ட இந்தியா
ஆப்கனிஸ்தானம்
சிந்து
காபூல்
ஜீலம்
சீனப்
ரவி
பியாஸ்
சட்லெஜ்
ஹரப்பா
திபெத்
மானஸரோவர்
ஏரிகள்
ப. சாங்போ
யமுனை
கங்கை
கோக்ரா
கும்தி
பிரம்மபுத்திர
மொகஞ்சதாரோ
லூனி
சாம்பல்
பெட்வா
கென்
சோணை
பர்மா
நர்மதை
தப்தி
சிங்கன்பூர்
மகாநதி
அரேபியன் கடல்
கோதாவரி
பீமா
கிருஷ்ணை
கர்னூல்
குண்டக்கல்
வங்காளக்குடாக் கடல்
வடபெண்ணை
கடப்பை
துங்கபத்திரை
பாலாறு
பெரம்பேர்
தலைச்சேரி
எட்டகல்
தென்பெண்ணை
காவிரி
வைகை
தாமிரவருணி
ஆதித்தநல்லூர்
ஈழம்
இந்தியப் பெருங்கடல்
கீழே கோடிட்டவை —
வரலாற்றுக் காலத்துக்கு
முற்பட்ட சிறப்பான நாகரிக
இடங்கள்

களும், சிந்துவெளி நாகரிகத்திற்கும் இருக்கு வேதகால நாகரிகத்துக்குமுள்ள பெரும் வேறுபாடுகளை உறுதிப்படுத்தும். சில அறிஞரால் மறுக்கப்பட்டபோதிலும், சிந்துவெளி நாகரிகம் ஆரியரல்லாதாருடைய தென்பதும், ஆரியருக்கு முற்பட்டதென்பதும், இந்து ஆரிய நாகரிகத்தைவிட மேலானதென்பதும் ஏற்றுக்கொள்ளக்கூடியனவே. ஆனால் அஃது திராவிடரால் தோற்றுவிக்கப்பட்டதென்று உறுதியான சில சான்றுகளின்றி சடுதியில் இவ்வமயம் கூறிவிட முடியாது. *



* K. N. Dikshit, pre historic civilisation of the Indus Valley (1939) P. 58.

அதிகாரம் 2

# வேத காலம்.

[ சுமார் கி. மு. 2000 — கி. மு. 600. ]

## பகுதி-1

### வேத இலக்கியம்.

**பிரிவுகள்.**

நான்கு வேதங்கள், பிராமணங்கள், ஆரண்யகங்கள். உபநிடதங்கள் ஆகியன ஆக்கப்பெற்ற காலம் வேதகாலமாகும். இவற்றுள் பிந்திய இரண்டும் ஞானகாண்டமாகவும், மற்றவை, கர்மகாண்டமாகவும் அமையும். மீமாம்சகர்களும் வேதாந்திகளும் முறையே, கர்மகாண்டத்தையும், ஞானகாண்டத்தையும், சிறப்பான முழு வேதமாகவும் (**Vedapar-excellence**) மற்ற காண்டத்தை "அர்த்தவாதமாகவும்" (விளக்கம் கொடுக்கக்கூடியதும் இரண்டாம் நிலையிலுள்ளதுமாக) கருதுவர் மீமாம்சகர்கள் ஞானகாண்டத்தையும், வேதாந்திகள் கர்மகாண்டத்தையும் முதல்நிலையிலுள்ள விதி நூலாகக் கருதுவதில்லை. தத்துவ முறைப்படி இவ்வேறுபாடு சிறப்பாக இருந்தபோதிலும் ஒவ்வொரு வேதமும் சம்ஹிதம் பிராமணம், ஆரண்யகம், உபநிடதம், என்று பல பகுதிகளாகப் பிரிக்கப்படுவதாலும். அவை யாவும் "சுருதி" என்று பொதுவாகப் பெயர்பெறுவதாலும், அவற்றின் ஒற்றுமை விளங்கும் இனி வேதங்கள் இருக்கு, சாமம் யசுர், அதர்வம் என நான்கு வகைப்படும். அதர்வத்தை வேதமாகச் சிலர் கருதுவதில்லை. வரலாற்றைப் பொறுத்தவரை இருக்கு வேதம், யசுர் வேதம், அதர்வ வேதம் ஆகியன சிறப்பானதாகும். அதர்வ வேதம், மற்ற மூன்று வேதங்கள் தோன்றிய பிறகே, ஆக்கப்பெற்றது ஆனால் இருக்கு வேத காலத்திற்கு முற்பட்ட நிலைமைகளை அது கூறுகிறது. இருக்குவேதம், காலத்தால் முற்பட்டதாகும். அதன் காலம் தனித்த பெருமையுடன் கூடியது யசுர் வேதம், இருக்குவேத

காலத்திற்கும் பிராமணங்கள் காலத்திற்குமிடையே ஏற்பட்ட மாறுதல்களைக் குறிக்கும். பிராமணங்கள், உபநிடதங்கள் ஆகியவற்றினிடைக்கால மாற்றங்களை ஆரண்யகங்கள் விளக்கா நிற்கும். இருக்குவேதகாலம் வேதகாலத்தின் முற் பகுதியாகவும், பிராமணங்கள், உபநிடதங்கள் ஆகியவற்றின் காலம் வேதகாலப் பிற்பகுதியாகவும் கருதப்படலாம்

## நான்கு வேதங்கள்.

வேத இலக்கியத்தில் இருக்குவேதம் மிகவும் சிறப்பான பகுதியாகும். அதன் பாக்கள் (1017) பெரும்பான்மையில் ஆவர்தம் கடவுள் வழிபாட்டுக்காக இயற்றப்பெற்றன. நீண்ட ஆயுள் செல்வம், மக்கட்பேறு முதலிய உலகியல் நலன்களைப் பெற, கடவுளரைப் போற்றி வழிபடும் முறையில் அவை அமைந்துள்ளன. அவற்றினின்று பல செய்திகளை மற்ற வேதங்கள் பெற்றன. சாமவேதம் இசையோடுகூடிய இருக்கு வேதமேயாகும். யசுர்வேதத்தில் ஏறத்தாழ பாதிச்செய்திகள் புதியன; பாதிக்குமேற்பட்ட பகுதி உரைநடையிலுள்ளது. வேள்விகள் செய்வதற்கான விதிகள் அவ்வேதத்தில் காணப் பெறும். அதர்வ வேதத்தில் மந்திரம், மருந்து ஆகியவற் றைக்கையாளும் முறைகள் உள்ளன.

## பிராமணங்களும் ஆரண்யகங்களும்.

பிராமணங்கள் உரை நடையில் வேள்வி முறையைப் பற்றிய பல கட்டளைகளைப்பற்றியும் வேள்விப் பயனைப்பற்றியும் கூறும். இவை ஒவ்வொரு வேதத்திற்கும் தனித்தனியாக உள்ளன இருக்குவேதத்திற்கு ஐத்திரேயமும், சாமவேதத் திற்கு பஞ்ச விம்சமும், யசுர்வேதத்திற்கு சதபதமும். அதர்வ வேதத்திற்கு கோபதமும் பிராமணங்களாகும். வரலாற்றைப் பொறுத்தவரை சதபதமும் ஐத்திரேயமும் மிகவும் சிறப்பானவை. ஆரண்யகங்கள் காடுகளில் ஆக்கப்பெற்றவை பிராமணங் களில் சிற்சில பகுதிகள் ஆரண்யகங்கள் எனப் பெயர்பெறும். ஐத்திரேய ஆரண்யகமும் தைத்திரேய ஆரண்யகமும் மிகுதி யாக அறியப்பட்டவை.

## உபநிடதங்கள்.

இவை சமய தத்துவ உண்மைகளை ஆராய்ச்சி செய்து முடிவுசெய்ய முயன்ற பெரியோர்களின் கருத்துக்களை அறிவிக்கும். உபநிடதங்களில் ஒரு சிலவே புத்தர் காலத்துக்கு முற்பட்டவை. உபநிடதங்கள், பிரம்ம சூத்திரம், பகவத்கீதை ஆகிய இம்மூன்று நூல்களும் "பிரஸ்தானத்திரயம்" எனப் பெறும். (முடிவான பிரமாணமாக அமைந்த மூன்று நூல்கள்) பிற்காலத்திய சங்கரரும், மாதவரும் இதற்கு விருத்தியுரை கூறினர். உபநிடதங்கள் பொதுவாக ஆத்தும சம்பந்தமான இலக்கியமாகும். எக்காலத்தவருக்குமேற்ற அறவுரைகளை அவை வாரி வழங்குகின்றன. ஜெர்மானிய மெய்விளக்க நூலறிஞரான ஷோபன்ஹாவர் (Schopenhauer) என்பார் உபநிடதங்களை வியந்து பின்வருமாறு கூறுவர் :- "ஈடு இணையற்ற அந்நூல்கள் மிக ஆழ்ந்த முறையில் ஆத்தும சக்தியை எழுப்புகின்றன. ஒவ்வொரு வாக்கியத்தினின்றும் ஆழ்ந்த ஆதியான உயர்ந்த கருத்துக்கள் எழுகின்றன .................. அது எனக்கு வாழ்க்கையில் அமைதி அளிக்கக் கூடியதாக உள்ளது............" அல்பரூனி, உபநிடதங்களை மிகவும் வியந்தார். தாரோஷூகோ, அவற்றைக்கற்று மொழிபெயர்த்ததாகக் கூறப்படுகிறது. அம்மொழிபெயர்ப்புக்கு அவர் ஆதரவளித்தாரென்றும் கூறுவர். பாரசீகத்திலும் இலத்தீனிய கிரேக்க மொழிகளிலும் அவை மொழி பெயர்க்கப்பட்டன. இந்தியாவில் வேதாந்த தத்துவத்தின் உச்சநிலையை உபநிடதங்களில் காணலாம். சுருங்கக்கூறின் இவற்றில் பிராமணர், க்ஷத்திரியர் ஆகியோரின் உயர்வான கருத்துத் திறமை பொதிந்துள்ளது. பதி, பசு, பாசு விளக்கங்களை இவற்றில் காணலாம். சாந்தோகிய உபநிடதமும் பிரகதாரண்யக உபநிடதமும் மிகவும் சிறப்பானவை.

## வேத இலக்கியத்தின் வரலாற்றுச் சிறப்பு.

வேத இலக்கியம் மிகப்பெரிய, அளவுள்ளதாகவும் நன்குபோற்றி பாதுகாக்கப்பட்டுள்ளதாகவும் ஒரேகாலத்தவையாகவுமுள்ளது. இதிகாசங்கள், புராணங்கள் ஆகியவற்றின்

சான்றுகளைவிட, வேதச்சான்றுகள் மிகுதியாக நம்பத்தக்கன. இந்தியரின் ஆதிவாழ்க்கையைப்பற்றியும், அவர்தம் அக்கால கருத்துக்களைப்பற்றியும் இதிலிருந்து அறிகிறோம். இதன் பழமை, உலக வரலாற்றில் இதற்கு மிக உயர்ந்த நிலையை அளித்துள்ளது. வேதகால நாகரிகம் படிப்படியாக மாறுதலடைந்து வந்த காட்சிகளை வேத இலக்கியத்தில் நாம் காணலாம். ஒவ்வொரு பகுதியிலும் காணப்படும் பூகோள (நில அமைப்புச்) செய்திகளைக்கொண்டு, ஆரியர்கள் இந்தியாவில் மூன்று நிலைகளில் பரவி முன்னேறியதை அறியலாகும். ஆனால் தெளிவான காலவிளக்கமுறை அதில் காணப்படாததால் குலங்களின் வரலாறு வரையப்படுவது இயலாததாகிறது. ஆதலால் ஐயுறக்கூடிய புராணங்களின் சான்றுகள் தேவைப்படுகின்றன. சில அறிஞர்கள், வேதங்களில் காணப்பெறும், சமயத்தொடர்பான வழி முறையைவிட, புராணங்கள் குறிப்பிடும் வரலாற்றுமுறை, சிறப்பானதெனக் கருதுவர். பழம்பொருள் ஆராய்ச்சியின் பயனால் கிடைக்கப்பெற்ற சான்று, லாரிய நந்தன்காரில் (Lauriya Nandangarh (Bihar) இருந்த ஒரு வேதகால இடுகாடு மட்டுமேயாகும்.§

பகுதி-2.

## ஆரியரின் இந்தியப் படையெழுச்சி.

### ஆரியரின் தோற்றம். (ஆதிஅகம்)

ஆரியரின் ஆதி அகத்தைப்பற்றி ஒரு உறுதியான முடிவுக்கு வருவது இயலாததாக உள்ளது. ஆராய்ச்சியாளர் பல்வேறு கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். பேராசிரியர் கைல்ஸ் (Giles) என்பார் தெற்கே பால்கன் மலைகளாலும், மேற்கில் ஆல்ப்ஸ் மலைகளாலும், கிழக்கில் கார்ப்பேத்தியன் மலைத்தொடர்களாலும் சூழப்பெற்றதுமான நிலப்பரப்பே (ஹங்கேரி) ஆரியரின் ஆதிஅகம் எனக்கூறுவர் வேறுசில அறிஞர்கள் வடக்கு பிரான்சிலிருந்து யூரல் மலைகள் வரை உள்ள தாழ்ந்த சமவெளியும் கருங்கடலின் வடக்குப்

§ The Cambridge History of India (C. H. I.) 1 (1922) P. 616

பகுதியும், ஆரியர் தோன்றிய இடமாகுமென்று கூறுவர். வடதுருவத்தின் பக்கலிலுள்ள நாடுகளில் அவர்கள் தோன்றியிருக்கவேண்டுமென B. G. திலகர் தம்கருத்தைவெளியிட்டார். ஆரியர் இனம் ஆசியாவிலிருப்பதைவிட மிகுதியாக ஐரோப்பாவில் காணப்பட்டமையே அதன் தோற்றம் ஐரோப்பாவிலிருக்க வேண்டுமென்ற கருத்து வலியுற்றதற்குக் காரணமாகும். நட்டாசியா அல்லது இந்தியா, ஆரியரின் ஆதிஅகமாக இருக்க வேண்டுமென்ற கருத்துக்களும் வெளியிடப்பட்டுள்ளன. வரலாற்றுக்காலத்தில் நட்டாசிய மக்கள் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் படையெடுத்தனரென்று அறியக்கிடக்கிறது ‡ வெற்றியடைந்தோர் வெல்லப்பட்டோர் என்ற பாகுபாட்டைக் குறிப்பிடும் வகையில் முறையே, ஆரியர் தஸ்யூக்கள் என்னும் சொற்கள் வேதங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளதும் சிந்திக்கத் தக்கது. நாம் இந்திய ஆரியர் பிறநாட்டினின்று வந்தவர்களா அல்லது ஆரியரின் இந்தியப்படையெழுச்சி ஒன்று நிகழவில்லையா என்ற கேள்விக்கு விடையை ஆராயவேண்டியது முதலில் இன்றியமையாததாகின்றது இக் கருத்தைப்பற்றி மட்டும் ஈண்டு பேசுவாம்.

இயல்பாக நம்பப்படும் ஒரு கருத்தை (கொள்கையை) புறக்கணிப்பதற்கு முதலில் அக்கருத்துக்குத் தக்க சான்றுகளில்லை என்பதை உறுதியாக்குவதுடன், புதியகருத்துக்குத்தக்க ஆதாரங்கள் காட்டுவதும் இன்றியமையாததாகும். நன்கு வலியுறுத்தப்படாத சில கொள்கைகளை எதிர்த்துக்கூறிவிடுவதால் மட்டும் யாதும் பயனில்லை. ஆரியரின் இந்தியப்படையெழுச்சி உறுதியாக நம்பத்தக்க ஓர் நிகழ்ச்சி என்றோ, அல்லது அது வெறும் கற்பனை என்றோ பிடிவாதத்துடன் சடுதியில் கூறிவிடுவதற்கில்லை. இதுபற்றி பல்வேறுசெய்திகள் ஆழ்ந்து ஆராயத்தக்கன. வேதங்களின் மொழிக்கும் அவெஸ்தாவின் (ஈரானியவேதம்) மொழிக்கும் உள்ள ஒற்றுமைகள் காரணமாகவும், இதுபோலவே கிரேக்க, இலத்தீனிய ஜெர்மானிய, ஆங்கில மொழிகளுக்கும் உள்ள ஒற்றுமை காரணமாகவும் மொழிநூல் வல்லுநர், இம்மொழிகள்

‡ **Rangacharya, op, cit. pp. 195-215.**

பேசுவோர் யாவரும் ஆதியில் ஒரே கூட்டத்தினராக இருந்திருக்கவேண்டுமென முடிவு செய்தனர். அக்கூட்டத்தினர் இந்தோ-ஜெர்மானியர் அல்லது இந்தோ-ஐரோப்பியர் எனக் கருதப்படலாம் என்றும் முடிவு செய்யப்பட்டது. வேத மொழிக்கும் அவெஸ்தா மொழிக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை மறுப்பதற்கில்லை. ஆகவே இரண்டுள் ஏதேனும் ஒரு பகுதி மற்றொன்றின் ஒரு பகுதியின் மொழிபெயர்ப்பு எனக்கொண்டு அத்தகைய மொழிபெயப்பின் மூலவார்த்தைகளையே மாற்றாமல் பயன்படுத்தியிருக்கக் கூடுமென்று எண்ணவும் இடமுள்ளது. மேலும் நட்டாசியாவில் (குச்சா, தர்பான், **(Turfan)** சிங்கியாங் அடங்கியது) சக, தொக்காரியமொழிகள் இந்தோ ஈரானிய மொழிகளுடன் கொண்டுள்ள ஒற்றுமையை விட மிகுதியாக, கிரேக்க இலத்தீனிய மொழிகளுடன் ஒற்றுமைப்பட்டுள்ளன. ஆகவே, இந்நட்டாசிய மொழிகள் இந்தோ ஐரோப்பிய குடும்பத்தின் இரு கிளைகளான ஐரோப்பிய ஆசிய கூட்டங்களை இணைக்கும் ஒரு பிணைப்பாகும். ஆதலால் வேத சமஸ்கிருதமொழி பேசுவோர், வெளிநாட்டிலிருந்தே (பெரும்பாலும் நட்டாசியாவிலிருந்தே) இந்தியாவுக்கு வந்திருக்க வேண்டும். மேலும் பெலுசித்தானத்தில் திராவிட மொழி வழக்கினிடையில் ப்ரா'ஹூயி மொழி அமைந்திருப்பதும், இந்தியாவில் ஆரியர் படையெடுத்ததின் விளைவாக ஏற்பட்டிருக்கக்கூடும்.

இரண்டாவதாக, கெப்படோசியாவில் (ஆசியா மைனர்) போகஸ்காய் **(Boghaz-koi)** என்ற இடத்தில் ஜெர்மானியப் பழம்பொருள் ஆராய்ச்சியாளர் சுமார் கி. மு. 1400-ம் ஆண்டுக்குரிய கல்வெட்டுக்களைக் கண்டெடுத்தனர். அவற்றில் காணப்பட்ட மக்களுடன்பாட்டுக் குறிப்புகளில் வேதக்கடவுளரான இந்திரன், வருணன் (நாசாத்தியர்) முதலியோர் துதிக்கப்பட்டுள்ளனர். ஆகையால் ஆரியரின் இந்தோ ஈரானியக்கிளை, கி. மு. 1400-க்கு முன்னர் ஆசியா மைனரில் அமர்ந்திருக்க வேண்டும். இதனால் இந்தோ ஆரியர், இந்தியாவில் முதலில் தோன்றியவரல்ல என்பது பெறப்படுகிறது. ஆனால் அவர்கள் இந்தியாவுக்கு வந்த காலம் இதனால் அறியப்படவில்லை.

மூன்றாவதாக இருக்குவேதத்தில் நில அமைப்பு விளக்கம் சிறப்பானதாகும். பெரும்பாலும் சிந்து நதியைச்சார்ந்த 25 ஆறுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆகையால் வேத இலக்கியத்தின் மிகப்பழைய பகுதியின்படி, இந்தோ ஆரியர், தென் கிழக்கு ஆப்கானிஸ்தானம், வடமேற்கு எல்லைப்புறநாடு, பஞ்சாப் ஆகிய பகுதிகளில் தங்கியிருந்ததாகக் கருதப்படலாம். யமுனையும், கங்கையும் சிறப்பாகவோ, மிகுதியாகவோ அதில் குறிப்பிடப்படவில்லை. இதனின்று இந்தோ ஆரிய நாட்டின் கிழக்கு எல்லை அறியப்படுகிறது. இருக்குவேதம் ஆரியருக்கும் தஸ்யூக்களுக்குமிடையே நிகழ்ந்த போர்களை சிறப்பிக்கும். ஆரியர்கள் அப்போர்க்காலங்களில் வலிமைவாய்ந்த அடிமைகளான பகைவர்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றுமாறு தமது கடவுளரை வேண்டிக்கொள்ளும் குறிப்புகளும் காணப்படுகின்றன. ஆகவே வடமேற்கு இந்தியாவில் காணப்பட்ட மக்களை வேற்று நாட்டினர் வென்று, தாம் அப்பகுதியில் தங்கினர் என்பதற்கான சான்று இருக்குவேதத்தில் கிடைக்கின்றது. இறுதியாக இப்பொழுது காச்மீரம் பஞ்சாப், இராசபுதனம் ஆகிய இடங்களில் உயர்ந்த தோற்றமும், வெண்ணிற மேனியும், நீண்டதலையும், எடுத்தமூக்கும் உடைய இந்தோ ஆரியர் காணப்படுகின்றனர். இவர்கள் திராவிட மக்களின் உருவ இயல்புகளினின்று வேறுபடுகின்றனர் இத்தகைய சான்றுகளின் சிறப்பைப்புறக்கணிப்பது எளிதன்று.

## மறுப்புக்களும் விடைகளும்.

மேலே குறிப்பிட்ட கோட்பாட்டை மறுக்கும் அறிஞர்கள், மொழி ஒரு இனத்தைப்பற்றிய ஆராய்ச்சிக்குத் தக்க சான்றாகாது எனவும், ஆரியர் இந்தியாவிலிருந்து ஈரான் முதலிய மற்ற நாடுகளுக்குச் சென்றிருக்கலாமெனவும் ப்ராஹுயி மொழி இந்தியாவிலிருந்து உள்நாட்டு இயக்கங்கள் காரணமாக வெளியேற்றப்பட்டிருக்கலாமென்றும், வேதக் கடவுள்கள் இந்தியாவிலிருந்து ஆசியா மைனருக்கு பரவியிருக்கலாமெனவும், கலை சம்பந்தமான படையெடுப்பு நிகழ்ந்திருக்கலாமெனவும் அஃது இனப்படையெடுப்பு என்று கருத வேண்டியதில்லை எனவும் விதந்து கூறுவர். ஆனல் இத்தகைய மறுப்புரைகள்

ஐயப்பாடுகளை மிகுதியாகக் கொண்டிருப்பது நோக்கத்தக்கது. தக்க ஆதாரங்கள் இன்றி, நேர்ந்திருக்கக்கூடும் என்று கூறுவது ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. முதலில் கூறப்பட்ட சான்று களின் சிறப்பு. இம் மறுப்புரைகளில் புலப்படவில்லை. இரண்டாவதாக இருக்குவேதத்தில் ஆரியரின் இந்தியப்படையெழுச்சியைப்பற்றியோ, அவர்களின் ஆதிஅகத்தைப்பற்றியோ எதுவும் குறிப்பிடப்படவில்லை என்றும், ஆரியருக்கும் தஸ்யூக்களுக்கும் நிகழ்ந்த போர்கள், ஆடுமாடுகள், பெண்டிர், மற்றய பண்டைக் காலப்பொருள்கள் முதலியவற்றின்பொருட்டு ஏற்பட்டிருக்கக் கூடுமெனவும் வாதிக்கப்படுகிறது. ஆனால் அயல் நாட்டினரின் வழிபாட்டுப் பாக்களில் அவர்களுடைய ஆதிஅகத்தைப்பற்றி நினைவிருந்தாலும் குறிப்பிடவேண்டியது இன்றியமையாததன்று. மேலும் குறிப்பிடப்பட்டுள்ள போர்கள் சாதாரண ஆடுமாடுகள் முதலியவற்றின் பொருட்டு ஏற்பட்ட எல்லைப்புறக் கலகங்களை விட கடுமையானதாகப் புலப்படுகின்றன. தவிர, ஆரியரின் கடவுள் முறையீடுகள் அயல்நாட்டில் தங்கியுள்ள ஒருவரின் முறையீடுகளின் தன்மையை ஒத்துள்ளன. மூன்றாவதாக உடல் இயல்புகள் நிலையானதாகக் கொள்ளமுடியாது என்றும் அதிலும் பல படையெழுச்சிகளுக்கு உட்பட்ட பஞ்சாபில் நிலையான தூய்மையான உருவ இயல்புகள் காணப்படுவது வியப்புக்குரியதே என்றும் கூறப்படுகிறது. ஆனால் தலை அமைப்பு பிறவற்றைவிட நிலையான ஒன்றும். மேலும் உடல் இயல்புகள், சிறப்பான சந்தர்ப்பங்களில்தான் மாறுதலடையும். இறுதியாக, புராணங்கள் இந்தோ ஆரியர் அயல்நாட்டினர் என்பதை வற்புறுத்தும் வகையில் எதுவும் கூறவில்லை என்றும், மத்திய இந்தியாவே இந்துக்களின் புண்ணிய பூமியாக வழி முறைப்படி நம்பப்படுவதாகவும், பஞ்சாப், இந்து வைதிக நூலில் உயர்வாகக் கருதப்படவில்லை எனவும் கூறப்படுகிறது ஆகையால் பர்கிதரின் கோட்பாட்டின்படி அலகாபாத்திலிருந்து ஆரியர் பரவியதாகக் கருதப்படும் § ஆனால், புரணங்கள் குறிப்பிடவில்லை என்பதை ஒரு சான்றாகக்காட்டுவது ஈண்டு ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. மேலும் மத்திய தேசத்தினரின் திருநிலைத்தூய்மை பிற்காலத்தில் ஏற்பட்டதாகும். பர்கிதரின்

§ F. E. Pargiter, Ancient Indian Historical Tradition (1922)

கோட்பாடு பல ஐயங்களை நீக்கவில்லை. ஆகவே இந்தியாவில் ஆரியப்படையெழுச்சி, பெரும்பாலும் நிகழ்ந்திருக்க வேண்டு மென்று கொள்ளலாம்.

## வேதங்களின் காலம்.

வேதங்களின் காலத்தைப்பற்றிய பல கோட்பாடுகளி ருப்பதால் அதனை உறுதியாக வரையறுத்துக் கூறுதற்கொண் ணாது. இலக்கிய முறைப்படியும், விஞ்ஞான முறைப்படியும் அதனை அறிய முயற்சிகள் செய்யப்பட்டன. வேத இலக்கியத் தின் இறுதியான பகுதி எளிதாக வரையறுக்கப்படுகிறது. உபநிடதக் கருத்துக்கும் பௌத்தசமயக் கொள்கைக்கும் ஒற்றுமை புலப்படுவதால், வேத இலக்கியத்தின் இறுதியான பகுதி கி. மு. 600-க்கு முற்பட்டதாக இருத்தல்வேண்டும். அதன் முதற்பகுதி இருக்குவேதகாலமாகும் எனத்தோன்று கிறது. அக்காலம் ஆரியரின் படையெழுச்சிக்காலத்துடன் இணைக்கப்படலாம். பஞ்சாபின் பூகோள நிலை, பூகம்ப அதிர்ச்சிகள், முதலியவற்றைப் பொறுத்த பூமிநூல் ஆராய்ச்சி களின் முடிவுப்படி இருக்குவேதம் சுமார் கி. மு. 25000 ஆண்டுகளில் ஆக்கப்பெற்றிருக்க வேண்டுமென்று கருதப்படும். (Mr. A C. Das). வானநூல் ஆராய்ச்சி அத்துணை புராதனமான காலத்தைக்காட்டாதபோதிலும், வேதங்கள் மிகப்பழமையான காலத்தவை என்பதை நன்கு வற்புறுத்தும். பிராமணங்களில் அயனசந்தியில் (Solstice) ஞாயிற்றின் மறைவைப்பற்றிக் குறிப்பிடும் ஒரு பகுதியில் கி. மு. 1186 என்னுமாண்டு கிடைக்கப்பெறுகிறது. (Dr. Haug). பருவ காலங்களின் தொடக்கத்தில் நிகழும் மாறுதலை ஆதாரமாகக் கொண்டு, இருக்குவேத காலம் கி மு. 4000 ஆக இருத்தல்வேண்டு மென்று கருதப்படுகிறது (Dr. Jacobi). இத்தகைய விஞ்ஞான முறை முடிபுகள் ஓர் அடிப்படை உண்மையைப் பொறுத்ததே அடிப்படையான அம்சம் உண்மையாக இருந் தால், பல்வேறு முடிவுகள் ஏன் என்ற கேள்வி பிறக்கின்றது. இலக்கிய முறையின்படி வேத இலக்கியத்தின் பல பகுதி களின் மொழியும், அவை குறிப்பிடும் நாகரிகத்தின் வளர்ச்சி யும் ஆராயப்பட்டு, வேதங்களின் காலம் முடிவுசெய்யப்படு கிறது புராணங்களின்படி பரீட்சித்து மன்னனுக்கும் மகா

பத்மநந்தனுக்குமிடைப்பட்ட காலம் 1050-ஆண்டுகள் என அறியப்படுகிறது. ஆகவே பரீட்சித்து கி. மு 14-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவனாகலாம். அதர்வவேதத்தில் காணப்படும் பரீட்சித்து என்ற பெயர் இம்மன்னனைக் குறிப்பதாகக்கொண்டால் இருக்குவேத காலம் சுமார் கி. மு 2000 எனவும், பிராமணங்களின் காலம் சுமார் கி. மு. 1000 எனவும் கருதலாம்.

### இந்தியா, ஆரியரின்கீழ் வருதல்.

ஆரியர் இந்தியாவில் பரவிய வரலாறு ஒரு நீண்டகால நிகழ்ச்சியாகும். வேத இலக்கியம் ஓரளவே அதனைப்பற்றிக் கூறும். தென்னிந்தியாவில் ஆரியர் பரவிய வரலாற்றைப் பற்றிய சில குறிப்புக்களை இராமாயணத்திலிருந்து பெறலாம் இருக்கு வேதத்தில் காணப்படும் நில அமைப்பு வர்ணனை, யமுனையையும் கங்கையையும் கிழக்கெல்லையாகக் கொண்ட வடவேற்கு இந்தியாவைப் பற்றியதாகும். யசுர்வேதம், கங்கைச் சமவெளியுட்பட வட இந்தியாவின் பெரும் பகுதியை ஆரியர் அறிந்தன ரென்பதைப் புலப்படுத்தும். மற்ற வேதங்களில் காணப்படும் நில அமைப்பைப் பற்றிய செய்திகளை, அதர்வவேதம் திரட்டிக் கூறுகிறது. பிராமணங்கள், விந்திய மலைக்குத் தெற்கிலிருந்த மக்களைக் குறிப்பிடும். ஆகவே, வேதங்கள் தோன்றிய காலத்திலும் பின்னர் அவை ஒழுங்கு படுத்தப்பட்ட காலத்திலும் உபநிடதங்கள் தோன்றிய பிற் காலத்திலும், சிறிது சிறிதாக, இந்தியாவில் ஆரியரின் பழக்க வழக்கங்கள் பரவின. படிப்படியான இம்முன்னேற்றம் முதலில் சிந்து வெளியிலும், பின், கங்கைக் சமவெளியுட்பட்ட வட இந்தியப் பகுதிகளிலும், பின்னர் தென்னிந்தியாவிலும் காணப் பட்டது.

## பகுதி 3.

### அரசியல் வரலாறு.

வேதங்களிலும், இதிகாசங்களிலும், புராணங்களிலும் அரசியல் வரலாற்றுக்கான செய்திகள் மிகுதியாகக் காணப் படுகின்றன. ஆனால் தொடர்ச்சியான கால விளக்க முறையைப்

பொறுத்தவரை பல தடைகளேற்படுகின்றன. பர்கிதர், வேதங்களின் சான்றுகளைவிட புராண்ணங்களின் சான்றுகளைச் சிறப்பாகக்கொள்வதைப் பலர் ஏற்கவில்லை. வேதங்கள், புராணங்கள் இரண்டும் நம்பத்தக்கன அல்லவென்று கூறி விடுவது பொருந்தாது. ஆனால் அவை குறையற்றவை என்றும் கூறுவதற்கில்லை. கிடைக்கக்கூடிய பல்வேறு செய்திகளையும், (தொடர்ச்சியான கால முறைப்படி யில்லாதபோதிலும்) ஒற்று மைப்படுத்தி இணைக்கவேண்டியது இன்றியமையாததாகும். † H. C ராய்சௌத்ரி வேத இலக்கியச் சான்றுகளைக் கொண்டு, பரீட்சித்து கி. மு. 9-ம் நூற்றாண்டினன் என்று கூறுவர். அஸ்தினபுரம், குருக்ஷேத்திரம் முதலியன அடங்கிய குரு நாட்டை, பரீட்சித்து, ஜனமேஜயன் முதலிய மன்னர்களும் அவர்கள் வழிவந்தோரும் ஆண்டனரெனவும் அவர்களுக்குப் பின், ஜனகர் அந்நாட்டை ஆட்சி புரிந்ததாகவும் அறியக்கிடக் கிறது. ஜனகர், உபநிடதத்தில் போற்றப்படுகிறார். அவர் கி. மு 12-ம் நூற்றாண்டிலிருந்ததாகப் புராணங்கள் கூறிய போதிலும் ராய்சௌத்ரி கி மு. 7-ம் நூற்றாண்டே ஜனகரின் காலமாகும் என்று கருதுகிறார். ஜனகர் மிதிலையைத் தலை நகராய்க்கொண்டு விதேகநாட்டை (வடக்கு பீஹார்) ஆட்சி புரிந்தவராவர். அதே காலத்தில் கோசலம் காசி உட்பட வேறு ஒன்பது நாடுகளும் தோன்றியிருந்தன. ஜனகர் ஒரு "சாம்ராட்" என்றழைக்கப்பட்டார். அவர் சபை யாக்ஞ வல்கியர் முதலிய தத்துவ அறிஞர்களைக் கொண்டு புகழுடன் விளங்கியதென்பது பிரகதாரண்யக உபநிடதத்திலிருந்து அறி யக்கிடக்கிறது. அவருக்குப்பின் வந்தோர் காலத்தில் விதேக நாடு வீழ்ச்சியுற்றது. (கி மு. 7-ம் நூற்றாண்டின் முடிவு). அதன் பின் அங்கு குடியரசு ஆட்சி ஏற்பட்டு காசிநாடு சிறப்பான நிலையை எய்தியது.

## பகுதி 4.

### ஆட்சி முறை.
### வேதகாலத்திய அரசன்.

இருக்குவேத காலத்து அரசியல் முறை முடியாட்சியாகும். ஆனால் இதைத்தவிர வேறு அரசியல் முறை காணப்படவில்லை

† H C.Raychaudhuri, Political History of Ancient India, 1938, P.29.

என்று கூறுவதற்கில்லை. ஒவ்வொரு நாட்டிலும் வாழையடி வாழையாக ஒவ்வொரு குறிப்பிட்ட குலத்தினர் ஆட்சிபுரிந்தனர். சிற்சில காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசராட்சியும் நிலவி யது. அ ர ச ன் படைத் தலைவனுயிருந்தான். பல உடன் கூட்டதிகாரிகள் அவனுடனிருந்தனர். அவர்களில் ஆசான் (புரோகிதன்) சிறப்பு வாய்ந்தவன். ஆகவே, சமயத் தொடர் பான அரசியல் வளர்ந்ததைக் காண்கிறோம். அரசனின் மற்ற கடமைகளைப் பற்றித் தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் மக்களைக் காக்கும் அவன் கடமை மிகவும் சிறப்பாகக் குறிப் பிடப்பட்டுள்ளது. படைத்தலைவன், சிறிய படையெழுச்சிகளை மேற்பார்வை செய்து வந்தான். ஊர்த்தலைவன் (கிராமணி) உதவிப் படைத்தலைவனுவன். சமிதி, சபா எனப்பெறும் இரு குழுக்கள், இருந்த தெனினும் அவற்றின் தன்மை தெளிவாக அறியப்படவில்லை. அக்காலத்திய அ ர ச ன் ஹோமரால் ‡ குறிப்பிடப்படும் மன்னனைப்போல், செல்வர்களுக்குள் முதல் வனுகவே இருந்தான். ஆதலால் அவன் தனிச்செங்கோல் பெறுவதற்கு அதிக வாய்ப்பில்லை வேதகாலத்தின் பிற்பகுதி யில், அ ர ச னி ன் அதிகாரப் பெருக்கத்தைக் காட்டும் சில சான்றுகள் உள. ஐத்திரேய பிராமணத்தில் இராச்சியம், வைராச்சியம், சாம்ராச்சியம் முதலிய சொற்களைக் காண் கிறோம் இராசசூயம், அசுவமேதம் முதலிய வேள்விகள் நடைபெற்றமையும், முடிசூட்டுவிழாச் சிறப்புக்கள் பெருகி யிருந்ததும், ஈண்டு குறிப்பிடத்தகும் "அதிராத்" ஏகராத் என்ற கொள்கைகள் வளரலாயின பெரும் இராச்சியங்கள் தோன்றியதே அரசனின் கொற்றம் வளர்ந்தமைக்குக் காரண மாகும். அக்காலத்தில் மக்கட் குழுக்கள் வீழ்ச்சியடைந்ததாகக் காணப்படுகிறது. ஆனால் சில சமயங்களில் அவை அரசர் களையும் வெளியேற்றுவதற்கான சட்டங்கள் பிறப்பித்தன என்று சில குறிப்புகளாலறியப்படுவதால் அ வை மறையவில்லை என்பது விளக்கப்படுகிறது. அரசனுக்குரிய பணியாளரின் எண்ணிக்கை பெருகி வந்தது. அ வ ர் க ளு ள் புரோகிதன் தலைமையான நிலையிலிருந்தான்

---

‡ Homer சிறப்புவாய்ந்த கிரேக்கக் கவி.

## பகுதி 5.

### சமயம்.

### வேள்வி முறையும், ஆத்துமாவைப் பற்றிய கோட்பாடும்.

இருக்குவேத கால ஆரியர் இயற்கைத் தோற்றங்களை வணங்கினர். இடி-மழை முதலியவற்றின், கடவுள், 'இந்திரன்' எனவும், நீர்ச்கடவுள் 'வருணன்' எனவும் வழிபடப்பட்டன. அக்கினி, சந்திரன் முதலிய கடவுள்களும் அடுத்தபடியாகச் சிறப்பு வாய்ந்தவை. சிறப்பற்ற நிலையில் சில பெண் தெய்வங்களும் வழிபடப்பட்டன. சூரியன், வருணன் முதலிய தெய்வங்கள் ஒரே நிலையில் வைத்து வழிபடப் பெற்றனர். சில சமயங்களில் குறிப்பிட்ட ஒரு கடவுள் மிகவும் சிறப்பாகவும், மற்றக் கடவுளர் வெவ்வேறு சமயங்களில் சிறப்பாகவும் வழிபடப்பெற்றனர் §(Heno theism). உருத்திரன், விட்டுணு என்னும் தெய்வங்கள், (பிற்காலத்தில் முதன்மை யடைந்திருந்தோர்) அக்காலத்தில் சிறப்பற்றிருந்தனர். பல கடவுளரை வழிபடும் முறை, வேதகாலப் பிற்பகுதியில் மாறுதலடைவதைக் காண்கிறோம். கடவுள் ஒருவர் என்ற உணர்ச்சி தோன்றலாயிற்று. ஒன்றாக உள்ளதே பலவகையாகப் பேசப்படுகிறது என்ற கருத்து உணரப்பட்டது. இறந்தபின் உயிரின் நிலையைப்பற்றிய சிந்தனைகள் மக்களிடை காணப்படவில்லை. வேள்வியின் மூலம் கடவுளரை மகிழ்வித்து நீண்ட ஆயுள், பசுக்கள், வலிமைமிக்க மக்கட்பேறு முதலியனவற்றை அவர்களிடமிருந்து பெறவேண்டுமென இருக்குவேதம் வற்புறுத்துகிறது. ஆனால் நரபலி கொடுக்கப்படவில்லை. தானியங்கள், பால், நெய், புலால், சோமபானம் முதலியன கடவுளருக்குப் படைக்கப்பெற்றன. ஆதிகால இந்தோ ஆரியரைப் போலவே அவர்களுடைய கடவுளரும் அறிவு, ஆற்றல், வீரம் முதலியவற்றுடன் கூடிய புகழைப்பெற்றிருந்தனர். வருணனைத் தவிர்த்து மற்ற கடவுளரைப்பொறுத்தவரை தெய்வத்தன்மையான பண்புடைமை வற்புறுத்தப்பட்டிருக்கவில்லை. அக்கடவுளரின் பேராற்றல் மக்களுடைய சிற்றறிவுக்கு எட்டாதவகையில் கடந்திருந்ததாக நம்பப்பட்டது.

---

§ H D. Griswold, The Religion of the Rigveda (1923) pp. 108-9.

அடுத்தபகுதியில் உருத்திரன் என்னுந் தெய்வமும் சிறிதளவு விட்டுணுவும், சிறப்பான கடவுளராயினர். முன்னையவருக்கு சிவன் என்னும் பெயர் அளிக்கப்பெற்றது. உருத்திரன் என்னும் ஆரியத்தெய்வம் சிவனுடன் இணைந்ததை நோக்கின், ஆரியர் அல்லாதாருடைய கொள்கை பின்பற்றப்பட்டிருப்பது விளங்குகிறது. வேள்வி முறையும் அதைப்பற்றிய கோட்பாடும் விரிவடைந்து இறுதியில் சமயம் இயந்திரத்தைப்போல் உறுதியுள்ள ஒன்றாகியது. பிற்காலத்தில் மீமாம்சகர்கள் வேள்வியிலேயே அனைத்தும் அடங்குமெனவும் அதன்மூலம் மக்கள் கடவுளரையும் கட்டுப்படுத்தலாமென்றும் கூறக்கூடிய நிலைதோன்றலாயிற்று. வேள்விக்கு மிகுந்தசிறப்பு அளித்ததன் காரணமாக, சடங்கு முறையான வேதம், கடவுளின்றியே, வீட்டுக்கு (மோட்சம்) வழி காட்டக்கூடிய உயர்ந்த நிலையில் வைத்து மதிக்கப்படலாயிற்று. இதன் விளைவாக வேதமுறையான வேள்விகளைப் போற்றியவர்கள், கடவுளின் உயர்நிலையை மறுப்போராயினர். ஆனால் வேதங்களில் அவர்களுக்கு அளவிறந்த நம்பிக்கையிருந்ததால் "நாத்திகர்கள்" என்று அவர்கள் கருதப்படவில்லை. அக்காலப்பகுதியில், உபநிடதங்களில் தத்துவ சம்பந்தமான சிந்தனை அதன் உச்சநிலையை எய்தியது. எதிர்மறையில் "அதுவன்று; அதுவன்று" என்று கூறும் முறையில் உண்மையான "ஆன்மா" "பிரமம்" ஆகியவற்றைப்பற்றிய ஆராய்ச்சியிலிறங்கி உபநிடதங்கள் அவ்வுண்மையை வரையறுத்துக்கூறும். "தத்துவமஸி" என்ற மகாவாக்கியம் "ஜீவாத்மாவை" பரமாத்மாவுடன் ஒன்றுக்குகிறது அக்காலத்திலேயே, மக்கள், தம் வினைக்கேற்ற வண்ணம் பலவகையாக மாறிமாறிப் பிறக்கின்றனரென்ற "கர்மம்" என்னும் தத்துவம் நன்கு உருவாக்கப்பெற்றது. மறுபிறப்பு, உயிர் ஓருடலிலிருந்து மற்றொன்றுக்கு மாறுதல் முதலிய கருத்துக்களடங்கிய கர்மத்துவம் சதபத பிராமணத்தில் முதலில் குறிப்பிடப்பட்டு உபநிடதங்களில் நன்கு விரித்துரைக்கப்படுகின்றது. "அவன் மறுபடியும் இங்கு புழுவாகவும், பறவையாகவும், புலியாகவும், மனிதனாகவும், தன் கர்மத்திற்குத் தக்கவாறு பிறக்கிறான்" என்ற வாக்கியம் சதபத பிராமணத்தில் காணப்படும். ஆனால் மாயைத் தத்துவத்தால், ஐம்பொறி

களுக்குத் தோன்றும் உலகம் என்ன என்பதைப் பற்றிய விளக்கம் பிற்காலத்தில் ஏற்பட்டதாகும்.

## பகுதி-6

### பொருளாதார நிலை.

### வேதகாலத்தின் முற்பகுதி.

இருக்குவேத காலத்திய மக்கள் வேட்டையாடுதலுடன் ஊர்களில் ஆடு, மாடு மேய்த்தலையும் உழவையும் மிகுதியாக மேற்கொண்டிருந்தனர். ஆடுமாடுகள், குதிரைகள், வெள்ளாடுகள், கழுதைகள், நாய்கள் ஆகியன வளர்க்கப் பெற்றன. வாற்கோதுமை பயிரிடப்பட்டது. நீர்ப்பாசனத்திற்காக கால்வாய்கள் வெட்டப்பட்டன. மரவேலையும், உலோக வேலையும் நன்கு முன்னேறியிருந்தன. நெசவும் தோல் பதனிடுதலும் அறியப்பட்டிருந்தன. உழவுத் தொழிலில் அடிமை முறை இல்லை. நாவாய்த்தொழில் தொடக்க நிலையிலிருந்தது வறுமையைக் கண்டு மக்கள் அஞ்சினர். வாற்கோதுமை, அப்பம், பால், நெய், புலால் மாட்டிறைச்சி முதலியன உணவுப் பொருள்களாகக் கொள்ளப் பெற்றன. எருதுகள் உணவின் பொருட்டு கொல்லப்பட்டதெனினும் பசுக்கள் புனிதமானவை என்றும், கொல்லத்தக்கவை அல்ல எனவும் கருதப்பட்டது. வேள்வி செய்வோர் அருந்தும் சோமபானமும் சுராபானமும் முறையே சோமா என்ற செடியினின்றும் வாற்கோதுமையினின்றும் தயாரிக்கப்பட்ட மயக்கந்தரும் பொருள்கள். கம்பளிகள் பயன்படுத்தப்பெற்றன. பருத்தியைப்பற்றி உறுதியாகக் கூறுவதற்கில்லை.

கழுத்துச்சங்கிலிகள். காதணிகள் சதங்கைகள், காப்புகள் முதலிய பொன்னணிகள். ஆடவராலும், பெண்களாலும் அணியப்பெற்றன. தலைமயிரைத் திருத்தி அழகுபடுத்திக் கொள்ள மக்கள் அறிந்திருந்தனர். தாடிவைத்துக்கொள்ளும் பழக்கமிருந்தபோதிலும் மயிர் மழித்துக்கொள்ள அறிந்திருந்தனர் குதிரைகள் பூட்டிய தேர்களில் ஏறிச்செல்லலும்,

# வேதகால இந்தியா




கீழே கோடிமுக்கப்பட்டவை—மரபுக்குழுவினர்

நாட்டியமாடுதலும், சூதாடுதலும் மக்களின் பொழுதுபோக்குக்கான விளையாட்டுக்களாம். புல்லாங்குழல், யாழ் முதலிய சில இசைக்கருவிகளும் அவர்களிடமிருந்தன. மேற்கு ஆசியாவுடனும் எகிப்துடனும் நில வழியாகவும் கடல் வழியாகவும் வாணிக உறவு நீடித்திருந்தது பண்டமாற்று முறையுடன் ஒருவகை நாணய முறையும் வழக்கிலிருந்தது.

### வேதகாலத்தின் பிற்பகுதி.

அடுத்தகாலப்பகுதியில் உழவும், ஆடுமாடு மேய்த்தலும் முன்னேற்றமடைந்தன சிறந்த உழவுக்கருவிகளும், எருவிடலும் பயன்படுத்தப்படலாயின. கோதுமை, நெல் முதலிய கூலங்களும், எள்ளு முதலிய எண்ணெ வித்துக்களும் பயிரிடப் பெற்றன நகர வாழ்க்கை சிறிது சிறிதாக வளர்ச்சியுற்றது. பொறித்தொழில் பலவகையாக விரிந்து அளவற்ற தொழில் முறைகள் தோன்றலாயின. முறையற்ற வட்டி வாங்கவும் சிலர் தலைப்பட்டனர் தகரம் ஈயம், வெள்ளி முதலிய புதிய உலோகங்களில் வேலைசெய்ய மக்களறிந்தனர். உணவு, குடி, ஆடை இவற்றில் முற்பகுதி முறைகளினின்று மாறுபாடுகள் ஏற்படவில்லை உபநிடதத்தில் கூறப்படும் யாக்ஞ வல்கியர் என்ற வேதகாலத்திய தத்துவ அறிஞர் மாட்டிறைச்சியில் மிகுந்த விருப்பமுள்ளவராயிருந்தார் கோகணம் (விருந்தினர்) என்ற வடமொழிச் சொல்லுக்கு, எவனொருவனுக்காக எருது கொல்லப்படுகிறதோ அவன் - என்பது பொருளாகும். கொல்லாமை என்ற உயர்ந்த அறம் பிற்காலத்தில் வளர்ச்சியடைந்த ஒன்றாகும் அயல் நாட்டு வாணிகம் பெருக்கமடைந்தது புதிய நாணயங்கள் புழக்கத்திற்கு வந்தன. (சதமானம்; சுவர்ணம்; பாதம்; கிருஷ்ணலம்)

## பகுதி 7.

### இன வாழ்க்கை.

### சாதிமுறை.

இருக்கு வேதத்தில் புருஷசூக்தம் என்னும் பனுவலில் மட்டுமே (10-வது பிரிவு) நான்கு சாதிகளைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. சிலர் இஃது பிற்கால இடைச் செருகல்

என்பர். எப்படியிருந்தபோதிலும், இந்தோ ஆரிய இன அமைப்பு சாதி தோன்றுதற்கு ஏற்றதாக இருந்ததென்பதில் ஐயமில்லை. வரலாற்றைப் பொறுத்தவரை, ஆரியரின் வருகைக்குப்பின். வென்றோர். வெல்லப்பட்டோர் என்று தோன்றிய பாகுபாடும், நாகரிகம் முன்னேற்றமடையுங்காலை வெற்றியாளரிடை தோன்றிய பிரிவுகளும். சாதி முறையின் தோற்றத்திற்குக் காரணங்களாகக் கொள்ளலாம். இப்படியாக இருபிறப்பாளர் (துவிசர்), சூத்திரர் என்ற வேறுபாடு தோன்றியது. சூத்திரர் என்ற சொல்லின் உண்மைப் பொருளை அறிவது சொல்விலக்கணத்தில் வல்ல அறிஞர் களுக்கும் எளிதாகஇல்லை. சங்கரர், வருந்தத்தக்க என்ற பொருளையுடைய ஒரு மூலவார்த்தையினின்று சூத்திரர் என்ற சொல் தோன்றியதாகக் கூறுவர் ஒருவேளை, ஆரியர் இந்தியாவில் முதலில் சந்தித்த ஒரு திராவிடக் குடியின் பெயராக அச்சொல் இருக்கலாமெனவும் கூறப்படுகிறது † சாதிப்பிரிவின் அடிப்படையான ஒரு காரணம் நிறவேற்றுமை எனவும் தோன்று கிறது. சாதிப்பிரிவுகள், தொடக்கத்தில் இயற்கையாகவும் விதிப்படியாகவும் (Normal) இருந்தபோதிலும் இருக்குவேத காலத்தில் சாதி வேற்றுமை உற்பத்தி நிலையில்கூட (embryonic stage) இல்லை என்று கூறுவது மிகையாகும். பிராமண, உபநிடதங்கள் காலத்தில் நான்கு சாதிகளும் நன்கு உருவாக்கப்பெற்று உட்பிரிவுகளாகப் பல சாதிகள் பெருக்க மடைந்தன. சத்தியகாமசபலர் என்ற ஒரு பரத்தை மகன், அவன் அறியமுடியாத தந்தைக்குப் பிறந்தானென்றும் அவன் உண்மையைப் பேசியபடியால் ஒரு பிராமணன் என்று கருதி ஒரு இருடி அவனைத் தன் மாணுக்களுக ஏற்றுக்கொண்டாரென் றும் அறியக்கிடப்பதால், சாதிமுறை மாற்றமுடியா உறுதியுட னிருக்கவில்லை என்பது தெளிவாகும். மக்களிடை கலப்பு மணங்களுக்குத் தடையும் உறுதியானதாக இல்லை. இனத்தில் தாழ்ந்தோர், மிக உயர்வான நிலைக்கு முன்னேறியதை உணர்த்தும் சான்றுகள் உள. சாதிமுறை வளர்ச்சியடைந்த மைக்கு; வெற்றி வீரரும் தோற்கடிக்கப் பட்டோரும் ஒன்று

† D. R Bhandarkar.'Some Aspects of Ancient Indian Culture 1940 P. 12.

சேர்ந்தது காரணமாகும். வெல்லப்பட்டோர், அடிமைகளாகத் தாழ்த்தப்படுவதைவிட, ஒரு உடன்பாட்டின் மூலம் இன அமைப்பை ஒழுங்கு படுத்துவது ஏற்றுக்கொள்ளத் தக்க தாயிற்று. பிற்காலத்திய உறுதியான சாதிமுறைக் கட்டுப்பாடும் பண்டைய கிரீசின் அடிமை முறையைவிட கடுமையற்ற தாகவே இருந்தது நோக்கற்பாலது.

## பெண்டிர் நிலை.

இருக்குவேத இன அமைப்பு, தந்தையைத் தலைவனாகக் கொள்ளும் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. பெண்டிர், ஆடவருக்குத் தாழ்ந்தோராகக் கருதப்பட்ட போதிலும், ஒருதார மணமுறையே விதியாக இருந்தது. கணவனுக்கும் மனைவிக்குமுள்ள தொடர்பு புனிதத்தன்மை வாய்ந்ததாகவும் நிலையானதாகவும் கருதப்பெற்றது. பலதார மணவினை விதிவிலக்காயிருந்தது. இளம்பருவ மணம் அறியப்படவில்லை. பதினாறு அல்லது பதினேழு வயதே மணத்திற்குரிய பருவமாகும். பெண்கள் சிறப்பாக, பூப்பெய்திய பின்னர், மணம் செய்விக்கப் பெற்றனர். மணமாகாத முதிய பெண்டிரும் இனத்தில் காணப்பட்டனர். மணமக்கள் தேர்ந்தெடுப்பதில் இருபாலருக்கும் உரிமை அளிக்கப்பட்டிருந்தது. உடன் பிறந்தோருக்குள்ளும், தந்தை - மகள் இடையேயும், மணவினை தடைசெய்யப்பட்டிருந்தது. பிள்ளை எடுப்பு (ஸ்வீகாரம்) உரிமை போற்றப்படவில்லை. கைம்பெண்ணின் இடையூறுகளைக் குறைக்கும் பொருட்டு, சில காலங்களில் மகனில்லாத கைம்பெண் இறந்துபோன அவள் கணவனின் உடன் பிறந்தானை மணந்துகொள்ளும்படி செய்யப்பட்டாள். வேதகாலத்தின் பிற்பகுதியில், இறந்த கணவனுடன் மனைவி உடன்கட்டை ஏறும் வழக்கம் (சதி) வளர்ந்தது. அரசர்கள் நான்கு மனைவியரை மணந்துகொள்ள முடியும். பெண் குழந்தையைவிட ஆண் குழவியையே அக்காலத்தினர் மிகுதியாக விரும்பினர். மணத்தைப் பற்றிய விதிகள், பிற்காலத்தில் கடுமையாக்கப்பட்டன. வேதகாலம் முழுவதும் பெண்கல்வி சிறப்பான நிலையிலிருந்தது. சில இருக்குவேதப் பாசுரங்கள் பெண்டிரால் இயற்றப்பட்டுள்ளன. விச்வவாரை, கோஷா,

உலோபா முத்திரை, அபாலே, முத்கலனி, முதலியவர் சிறப்பானோர். உபநிடதங்களில் யாக்ஞ்ய வல்கியர், அவர் மனைவி மைத்திரேயியினால் கேள்வி கேட்கப்படுவதையும், கார்க்கி, என்பவளால் அவர்கூற்று மறுக்கப்படுவதையும் முடிவில் முனிவர் வெற்றிபெறுவதையும் காணலாம். பெண்ணாசிரியருக்கும், ஆசிரியரின் மனைவிக்கும் இருந்த வேறுபாடு சிறப்பானது. பிறதுறைகளில், பெண்டிர் நிலை எத்தனை குறைவாயிருந்தபோதிலும், அறிவுத்திறமையில் அவர்களிடம் குறைபாடு இல்லை. அவர்களைப் பொறுத்த வரை, பூணூல் அணிவிக்கப்படும் விழா (உபநயனம்) பழக்கத்தினின்று மறைந்துவிட்ட போதிலும், சமயத்தொடர்பான செய்திகளிலும் சடங்கு முறைகளிலும் அவர்கள் ஆடவருடன் ஒத்த நிலையைப் பெற்றிருந்தனர். பிற்காலங்களில் அவர்களுடைய அறிவுத்திறமை குறைவுற்ற காரணத்தால் அவர்கள் நிலை 'சூத்திரர்' என்ற வகுப்பினருடைய நிலைக்கு ஒப்பாக்கப் பெற்றது. அவர்கள் தாழ்ந்தோர் என்ற கருத்து வளரலாயிற்று.‡

## குற்றங்கள்.

இருக்குவேத காலத்தில், வலுக்கட்டாயமானதும் சாதாரணமானதுமான பலவகைத் திருட்டுகள் காணப்பட்டன. உடன்பிறந்த, அண்ணன்-தங்கை மணம் அல்லது தந்தை-மகள் மணம் குற்றம் எனக்கருதப்பட்டது. (ஈரானிலும் எகிப்திலும் மிகவும் பிற்காலத்தில் உடன்பிறந்தாருக்குள் மணம் ஏற்றுக்கொள்ளப்பட்டதும் ஈண்டு குறிப்பிடத்தகும்) விலைமகளிர் இருந்தபோதிலும் பெண் தர்மம் உயர்நிலையிலிருந்தது. வேதகாலத்தின் பிற்பகுதியில் பனைக வனைக்கொல்லுதல், பொன்திருட்டு முதலியன கொடுங் குற்றங்களாகக் கொள்ளப்பெற்றன. தற்செயலாக ஒருவன் கொலை செய்யப்படுவதற்கும் மோசக் கருத்துடன் கொலை செய்யப்படுவதற்கும் முறை வழங்குதலில் வேறுபாடு இருந்தது. திருட்டுக் குற்றவாளிகள் சிவக்கக் காய்ச்சின மழுவைக் கையி

‡ A. S. Altekar, The Position of Women in Hindu Civilisation (1938), pp. 406–15.

லேந்தி புண்ணையாது நடந்து வந்தால் குற்றவாளிகளல்ல என்று உறுதி செய்யப்பட்டதாக. உபநிடதங்களிலிருந்து அறியலாகும்.

## பகுதி-8

### கலைப் பண்புகள்.

### எழுதும் முறை.

வேத இலக்கியம் தோன்றியதற்கு நீண்ட காலம் பின்னரே அஃது எழுதப் பெற்றதென்றும், கி. மு. 800-ல் தான் எழுதும் முறை இந்தியாவில் புகுத்தப்பட்டதென்றும் ஒரு கொள்கை உண்டு. ப்ராமி எழுத்து செமித்திய மொழியை மூலமாகக் கொண்டதென்பர். சிலருடைய கருத்தின்படி கி. மு. 5-ம் நூற்றுண்டில் எழுதும் முறை ஈண்டு தோன்றியதாகும். ஆனால் பாணினியின் காலத்திற்கு முன்னரே எழுதும் முறை ஈண்டு அறியப்பட்ட தென்பதில் ஐயமில்லை. வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மொகஞ்சதாரோவில் எழுதும் முறை அறியப்பட்டிருந்த தென்பதை நாமறிவோம்.

### இலக்கியம்.

வேத இலக்கியத்தைப் பற்றி முன்னர் கூறப்பட்டுள்ளது. அதன் இலக்கியப் பெருமை, அதனுடைய வரலாற்றுச் சிறப்புக்கு இணையாக முடியாத போதிலும், வேத இலக்கியம், "வியப்புக்குரிய இசைத்திறன், மொழிப் பயிற்சி, செய்யுள் நடை, உரைநடை விளக்குவதற்கான விரிவுரைகள், தத்துவங்கள் முதலியவற்றுடன் கூடியதாக உளது. செய்யுள் நடையில் உவமை நயம் காணப்படும். மேலும், செருக்கான தன்மையை இதிற்காணலாம். புனைகருத்துக்களும், மறைபொருள்களும் காணப்படினும், இதன் சொல்வளம், வேத காலத்துக்குப் பின் வளர்ந்த வடமொழியை விட, இயற்கையாகவும் எளிதாகவும் உள்ளது."§

§ A. A. Macdonell. India's Past 1927. p. 39.

## இலக்கணமும் அகராதி இயற்றலும்.

வேதகால முடிவில் யாஸ்கர் என்ற அறிஞர் வாழ்ந்தார். அவர் எழுதிய நிருக்தம், சொல்லிலக்கணத்திற்கும் பொருளிலக்கணத்திற்கும் சிறந்தது. அவர் எழுதிய உரை நடைப் பகுதியும் அவர் சிறந்த இலக்கண அறிஞர் என்பதைக்காட்டும். அவருக்கு முந்தி இருந்தோர் பலரைப் பற்றி அவர் குறிப்பிடுகிறார் சிலர், அவர் சுமார் கி. மு 500-ல் வாழ்ந்தவரென்பர். ஆனால் அவர் பாணினிக்கு முன்னர் வாழ்ந்தவ ரென்பதில் ஐயமில்லை வேதகாலத்திய பிராதிசாக்கியங்கள் அக்காலத்திற்குரிய இலக்கணக்கூறு பாட்டுச் சிறப்பைக்காட்டும் சான்றாகும். அக்காலத்திய பெயர்ச்சொல் வினைச்சொல்லகராதிகள் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தவை

## தந்துவம், மருந்துவம், வானசாத்திரம்.

யோகமுறை, சாங்கிய முறைக்கு முன்னதாகவே தோன்றி இருக்கவேண்டும் இருக்குவேத காலத்திற்குப் பின் மருத்துவ அறிஞரின் நிலை கேடுற்றதால் மருத்துவ நூலும் ஓரளவு சிதைவுற்றது. அக்காலத்தில் காசம், குட்டம் சீத பேதி மஞ்சக்காமாலை, மூப்பு முதலிய பலவிதமான நோய்கள், குறிப்பிடப்பட்டுள்ளன. அதர்வ வேதமும் சதபத பிராமணமும் மனித எலும்புகளைப் பற்றி சரியான குறிப்புக்களைத் தருகின்றன. வானநூலில் மிகுந்த முன்னேற்றம் காணப்பட்டது. ஒவ்வொன்றும் முப்பது நாட்களையுடைய 12-மாதங்களாக, இருக்குவேத காலத்தில் ஒரு ஆண்டு பிரிக்கப்பட்டிருந்தது 13-வது மாதமும் காணப்பட்டது. பிராமணங்கள் காலத்தில் 12-மாதங்களும் ஆறு பருவங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. 27 அல்லது 28 விண்மீன்களைப் பற்றியும் அறியப்பட்டிருந்தது. இவ்வறிவும் சதபத பிராமணத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் வெள்ளத்தைப் பற்றிய வியப்புக் கதையும் பாபிலோனிய உறவினால் ஏற்பட்டதாக சில அறிஞர்கள் கருதுவர்.

### கல்வி

சாந்தோக்கிய உபநிடதத்திலுள்ள பின்வரும் ஒரு பகுதி சிறந்த விளக்கந்தரும். 'நான் இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம், அதர்வவேதம் ஐந்தாவது வேதமாகிய புராண இதிகாசச்செய்யுட்கள், இலக்கணம் கணிதம், இறைத்தத்துவம் காலவிளக்கமுறை, மொழிநூல். அரசியல், சமயநூல், மாய வித்தை, போர்க்கலை வானநூல், பாம்பாட்டி வித்தை அருங் கலைகள் ஆகியவற்றைக் கற்றிருக்கிறேன்."

## பகுதி 9.

### தென்னிந்தியா.

### தக்கணத்தில் ஆரியர் பரவுதல்.

வேதகாலத்தின் பிற்பகுதியில் தென்னிந்தியாவில் ஒரு சில ஆரியநாடுகளிருந்தன. குந்திணத்தைத் தலைநகராய்க் கொண்ட விதர்ப்பநாடு அதிலொன்று. கலிங்கநாடு ஆரியரின் பரவுதலால் மாறுதலடைந்ததெனினும். உரிமையுடனிருந்தது. ஆந்திரர். சவரர், புலிந்தர், மூஷிகர் முதலிய ஆரியரல்லாத குடிகள் தென்னிந்தியாவின் எஞ்சிய பகுதிகளில் காணப் பெற்றனர். தட்சணபதம் என்ற சொல் இருக்குவேதத்தில் காணப்பட்டிருப்பினும் தென்னிந்தியாவில் ஆரியர் பரவுதல், பிராமணங்கள் காலத்திற்கு முன் தொடங்கியது. தமிழ் நாட்டின் அரசியல் நிலையைப்பற்றி வேத இலக்கியத்தில் எதுவும் குறிப்பிடப்படவில்லை *மேற்கு ஆசியாவுடனும், எகிப்துடனும் தென்னிந்தியா வணிகஉறவு பூண்டிருந்தது. மந்திகள், மயில், தந்தம் முதலியன தென்னிந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப் பட்டன. அக்காலத்தில் ஆப்ரிக்கா, மலேயாசிய நாடுகளில் தென்னிந்தியர் குடியேறியிருந்தனரென்று எண்ணுவதிற் பய னில்லை.

## பகுதி-10

### இதிகாச காலம்.

### இதிகாசங்களின் தன்மை.

இதிகாசம் அல்லது வீரகாவியங்களின் காலம் என்ற சொல் தவறானதோர் கருத்தை அளிக்கக்கூடிய ஒன்றாகும்.

வரலாற்றுக்குப்புறம்பான நாகரிக ஒற்றுமையை இது குறிப்பிடுகிறது. இராமாயணமும், பாரதமும் கி. மு. 1000 முதல் பத்து நூற்றாண்டுகட்கு மேற்பட்ட பல காலப்பகுதிகளுக்கு உரித்தானவை. அவற்றின் மூலங்கள் நன்கு அறியப்பட்டாற்றான் அவற்றின் வரலாற்றுச்சிறப்பு தெளிவாகப்புலப்படும். வரலாற்றுச் செய்திகளுக்காக இராமாயண, மகாபாரதக் குறிப்புக்களைப் பயன்படுத்திக் கொள்வதன் முன்னர் அவற்றைக்கொண்டு முறையே அவ்விருகாப்பியங்கள் காலத்தை அறிந்துகொள்ளவேண்டும்.

பாரதம், கிறித்தவ ஆண்டுக்கு முற்பட்ட ஒரு கலைக் களஞ்சியம் என்று எண்ணத்தக்கது. இது, உறுதியான வரலாற்று உண்மையை அடிப்படையாகக்கொண்டு எழுந்த காப்பியமாகும் இராமாயணத்தில் மிகுந்த ஒற்றுமையும், செய்தி அடக்கமும் காணப்பட்டபோதிலும், வரலாற்றுண்மையை விட கற்பனைகளே மிகுதியாகக் காணப்படும். வியாசர் மட்டிலும் தனித்த பாரத ஆசிரியர் என்று கருதுவதற்கில்லை. வால்மீகி, வெறுங்கற்பனை ஆசிரியர் என்று எண்ணமுடியாது. இந்நூல்களில் விளக்கப்பட்டிருக்கும் நாகரிகங்கள் பலதிறப்பட்டதாகவும், ஒன்றடனொன்று முரண்பட்டதாகவுமுள்ளன. இப்பொழுதுள்ள உருவத்துடன் இவை வரலாற்றுக்காகப் பயன்படுத்திக்கொண்டால், பல முரண்பாடுகளே நமக்குக் கிடைக்கும். ஆதிகால இந்திய வரலாற்றின் பல்வேறுபகுதிகளைப்பற்றிய வேறு சிறந்த, கிடைக்கக்கூடிய சான்றுகளின் உதவியுடனல்லாது தனித்த முறையில் இவ்விரு காப்பியங்களில் காணும் இனம், கலை முதலிய பண்புகளை விரித்துரைப்பதால் யாதும் நற்பயன் ஏற்படுவதற்கில்லை.

## வீரகாவியங்களின் சிறப்பு.

ஹோமரின் செய்யுட்களைப்போல வடமொழிக்காப்பியங்கள் இந்தியாவின் ஒற்றுமையை வளர்க்க உதவியுள்ளன. இவை வழங்கும் அளவற்ற செய்திகள், வரலாற்றுக்குப் புறம்பானதாயிருப்பினும் இலக்கிய - சமயத் தொடர்பான சிறப்புக்களைப் பெற்றிருக்கின்றன. வடமொழி இலக்கியமும்

பிற இந்திய இலக்கியங்களும் தோன்றி வளர அவை ஊக்க மளித்தன. பெரும்பான்மையில் இந்திய ஒற்றுமையை நிலை நிறுத்தவே அவை முயலும். இந்தியக் கலைப்பண்புகளின் ஒற்றுமைக்கு அவை மிகுதியாக உதவியளித்துள்ளன.

அதிகாரம் 3

# சிசுநாகர் - நந்தர் காலப்பகுதி

## [ சுமார் கி. மு. 600 — 325 ]

## பகுதி 1

### சமயத்தொடர்பான ஆராய்ச்சி.

அக்காலப் பகுதியின் தன்மை.

கி மு. 6-ம் நூற்றுண்டில் அரசியலிலும். சமயத்துறையிலும் மிகவும் சிறப்பான முன்னேற்றங்கள் ஏற்பட்டன. இந்தியாவில் அக்காலத்தில் அறிவுவளர்ச்சிக்காகவும், ஒழுக்க முன்னேற்றத்திற்காகவும் தோன்றிய முயற்சிகள் மிகவும் போற்றத்தக்கவை. ஆதலால் அக்காலப்பகுதி ஒரு "வியப்புக்குரிய நூற்றுண்டு" எனக்கூறப்பெறும். அதே நூற்றுண்டில், புத்தர் ஹெராக்ளிதஸ், இசையா கன்பூசியஸ், லௌட்ஸே ஆகிய பேறறிஞர்கள் ஒருவரையொருவர் அறியாமலும் ஒருவரால் மற்றவர் கொள்கை உருவாகாமலும் தனித்து வாழ்ந்தனர். "மக்களினத்தின் இளமையின் தொடக்கம்" என்று அக்காலம் சிறப்பிக்கப்படும். சொராஸ்தர் (Zoroaster) (கி மு. 660 - 580) கி. மு. ஆரும் நூற்றுண்டின் ஒரு பகுதிக்கு உரியவர். ஆனல் சிலர் அவர் கி மு. 1000-ம் ஆண்டில் வாழ்ந்தவரென்பர். சிசுநாக நந்த வமிசம் ஆட்சி புரிந்த அக்காலத்தில் அயலார் இந்தியாவில் படையெடுத்துப் புகுந்தனர். அலெக்சாந்தர் என்னும் பேரரசனின் பேராசையின் விளைவாக இந்தியாவிலும் அவருக்கு வெற்றி ஏற்பட்டது. வட இந்தியாவில் கி. மு ஆரும் நூற்றுண்டில் வலிமைபெற்று விளங்கிய குடியாசுத்தாபனங்கள் சிறிதுசிறிதாக வீழ்ச்சியுற்று மோரிய ஆட்சிக்கு முன்பே பேரரசுக்கான அறிகுறிகள் பெருகின. புத்தசமயத்தின் எழுச்சியினுல் பிராமண இனத்தில்

புதிய மாறுதலுக்கு இடமேற்பட்டது. புதிய முறையில் இனத்தையும், சமயத்தையும் மாற்றியமைத்துக் கொள்ள வேண்டியது இன்றியமையாததாகியது. மேலும், வேத காலத்தையும், அதற்குப்பிற்பட்ட காலத்தையுமிணைக்கும் பாணினி என்னுமறிஞர் நாம் எடுத்துக்கொண்டுள்ள காலப் பகுதியில் வாழ்ந்தவராவர்.

## சமயத்துறையில் அமைதியின்மை.

கி மு 6-ம் நூற்றாண்டில் சமயத்தொடர்பான கேள்வி களைப்பற்றி அக்கால இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் கொண்டு, மக்கள் பெரும்பான்மையில் வீட்டை (மோட்சத்தை) யடைவதற்காக மிக ஆர்வத்துடன் துயருற்றனரென்று நம்பி விடலாகாது. அவ்வாராய்ச்சி அக்காலத் தலைவர்களைப் பொறுத்ததேயாகும். இத்தகைய தலைவர்களின் எண்ணிக்கை வியப்புக்குரிய வகையில் பெரியதே. 62-வகையான சமயக்கோட்பாட்டுப் பிரிவுகள் இருந்தனவென்பது உண்மை யாக இருப்பினும் இல்லையெனினும் பல்வேறு வகையான சமய முறைகள் நிலவின என்பதில் ஐயமில்லை. பலவகைப் பட்ட நாத்திகம், முதலாக உயர்ந்த ஆத்மஞானம் ஈறாக பலவகையான சமயக்கருத்துக்கள் நிலவின. அசிதகேச கம்பலின் என்ற தலைமை உலகாயித வாதிக்கும் மகா புத்தருக்கும் உள்ள வேற்றுமை மிகைப்படுத்திக் கூறப்படுவ தற்கில்லை. புத்தருக்கும் மகாவீரருக்கும் முன்னர் பல தலைவர்கள் எண்ணற்ற கோட்பாடுகளை வெளியிட்டிருந்தனர். வலிமை வாய்ந்த கோட்பாடுகள் நிலைத்திருந்தன. அவை ஆரவாரம் மிகுந்தனவாயிருந்தனவே தவிர ஆழ்ந்த கருத்துக் களைக்கொண்டிருக்கவில்லை.

## கிளர்ச்சியின் காரணங்கள்.

### மக்கள் இனத்தைப்பற்றியதல்ல.

சமயக்கிளர்ச்சியின் காரணங்கள் இனப்பூசல்கள் என்றும் சமூகத்தொடர்பானவை என்றும் சிலர் கருதுவர் பௌத்தமும் சமணமும், க்ஷத்திரியத் தலைவர்களால் தோற்றுவிக்கப்பட்ட காரணத்தால், பிராமணர்களுக்குப் பகையாகத் தோன்றிய

புரட்சியே அவை என்று கருதப்படுகிறது. திபெத்தோ - மங்கோலிய வகுப்பைச்சேர்ந்த மக்கள் குடியரசுப்பற்றுடன் பிராமண ஆட்சியை எதிர்த்தனர் என்று சிலர் கருதுவர். லிச்சாவியரும் சாக்கியரும், பழக்க வழக்கங்களில் திபெத்திய மக்களுடன் ஒற்றுமைப்பட்டிருந்ததாலும், இருவரும் குடியரசு ஆட்சி முறையைப் போற்றுவர்களானபடியாலும் ஆரிய இனத்தை எதிர்த்து அக்கிளர்ச்சி தோன்றியதென்ற கோட்பாடு வலியுறுத்தப்படும். ஆனால் முதன் மூன்று சாதிகளின் உறுப்பினர்கள் இருபிறப்பாளராகும் க்ஷத்திரியர் வேதகாலத்தில் அறிவுத்துறையில் மிகுந்த ஊக்கங்கொண்டிருந்தனர். சிறப்பாக உபநிடதங்களில் அவர்தம் தொண்டு குறிப்பிடத்தக்கது. இருக்குவேத மந்திரங்களுள் மிகவும் சிறந்த காயத்ரி என்பது விசுவாமித்திரர் என்ற க்ஷத்திரியரால் இயற்றப்பட்டதாகும். ஜனகர் என்ற க்ஷத்திரியனே உபநிடதகாலத்தில் சிறப்பான உயர்நிலையிலிருந்தான். மேலும் ஆதிகால இந்தியாவில் குடியரசு உணர்ச்சி மங்கோலியத்தொடர்பாலேற்பட்டதென்பது ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று.* வரலாற்றில் மங்கோலியப்பகுதி சிறப்பான சட்டமுறையாட்சியுடன் கூடியதாகக் கூறுவதற்கில்லை. பிராமணங்கள் காலத்திலிருந்து ஆரியரின் வளர்ச்சியின் விளைவாக கி. மு 6-ம் நூற்றாண்டில் இந்தியாவில் குடியரசுமுறைகள் தோன்றின என்று கருதலாம் வரம்பற்ற அதிகார ஆட்சி முதல் மக்களாட்சிவரையுள்ள பல்வேறு வகையான அரசியல் முறைகள் நிலைபெற்றிருந்ததென்பது ஐத்திரேய பிராமணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆகவே, சாக்கியரின் பிராமண எதிர்ப்போ குடியரசு விருப்பமோ, பிராமண க்ஷத்திரியரின் இனவேறுபாடுகளுக்குக் காரணமென்று கூறுவதற்கில்லை. கி மு 6-ம் நூற்றாண்டின் சமயக் கிளர்ச்சிக்கு விளக்கம் கூற இத்தகைய கோட்பாடு இன்றியமையாததன்று. மேலும் இஃது (இக்கோட்பாடு) அந்நூற்றாண்டுக்கு முற்பட்ட காலப்பகுதியில் ஆரியரின் முன்னேற்றத்தைப் பற்றி அறியப்பட்ட உண்மைக்கு முரண்பாடாகவுமுளது. அனைவற்றிற்கும் மேலாக புத்தர், நான்கு

* K. P. Jayaswal, Hindu polity (2nd Edition 1943. pp. 177-186)

ஆரிய உண்மைகளை வெளியிடுவதாகவே கூறினர். புத்தர், அவருடைய கூட்டத்தினருள் சாதி வேறுபாடுகளை விரும்பாத போதிலும், சாதி முறையை எதிர்த்து அதனை யாங்கணும் ஒழிப்பதற்கான போரை அவர் புரியவில்லை என்பதும் நோக்கற்பாலது வேதகால ஏற்பாடு முறைமை, மாறுதலை ஏற்றுக் கொள்ளத்தக்கதா யிருந்தபடியால் பிராமண இனம், புத்தருடைய சாதிமுறை எதிர்ப்பினுல் அச்சமடைய வேண்டிய நிலையிலில்லை. பிராமணன் உண்மையான பிராமணனுக இருக்க வேண்டுமென்பதே புத்தரின் குறிக்கோள். சாதிமுறையை எதிர்த்து அவர் ஒரு போரை எழுப்பவில்லை.

### காரணம், சமயத்தொடர்பானதே.

ஆகவே கி. மு 6-ம் நூற்ருண்டில் தோன்றிய சமயக் கிளர்ச்சி, இனவேறுபாடு அல்லது சமூகத் தொடர்பான காரணங்களைப் பற்றியதன்று; சமயத் தொடர்பான காரணங்களைப் பற்றியதே. வேதங்களில் கர்மகாண்டத்தில் கூறப்பட்டுள்ள வேள்விமுறை, மாயமானதாகவும், பொருளற்றதாகவும், மாசற்ற ஆருயிர்களின் குருதியைச் சிந்தச்செய்வதாகவும், மக்களின் மனதை உறுத்துவதாகவு மிருந்தபடியால் சமயத்துறையில் வெறுப்பும் அமைதியின்மையும் ஏற்படலாயின உபநிடதம் காட்டிய வழி, வேறுவகையானது என்பதில் ஐயமில்லை ஆனல் ஆழ்ந்த மறைபொருளான அதன் ஞானவழி பலருக்கு எளிதில் உணரக்கூடியதாக இல்லை. விருப்பம், வாழ்க்கைக்குக் காரணம்; வாழ்க்கை துன்பத்துக்குக் காரணம்; துன்பத்தை நீக்கும்வழி, உண்மை அறிவினுல் விருப்பத்தை அகற்றுதல்; உண்மை அறிவாவது, ஒவ்வொன்றும் ஆத்துமா என்றும் ஆத்துமாவே ஒவ்வொன்றுமென்றும் உணர்தல்; ஆத்துமாவைத் தவிர்த்து மற்றும் நிலைத்திருப்பதாகக் காணப்படும் எதுவும் உண்மையன்று. ஆகவே, நாட்டின் பரந்த நலனுக்காக வேண்டப்பட்டது, மக்கள் யாவரும் வீட்டை (நிர்வாணம்) அடையக்கூடிய ஒரு எளிதான சுருங்கிய வழியே யாகும். புத்தரும் மகா வீரரும் மிக இன்றியமையாச் சீர்திருத்தங்களைப் பழைய சமயமுறையில் புகுத்தி, அத்தேவையை நிறைவேற்றினர் உலகம் துன்பம் நிறைந்தது என்பதும் கர்ம தத்துவமும் இவர்களால் ஏற்றுக்கொள்ளப் பெற்றன. ஆனல்

வேதங்களின் உயர்நிலையையும் பிராமணர்களே, சமயத் துறையில் வழிகாட்டிகள் என்ற கொள்கையையும் இவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. இறுதியான இன்பம் (மோட்சம்) ஆரியனுக்கு மட்டுமின்றி மிலேச்சனுக்கும் கிடைக்கவேண்டு மென்பதே இவர்தம் குறிக்கோள். ஆடவருக்கும் பெண்டி ருக்கும் அவர்கள் அறியும் மொழியில் சமயதத்துவங்கள் கற்பிக்கப்பட வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, பயனற்ற சடங்கு முறையையும் தத்துவ நுணுக்கத்தையும் விட்டு,செயலுக்கு இயைந்த நல்லொழுக்க நெறியை நிலைநிறுத்த வேண்டுமென்பது இவர்கள் எண்ணம்.

## பகுதி-2 கௌதம புத்தர்

கால விளக்கமும் வாழ்க்கையும்.

[புத்தரின்காலம் சுமார் கி. மு. 567—487]

புத்தரின் பரிநிருவாணம் (இறுதியான மறைவு) கி. மு. 543-ம் ஆண்டிலாகும் என்று பழமையாகஉள்ள கொள்கையை சில அறிஞர்கள் ஏற்றுக்கொண்டபோதிலும் பெரும்பாலோ ரால் வற்புறுத்தப்படும் காலம் கி. மு. 488-க்கும் 477-க்கும் இடைப்பட்ட பகுதியில் உளதாகிறது நீண்டகாலம் பேரறிஞர் ஸ்மித் கி மு. 487 என்ற காலத்தை ஏற்றுக்கொண்டிருந்தார். ஆனால் முடிவில் பழைய (543) காலத்தை ஒப்புக்கொண் டார். பேரறிஞர் கெய்கர் (Geiger) கி. மு. 483 என்பர். ஆனால் 487 அவரால் மறுக்கப்படவில்லை. திரு. L. D. சாமிக் கண்ணு பிள்ளை கி. மு. 478-ம் ஆண்டு ஏப்ரல்மாதம் முதலாம் நாள் புத்தர் பரிநிருவாணம் அடைந்திருத்தல் வேண்டுமென்பர். கி. மு. 325-ல் சந்திரகுப்தமோரியன் பட்டமேற்றானென்று நாம் கொண்டால் அசோகர் முடிசூட்டிக்கொண்ட காலம், (325 - 24+28+4=269 ஆகும்), ஈழநாட்டுக்கால முறை யான வரலாற்றுக் குறிப்புக்களின்படி புத்தர் மறைவுக்கும், அசோகர் முடிசூட்டிக்கொண்டதற்கும் இடையில் 218 ஆண் டுகள் இருப்பதாக அறியப்படுவதால், கி. மு. 269 உடன் 218-ஐக் கூட்டினால் வருங்காலம் கி. மு. 487 ஆகும்.

இக்காலம், காண்டனில் (சீன) குறித்துவைத்த புள்ளி ஆவணங்கள் (Dotted Record) தரும் காலத்துடன் ஒற்றுமைப் படுகிறது. சமயநூல்களின்படி அவர் 80 ஆண்டுகள் வாழ்ந்த படியால் (487+80)=கி மு. 567-ல் அவர் தோன்றியிருக்க வேண்டும் என முடிவு செய்யலாம்.

### புத்தரின் வாழ்க்கை வரலாறு.

சாக்கிய குலமன்னன் சுத்தோதனனுக்கும், மாயாதேவி என்பாளுக்கும், சித்தார்த்த கௌதமர் மகனாய்த் தோன்றினர் சாக்கியசிம்மர் அல்லது சாக்கியமுனி எனவும் அவர் அழைக்கப் படுவர் அவர் பிறந்த இடம் கபிலவாஸ்து (நேபாளத்தில் பாதாரியாவிற்கு மேற்கிலுள்ளது) அவர் பிறந்த ஏழுநாட்கள் பின் அவர் தாய் இறக்கவே மாயாதேவியின் உடன் பிறந்தாளான மகாபிரஜாபதி என்பாள் வளர்ப்புத் தாயானாள். யசோதரை கௌதமரின் மனைவியானாள். கிழவன் பிணம், நோயாளி முனிவர், ஆகியோரை சித்தார்த்தர் கண்டபின். பிணி மூப்பு சாக்காடு முதலிய வாழ்க்கைத் துன்பங்கள் அவர் இளகிய மனதைக் கலக்கின. ஜெர்மன் தத்துவ அறிஞரான நைட்ஷே, புத்தரை வியந்தபோதிலும், அவர் மனிதனுக்கு இன்றியமையாத வீரத்தன்மையையும் ஆரியனுக் குரிய தன்மையையும் பெற்றிருக்கவில்லை என இகழ்வார்.‡ கௌதமருக்கு இராகுலன் என்னும் மகன் பிறந்த செய்தியை அவர் கேள்வியுற்றவுடன் மற்றுமொரு பிணைப்பினால் உலகத் துடன் அவர் இணைக்கப்பட்டு விட்டதாகக் கூறினர். ஆகவே அவர் தனது 29-வது ஆண்டில் இல்லற இன்பத்தைத் துறந்து துறவியின் ஆடையுடன் ஒவ்வொரு இடமாகச் சுற்ற லானார். இரண்டு ஆசிரியர்களின் மூலம் மன அமைதிபெற முயன்று பயனற்றுப்போகவே தியானவழியை நாடி ஓர் அரச மரத்தினடியில் அமர்ந்தார் இம்மரமே பிற்காலத்தில் போதிமரம் எனப் புகழப்பெற்றது அவர் தியானத்திலமர்ந்து உண்மை விளக்கம் பெற்ற இடம் பின்னர் புத்தகயா எனப்பெறும். ஏழு ஆண்டுகள் சமாதியிலிருந்த பின். அவர் "மாரனல்

‡ F. Nietzsche, Thus Spake Zarathustra (George Allen & Unwin, Complete works, Vol XI. 1923) P. 50.

உண்டாகும் காமத்தை வென்று உண்மை விளக்கம் பெற்றார். அவர் அதன்பின் காசிக்குச் சென்று தன் முதற் சொற் பொழிவை நிகழ்த்தினர். இராசகிருகத்தில் சாரிபுத்தர், மொகலானர் என்பாரையும், பின்னர் ஆனந்தர், தேவதத்தர் அனுருத்தர், உபாலி ஆகியோரையும் தனது மாணவர்களாகக் கொண்டனர். மக்கள் நலமடைய நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக மிகுதியாக உழைத்தபின் குசிநகரில் (கோரக்பூர் மாவட்டத்தில் உள்ள காசியா உத்தரப்பிரதேசம்) பரிநிரு வாணம் எய்தினர். அவர் மறைந்த இடம் "பாவா" எனப் பெறும். சுந்தன் என்னும் ஒரு கொல்லனால் அளிக்கப்பட்ட உணவில் 'பன்றி இறைச்சி' இருந்து அதனைப் புத்தர் உண்ட காரணத்தால் இறப்பு ஏற்பட்டதென்று கூறப்படுகிறது. ஆனால் "சுகரமத்தவம்" என்ற சொல்லை மொழிபெயர்ப் பதில் சில அறிஞர் "காட்டுப் பன்றியால் விரும்பப்படும் ஒரு உணவுப்பொருள்" என்று கொண்டு அதனையே புத்தர் அருந்தியதாகக் கூறுவர்.§

## புத்தரின் கொள்கைகள்.

புத்தர் போதித்த 4 சிறந்த உண்மைகளாவன:—

1. துன்பம்:— வருத்தம், நோய், மூப்பு, சாக்காடு முதலி யவை நிறைந்த, மக்கள் வாழ்க்கை எளிதில் விலக்க முடியாத் துன்பம் நிறைந்தது

2. அதன் தோற்றம்:— சிற்றின்ப ஆசையே துன்பத்தின் காரணம்

3. அதை ஒழித்தல்.— ஆசை ஒழிக்கப்பட்டாலொழிய துன்பம் நீங்குவதற்கில்லை.

4. அட்டசீலம்:—அதை ஒழிக்கும் வழி இதுவே.

---

§ Fachow. Sukaramaddava and the Buddha's Death (Annals of the Bhandarkar Oriental Research Institute, Vol. XXIII 1942 pp. 127—'23)

அட்டசீலமாவது:—

1. நன்னம்பிக்கை:— நான்கு உண்மைகளில் நம்பிக்கை கொள்ளல்.
2. நல்லெண்ணம்—— சிற்றின்பத்தை விட்டொழிக்கவும், சினத்தை அகற்றவும், ஒருவருக்கும் தீமை செய்யா திருக்கவும் தீர்மானித்தல்
3. நல்வாய்மை:— பயனற்றதும், கடுமையானதும் பொய் யானதுமான சொற்களைக் கூறுதிருத்தல்.
4. நற்செய்கை:- பிறரைத் துன்புறுத்தாமலும் (அஹிம்சை) களவாடாமலும் நன்னெறி வழுவாமலுமிருத்தல்.
5. நல்வாழ்க்கை:— சிறந்ததோர் இலச்சுக்குத் தக்கவாறு வாழ்க்கையை அமைத்துக்கொள்ளல்.
6. நன்முயற்சி:— தீமையை அகற்றி நற்குணங்களை வளர்க்க முயலுதல்.
7. நற்சாட்சி:— சிற்றின்ப ஆசையும், துன்பமும் அடையா வண்ணம் விழித்திருத்தல்.
8. நல்யோகம் (தியானம்):— குறிக்கோளை எய்த, மனம் ஒரு வழிபட்டுச் சிந்தித்தல்.

சுருங்கக்கூறின், புத்தருடைய அறவுரைகளில் நம்பிக்கை யுடன். அவற்றை அறியவும் அதன்படி நடக்கவும் முயன்று, ஒழுக்கந்தவருத நடத்தையுடன் மனதை ஒருவழிப்படுத்தி இறுதியான இன்பத்தை (வீடு) அடைய வேண்டுமென்ப தாம். அட்டசீலமுறை, தவத்தினால் உடலை வருத்திக்கொள் ளுவதும், சிற்றின்ப சுகத்தில் அழுந்துவதும் ஆகிய இரண்டு தீவிரமான வழிகளுக்கும் இடையாக உள்ளது. புத்தர் தனது அனுபவத்திலேயே, நடுத்தர நிலையினுல் ஏற்படும் நன்மையை உணர்ந்திருந்ததால், துறவறத்தையோ, கொல்லாமைக் கொள்கையை மிகவும் கடந்த அளவுக்கோ, வற்புறுத்தவில்லை. முடிவான உண்மையை அறியமுற்படாமல் பயிற்சி முறையில் இயன்றதையே அவர் வற்புறுத்தினர். உயிர், முழு முதற்பொருள் முதலியன பற்றி பயனற்ற சிந்தனைகளை அவர் வளர்க்க விரும்பவில்லை.

## சங்கம்.

புத்தர் தன் கொள்கைகளைப் பரவச்செய்யவும், தன் சமயத்திற்குப் பிறரை மாற்றவும், மாணுக்கர்களடங்கிய ஒரு சங்கத்தை நிறுவினர். ஒழுக்கமுறையில் சிறந்த இச்சங்கம் பிற்காலத்தில் சமய வெற்றிக்கு உதவும் ஒரு கருவியாக வளர்ந்தது. புத்தர் தன் முழு விருப்பமின்றி பெண்டிரைச் சங்கத்தில் சேர்த்துக்கொண்டார். புத்தரின் அச்செயல் பெண்கள் நிலை உயர்வதற்கு உதவியளித்தது. தேவிகாதையில் ஓரளவு விளக்கப்படும் பெண்டிரின் போற்றற்குரிய செயல்கள் குறிப்பிடத்தக்கன. புத்தர் பெண்களுக்கு மிகுந்த உரிமைகள் அளித்திருந்தபோதிலும் சங்கத்தின் ஆண் துறவிகளுக்கு அவர்கள் கீழ்ப்படிந்திருக்க வேண்டுமென்பதை வற்புறுத்தினர். பெண் துறவிகள் புத்தர் காலத்திற்கு முன்னரே காணப்பட்டனரெனினும், சமயத்துறையில், அவர்கள் ஆடவருடன் சமநிலை பெறுவதற்கு, புத்தர் ஊக்கமளித்தார். அனைவற்றிற்கும் மேலாக தன்னுடைய மாசற்ற அரிய வாழ்க்கை மக்களுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இருக்குமாறு செய்தார். அவரது பேராற்றலும், தானே ஒரு எடுத்துக்காட்டாக இருந்ததும், அவர் கொள்கை அவருக்குப் பிறகும் நிலவுவதற்கு உதவின. அவை, இக்காலத்திய விஞ்ஞானப் போக்குடைய மக்களுக்கும் அறிவூட்டுவதாக உள்ளன. அட்டசீலம் யாவருக்கும் பொதுவானது. சங்கத்தைச் சேர்ந்த துறவிகள் (இருபாலரும்) அதைவிட உயர்ந்த, வழியைப் பின்பற்ற வேண்டும். முறையாகவும், இடையூறின்றியும் ஒரே நோக்குடன், புத்தரின் கொள்கையைப் பின்பற்றுவதற்கு உலகவாழ்வை நீக்கி சங்கத்தைச் சாரவேண்டியது இன்றியமையாததாயிருந்தது. நிறைந்த புனிதத்தன்மை, விருப்பங்களை மிகுதியாகக் குறைத்துக்கொள்ளல், கடுமையான ஒழுக்கமுறை, பாடல் நாட்டியம் முதலிய மோழுதுபோக்கு முறைகளை விலக்கல், வாசனைப்பொருள்கள், மலர், அணிகள், நேர்த்தியான படுக்கை முதலியனவற்றை நீக்குதல், முதலியன சங்கத் துறவிகளுக்கு விதிக்கப்பட்டவை. கிழித்துத்தைக்கப் பெற்ற காவியுடை, பிச்சைக்கேற்ற கலன், மயிர்மழிக்கும்

கத்தி, ஊசி, அரைக்கச்சை (Belt) ஆகியனவே, துறவி வைத்துக்கொள்ளக் கூடிய பொருள்கள். உலகமக்கள் அவர் களுக்கு உதவிபுரியவும், அவர்களுடன் கலந்து கொள்ளவும் கடமைப்பட்டவர்கள்.

## புத்தரின் சிறப்பு

புத்தர் தான் அனுபவத்தில் செய்து காட்டியவற்றையே, கற்பித்து அவர் செய்தனவற்றையே, தன்னைப் பின்பற்று வோர் செய்யுமாறு கட்டளையிட்டார். அவர் உண்மையுடன், வஞ்சனை இன்றி, இனிய குரலில். மக்களைத்தட்டி எழுப்பக் கூடிய முறையில், அமைதியும் அறிவாற்றலும் நிறைந்த சொற் பொழிவுகளை ஆற்றினர். ஒவ்வொரு மாணவனிடத்தும், சிறப்பாக, நோயாளியிடம், தனிப்பட்ட கருத்தைச் செலுத் தினர் வாள்கொண்டு. அணுவணுவாக நம்மை அறுக்கும் கொள்ளைக்காரரிடமும் நாம் சினம் கொள்ளாது இனியவை கூறி அவர்தம் மனதை இளகச்செய்ய வேண்டுமென்று அறவுரை கூறிய புத்தர், "பேரன்பினர்" என்றும், 'அடக்கமுடியாத உள்ளங்களையும் அடக்குபவர்' என்றும் புகழப்பட்டிருப்பதில் வியப்பில்லை. அன்பே உருவான அவர், பிறர் உள்ளக் கிடக்கையையும் தன்மையையும் உணர்ந்து அதற்கேற்ப அறவுரை கூறுவதில் திறமை பெற்றிருந்தனர். சொற்போர்கள் நிகழ்த்துகையிலும், அமைதி. அன்பு, மரியாதை முதலிய உயர்ந்த பண்புகளை அவர் மறப்பதில்லை. நகைச்சுவை ததும்ப செய்தியை ஆழ்ந்து ஆராய்ந்து, உவமைகள்—நீதிக்கதைக ளுடன், விரிவுரை ஆற்றும் வல்லமை அவருக்கு உண்டு. "ஆசியாவின் ஒளிப்பிழம்பு" "உலகத்தின் பேரொளி" என்று அறிஞரால் அவர் சிறப்பிக்கப்படுவர்.

மக்களுக்கு எளியமுறையில் அறவுரைகளையும், துறவி களுக்கு, அவர்களுக்குத்தக்க ஒழுக்க முறைகளையும் வகுத்த புத்தர் ஓர் சிறந்த நன்னெறியாளர். அகத்தூய்மையுடன் நன்னெறிபூண்டு ஒழுகுவதற்கு புத்தர் அளித்த சிறப்பு, பிற சான்றோர் எவராலும், அத்துணை மிகுதியான அளவுக்குக் கருதப்படவில்லை என்பார் ஓரறிஞர்.‡ தன்னைப் பின்பற்றிய

‡ J. B. Pratt, India and its Faiths. P. 413.

மக்களை சமய வெறுப்புணர்ச்சியின்றி பலசமயத்தினருக்கும் அறம் செய்யுமாறு புத்தர் வேண்டினர் உண்மையில் தூய்மை யின்மை என்பது. களவு, கள்ளப் புணர்ச்சி, கொடுமை, அற மின்மை முதலியவற்றிற்றன் இருக்கிறதென்பது அவர் கருத்து. யாக்கை. போற்றப்பட வேண்டியதாயினும் அதனிடம் மிகுந்த பற்று கொள்ளலாகாதென்பதே அவரால் வற்புறுத்தப் பட்டது மாணவர். தாமே முயற்சியாலுணர்ந்து உண்மையை அறியவேண்டுமென்றும். தான் சொல்வதைக் கொண்டு நம்பி விடலாகாதென்றும் புத்தர் வலியுறுத்தினர். காரணங்கள் கொண்டு உண்மை அறியப்பட வேண்டுமென்பது அவர் கோட்பாடு. "வீடு" எவ்வாறு அடையப்பட முடியுமென்று அவர் கூறினரே தவிர, மக்களை, விடுவித்துவிடுவதாக நடிக்க வில்லை. இக்காலத்திய வானநூல், ஞாயிற்றை நிலையான தாகக் கருதவில்லை. ஆ க வே, எதுவும் நிலையானதன்று என்னும் புத்தர் கொள்கைக்கும் இக்கால விஞ்ஞானக் கொள்கைக்கும் ஒற்றுமை காணப்படுகிறது. அவர், விலங்கு தாவர வர்க்கங்களில் பலவகைகள் காணப்பெறுவதுபோல் மக்களுள் இல்லை என்று கூறியிருப்பதை, இக்கால உயிர்நூல் ஏற்றுக்கொள்ளும். பிரமன். இந்திரன் போன்ற கடவுளரை அவர் ஒப்புக்கொண்ட போதிலும். அவர்கள், விடுதலைபெற்ற முத்தர்களுக்குக் கீழ்ப்பட்டோர் என்றே, அவரால் கருதப் பட்டனர். வி னை யை நடத்திவைக்கும் ஒரு பரம்பொருள் கிடையாதென்றும், அது தானகவே இயங்கும் என்றும், புத்தர் நம்பினர். எல்லா வல்லமையும் நிறைந்த ஒரு பொருளைப் பற்றி அவர் ஐயந்திரிபற விளக்காத காரணத்தால், அவர் மறைவுக்குப்பின், அவருடைய அறவுரைக்கு மாறாக அவரையே ஒரு கடவுளாகக் கருதும் நிலை ஏற்பட்டது.

புத்தரின் குணப்பண்புகள், அக்கால நிலைக்கு ஏற்ற அறவுரைகள், சங்க உறுப்பினரின் ஊக்கம், உழைப்பு, அவர் தம் தலைவரிடம் அவர்களுக்கிருந்த நம்பிக்கை, முதலியயாவும் புத்தரின் வெற்றிக்குக் காரணங்களாகும். அவர் சாக்கிய க்ஷத்திரியராகப் பிறந்ததும் அவருடைய வெற்றிக்கு ஓர் காரண மென்று சிலர் கூறுவர் மேலும், கங்கைச் சமவெளியின் மேற்

புறத்திலிருந்ததுபோல, கிழக்கிந்தியாவில், பிராமண சமய முறை, மிக உறுதியாக நிறுவப்பட்டிருக்கவில்லை.

கௌதமரின் அறவுரைகள் அரும்பயன்களை விளைவித்தன. வேதமுறை வேள்விகள் மறுக்கப்படலாயின. கொல்லா நோன்பு வளர்ச்சியுற்றது. சைவ வைணவ வழிபாட்டு முறைகள் பெருகி விலங்குகளைக் கொல்லுவதும் சடங்கு முறைகளும் எதிர்க்கப்பட்டு, ஒரே கடவுளிடம் அன்பை உண்டாக்க முயற்சிகள் செய்யப்படலாயின. பிராமண சாதி முறை மிக உறுதியடையத் தொடங்கியது. அதன் சட்டங்கள் "சூத்திரங்களில்" தொகுக்கப்பெற்றன சில செய்திகளை புத்தர் விளக்காததால், புத்த சமயத்தினர் பலர் தந்தம் கருத்துக்களை வெளியிடலாயினர்.

## பகுதி 3.

### மகாவிர வர்த்தமானர்.

(சுமார் கி. மு. 539 - 467) மகாவீரரின் காலம்.

புத்தரும் மகாவீரரும் ஒரே காலத்தவர் என்று பழைய கதைகளினின்று நன்கு அறியப்படுகிறது. ஆதலால் புத்தர் இறந்த ஆண்டைப் பற்றி பழமையாக நம்பப்பட்டு வருவதை ஏற்றுக்கொண்டமைக்கு, அறிஞர்ஸ்மித் தான், எடுத்துக் காட்டும் சான்றுகளைக் கொண்டே, மகாவீரரின் காலத்தையும் முடிவுசெய்துள்ளார். மகாவீரரின் நிர்வாணம் (இறப்பு) விக்கிரம ஆண்டுக்கு 470 ஆண்டுகள் முன்னர், அதாவது (470+57= கி மு. 527) என்று பழமையாக நம்பப்பட்டு வருவதை ஸ்மித் ஏற்றுக்கொண்டுள்ளார். ஆனால் கி மு. 527 என்ற காலம் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. மகாவீரரின் மறைவு ஆண்டு கி மு. 467 என்று அறிஞர் ஜேகோபியால் கூறப்பட்டு அறிஞர் சார்பெண்டியரால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதற்குத் தக்க சான்றுகள் உள. கி. பி. 12-ம் நூற்றுண்டில் வாழ்ந்த ஒரு சமணப் பேரறிஞரான ஹேமசந்திரர் என்பார் குறிப்பிட்டுள்ள ஒருசமண சமயவரலாற்றுக் கதையின்

படி, மகாவீரருக்கும் விக்கிரம ஆண்டுக்கும் (கி. மு. 58 - 57) இடையே 410 ஆண்டுகள் இருந்ததென்று அறியக்கிடக்கிறது. ஆதலால் மகாவீரர், கி. மு. 467ல் (57+410=467) இறந்திருக்கவேண்டும். ஆனால் அவர், சந்திரகுப்த மோரியனுக்கு 155 ஆண்டுகள் முன் இருந்ததாகவும் கூறப்படுகிறது. கி. மு. 467 லிருந்து 155 குறைக்கப்பட்டால், கிடைக்கக்கூடிய கி. மு 312 என்னுமாண்டு சந்திரகுப்தனின் ஆட்சித் தொடக்கத்தைக் குறிக்கும். ஆனால் அந்நிகழ்ச்சிக்கு (சந்திரகுப்தன் அரியணைபெறுதல்) அக்காலம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. மற்றொரு சமண சமயப் பழைய கதையின்படி, மகாவீரரின், மறைவுக்கும் பத்திரபாஹு என்ற சமண குருவின் இறப்புக்குமிடையே 170 ஆண்டுகள் உள என்று அறியப்படும் சமண சமய இலக்கியத்தில் சந்திரகுப்தமோரியனின் வரலாற்றுடன் பத்திரபாஹு என்பாரின் பெயரும் இணைக்கப்பட்டுள்ளது. சந்தரகுப்தன் தன் பட்டத்தைத் துறந்து தன்குரு பத்திர பாஹுவுடன் மைசூருக்குச் சென்றுவிட்டதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது சமணம் தெற்கில் நிலைபெற்ற சிறிது காலத்திற்குப் பின் அக்குரு இறந்தார் ஆதலால் சந்திரகுப்தன் முடி துறந்தது (325—24) கி. மு. 301-இல் ஆகும். சமணம் வட இந்தியாவிலிருந்து மைசூருக்குச் சென்று அங்கே நிலைபெற சுமார் நான்கு ஆண்டுகள் ஆகியிருக்கக் கூடுமென்று வைத்துக் கொண்டால் (301—4=297) கி. மு. 297-ல் பத்திரபாஹு இறந்தாரென்று எண்ணலாம். ஆதலால் மகாவீரர் (297+170=) 467-ல் இவ்வுலக வாழ்க்கையை விடுத்து மறைந்திருக்க வேண்டும். மேலும் கல்பசூத்திரத்தின் சமண சரித்திரம், மகாவீரருக்கு 993 ஆண்டுகள் பின்னர் எழுதப்பட்டதாக அறியக்கிடக்கிறது. வாலாபி மன்னன் முதலாம் துருவசேனன் அவையில் அஃது முதலாவதாக அரங்கேற்றப்பட்டதாம். அம்மன்னன் கி. பி. 526-ல் பட்டமேற்றான். ஆகவே மகாவீரர் (993—526=) கி. மு. 467-ல் இறந்திருக்க வேண்டும் அவர் 72 ஆண்டுகள் வாழ்ந்ததாக பரம்பரைக் கதையினின்று அறியப்படுவதால், கி மு 467+72) = கி. மு. 539-ல் அவர் பிறந்திருக்கவேண்டும்

கி. மு. 437 ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று.

விக்கிரம ஆண்டுக்கு 470 ஆண்டுகள் முன்னர் மகாவீரர் இறந்தாரென்பதும் பரம்பரைக் கதையினின்று அறியப்படும். ஆனல், ஈண்டு குறிப்பிடப்பட்ட விக்கிரம ஆண்டு, கி. பி. 33-ல் தொடங்கிய அநந்த விக்கிரம ஆண்டாகக் கொள்ளப்பட வேண்டுமென வாதிக்கப்படுகிறது. அஃதாவது சநந்த விக்கிரம ஆண்டுக்கு (கி. மு. 58—57) 90 ஆண்டுகள் (சந்த் என்ற ஹிந்திகவியின் கூற்றுப்படி நந்தவமிச அரசர்களின் ஆட்சிக் காலத்தொகை) பின்னர். ஆகையால் மகாவீரர். (470—33= கி. மு. 437-ல் நிர்வாணம் அடைந்திருக்கவேண்டும். ஆனல் மகாவீரர், பிம்பிசாரன் அசாதசத்ரு ஆகிய இருமன்னர்களின் காலத்தவர் என்று கூறப்படும் மரபுக்கு, இத்தகைய பிந்திய காலம் மாறுபாடாக உளது.

மகாவீரர் வாழ்க்கை வரலாறு.

நமக்குக் கிடைத்துள்ள மகாவீரரின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புக்கள் மிகுதியாகக் கதைகள் மூலமாக உள்ளன. மேலும் புத்தரின் வாழ்க்கையுடன் இஃது ஓரளவு ஒற்றுமைப் பட்டதாகவுமிருக்கின்றது. ஆதலால் விரிவான குறிப்புக்களுக்கு நாம் மிகுந்த சிறப்பு அளிக்க இயலாத நிலையிலுள்ளோம். இவர், வைசாலி (விதேகநாடு) என்னும் நகரின் அருகிலிருந்த குண்டகிராமம் என்னுமூரில் சித்தார்த்தர் என்பாருக்கும் திரிசிலை என்பாளுக்கும் மகனுய்ப் பிறந்தார். இவர் தந்தை க்ஷத்திரிய வகுப்பில் ஞாத்திரிகர் குலத்தின் தலைவரானபடியால், வர்த்தமானரை பௌத்த சமயத்தினர் "நதபுத்தர்" என்று குறிப்பிடுவர். யசோதை என்ற பெண்மணியை இவர் மணந்தார். ஒரு பெண்மகவை ஈன்றபின், இல்லறத்தை வெறுக்கலானுர். அவர் பெற்ருேர் இறந்தபின், தன் முப்பதாவது வயதில், துறவுபூண்டு உண்மை அறிவைநாடி ஓடித்திரிந்தார். பனிரெண்டு ஆண்டுகள் கொடிய தவம் செய்தார். அக்காலத்தில், உடலைத் துன்புறுத்திக் கொள்வதனுலும் ஆடையின்றி இருப்பதனுலுமுள்ள ஆத்தும சம்பந்தமான சிறப்பை உணர்ந்தார். தன் 42-வது

வயதில், மெய்யுணர்வுபெற்று, ஜினர் (வெற்றிவீரர்) அல்லது மகாவீரர் என்றழைக்கப்படலானுர். பின், தான்கண்ட நெறியை மக்களுக்குக் கற்பிக்கத் தொடங்கினுர். அவரைப் பின்பற்றினேர் நிற்கிரந்தர் (உலகத் தொடர்புகளை விடுத்தவர்) எனப்பட்டனர். அவர் வாழ்க்கையின் எஞ்சிய முப்பது ஆண்டு களில், மகதம், அங்கம் ஆகிய நாடுகளிலும் சிலகாலம் வட இந்தியாவின் மற்ற சில சிறப்பான இடங்களிலும் தொண்டாற் றினுர். பிம்பிசாரன் அசாதசத்துரு ஆகிய மன்னர்களுடனும் நெருங்கிய உறவு பூண்டிருந்தார். அவர் புத்தருடனும் அவரைப் பின்பற்றியோருடனும் போராட்டம் நிகழ்த்தி இறுதியில் புத்தர் இறந்து இருபதாண்டுகட்குப் பின்னர் இராசகிருகத்தின் அருகி லுள்ள பாவா என்னும் ஊரில் உயிர் நீத்தார். அவர் சமயம் சமணம் எனப் பெறும்.

## சமண சமயக் கொள்கைகளும், அமைப்பும்.

சமணர் "திரி ரத்தினம்" (மும் மணிகள்) எனப்பெறும் முப்பொருளில் நம்பிக்கையுடையவர்கள். அவையாவன, நன்னம்பிக்கை, நல்லறிவு, நன்னடத்தை என்பனவாம். பௌத்த சமயத்தின் அட்டசீலத்தை இவை நினைவூட்டுகின் றனவே தவிர, புத்தர், தர்மம் சங்கம் எனப்படும் பௌத்த சமய மும்மணிகளை அன்று. மகாவீரரின் மாசற்ற தன்மை யிலும் உண்மை அறிவிலும் உறுதியான நம்பிக்கை கொள்ளு தலே நன்னம்பிக்கையாகும். முழுமுதற் கடவுள் ஒன்று இல்லை என்பதையும், இயற்றினவன் ஒருவன் இல்லாமல் உலகம் இயங்குகின்றதென்ற கோட்பாட்டையும், உரிமை வாய்ந்த எண்ணிறந்த உயிர்கள் நிலைத்துள்ளன என்பதையும், கரும தத்துவத்தையும் (உயிர்கள் பல்வேறு உடல்களில் மாறிமாறிப் பிறப்பது) பற்றற்ற துறவற வாழ்க்கை, கருமவினையை ஒழிக் கும் ஆற்றல் பெற்றது என்பதையும் உணர்வதே நல்லறி வாகும். சமண சங்கத்தினருக்கு நல்லொழுக்கமாவது, கொல்லாமை, பொய் கூறாமை, களவாடாதிருத்தல், காம மின்மை, தன்னலங் கருதாமை, பற்றின்மை ஆகியவற்றை, மனம், மொழி, மெய்களால் அனுட்டிப்பதாகும். தம்மை

ஒழுங்குறச் செய்துகொள்வதும், உள்ளதை ஒப்புக்கொள்ளு தலும், தாழ்மையும் அடக்கமும் நிரம்பியவராயிருப்பதும், கீழ்ப் படிதலும், தியானத்தில் ஆழ்வதும், கற்றறிந்துகொள்வதும் அவர்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளாம். இல்லறத்தார்க்கு கட்டுப்பாடு சிறிது தளர்த்தப்பெற்றது. இவர்கள் கொல்லாமை நோன்பைக் கடைப்பிடிப்பதுடன், பொய் புகலாதிருக்கவும், களவாடாதிருக்கவும், கள்ளப் புணர்ச்சியிலீடுபடாதிருக்கவும், பேராசையை ஒழிக்கவும் கடமைப்பட்டவர்கள். மேலும் உயிர் வாழ்வனவற்றைக் காப்பாற்றுமாறும், தந்தொழிலை மிகுந்த கருத்துடன் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறும் கற்பிக்கப்பெறுவர். பூமிக்கும், புழு பூச்சிகளுக்கும், விலங்குகளுக்கும் இன்ன லேற்படுமென்ற காரணத்தால் உழவுத்தொழிலும் குற்றமுள்ள தாகக்கருதப்படும். அறஞ்செய்தலும், தாமே உண்ணுதிருக்கவும் அவர்கள் வற்புறுத்தப்படுவர். உயிரற்ற பொருள்களுக்கும் சமணர், உயிரைக் கற்பித்தனர். துறவற வாழ்க்கை மிகவும் கட்டுப்பாடான உறுதியுடன் பின்பற்றப்படும். மக்களின் சிறப்பு குறைவுபடுத்தப்படும், அத்துணை அளவுக்கு, "துன்புறுத்தாமை" என்ற கொள்கை வற்புறுத்தப்படு கிறது. இம் மூன்று பண்புகளிலும் சமணம் கடுமையான நிலையிலுள்ளது. சமணச்சங்கம், ஆண் பெண் இருவகுப்பின ருள்ளும் துறவிகளையும் இல்லறத்தோரையும் உறுப்பினராகக் கொண்டது. இத்தகைய சமூக ஒற்றுமைக்கான முயற்சி மகாவீரரின் சிறந்த அமைப்பு ஆற்றலைக் காட்டாநிற்கும். செம்மையிலும் வறுமையிலும், துறவிகள், இல்லறத்தோரின் உதவியைப் பெற்றனர். பிறரைத்தன் சமயத்திற்கு மாற்றுவது சமண சங்கத்தின் ஒரு குறிக்கோளாயிருந்த போதிலும், வெளி இயக்க நோக்கம் ஒன்றையே கருத்தில் கொண்டு இஃது அமைக்கப்படவில்லை.

## மகாவீரரின் சீர்திருத்தச் சிறப்பு.

மகாவீரர், இருபத்திநான்காவது தீர்த்தங்கரர் (வழி கண்டோர் — தீர்க்கதரிசி) எனக்கூறப்படும். இவருக்கு 250 ஆண்டுகள் முன்னதாக வாழ்ந்த பார்சவர் என்பாரைப் பின்பற்றிய வகுப்பினரின் கொள்கைகளில் இவர் சீர்திருத்

தங்களைச் செய்தார். பார்சவர், 23-வது தீர்த்தங்கரர் எனவும் அவருக்கு முன்னரே நிலவிய கொள்கைகளைப் பின்பற்றி அவர் சமண சமயத்திற்கு அடிகோலினுர் எனவும் கூறுதல் மரபு. ஆகையால் சமணம், பௌத்த சமயத்தைவிடக் காலத்தால் முந்தியதாகும். ஆகவே சமணம், பௌத்த சமயத்தின் ஒரு கிளை என்ற கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. இந்து சமயம் எனப்படும் தாயினிடத்திற்றேன்றிய இரு உடன் பிறந்தாருள் பௌத்த சமயம் இளையவளாகவும், சமணம் மூத்தவளாகவும் உருவகிக்கப்படலாம். சிறிதும் குறைவுபடாத புனிதத்தன்மையையும், ஆடையின்றி இருப்பதையும் வற்புறுத்தும் செய்தியில் மகாவீரர், புத்தரிடமிருந்து வேறுபடுவர். ஆனல் மகாவீரர், பெரிய ஆசாரியனுக அமர்ந்தவுடன் ஆடையை ஒழிப்பதைப் பொறுத்தவரை, தன்கருத்தை மாற்றிக்கொண்டதாகக் காணப்படுகிறது. சமணமும், புத்தமும் பல பண்புகளில் ஒற்றுமைப்பட்டிருப்பினும், அவற்றினிடை காணப்படும் சிறப்பான வேறுபாடுகளைப் பொருட்படுத்தாமலிருப்பதற்கில்லை. சமணம், பிராமண சமயத்திற்கும் புத்த சமயத்திற்கும் இடையாக உள்ள நிலையைப் பெற்றதாகும்.

## பகுதி 4.

### மூலாதாரங்கள்.

#### சிறப்பான முதற் சான்றுகள்.

கி. மு. 600 முதல் 325 வரை உள்ள காலப்பகுதியின் வரலாற்றை அறிய, வெளிநாட்டுத் தொடர்புடைய செய்திகளைத் தவிர்த்து பிறவற்றிற்கு பெரும்பான்மையில் உள்நாட்டு இலக்கியச் சான்றுகளையே ஆதாரமாகக் கொள்ளவேண்டியதாகிறது. சூத்திரங்களின் (Sutras) ஒரு பகுதி, இக்காலப் பகுதியில் தோன்றியதாகும். இந்து, புத்த, சமண மரபுரைகளுடன் கௌடில்யனின் அர்த்த சாத்திரமும் நமக்கு உதவும். அயல் நாட்டினரும் இந்திய வரலாற்றைப்பற்றி சிறிய அளவில் சில குறிப்புகளைத் தந்துள்ளனர். இந்தியாவின் வெளிநாட்டு வரலாற்றைப் பொறுத்தவரை, அயலாரின் சான்றுகளையே

நம்பவேண்டியதாகிறது. கி. மு இரண்டாம் நூற்ருண்டின், அதிகும்பா கல்வெட்டு, மோரியர் காலத்திற்கு முற்பட்ட வரலாற்றை அறிய ஓரளவு உதவும்.

## புராணங்கள்.

உலகத்தோற்றம், மீண்டும் தோற்றுவிக்கப் பெறுதல், கடவுள், துறவி முதலானோரின் வழிமுறை, மனுவின் காலங்கள், குலவரலாறு ஆகிய ஐந்துவகையான செய்திகளைப் புராணங்கள் அறிவிக்கும். இவற்றில் இறுதியாக உள்ள இரண்டும் முறையே நில அமைப்பையும் வரலாற்றையும் பொறுத்ததாகும். சாதவாகனரின் வரலாற்றை அறிவதற்கு உதவும் மச்ச புராணத்தின் சிறப்பை பேரறிஞர் ஸ்மித் விளக்கியுள்ளார். ஆனல் மூலங்களின் மாறுபாடுகளினல், முரண்பாடுள்ள செய்திகள் கிடைக்கின்றன. புராணங்கள் குப்தர் காலத்தில் இயற்றப்பெற்றவை. குஷானர், சத்திரபர் போன்ற சில குலங்களைப் பற்றி அவையாதும் குறிப்பிடவில்லை. அவற்றில் நிகழ்ச்சிகள், இறப்பு, நிகழ், எதிர்காலங்கள் மூன்றிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. மோரியருக்கும், குப்தருக்கு மிடைப்பட்டகாலம், 2500 ஆண்டுகள் என்று புராணங்கள் கூறும். இடைப்பட்ட காலத்தின் குலங்களைப் பற்றிய குழப்பத்தால் இப்பெரும் தவறு ஏற்பட்டிருக்கின்றது. ஆனல் சில செய்திகளைப் பொறுத்தவரை, புராணங்கள் குறிப்பிடுவதை, புத்த சமண, சமய வரலாறுகளும், பழம்பொருள் ஆராய்ச்சிச் சான்றுகளும் உறுதிப்படுத்தும். ஆயினும், புராணங்களை, தனிச்சிறப்புப் பொருந்திய வரலாற்றுச் சான்றுகளாகக் கொள்ளுவதற்கில்லை. வேதகாலத்திய குலவழியைப் பற்றி புராணங்கள்தரும் குறிப்புகள் தெளிவற்றவை. பரீட்சித்து, மகாபாரதப் போருக்கு (சுமார் கி. மு 1000) 36 ஆண்டுகள் பிறகு வாழ்ந்தவனகக் கருதப்படுகிறது. அப்போருக்குப் பிறகு மூன்று அரசகுலங்கள் தொடர்ந்து ஆட்சி புரிந்தன. அவையாவன. புருவின்குலம். இட்சுவாகு குலம், மகத அரசகுலம். மகதநாட்டு சிசுநாகர் தோன்றிய பின், புராணங்களின் வரலாற்றுச் சிறப்பு மிகுதியாகிறது.

புத்த, சமண இலக்கியங்களும், வரலாற்றுக்குப் பயன்படும் சில செய்திகளை அறிவிக்கும்.

### பிறநாட்டினர் தரும் சான்றுகள்.

முதலாம் தரயஸ்ஸின் கல்வெட்டுக்கள், அவன், வட மேற்கு இந்தியாவுடன் கொண்ட தொடர்பை அறிவிக்கும். எரதோதஸ், அலெக்சாந்தரின் வரலாற்று அறிஞர், மெகச்தனீசு ஆகியோரும், ஓரளவு, பயனுள்ள சான்றுகளை அளிக்கின்றனர்.

## பகுதி-5

### வட இந்தியாவில் அரசியல் ஒற்றுமை.

**கோனாட்சியும் குடியரசுகளும்—கி. மு. ஆறும் நூற்றாண்டு:—**

முற்காலத்திய புத்த இலக்கியங்களில் காணப்பெறும் வட இந்திய அரசியல் நிலையைப்பற்றிய ஒரு சில குறிப்புக்கள், அதே காலத்திய கிரீஸ் நாட்டின் அரசியல் நிலையை அஃது (வடஇந்திய அரசியல் நிலை) ஒத்திருந்தது என்ற உண்மையைப் புலப்படுத்துகின்றன.‡ கோசலம், மகதம், அவந்தி, வத்சம், ஆகியன சிறப்பு வாய்ந்த நாடுகளாயிருந்தன. மகதநாடு தலையெடுத்து மிக்க உயர்வான நிலை எய்தியவுடன் வட இந்தியாவில் ஏற்றத்தாழ்வு ஏற்பட்டு சக்திச்சமநிலை குலைந்தது. அண்மையிலுள்ள நாடுகளை தன்னுடன் இணைத்துக்கொண்டு வெற்றிபெறும் முறையைப்பற்றி கௌடில்யரின் அர்த்த சாத்திரம் விளக்குகிறது. அவ்வமயம் இந்தியாவில் பல குடியரசு நாடுகளும் காணப்பெற்றன. வச்சியர் குடியரசு, லிச்சாவியர் முதலிய பல மரபினரின் கூட்டுறவால் தோன்றியதாகும். இவை, பெரும் முடியரசு நாடுகளின் வடக்கு, மேற்கு எல்லைகளில் இருந்தன. அவற்றின் அரசியல் முறையைப்பற்றி சில செய்திகளே அறியப்படுகின்றன. அரசன் எனப்படும் குடியரசுத் தலைவன் தேர்ந்தெடுக்கப்பட்டான். கிரீஸ் நாட்டில் காணப்பட்ட 'ஆர்கன்' அல்லது தலைவனுக்கு

‡ C. H. I. 1 P. 175.

இவரை ஒப்பிடலாம். மக்கட்சபை, அரசியல், முறைவழங்கு தல் முதலிய செய்திகளைப்பற்றி உரிமையுடன் உரையாடியது. உரையாடல்கள் ஒழுங்கான முறையில் நடைபெற்றன. சபையின் முடிபுகள், குறித்துவைக்கப்பெற்றன வாக்களிக் கும் முறை (Voting) இருந்ததா என்பதுபற்றித் தெளிவாக அறியப்படவில்லை. கருத்துவேறுபாட்டின் விளைவாக சபையில் ஒரு குறிப்பிட்ட செய்தியைப்பற்றி ஒற்றுமையின்மை ஏற்பட் டால் அஃது நடுநிலையாக முடிவு செய்யும் ஒரு குழுவின் முடிபுக்கு அனுப்பப்பெறும். சில அறிஞர்கள், இந்தியசபை களை இக்காலத்திய சட்டசபைகளுடன் ஒப்பிடுவர். உள்நாட்டு அலுவல்களும் பெரும்பான்மையில் அதேமுறையில் முடிவு செய் யப்பட்டன. குடியரசு நிலையங்களில் மிகுந்த நம்பிக்கைகொண் டிருந்த புத்தர், உரிமைவாய்ந்த குடியரசு உறுப்புக்களில் நம் பிக்கை குன்றாமலிருந்தால், மக்கள் சீர்கேடு அடையார் என்று லிச்சாவி வகுப்பினரை நோக்கிக்கூறியதும் ஈண்டு குறிப்பிடத் தகும்.

## பிம்பிசாரன்.

### கி. மு. சுமார் 525—500.

மகதநாட்டை கி. மு. ஆறாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆண்டுவந்தவன் பிம்பிசாரன். அந்நாட்டின் அரசியல் மேன் மைக்கு உண்மையில் அடிகோலிய பிம்பிசாரனின் மூதாதை யரைப்பற்றித்தெளிவாக அறியப்படவில்லை. சிசுநாக மன்னன் மரபிற்றோன்றியவரால் அங்கநாட்டைக் கைப்பற்றுதற்கு எடுத் துக்கொள்ளப்பட்ட முயற்சியே பிம்பிசாரனின் வெற்றிக்கு ஓரளவு காரணமாகும். வடக்கு, மேற்கு எல்லைகளிலிருந்த அரசர்களை, பிம்பிசாரன், தன் துணைவர்களாகக்கொண்டனன். லிச்சாவி இளவரசியையும், கோசலநாட்டு இளவரசியையும் அவன் மணந்தான். இரண்டாவது மணத்தின் விளைவாக, காசிநாட்டின் ஒரு பகுதி பிம்பிசாரனுக்கு (பெண்வழிச்சீர்)க் கிடைத்தது. இவ்வாறு வலிமைபெற்ற அவ்வரசன் அங்க நாட்டு மன்னனை பிரம்மதத்தனைத் தோற்கடித்து அந் நாட்டைத் தன்னடிப்படுத்தினான். அசாதசத்துரு என்ற தன் மகனை, சம்பா என்னும் தலைநகரிலமர்ந்து அங்கநாட்டை

ஆளுமாறு செய்தான். மாளவம், காந்தாரம் ஆகிய நாடுகளுடனும் பிம்பிசாரன் நட்புத்தொடர்பு கொண்டிருந்தான். இவ்வாறு போரினாலும் அரசதந்திர ஆற்றலினாலும் பிம்பிசாரன், மகதநாடு ஓர் பேரரசாகுமாறு செய்தான். அவன் சிறந்த அரசியல் திறமை பெற்றிருந்ததால், மகாமாத்திரர் எனப்பட்ட சிறப்பான அலுவலாளர்களை அடக்கி ஆண்டான். பீகார் நகரின் அருகில் இராசக்கிருகம் என்னும் புதிய நகரை அமைத்தான். ஆனால் பாகியான், அதனை அசாதசத்துரு அமைத்ததாகக் கூறுவன். அவன் ஒரு சமணன் எனவும் சமண சமயத்திற்கு மிகுந்த ஆதரவு அளித்ததாகவும் அறியக்கிடக்கிறது. ஆனால் புத்தரை அவன் வியந்ததாகவும் கூறப்படுகிறது. அகிமீனியப் பேரரசனை முதலாம் தரயஸ், சிந்துவெளியைக் கைப்பற்றியது பிம்பிசாரனின் ஆட்சிக்காலத்தில் இருக்கக்கூடும்.

### அசாதசத்துரு.

#### கி. மு. சுமார் 500—475.

அசாதசத்துருவின் தாய், லிச்சாவி இளவரசியா அல்லது கோசல நாட்டவளா என்பது தெளிவாக அறியப்படவில்லை. தேவதத்தனின் தூண்டுதலினால் அசாதசத்துரு, தன் தந்தையை (பிம்பிசார) க்கொலை செய்தானென்று பௌத்தநூல் கூறும். ஆனால் அறிஞர் ஸ்மித், சமயத்தொடர்பான பகையின் விளைவாக உண்மை வரலாற்றை மாற்றிக் கூறியிருப்பதாகக் கருதி அச்செய்தியை ஏற்றுக்கொள்ளவில்லை. தேவதத்தன், புத்தரின் பகைவன் என்பதையும் நோக்குதல் வேண்டும். ஆனால் அசாதசத்துரு என்னும் பெயருக்கு, பிறப்பதற்கு முன்னரே தந்தையின் பகைவன் என்று பொருள் விளக்கப்படுதலையும் நோக்குதல் வேண்டும். மேலும் அசாதசத்துருவின் பின்வந்த நால்வரும் (நாகதாசகன் வரை) பெற்றோர்களைக் கொன்றோராகக் கருதப்படுகிறது. இந்த ஐவரும், தந்தையைக் கொல்லும் மரபைச சேர்ந்தவரென்றும், மக்கள் மனம் பொருதவர்களாய் இம்மரபை, முடிவுறச்செய்து, முதல் தந்தைக் கொலைக்கு 80 ஆண்டுகள் பின்னர், சிசுநாகன்

என்னும் அமைச்சரை, ஆட்சிபுரியுமாறு தேர்ந்தெடுத்தன ரென்றும், புத்த நூல்கள்கூறும். அசாதசத்துரு, புத்தரையும் மகாவீரரையும் ஆதரித்ததாகக் காணப்படுகிறது. அவன் தனது அரசை விரிவுறச்செய்யக் கையாண்ட வலுக்கட்டாய முறைகளின் விளைவாக, கோசலநாடும் வைசாலியும் இணைந்து அவனை எதிர்க்க முற்பட்டனவென்று அறியப்படுகிறது. இதனை அடக்க அசாதசத்துரு பதினாறு ஆண்டுகள் போரிடவேண்டி யிருந்ததாம். கௌடில்யன் கூறும், மக்களைப் பிரிக்கும் தந்தி ரத்தைக் கையாண்டதின் விளைவாக, அப்பெரிய குடியரசு (கோசலம்—வைசாலி) வீழ்ச்சியுற்றதாகக் கூறப்படுகிறது. பெரும் நாடான கோசலமும், கூட்டுநாட்டுக் குடியரசும். மகதத்துடன் இணைக்கப்பட்டதால் அசாதசத்துருவின் வலிமை யும் புகழும் ஓங்கிவளரலாயின. போர்கள் நிகழுகையில் பாடலிகிராமம் (பிற்காலத்திய பாடலிபுத்திரம்) என்னுமிடத்தை அசாதசத்துரு முற்றுகையிட்டான். போர்க்காலங்களில் படை அமைப்புக்கு அவ்விடத்தின் தகுதியையும் சிறப்பையும் அவன் உணர்ந்து போற்றினான். வடமதுரையின் அண்மையில் பார்க்கம் என்ற இடத்தில் காணப்பட்ட சிலை அசாதசத்துருவைக் குறிக்கலாமென்று, அறிஞர் K. P. செயஸ்வால் கொண்ட யூகம் உறுதி செய்யப்படுமாயின் அவனைப் பற்றிய நம்மறிவு பெருக்கமடையும். பின்வரும் சந்திரகுப்த மோரியப் பேரரசனின் "முன்னோடி" என்ற சிறப்பு, அசாதசத்துரு வுக்குப் பொருந்தும். அவனுடைய ஆட்சிக் காலத்தில் சாக்கியர் கொலை செய்யப்பட்டனர். கி. மு. 487-ல் புத்தர் மறைந்த பின் இராசகிருகத்தில் முதல் புத்த மகாநாடு கூட்டப்பெற்றது.

**தர்சகன் கி. மு சுமார் 475—450**

**உதயன் கி மு. சுமார் 450—425**

அசாதசத்துருவின் மகனான தர்சகன் அவனுக்குப்பின் அரியணையேறினான். ஆனால் மகாவம்சம் என்னும் புத்தநூல் உதயன் என்பானே, பின்வந்தோனெனக் கூறுகிறது. பாசன் எழுதிய "ஸ்வப்பன வாசவதத்தை", தர்சகனைப் பற்றிய வரலாற்று உண்மையைத் தெளிவாக்கும். வத்சநாட்டு உதய னனும் அவந்தியின் மகாசேனனும், அவன் காலத்தவரென்று

அதனின்று அறியப்படும். நாகதாசகன் என்னும் பெயர் அம் மன்னனேயே குறிப்பிடுமாயின், புத்த நூலின்படி பெற்றோரைக் கொலைபுரியும் மரபின் இறுதியான அரசன் இவனாகும். இவனுடைய 24 ஆண்டுகள் ஆட்சிக்குப் பின், சிசுநாகன் என்னும் அமைச்ச - அரசன் தேர்ந்தெடுக்கப்பட்டானென்று அதனின்று அறிகிறோம். மகாவீரர் இம்மன்னனின், (தர்சகன்) ஆட்சிக் காலத்தில் மாய்ந்திருக்கக் கூடும். பின்வந்த உதயன், கங்கையும் சோணநதியும் கூடுமிடத்திலுள்ள பாடலிபுத்திரம் (புஷ்பபுரம் அல்லது குசுமபுரம்) என்னும் நகரைத் தலைநகராய்க் கொண்டான். அக்காலத்தில் அவந்திநாடு, வத்ச நாட்டைக் கைப்பற்றிக்கொண்டு பெருமைபெற்று விளங்கியதால் மகதத்திற்கு இடையூறுகளேற்பட்டன. ஆனால் இரு பேரரசுகளுக்கும் போர் ஏற்படாவண்ணம் சிறிது காலம் தடைசெய்யப்பட்டிருந்தது. அறிஞர் K. P. செயஸ்வால், பாட்னு சிலைகளில் ஒன்று உதயனைக் குறிக்குமென்று கூறுவது தக்க சான்றுகளால் உறுதி செய்யப்படவில்லை.

## நந்தர் பேரரசு. நந்திவர்த்தனன்.

கி. மு. சுமார் 425—400.

உதயனின் பின்போந்தானை நந்திவர்த்தனன் காலம் முதல் மோரியரின் எழுச்சி வரை உள்ள காலப்பகுதியில், இரு தலைமுறைகள் சிசுநாகரும், இரு தலைமுறைகள் நந்தரும் ஆட்சி நடத்தினரெனப் புராணங்கள் புகலும். அவற்றினிடையே மரபுப்பிளவு குறிப்படப்படவில்லை. சமயத்துறையிலும் இன முறையிலும்தான் பிளவுகளேற்பட்டனவாம். ஆதலால் அவை ஒரே மரபாகக்கருதப்பட வேண்டும். பெயர் ஒற்றுமைக் காரணத்தால், இறுதியான இரு சிசுநாக அரசர்களும் நந்த வமிசத்தினராகக் கொள்ளப்படுதல் தகும். அறிஞர் K. P. செயஸ்வால் "நவநந்தர்" என்ற சொல்லிற்கு பிற்காலத்திய நந்தர் என்று பொருள் தருகிறார். ஆனால் புராணங்களும் மகாவம்சமும் ஒன்பது நந்த அரசர்களின் பெயர்களையும் தெளிவாகக் குறிப்பிடுவதால் அவ்வறிஞரின் கூற்று ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. அதிகும்பா கல்வெட்டு, கார

வேலனுக்கு 300-ஆண்டுகள் முந்தியிருந்த நந்த மன்னனைக் குறிப்பிடாது, நந்த ஆண்டு ஒன்றையே குறிப்பிடுவதாக இப்பொழுது பொருள் கொள்ளப்படுகிறது. நந்திவர்த்தனன் நந்த மரபினன் என்பதை வேறு சான்றுகளாலும் அறிய வேண்டும். அல்பருனி நன்கு அறியப்படும் ஹர்ஷனின் காலத்தைக் (கி. பி. ஏழாம் நூற்றாண்டு) குறிப்பிடுவதைத் தவிர, விக்கிரம ஆண்டுக்கு (கி. மு. 58—57) 400-ஆண்டுகள் முற்பட்ட ஒரு ஹர்ஷ ஆண்டைக் குறிப்பிட்டுள்ளார். (அதாவது கி. மு. 5-ம் நூற்றாண்டில் ஆகும்). நந்த, ஹர்ஷ என்னு மிருசொற்களும் பொருளில் ஒற்றுமைப்பட்டிருப்பதால், நந்தவர்த்தனன் அல்லது நந்திவர்த்தனனின் ஆண்டு குறிப்பிடப்பட்டிருப்பதாகக் கொள்ளுவது பொருந்தும். மேலும் சாளுக்கிய மன்னனை ஆறும் விக்கிரமாதித்தனின் (கி. பி. 1076-1127) ஒரு கல்வெட்டு ஒரு நந்த ஆண்டைக்குறிப்பிடுகிறது. நந்திவர்த்தனன், கி. மு. 458—7-ம் ஆண்டுக்கு உரியவனென்று முடிவு செய்வதற்குச்சில தடைகள் உள. ஆகவே 400 ஆண்டுகள் என்று கூறப்பட்டிருப்பதைக்கொண்டு, 5-ம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி அம்மன்னரின் காலம் என்று முடிவு செய்யலாம். புராணங்கள். அவன் 40-ஆண்டுகள் ஆட்சி புரிந்ததாகக் கூறுவதால் அக்காலத்திற்கு முன்னமே அவன் பட்டமேற்றிருக்கலாமெனவும் எண்ண இடமுளது. ஆகவே, நந்திவர்த்தனன். நந்தமரபினன் என்று எண்ணப்படலா மென்பது தெளிவாகிறது. ஆனால் பண்டைய புராண ஆசிரியர்கள், அவனையும் அவன்பின் வந்த மகாநந்தி என்பானையும், தூய்மையற்ற நந்தர்களாகிய மகாபத்மன். அவன் குமாரர்கள் ஆகியோரிடமிருந்து வேறுபடுத்தியுள்ளனர். முடிவாக, நந்திவர்த்தனன் நந்த ஆண்டைத் தொடங்கியவன் எனக்கருதலாம். மேலும் அவன் மாளவத்தின் பிரத்தியோத மரபை முடிவுறச் செய்த பெருமையையும் பெற்றிருந்ததாகக் கூறப்படுகிறது. கலிங்கநாட்டை இவன் வென்றானு என்பது தெளிவாக அறியப்படவில்லை. அவனைப் பற்றி "உலக நாட்டு வர்த்தநந்தி" என்று கல்வெட்டில் காணப்படுவது அவன் ஒரு பேரரசன் என்பதைத் தெளிவாக்குகிறது. வர்த்தனன் என்னும் சொல்லே பேரரசரின் பட்டத்தைக் குறிக்கும்.

## மகாபத்மநந்தன்.
### கி. மு. சுமார் 375—350.

கோதாவரி ஆற்றங்கரையிலிருந்த நௌநந்ததேரா (Nau Nanda Debra) என்னும் நகரம், நந்தர் பேரரசு நிலைத்திருந்த தற்குச் சான்றாக உளது. கி. பி. 12-ம் நூற்றாண்டுக்குரிய மைசூர் கல்வெட்டுக்கள், அவர்களைக் குந்தளநாட்டு (இக்கால கன்னடநாடு) மன்னர்களென்று குறிப்பிடுகின்றன. கௌடில் யனின் அர்த்தசாத்திரத்திலும் நந்த அரசரின் பெருமையைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. விசாக தத்தனின் முத்திரா-ராட்சசம், நந்தர்குல மன்னர்களுக்கு பேரரசுக்குரிய பட்டங் களை அளித்துள்ளது. கிரேக்க, இலத்தீனிய ஆசிரியர்கள் கிழக்கு இந்தியர்களை, சிறப்பு வாய்ந்தவர்களாகப் புகழ்கின் றனர். அலெக்சாந்தர், பஞ்சாபில் படையெடுத்த காலை கங்கைச் சமவெளியில் மகதநாடு மிக உயர்ந்த நிலையிலிருந்தது. நந்தர் கலிங்கத்திற் படையெடுத்து அந்நாட்டை வென்றதும், அங்கி ருந்து ஒரு உருவத்தை வடஇந்தியாவுக்கு எடுத்துப்போந்தன ரென்பதும் காரவேலனின் அதிகும்பா (யானைக்குகை) கல் வெட்டினின்று தெளிவாக அறியப்படுகிறது. ஆதலால் கலிங்கத்தைவென்ற நந்த அரசன் சமணன் என்று புலப்படு கிறது. அனைவற்றிற்கும் மேலாக புராணங்கள், மகாபத்மனை "சர்வக்ஷத்திரியாந்தகன்" (க்ஷத்திரியர் அனைவரையும் அழிப் பவன்) என்றும் "ஏகராத்" (மன்னர் மன்னன்) "ஏகச் சத்திராதிபதி" (மன்னர்கள் அனைவரையும் ஒரு குடையின் கீழ் கொண்டுவருபவன்) என்றும் சிறப்பிக்கும். சிந்துவெளி யிலிருந்து அகிமீனியரை வெளியேற்றியது யாரென நாமறி யோம்; ஒருவேளை மகாபத்மனாக இருக்கக்கூடும். முடிவாக நந்திவர்த்தனன் என்னும் நந்தப்பேரரசனின் செயல்கள், மகாபத்மனின் காலத்திய பேரரசு உயர்வுக்கு வழிகாட்டின என்று தோன்றுகிறது.

## நந்தரின் சிதைவும் வீழ்ச்சியும்.

சந்திரகுப்த மோரியனின் பேரரசில் கலிங்கம் உட்படாத தாலும், அசோகன் அதனை மீண்டும்கைப்பற்ற வேண்டியிருந்த

தாலும், மகாபத்மநந்தனின் பின்வந்தோர், அந்நாட்டை இழந்து விட்டதாக அறியப்படுகிறது. பொருளமைப்புமுறை கொடுமை யாக மாறியது. •அளவைகள் மாற்றியமைக்கப்பட்டன. பிற் காலத்திய நந்தமன்னர்கள் மக்களால் விரும்பப்படவில்லை. அவர்கள் தாழ்ந்த மரபினர் என்ற கருத்தும், அவர்தம் சமணசமய ஆதரவும், அவர்கள்மீது மக்கள் வெறுப்புக்குக் காரணங்களாயின. கிரேக்கக்கதையின்படி இறுதியான நந்த அரசன் ஒரு அம்பட்டனின் மகன் என்று அறியப்படும். "ஆரிய மஞ்சுஸ்ரி மூலகல்பம்" என்ற ஒரு புத்தநூல், மகா பத்மனை, "நீசமுக்கியன்" (தாழ்ந்த மக்களில் சிறப்பானவன்) என்று கூறும். எவ்வாறிருப்பினும் நந்தரின் படைவலிமை, குன்றியிருந்ததாகத் தெரியவில்லை. அலெக்சாந்தரின் படை வீரரும், மகதநாட்டுப் படையின் வலிமையைக்கேள்வியுற்றனர். 20,000-குதிரைகள், 2,00,000-காலாட்கள், 2,000-தேர்கள் 3,000-க்குமேல் 6,000-வரை யானைகள் - இந்த அளவுக்குக் குறையாமல் அவ்வமயம் நந்தரின் படை அமைந்திருந்ததாம். சுமார் கி.மு. 325-இல் சந்திரகுப்தமோரியன் என்பான் அரசுரி மையைக்கைப்பற்றி, நந்தர் குலத்தை முடிவுறச்செய்தான்.

## பேரரசுமுறையின் வெற்றிக்குக் காரணங்கள்.

மோரியப் புரட்சிக்கு முற்பட்ட இரண்டு நூற்றாண்டுகளில் வடஇந்திய அரசியல் வளர்ச்சியைப்பற்றி இதுகாறும் கூறப் பட்டது. அதேகாலத்தில் மேற்கில் அகிமீனியப்பேரரசுபரவி, பின் வீழ்ச்சியுற்றதைக்காண்கிறோம். இந்தியாவின் அரசியலில் பேரரசு முறையின் வெற்றிக்கு, சிறப்பாக, பிம்பிசாரன், அசாதசத்துரு, நந்திவர்த்தனன், மகாபத்மநந்தன் போன்ற பல திறமை வாய்ந்த அரசர்கள், எவ்வாற்றானும் முன்னேற்றத்திற் கான முறைகளைக் கையாண்டது காரணமாகும். ஆற்றுப் படுகைகள் முதலிய, நில அமைப்புச் சாதனங்களும் அவர் களுக்கு உதவின. வடமேற்கு இந்தியாவில் அயலார் ஆட்சி நிலவியதால், இந்தியரிடம் மிகுந்த ஊக்கம் காணப்பட்டிருக் கக்கூடும்.

## பகுதி 6

### ஈரானியர் இந்தியாவில் நுழைதல்.
### சைரஸ் பேரரசனும் முதலாம் தரயஸ்ஸூம்.

இந்தியருக்கும் ஈரானியருக்கும் ஒற்றுமை உறவு நிலவிய தென்பது பொதுவாக யாவராலும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அகிமீனியப் பேரரசின் தோற்றத்துக்குப் பின்னர், அவ்வுறவு மிகுந்த நெருக்கமுற்றது. சைரஸ் பேரரசன், (கி. மு. 558-530) காந்தாரத்தை வென்றான். காம்பிசஸ் (கி. மு. 530-522) எகிப்தில் போரிடவேண்டியிருந்ததால், இந்தியப்படை யெழுச்சியைப்பற்றி சிந்திக்கவில்லை. முதலாம் தரயஸ் (கி. மு. 522—486) பஞ்சாப்பையும், சிந்து நாட்டையும், அவன் பேரரசுடன் இணைத்து, அவற்றை அதன் இருபதாவது மண்டலமாகச்செய்தான். கி. மு. 516-ல் அஃது நேர்ந்திருக்க லாமென்று பேராசிரியர் ஹெர்ஸ்பெல்ட் (Herzfeld) கருது கிறார். சிந்து, வடமேற்கு எல்லை மாகாணத்தின் ஒருபகுதி, பஞ்சாபின் பெரும்பகுதி முதலியன பாரசீகரின் இந்திய மண்டலத்துக்குப்பட்டன. அப்பகுதி, மக்களும் செல்வமும் நிறைந்ததெனவும் அம்மக்கள் பத்தாயிரம் பொற்காசுகளுக்கு மேல் திறை செலுத்தினர் எனவும் (ஆசிய மண்டலங்கள் செலுத்திய திறையில் மூன்றில் ஒருபங்கு) அறியக்கிடக்கின்றன. " தரயஸ் வரலாற்றின் மிகச்சிறந்த ஆரிய வீரருள் மிக உயர்வானவன் "*

### சர்க்சீஸ்ஸூம் இரண்டாம் ஆர்ட்டா சர்க்சீஸூம்.

சர்க்சீஸ் (கி. மு. 486—465) (xerxes) கிரீசில் படை யெடுத்தபொழுது, இந்திய மண்டலத்தினரும் அவனுக்கு உதவினர். கி. மு. 479-ல் பாரசீகருக்கும் கிரேக்கருக்கும் ப்ளாட்டியா (Plataea) என்ற இடத்தில் நடந்தபோரில் இந்திய வீரரும், இந்நாட்டுக் குதிரைகளும் போரிட்டதாக, எரதோதஸ் கூறுகிறார். அவ்வமயம் நடந்தபோரில் அகிமீனியர் தோற்கடிக் கப்பட்டபின், பாரசீகப்பேரரசு மெலிவடையத்தொடங்கியது.

* Sir P. Sykes, A History of Persia (1930), I, p. 194.

இந்தியாவிலும் அவர்கள் முன்னேற்றமடைவது இயலாததா யிற்று. ஆனால் சர்க்சீஸ் இறந்த பிறகு, அவனது இந்திய மண்டலத்தின் அரசியல் நிலை, தெளிவாக அறியப்படவில்லை. மூன்றும் தரயஸ் என்ற இறுதியான அகிமீனிய மன்னன் காலம் வரை (கி. மு. 330) சிந்து வெளியில் பாரசீகராட்சி நிலவியிருக்கலாம் என்ற கருத்து பொருத்தமானதன்று அலெக்சாந்தர் வடமேற்கு இந்தியாவில் கண்ணுற்ற அரசியல் நிலையை நோக்குமிடத்து, அகிமீனிய ஆட்சி அம்மன்னனுக்குப் பல ஆண்டுகள் முன்பே, இந்தியாவில் முடிவடைந்திருக்க வேண்டுமென்பதை உணரலாம். மேலும் அலெக்சாந்தர், இந்துகுஷ் மலைக்குக் கிழக்கில் ஈரானிய அதிகாரிகளைக்காண வில்லை என்றும் அறியப்படுகிறது. "இரண்டாம் ஆர்ட்டா சர்க்சீஸ் (கி. மு. 405—358) ஆட்சிக் காலத்தில், இந்திய மண்டலங்கள் முடிவாக அவன் பேரரசிடமிருந்து பிரிந்தன" என்று பேரறிஞர் தாரன் (Tarn) கூறுவர்.‡

## பாரசீக ஆட்சியின் பயன்.

நூற்றாண்டுகட்குமேல் நீடித்த அரசியல் தொடர்பின் விளைவாக, இந்திய ஈரானிய வாணிக உறவு மிகுதியாகப் பெருகியது. அலெக்சாந்தரின் படையெழுச்சிக்கும் அது வழி காட்டியது. கி. பி. மூன்றும் நூற்றாண்டுவரை, வடமேற்கு இந்தியாவில் நிலவிய காருஷ்தி (Kharoshthi) என்னும் எழுத்து வடிவு அகிமீனியர் தொடர்பால் இந்தியாவில் நுழைக் கப்பெற்றது. அடையாளங்களிடப்பட்ட இந்திய நாணயங்கள் (Punch-Marked Coins) எத்துணை அளவு, அயலார் தொடர் பினால் மாறுதலுக்குட்படுத்தப்பட்டன என்பது தெளிவாக அறியப்படவில்லை. ஆனால் மோரிய சிற்பங்களில் பாரசீகப் பண்புகள் காணப்படுகின்றன. முடிவாக, குறுகிய காலம் நிலவிய இந்திய–மாசிடோனியத் தொடர்பைவிட இந்நாட்டுக்கு ஈரானியத் தொடர்பு மிகுதியான பயன்களை அளித்ததாகக் கூறலாம்.

‡ W. W. Tarn, The Greeks in Bactria and India (1938) p. 130

## பகுதி 7.

### அலெக்சாந்தர்.

### அலெக்சாந்தரின் படையெழுச்சி.

மாசிடோனிய மன்னன் இரண்டாம் பிலிப்பின் மகனுன அலெக்சாந்தர் கி. மு 356-ல் பிறந்தான். அவன், தனது பதின்மூன்ருவது வயது முதல் பதினுரும் வயது வரை, அரிஸ்டாட்டிலால் பயிற்சி அளிக்கப்பெற்ருன். ஹோமரின் "இலியாட்" என்ற நூலும், வாளும், அவனுல் மிகவும் விரும்பப்பட்டன. கல்வியிலும் போரிலும் அலெக்சாந்தர் கொண்டிருந்த ஆர்வம் போற்றற் குரியதே. அலெக்சாந்தர் அவனது இருபதாவது வயதில் மாசிடோனியாவின் மன்னனுயினன். அவன், வல்லமையும் திறமையும் வாய்ந்த படைத்தலைவனு யிருந்தபோதிலும் பிறரை அச்சுறுத்தும் மனநிலை அவனிடம் காணப்பெற்றது. ஆயினும், நேர்மையுடனும், மங்கையரிடம் கருணையுடனும் உயர்ந்த குறிக்கோளுடனும் விளங்கினன். போரில் வஞ்சனையாக வெற்றிபெறுவதை அவன் விரும்பினுனில்லை. மிகுந்த வீரத்துடன் கிரேக்கக் கலைப் பண்புகளைப் போற்றும் ஆற்றல் அவனிடமிருந்தது. அவனுடைய தந்தையின் முயற்சிகளால் கிரீசின் அரசுரிமை, அவனுக்குக் கிடைத்திருந்தது. ஆகவே, கிரீசில் ஏற்பட்ட கலகத்தை அடக்கியபின்னர், அவன், ஆசியாவில் படையெடுக்கலானுன். தனது வீரமும், ஆற்றலற்ற மூன்ரும் தரயஸ்ஸின் கீழிருந்த பாரசீகப் பேரரசின் சீர்கேடுகளும், அலெக்சாந்தருக்குத் துணைபுரிந்தன. கி. மு. 331-ல் ஆர்பீலா, (Arbela) என்ற இடத்தில் அலெக்சாந்தர் அடைந்த வெற்றி, பாரசீகப் பேரரசை அவனுக்கு அடிபணியச் செய்தது. தரயஸ் ஓடி, பின் இறந்தான் கி. மு. 330-ல் மாசிடோனிய வீரன் எக்படானுவைக் (Ecbatana) கைப்பற்றினுன். பின்னர், இந்தியாவில் படையெடுக்க எண்ணி அலெக்சாந்தர், கிழக்கில் தன் படையைச் செலுத்தினுன்.

### இந்தியப் படையெழுச்சியின் காரணங்கள்.

அலெக்சாந்தர் பெல்லா (Pella) என்னும் தன் தலைநகரிலிருந்து புறப்படும்பொழுது, இந்தியாவைப் படையெடுக்கும்

எண்ணம் அவனிடமில்லை. அவன் தந்தையும் இக்கருத்தைக் கொண்டிருக்கவில்லை. பாரசீக இந்தியப் படைகள், முன்பு கிரீசில் படையெடுத்ததால், பாரசீகத்தின் வீழ்ச்சிக்குப்பின், அலெக்சாந்தர், இந்தியாவையும் தாக்கவேண்டுமென்ற எண்ணம் கொண்டிருக்கக்கூடும். இந்தியாவின் வளத்தையும் செல்வத்தையும் பற்றி, எரதோதஸ்ஸும், பிற ஆசிரியரும், மேற்கு நாட்டினருக்கு அறிவித்திருந்தனர். மேலும், இயல் பாகவே, அலெக்சாந்தரிடம் நிலநூல் ஆராய்ச்சி அறிவு இருந்த தால், புதிய நாடுகளில் அவன் நாட்டம் சென்றதில் வியப் பில்லை. நில அமைப்பைப் பற்றிய அக்காலக் கொள்கைப்படி, அலெக்சாந்தர், இந்தியாவுக்குக் கிழக்கில், காஸ்பியன் கடலின் தொடர்ச்சியும், உலகத்தின் கிழக்கெல்லையும் இருந்ததாக நம்பினன்.

## வடமேற்கு இந்தியாவின் நிலை.

வடமேற்கு இந்தியாவில் அவ்வமயம் பல இளவரசர் நாடு களுடன், குடியரசு நாடுகளும் காணப்பெற்றன. தட்சசீலத் தின் அம்பி, அபிசாரா மன்னன், சீலநதிக்கும் சீனுப்புக்கு மிடைப்பட்ட நாட்டை ஆண்டுவந்த போரஸ், முதலியோர் சிறப்பான மன்னர்களாவர். காபூல், சிந்து ஆறுகளுக்கிடைக் பட்ட பகுதியில் நைசர் என்ற குடியரசுக் கூட்டத்தினர், ஒரு தலைவனையும், 300 உறுப்பினரடங்கிய ஒருஅர்சியல் மன்றத்தை யும் பெற்றிருந்தனர். சீலத்துக்கும் சீனுப்புக்குமிடையே, காணப் பட்ட காதாயியர் என்ற வகுப்பினர் போர் வீரம் செறிந்தவரா யிருந்தனர். அவ்விரு ஆறுகளும் கூடுமிடத்தின் கீழ் சீபோய் (Siboi) என்ற பிரிவினர், தோலாடை அணிந்து, தடிகளைப் பயன்படுத்தி வந்தனர். இரவி, பியாஸ் ஆறுகளுக்கு இடையில், வீரப்பண்புகள் பொருந்திய க்ஷுத்ருகர் விளங்கினர். மலவர் என்ற வகுப்பினரும், போர்புரிதலையே தொழிலாகக் கொண் டோராவர். அம்பாஸ்தர் என்ற கூட்டத்தினர். குடியாட்சி முறையையும், வலிமை வாய்ந்த படையையும் பெற்றிருந்தனர். சிந்து நாட்டின் மௌசிகானர், ஸ்பார்ட்டா, கிரீட், நாடுகளில் விளங்கியதை ஒத்த நிலையங்களைப் பெற்றிருந்தனர். ஆண்டு காணப்பெற்ற ஆரியரின் செயல்களால் அலெக்சாந்தருக்குப்

பகையாக கலகம் விளைந்தது. பெரும்பான்மையில், வடமேற்கு இந்தியாவிலும் ஒற்றுமையின்மை காணப்பட்டது. இளவரசர் களும், பிறகூட்டத்தினரும் தமக்குள் போர் நிகழ்த்தி வந்தனர். ஆயினும், அந்நாடுகளைத் தோற்கடிப்பது எளிதான செயலாக இல்லை. ஒரு குறிப்பிட்ட இடத்தில் போர் நிகழ்த்தி, வெற்றி பெற்று அதன்மூலம் மற்ற பகுதிகளையும் இணைத்துக் கொள்வ தென்பது எளிதில் இயலாத செயலாயிருந்தது.

### அலெக்சாந்தர் சிந்து வெளியில் படையெடுத்தல்.

கி. மு. 327-ல் அலெக்சாந்தர், இந்துகுஷ்மலைப் பகுதியி லிருந்து புறப்பட்டான். ஆண்டு காணப்பெற்ற கொடிய குறிஞ்சி மக்கள், அவனால் முறியடிக்கப்பட்டனர். மாசிடோ னியாவிலிருந்து செய்திகளைப் பெறுவதற்கான சாதனங்களுக்கு இடையூறு ஏற்படாவாறு அலெக்சாந்தர் முயன்று வந்தான். கி. மு. 326-ல் அவன் சிந்து ஆற்றைக் கடந்து தட்சசீலம் சென்றான். அந்நாட்டு மன்னன், அவனை வரவேற்றனன். பின், சீலம் ஆற்றங்கரைக்குச் சென்ற மாசிடோனியப் பேரரசன், ஆற்றின் மற்றொரு பகுதியில், போரஸ்ஸின் படையைக் கண்ணுற்றனன். காரிச் சமவெளியில் சீலம் (அல்லது இதாஸ்பஸ்) ஆற்றங்கரையில் போர் நிகழ்ந்தது. முடிவில் அலெக்சாந்தர் வெற்றிகொண்டானெனினும், எளிதில் அவ்வெற்றி அவனுக்கு ஏற்படவில்லை. இறுதிவரை வீரத் துடன் போரிட்ட போரஸ் தோல்வியடைந்தபின், "நீ என்ன வேண்டுகிறாய்?" என்று தன்னைக்கேட்ட அலெக்சாந்தரை நோக்கி அஞ்சாது "என்னை அரசனாக நடத்தவேண்டும்" என்று விடை பகர்ந்தனன். அப்போருக்குப் (கி. மு. 326) பின், அலெக்சாந்தர் பியாசை நோக்கிச்சென்றனன். ஆனால், மேலும் அவன் செல்வதை அவன் படையில் விளைந்த ஒரு கலகம் தடைசெய்தது. அவ்வமயம், அவனுடைய சொல் வன்மையும் பயனற்றதாகியது. ஆகவே, அவன், திரும்ப நேரிட்டது. வழியில் பலவகையான இடையூறுகளை வென்று, கி. மு. 325-ல் அலெக்சாந்தர் இந்தியாவை விட்டகன்றனன். 324-ல் சூசா (பாரசீகம்) நகரை அடைந்து, பின் 323-ல் பாபிலோனியாவில் இறந்தான். இவ்வாறு, அவனது இந்தியப்

படையெழுச்சி மூன்றுண்டுகள் நீடித்தது. உண்மையில் இந் நாட்டில் அவன் தங்கியது, 19-மாதங்களேயாகும்.

### வெல்லப்பட்டபகுதியில் அரசியலமைப்பு.

அலெக்சாந்தரின் அமைப்புப்படி சீலம், சீனுப் ஆறுகளுக் கிடைப்பட்ட பகுதி, போரஸ்ஸின் நாட்டுடன் இணைக்கப்பட் டிருந்தது. தட்சசீல மன்னனும் போரஸ்ஸும், மாசிடோனி யனின் முயற்சியால் நண்பர்களாயினர். ஆபிசாராமன்னன், ஒரு மண்டலத் தலைவனுயினன். பஞ்சாபின் எஞ்சிய பகுதி—அம்பியின் நாடு உட்பட—ஒரு மாசிடோனிய மண்டலமாக்கப் பெற்று, பிலிப்போஸ் என்ற அதிகாரியின்கீழ் வந்தது. சிந்து நாடும், பிறபகுதிகளும் மற்றொரு மண்டலமாகி, பெய்த்தன் என்பானின் தலைமையின்கீழ் கொண்டுவரப்பெற்றது. அலெக் சாந்தரால் தோற்றுவிக்கப்பட்ட பல நகரங்களில் மாசிடோனிய, கிரேக்கப்படைவீரர்கள் அமர்த்தப்பெற்றனர். அயலார் ஆதிக் கம் இதனுல் உறுதிப்படுத்தப்பட்டது. கலைப்பண்பு முன் னேற்றமும் இதனுல் ஏற்படவேண்டுமென்பது அலெக்சாந்த ரின் கருத்தாகும். ஆனுல், விரைவில் சந்திரகுப்தமோரியனுல் இந்தியாவில் மாசிடோனியராட்சி முடிவுற்றது.

### படையெழுச்சியின் பயன்.

அலெக்சாந்தரின் அருஞ்செயல்களையும், அவன் குறிக் கோளின் உயர்வையும் நோக்குமிடத்து, அவனது இந்தியப் படையெழுச்சியால் குறைவான பயன்களே ஏற்பட்டதாகக் கருதவேண்டும். அவன், வடமேற்கு இந்தியாவை, அரசியல் துறையிலும், கலைப்பண்புத் துறையிலும் தன் பேரரசுடன் இணைக்கவிரும்பினன். ஆனுல் அவன் தனது 33-வது வயதில் இறந்துவிட்டபடியால், எதிர்பாராத நிலைமை ஏற்படலாயிற்று. முதலாம் தரயஸ்ஸின் வெற்றி நிலைத்திருந்த அளவுக்குக்கூட அலெக்சாந்தரின் படையெழுச்சி, நிலையான பயனை அளிக்கா மைக்கு, பின்னவனின் வாய்ப்புக்கேடே காரணமாகும்; அவன் குற்றமன்று. குறுகிய காலமாகிய 19-மாதங்களில், அம்மாசி டோனிய வீரன், வெற்றிகொண்டு, நிலைமைகளை அமைதி

யாக்கி, நிலையான பயன்கள் விளையுமாறு செய்வதென்பது, இயலாத செயலே. மக்களுக்குக் கற்பித்துப்பயிற்சி அளிப்ப தற்குப் போதுமான காலம், வெற்றிகொண்டோனுக்கில்லை. வெல்லப்பட்டோரும், பிறரிடமிருந்து கற்றுக்கொள்ளும் நிலைமை யிலில்லை. ஆகவே, அலெக்சாந்தரின் படையெடுப்பின் பயன்கள், மாசிடோனிய ஆதிக்கம் இந்நாட்டில் நிலவியகால அளவை அடிப்படையாகக் கொண்டதாகும். இந்நிலையில், நீடித்து நிற்கக்கூடிய பயன்களை நாம் எதிர்பார்ப்பதற்கில்லை. கௌடில்யன், அல்லது மெகச்தனீசு, சிறப்பித்துள்ள, இந்திய நிலையங்களில், கிரேக்கர் கருத்துக்கள் காணப்படவில்லை. அலெக்சாந்தரின் படை அமைப்பு, போர்முறைகளிலிருந்தும் இந்தியர் எதையும் கற்றுக்கொள்ளவில்லை. மோரியப்படை, உள்நாட்டு முறையில் அமைந்திருந்தது. எனினும், உடனுக் குடன் பயன் ஏற்படாவிடினும் மேற்கு ஆசியாவில் அலெக் சாந்தரால் புகுத்தப்பட்ட ஹெலலெனியப் பண்புகள் நிலைத் திருந்ததால், அப்பகுதியுடன், இந்தியா கொண்ட தொடர்பின் விளைவாக, ஒருவாறு இந்தியா பயன் அடைந்ததாகச் சிலர் கூறுவர். இஃது உண்மையேயாயினும் இப்பயன், அலெக் சாந்தரின் இந்தியப் படையெடுப்பாலேற்பட்டதன்று. அவன், வடமேற்கு இந்தியாவில் படையெடுக்காதிருப்பினும், மேற் கூறிய பயன் ஏற்பட்டிருக்கும். அவன் படையெழுச்சியால் உடனே ஏற்பட்ட பயன், மோரியரின்கீழ் அரசியல் ஒற்று மைக்கு ஊக்கம் காணப்பட்டதேயாம். சிறு நாடுகள், தமக் கிடையே ஒற்றுமையின்றிப் போரிடுவது தீமையாகுமென்பதை, ஓரளவு உணர்ந்தன. அலெக்சாந்தரின் அரசியலமைப்பு முறை, ஒற்றுமைக்கு வழிகாட்டியது. அரசியல் பிரிவுகளின் எண்ணிக்கை குறைக்கப்படலாயிற்று. போரஸ்ஸின் நாடு விரிவுறவே, பல சிறு தலைவர்கள் மறைந்தனர். ஆகையால், அலெக்சாந்தர், தான், உணராமலேயே வடமேற்கு இந்தியாவில், சந்திரகுப்த மோரியனின் செயலை ஓரளவு எளிதாக்கினான். மாசிடோனிய மன்னனால் திறக்கப்பட்ட புதிய நில வழிகளும், கடல் வழியை ஆராய அவன் முயன் றதும், இந்தியாவுக்கும் மேற்கு ஆசியாவுக்கும் வாணிகத் தொடர்பு மிகுதியாவதற்கு உதவின.

## இந்திய வரலாற்றில் அலெக்சாந்தரின் சிறப்பு.

அலெக்சாந்தரின் படையெடுப்பு இந்நாட்டு ஆசிரியரால் குறிப்பிடப்படவில்லை. நம்நாட்டைப் பொறுத்தவரை, அலெக் சாந்தரின் வழியில் தோன்றியதாகக் கூறிக்கொண்ட சில தலைவர்கள் வடமேற்கு இந்தியாவில் காணப்பட்டதே அப் படையெழுச்சிக்குச் சான்றும். ஆயினும், இந்தியர் வரலாற்றில் அலெக்சாந்தர், குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தவனல்ல னென்று முடிவுசெய்யலாகாது. சில அறிஞர், அவனை, நாகரிக மற்றமுறையில் இந்தியாவில் நடந்துகொண்டவனென்று இகழ் வர். அலெக்சாந்தர் பிற நாடுகளில் அடைந்திராத இடையூறு களை இந்நாட்டில் பெற்றனனென்பதில் ஐயமில்லை. ஈண்டு, அவன் புகழ்ந்துகொண்ட தன் கொள்கைக்கு மாறாக, மறை வாகச் சென்று வெற்றிபெற்றனன். மேலும், இந்தியாவில் மிகச் சிறந்ததாக இருந்த மகதப் படையுடன் அவன் போரிட வில்லை. நந்தர் படை, அலெக்சாந்தருடன் போரிட்டிருந்தால் அவன் தோற்றிருப்பானென்று கற்பனைசெய்வது நலமன்று. ஆயினும், இந்தியப் படையின் உயர்வின்மையை, அலெக் சாந்தரின் வெற்றி, காட்டியதாகக் கூறுவது தவறாகும். இந்தியர் வாழ்க்கை முறையும் கருத்துக்களும் அவன் படையெடுப் பால் நிலையாக மாறுதலடையவில்லை. ஆனால் அவ்வீரன், யாண்டும் தோற்கடிக்கப்படாத புகழுடன், இந்நாட்டை விட் டகன்றனன். நாகரிகமற்ற முறையில் அவன் சில காலங் களில் நடந்துகொண்ட போதிலும், அவனது பெருந்தன்மை, உயர்வு, நலம்பயக்கும் பண்புகள் முதலியன புறக்கணிக்கப் படக்கூடியன அல்ல. இந்திய மெய்விளக்க அறிஞரைப்பற்றிய செய்திகளில் அவன் தன் கருத்தைச் சிறப்பாகச் செலுத்தி னன். ஆகவே, திமூர், நாதர்ஷா, போன்ற கொடியவருடன் அலெக்சாந்தரை ஒப்பிடுவது ஏற்புடைத்தன்று

## பகுதி-8.

### சமயம்.

### புத்தமும் சமணமும்.

புத்தர் மறைந்தபின் ஒன்றரை நூற்றாண்டுகள் வரை, அவர் சமயம் சிறப்பாக, உள்நாட்டில் வளர்ச்சியுற்றுவந்ததே

யன்றி வெளிநாடுகளிலன்று அவருக்குப்பின் தலைவர் என்ற ஒருவர் ஏற்றுக்கொள்ளப்படாததால், சமயக் கொள்கைகளை உறுதியாக முடிவுசெய்ய, இராச கிருகத்தில், ஒரு மாநாடு கூட்டப்பெற்றது. நூறு ஆண்டுகள் பின்னர் (சுமார் கி மு. 387'ல்) வைசாலியில் மற்றொன்று கூட்டப்பட்டது.

இவற்றால் புத்தசமயச் சட்டங்கள் வளர்ச்சியுற்றன. பிம்பிசாரனுக்குப் பின்னர், "தந்தையைக் கொலைசெய்யும்" அரசர்கள் ஆட்சிபுரிந்த எண்பது ஆண்டுகளில், புத்தசமயம் ஆதரிக்கப்பட்டிருக்க முடியாது. நந்தர், புத்தசமயத்தைவிட மிகுதியாக சமணத்தையை போற்றினர். ஆகவே, சிசுநாகர் நந்தர் காலப்பகுதியில் புத்த சமயம் ஓரே நிலையிலிருந்தது. அச்சமயம் இலக்கியத்தின் வளர்ச்சியும், சமயத் தொடர்பான பிற அலுவல்களும் அம்மதத்தை நிலைநிறுத்திய போதிலும், அரசியலாரின் ஆதரவு மிகுதியாக இல்லாததாலும், அச்சமயப் பிரிவினரிடை ஒற்றுமையின்மை காணப்பட்டதாலும் அதன் வளர்ச்சி தடையுற்றது. மகாவீரரின் பகைவனான கோசலரைப் பின்பற்றியோரின் செயல்களை மீறி, சமணம், சிறிது சிறிதாக - ஆனால் உறுதியாக—வளர்ந்து வந்தது. அசாத சத்துருவும், உதயனும், அதனை மிகவும் அன்புடன் ஆதரித்தனர். ஆகவே, புத்த சமயத்தைவிட, சமணம் சிறப்பான நிலையிலிருந்ததென்று அறியக்கிடக்கிறது.

## வைணவமும், சைவமும்.

புத்தர், மகாவீரர் இருவரும் எழுப்பிய சமய ஆராய்ச்சியின் விளைவாக. பண்டைய கொள்கைகளை மறுக்கும் பல சமய இயக்கங்கள் தோன்றின. அவ்விரு தலைவர்களும் கற்பித்த "கொல்லாமை" "உணர்ச்சி, அவர்களைப்பின்பற்றியவர்கள் மட்டுமின்றி வேறு பலராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பிராமணசமய முறையின் தலைமை இருடிகள், மக்களின் கண்களுக்குப் புலப்படவில்லை. இதைப் பயன்படுத்திக் கொண்டு பிற தலைவர்கள், தமது ஆற்றலினால் மக்கள் முன்பு தோன்றி செய்திகளை விரிவுரைசெய்து வெற்றிபெறலாயினர். "பக்தி" எனப்பட்ட அன்பு வழிபாட்டு முறையினர், ஒரு

தனித்த கடவுளிடம் நம்பிக்கைகொண்டு, "அகிம்சை" (துன் புறுத்தாமை) என்றகொள்கையை ஆதரித்து, வேள்விகளையும் சடங்குகளையும் எதிர்த்தனர். அக்காலப்பகுதியில் வைணவமும் சைவமும் தோன்றின. வடமதுரையிலும், அதைச்சுற்றிய பகுதியிலும் கிருட்டின வழிபாடு வளர்ந்தது. வாசுதேவன் அல்லது விட்டுணுவை வழிபடுவோரை, பாணினி குறிப்பிடுகிறார். கோரமான உருத்திரன், அமைதியான சிவமாக்கப் பெற்றார். இவ்வாறு, புத்த சமணசமயக் கொள்கைகளில் காணப்பட்ட புதியகருத்துக்கள் பலவற்றை எதிர்த்து, பண்டைய கொள்கைகளை அடிப்படையாகக்கொண்ட ஒரு புதிய சமயமுறை தோன்றி வளரலாயிற்று. மேலும் பழையசமயமும் உறுதி செய்யப்பட்டது. வேத காலத்திய கதைகளை அடிப்படையாகக்கொண்ட சில நூல்கள் இயற்றப்பெற்றன. சிறப்பாக, 'சூத்திரங்கள்' என்பன குறிப்பிடத்தக்கன. ஆதி சூத்திரங்களின் ஆசிரியர்களிற் சிலரான கௌதமர், (புத்தர் அல்ல) போதாயனர், ஆபஸ்தம்பர் முதலியோர் அக்காலத்தவராகும். அவர்களுடைய நூல்களில் உரிமையைவிட கட்டுப்பாடுகளே வலியுறுத்தப்பெறும். இந்து சமயமுறையிலும், இன அமைப்பிலும் காணப்படும் உறுதியான தன்மையின் தொடக்கத்தை அக்காலத்தில் நாம் காண்கிறோம்.

## பகுதி-9

### பொருளாதார நிலை.

பண்டைய கீழ் நாடுகள் பொருளாதார நிலையைவிட, அறவழியில் மிகுந்தகருத்தைச் செலுத்தின என்றும், வாணிகம், கைத்தொழில் ஆகியவற்றைவிட உழவுத் தொழிலில் நாட்டம் செலுத்தின என்றும், சாதிமுறையின் பொருட்டு பொருளாதார முன்னேற்றத்தை அழித்தன என்றும், கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து பொருளகக்கையிருப்பு முறை (Credit system) ஓரளவு, சீனாவில் மட்டுமே அறியப்பட்டிருந்ததென்றும் மேனாட்டுப் பொருளாதார அறிஞர் கூறுவர். ஆனால் இதனை புத்தசமய ஜாதகக் குறிப்புகளைச் சிறப்பான ஆதாரமாகக் கொண்டு, பொருளாதார நிலையை எழுதும் ஓரறிஞர்‡ மறுப்பர்.

‡ Mrs. Rhys Davids.

ஜாதகக்கதைகளின் தன்மை எவ்வாறிருப்பினும், அவை குறிப்பிடும் சிற்சில பொருளாதாரச் செய்திகள் சிறப்பு வாய்ந்தவை. நிலங்களை உரிமையாகப்பெற்ற உழவர் ஊர்களில் காணப்பெற்றனர். நாட்டின் பொருளாதார அமைப்பு, ஊரை அடிப்படையாகக் கொண்டதாகும். கோனாட்சி நாடுகளிலும், குடியாட்சி நாடுகளிலும் அரசியலார் விதித்த வரிகளை ஊர் மக்கள் செலுத்தினர். காசி, இராசகிருகம், ஸ்ரவஸ்தி, கௌசாம்பி, சம்பா முதலிய ஒரு சில நகரங்களே காணப்பெற்றன. ஒரு ஊரில் 30-முதல் 1000-வரை குடும்பங்கள் காணப்பட்டதால், சிறிய நகரத்துக்கும் ஊருக்கும் மிகுந்த வேறுபாடு இருந்ததாகத் தெரியவில்லை.

## உழவு.

உழவு, மக்களின் இயல்பான தொழிலாயிருந்தது. இதனால் மக்களின் இன நிலை உயர்வடையவோ அல்லது குறைவுறவோ இல்லை. ஆனால், வலிமை குறைந்த இளவரசர்களிடம் பணியாற்றுவதன்பொருட்டு உழவுத்தொழிலைக்கைவிடும் பழக்கம் வெறுக்கப்பட்டது. ஊர்களில் ஒரு தலைவனின்கீழ் கூட்டமைப்பு முறையில் செயலாற்ற மக்கள் அறிந்திருந்தனர். கூலிக்காக ஊழியம்புரியும் தொழிலாளர் அடிமைகளைவிடத் தாழ்வாகக்கருதப்பட்டனர். நெல், கரும்பு, காய்கறிகள், பழங்கள் முதலிய பலவும் பயிரிடப்பட்டன. சிற்சில காலங்களில் நாட்டில் வறுமை ஏற்பட்டது. பிராமணரும் க்ஷத்திரியரும், தமது தொழில்களைத் தவிர வைசியருக்கென வகுக்கப்பட்ட உழவுத் தொழிலையும், வேறு பல தொழில்களையும் மேற்கொண்டிருந்தனர்.

## கைத்தொழில்.

உழைப்புப்பகுப்பும், கூட்டமைப்பு முறையும், மக்களால் அறியப்பட்டிருந்தன. ஏறத்தாழ 18-வகையான தொழிற் சங்கங்கள் காணப்பட்டன. ஒவ்வொரு சங்கமும் ஒரு தலைவனின் கீழிருந்தது. அத்தலைவர்கள், அரசியலாருடன் தொடர்பு கொண்டிருந்தனர். தந்தவேலை, நெசவு, நகைசெய்தல், மட்

பாண்டவேலை முதலிய தொழில்களும் சிறப்புற்றிருந்தன. கள்வர்களும் கூட்டமைப்பு முறையின் உயர்வை உணர்ந்திருந்தனர். தொழிலைத் தேர்ந்தெடுத்துக்கொள்வதில் மக்களுக்கு உரிமை இருந்தது.

### வாணிகமும், நாணய முறையும்.

கூட்டுறவு முறையான வாணிகம் நாட்டில் காணப்பட்டது. மக்கள் சேய்மை நாடுகளுடன் கடல் வாணிகம் நடத்தினர். உள்நாட்டு வாணிகம் செழிப்பான நிலையிலிருந்தது. வாணிக வழிகள் நன்கு காக்கப் பெற்றன. சில்லறை வாணிக முறையின் சிறப்பும், அதில் வெற்றியடைவதற்கு இன்றியமையாத பண்புகளும் மக்களால் அறியப்பட்டிருந்தன. சிறிதளவு பண்டமாற்றுமுறை காணப்படினும் நாணயங்கள் வழக்கிலிருந்தன. பணம் கடன் கொடுத்தல், நேர்மையான தொழிலாகக் கருதப்பட்டது.

## பகுதி 10

### மக்கள் வாழ்க்கை.

#### சாதிமுறை.

சாதிமுறை மிகவும் உறுதியுடையதாக வளர்ச்சியடைந்ததற்கு, புத்தமும் சமணமும், இந்துசமயத்தை அச்சமுறுத்தியது காரணமாயிருக்கக்கூடும் முன் குறிப்பிடப்பெற்ற சூத்திரங்கள் நான்கு சாதிப்பிரிவுகளையும் பிராமணரின் உயர்வையும் மாற்ற முடியாமற் செய்தன. உயர்ந்த சாதியினராகக் கருதப்பட்டோருக்குரிய கட்டுப்பாடுகள், வைசியருக்கும், சூத்திரருக்கும் விதிக்கப்படவில்லை. நான்காம் வகுப்பினரின் நிலை வருந்தத்தக்கதாயிருந்தது. ஆரியர், ஆதி இந்தியக் குடியினருடன் தொடர்பு கொண்டதால் தோன்றிய ஐந்தாவது சாதியினரான சண்டாளரும், இனத்தில், காணப்பெற்றனர். மக்கள் வாழ்க்கையின் நான்கு நிலைகளும் (ஆசிரமம்) அவைகளுக்குரிய கடமைகளும், மிகவும் போற்றப்பட்டன.

## பெண்டிர் நிலை,

இளமைப் பருவமணம் ஆதரிக்கப்பெற்றது. "கன்னியாதான" முறையும் வற்புறுத்தப்பட்டது. உயர்குல் ஆடவர், தாழ்ந்தகுல மங்கையரை மணம் செய்து கொள்ளமுடியும். ஆனால் உயர்குல மங்கையர் தாழ்ந்தகுல ஆடவரை மணக்கும் முறை ஏற்றுக்கொள்ளப்படவில்லை. பெண்கள் வேதங்களைக் கற்கத் தக்கவரல்ல என்று கருதப்பட்டதால் அவர்தம் கல்வி நிலை தாழ்ந்திருந்தது. அவர்கள், ஆடவருக்கு அடங்கியிருக்க வேண்டியதின் இன்றியமையாத தன்மை, தெளிவாகக் கூறப் பட்டிருந்தது. கைம்பெண்—மறுமணம் ஏற்றுக்கொள்ளப்பட வில்லை. மங்கையர், ஆடவரின் கொடுமையான செயல்களி னின்று காப்பாற்றப்பட்டனர். பெண்டிரின் செல்வ நிலையில் சிறிது முன்னேற்றம் காணப்படினும் பெரும்பான்மையில் அவர் தம் நிலை தாழ்வுற்றதாக இருந்தது.

# பகுதி 11.

## மக்கள் பண்பாடு.

### இலக்கியம்.

சூத்திரங்களும், புத்தசமயச் சட்ட நூலும் இயற்றப் பட்டதைப்பற்றி முன்னர் குறிப்பிடப் பெற்றது. சமண சமய சட்ட நூலும் இயற்றப்பட்டு வந்தது. சிலர், பாணினி கி. மு. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று கூறியபோதிலும், நாம் குறிப்பிட்டு வரும் காலத்தில் அவர் வாழ்ந்ததாக எண்ண இடமுள்ளது. அவ்வறிஞர், அட்டோக் அருகில் சாலத்துறை என்ற இடத்தில் பிறந்தனர். அவர் எழுதிய "சப்தானு சாசனம்" (சொற்களைப்பற்றிய நூல்) என்ற நூல், சுமார் 4000 சூத்திரங்களை உடையது. பத்து "பூர்வாசாரியர்" (முன்பிருந்தோர்) பாணினியால் குறிப்பிடப்பட்டபோதிலும், இவரது நூல், அவர்களுடைய புகழ் குன்றுமாறு செய்து விட்டது. பாணினியின் நூல், காத்யாயனராலும், பதஞ்சலி யாலும் திருத்தப்பட்டதெனினும் அவருடைய (பாணினியின்)

புகழ் குறையவில்லை. அவர் நூலில் வியப்புக்குரிய வகை யில் செய்திகள் சுருங்கச்சொல்லி விளங்க வைக்கப்பட்டிருக் கின்றன. மற்றொரு இலக்கண அறிஞரான காத்யாயனர் சுமார் கி. மு. 350-ல் வாழ்ந்தனர்.

### மெய்விளக்க நூல்.

இந்திய மெய்விளக்கத்துறையின் ஆறு முறைகளில் மிகப் பழமையான சாங்கியமும் யோகமும், புத்தர்காலத்துக்கு முற்பட்டவை. அவற்றின் சாயல், புத்த, சமண சமயக் கோட்பாடுகளில் காணப்பெறும்.

### கல்வி.

தட்ச சீலத்தில், சமயக் கல்வியுடன், முன்னேற்ற மடைந்த வேறுபல பாடங்களும் கற்பிக்கப்பட்டன. சிறப்பாக மருத்துவம் குறிப்பிடத் தகும். பிம்பிசாரன் காலத்தில் வாழ்ந்த சீவகன் ஏழு ஆண்டுகள் மருத்துவக் கல்விகற்று முடிந்தபின் தட்சசீலத்தைச் சுற்றியுள்ள இடங்களில், மருத்துவச் சிறப்புப்பெறாத செடிகளை எடுக்குமாறு கேட்கப்பட்டதாகவும், அவ்வாறு யாதும் இல்லையென்று கூறிய அவன் விடையை தேர்வு நடத்தியவர் ஏற்றுக்கொண்டதாகவும் ஒரு கதை குறிப் பிடுகிறது. (புத்த சமய) "ஜாதகங்களும்" தட்சசீலப் பல்கலைக்கழகத்தைச் சிறப்பிக்கின்றன.

### கலை.

மகதத்தின் தலைநகராகச் சிறிதுகாலம் இருந்த இராச கிருகத்தின் அழிபாடுகள், அக்காலத்திய கலைச்சிறப்பை அறிய உதவும். சிலைகளைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பட்டது.

## பகுதி-12

### தென்னிந்தியா.

நாம் குறிப்பிட்டுவரும் இக்காலப்பகுதியில், தென்னிந்தியா வில் ஆரியர் பண்பாடு மிகுதியாகப் பரவியது. கௌடில்ய னின் அர்த்த சாத்திரம், தென்னிந்திய வட இந்திய வாணிக


இந்தியா
கி. மு. 600 -
கி. மு. 325
காந்தாரம்
ஒஹிந்த்
அபிசாரநாடு
தக்கசீலம்
போரஸ்நாடு
ஜீலம்
மௌசிகானர்நாடு
பாதாலா
மதுரா
வத்ஸ
காசி
சாக்கியர்
கபிலவஸ்து
குசிநகரம்
வைசாலி
பாடலிபுத்திரம்
மகதம்
அங்காநாடு
சம்பா
அவந்தி
கௌசாம்பி
கலிங்கம்
ஆந்திரர்
சோழர்
பாண்டியர்
யக்கர்
1 புத்தகயா
2 கயா
3 இராசகிருகம்
4 ஸ்ராவஸ்தி
× போர்க்களம்

உறவைப்பற்றிக் குறிப்பிடுவது ஈண்டு நோக்கத் தக்கதாகும். மேற்கு ஆசியா, எகிப்து ஆகிய நாடுகளுடன், தென்னிந்தியா நடத்திவந்த கடல்வாணிகம், தொடர்ந்து இக்காலத்திலும் நிலைத்திருந்தது. ஆந்திரர் உரிமையுடன் விளங்கினர். தமிழ்நாடுகள் நீண்டகாலமாக நிலைபெற்றிருந்தன என்று அறியப்படுகிறது. பாணினி, தென்னிந்தியாவைப்பற்றிக் குறிப்பிடாத போதிலும், காத்யாயனர், சோழர், பாண்டியர் என்ற இரு பெயர்களையும் அறிந்திருந்தார்.

## அதிகாரம் 4.

## மோரியர்பேரரசு.

## (கி. மு. சுமார் 325—188)

### பகுதி 1

### சந்திரகுப்தன் (கி. மு. சுமார் 325—301)

#### வரலாற்றுக்கு வேண்டப்படும் அடிப்படைச்சான்றுகள்.

புராணங்களிலும் மகாவம்சம் என்ற நூலிலுமுள்ள இந்து, பௌத்தசமய வரலாற்றுக்குறிப்புகளிலிருந்து சந்திரகுப்தனும், கௌடில்யனும் நந்தர் ஆட்சியை முடிவுறச்செய்த செய்தியும், முதல்மோரிய அரசன் இருபத்திநான்கு ஆண்டுகள் ஆட்சி புரிந்தானென்பதும் பெறப்படும். சந்திரகுப்தன் அரசிருக்கை துறந்து சமணசமயத்தைத் தழுவிய செய்தியைச் சிறப்பாக, அச்சமய மரபுரையினின்று அறியலாகும். கிரேக்க ஆசிரியர் களில் பெரும்பான்மையினர் இங்குமங்கும் உதவுவர். ஆனால் கௌடில்யனின் அர்த்தசாத்திரம் என்ற நூலும், மெகஸ்தனீசு எழுதிய "இந்திகா" என்னும் நூலும் வரலாற்றாசிரியனுக்குச் சிறந்த ஆதாரங்களாகும். விசாகதத்தனால் எழுதப்பெற்ற "முத்திராராட்சசம்" என்னும் நாடகத்திற்கு, அளிக்கப்பட்டுள் ளதைவிட மிகுதியான செய்திகள் நமக்குக்கிடைத்துள்ள போதிலும், இவை, அரசியல் அமைப்பு, மக்கள் வாழ்க்கை ஆகியனவற்றைப்பற்றி அறிய உதவுகின்றனவே அன்றி, மிகுதியாக அரசியல் வரலாற்றையும் கால ஆராய்ச்சியையும் பற்றித்தெளிவாக்கவில்லை.

## கௌடில்யனின் அர்த்தசாத்திரம்.

“நில உலகை முயற்சியால் பெற்று அதனைப்பேணும் வகையைக்கூறும் அறிவுநூல்” என்று கௌடில்யன், அர்த்த சாத்திரம் என்னும் சொல்லுக்கு இலக்கணம் கூறுவன். ஆதலால், அறம், இன்பம், வீடு ஆகியவற்றைப்பற்றிய மற்றய அறிவு நூல்களினின்று இஃது வேறுபடும். தண்டநீதி, செங்கோல் அல்லது அரசியலைப்பற்றிக்கூறும் நூல் என்றும் இஃது கூறப்படும். இச்செய்தியைப்பற்றிக் கூறும் முற்பட்ட நூல்களை அடிப்படையாகக்கொண்டு, கௌடில்யனின் நூல் எழுதப்பெற்றதாகும். இந்நூலில் தொல்லாசிரியரின் (“பூர்வா சாரியர்களின்”) கருத்துக்கள் மேற்கோள்களாகக் கூறப்பட்டும் அவை ஆராயப்பட்டும் ஏற்றுக்கொள்ளப்பட்டும், மறுக்கப் பட்டும் இருப்பதைக்காணலாம். “சூத்திரம்”, பாஷ்யம்— (மூலம்—விரிவுரை) என்ற முறையில் இஃது அமைக்கப்பட் டுள்ளது. இரண்டும் இவ்வாசிரியரால் இயற்றப்பெற்றதே. நூலில், ஆசிரியரின் பெயர் விட்டுணுகுப்தன் என்றும் குறிப் பிடப்பட்டுள்ளது. திரிகண்டசேடம் முதலிய பிற்காலத்திய நிகண்டுகளில், இவருக்கு வாத்சியாயனன், திரமிடாசாரியன், சாணக்கியன் என்ற பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆகவே சில அறிஞர்கள், காமசூத்திரம் எழுதிய வாத்சியா யனன் இவரே என்றும் நியாய பாடியம் எழுதிய வாத்சியா யனனும் இவரே என்றும் இவர் தென்னிந்தியர் என்றும் கருதுவர்.

### பொருளடக்கம்.

அர்த்தசாத்திரம், 150-அதிகாரங்களடங்கிய 15-பெரும் பிரிவுகளைக்கொண்டது. ஆனல் நாம் இதனை முப்பகுதிகளாகப் பிரிக்கலாம். முதற்பகுதியில் அரசன், ஆராய்வுக்குழு, அரசியல் அரங்கங்கள் ஆகியவற்றைப்பற்றிப் பேசப்படுகிறது. இனம் (சமூகம்) குற்றத்துறை ஆகியனபற்றிய சட்டங்கள் இரண்டாம் பகுதியில் விளக்கப்படுகின்றன. மூன்ளும் பகுதியில், நாடுக ளுக்கிடையே நிலவும் சட்டங்கள், அரசியல் சூழ்ச்சித்திறம், போர் ஆகியன கூறப்படுகின்றன. ஆகவே இஃது அரசியல்

அமைப்பைப்பற்றிக் கூறுவதன்றி, பகைவனை அழிக்கும் சிறந்தமுறை போன்ற பல செய்திகளை விளக்கும் ஓர் அரிய நூலாகும். நில இயல் தகவல் தொகுதி (Gazetteer) அல்லது அரசியல் தத்துவம் என்று இதனைக் கருதுவதற்கில்லை. ஒரு அரசியல் வல்லுநன் இறுதிக் காலத்தில், தான் மிகச் சிறந்ததாக உணர்ந்த கோட்பாடுகளையும் பயிற்சிப்பழக்கங் களையும் இந்நூல் அறிவிக்கின்றது. பல பொருள் தொகுதி யாக இஃது அமைந்துள்ளதால், சிலர், ஒரே ஆசிரியன் இத்துணை அறிவாற்றல் பொருந்தியவனாக இருந்திருக்க இயலுமா என்று ஐயுறுவர். 1905-ம் ஆண்டில் இந்நூல் கண்டுபிடிக்கு முன்னர், பண்டைக்கால இந்தியர் மறு உலகைப்பற்றிய நோக்குடன் மட்டுமிருந்தனர் என்று நிலவிய தவறான எண் ணத்தை இச்சிறந்த வடமொழிநூல் அகற்றியது.

## காலம்.

காமசூத்திர ஆசிரியராகிய வாத்சியாயனரின் காலத்தைக் கொண்டும் ஸ்மிருதி ஆசிரியராகிய யாக்ஞ்ய வல்கியரின் காலத்தைக்கொண்டும் கௌடில்யன் வாழ்ந்த காலப்பகுதியை முடிவுசெய்ய முற்படுவதில் பயனில்லை. அறியப்படாத ஒன் றைக்கொண்டு மற்றொரு அறியமுடியாத செய்தியைத்தெரிந்து கொள்ள முற்படுவது எளிதன்று. நந்தர் குலத்தை வேரறுத் தவனும் சந்திரகுப்தனின் அமைச்சனுமான கௌடில்யனால் "அர்த்த சாத்திரம்" எழுதப்பட்டதேயன்றி ஆசிரியர்கள் குழு வினால் அன்று என்று வற்புறுத்தப்பட்டுவரும் மரபுரையை மறுப்பதும் நலமன்று. அஃது 6000-செய்யுட்களைக்கொண்டது என்பது தண்டி தரும் சான்றாலும் உறுதிப்படுத்தப்படுகிறது. நூலில் காணப்பெறும் ஒற்றுமைப் பண்பு, அதன் ஆசிரியர் ஒருவராக இருத்தல்கூடுமென்பதற்குச் சான்றாகும். மெகச் தனீசும், பதஞ்சலியும், கௌடில்யனைக் குறிப்பிடவில்லை என்ற போதிலும், பிராமண, பௌத்த, சமணசமய இலக்கியங்களில் அவனைப்பற்றிய குறிப்புகள் உள. மேலும், மேற்கூறிய இருவரும் அரசியல் அறிஞர்களைப்பற்றிய ஒரு ஆண்டுத்தகவல் தொகுதியைப் (Statesmen's Year Book) படைக்கவில்லை.

கௌடில்யன், மெகத்தனிசைப்பற்றிக் குறிப்பிடாததால், பிந்திய வனைப்பற்றிய உண்மை மறுக்கப்படுவதற்கில்லை. பாடலிபுத்திரம் அல்லது மோரியப்பேரரசின் பரப்பைப்பற்றி கௌடில்யன் குறிப்பிடாததில் வியப்பில்லை. ஏனெனின் அவன் நில இயல் தகவல் தொகுதியை எழுதும் ஆசிரியனன்று. "சக்கரவர்த்தி க்ஷேத்திரம்" என்று அவன் குறிப்பிட்டிருப்பது வட இந்தியா முழுமைக்கும் பொருந்தும். முதலமைச்சனின் ஆண்டு ஊதியம் 2400-பவுன்கள் என்பதினின்று அவன் சிறுநாடுகளைக் கண்காணித்து வந்தவனில்லை என்று பெறப்படும். ஆதலால் நந்தர்குலத்தை அழித்தவன் என்று அவன் நூலிலேயே குறிப்பிடப்பட்டிருக்கும் கௌடில்யனின் வரலாற்று உண்மையை மறுக்கத் தக்க ஆதாரங்களில்லை.‡ பிந்துசாரனின் முதலமைச்சனுகவும் மூவர் ஆட்சிக்காலங்களில் அவன் பணி புரிந்ததாகவும் காணப்படுவதால் கௌடில்யன் கி.மு. 350-க்கும் 270-க்குமிடைப்பட்ட காலத்தவனுகக் கருதப் படலாம்.

## இந்தியாவின் மேக்கிவெல்லி.

அரசியல் வெற்றிக்காக, கௌடில்யன் போற்றிப்பேசும், கைக்கூலி கொடுத்தல் (லஞ்சம்), ஏமாற்றுதல், பகைவனை அழிப்பதற்கான மறைமுகமான வழிகள் ஆகியனபோன்றவைகள் நெறியுடையன அல்ல. ஆதலால் அவன் "இந்தியாவின் மேக்கிவெல்லி" என்று குறைவாகப் பேசப்படுகிருன்.

## விசாகதத்தனின் " முத்திரா ராட்சசம் "

சிறப்பாக அரசியலைப்பொறுத்த இந்நாடகத்தில் காதல் பண்பு காணப்படவில்லை. பல பண்புகளில் கௌடில்யனின் அர்த்தசாத்திரத்தை இது ஒக்கும். சுமார் ஓராண்டு நீடித்த மோரியப்புரட்சிக்கு அயலார் உதவிபெற்ற சந்திரகுப்தனும், கௌடில்யனும் காரணமாவர் என்பதை இஃது காட்டா நிற்கும். நந்தர் ஆட்சியை முடிவுறச்செய்தபின் சந்திரகுப்த

‡ V. R. Ramachandra Dikshitar. The Mauryan Polity (1932) Appendix 1.

னின் வாழ்க்கைக்கு ஏற்பட்ட இடையூறுகளையும், அவனது சிறந்த ஊழியர்களின் உண்மைப்பற்று, தந்திரங்கள் முதலிய வற்றையும் இஃது சிறப்பிக்கின்றது. அர்த்தசாத்திரத்தில் கூறப்பட்டிருப்பதைப்போன்ற அரசியல் நெறி இதிலும் விளக் கப்படுகிறது. மலயகேதுவின் கதை, (இதிலுள்ளது) செல் யூகசு நிக்கேட்டர், இந்தியாவில் படையெடுத்துத் திரும்பியதை நினைவூட்டும். கோத்திரத்தில் வேறுபட்டபோதிலும், நந்த குலத்தைச் சேர்ந்தவன் என்றே, சந்திரகுப்தன் இதில் சிறப்பிக்கப்படுகிறான். கௌடில்யன், இவனை "சூத்திரன்" என்பான். புராணங்களும், இவனது தாழ்ந்த இன நிலையைக் குறிப்பிடுகின்றன. ராட்சசன் (நாடகத்தில் ஒரு உறுப்பினன்) சந்திரகுப்தனை தாழ்ந்த குலத்தவன், என்றும், தனது தலைவர் களான நந்தரின் சிறந்த குலத்தினின்றும் வேறுபட்டவனென் றும் குறிப்பிடுகிறான். ஈண்டு, வரலாற்று நிகழ்ச்சி, நாடக முறையில் மாறுபடுத்தப்பட்டிருப்பதைக் காண்கிறோம். இஃதே போல் ராட்சசன் சந்திரகுப்தனின் அரசியலை, முடியாட்சி என்று கூறாமல் அமைச்சராட்சி என்று கூறுவது, அரசனின் ஆற்றலின்மையைக் காட்டுவதற்கேயாம். பல "அத்தியட்ச கர்கள்." அல்லது அரசியல் மேற்பார்வையாளர்கள் குறிப் பிடப்பட்டிருப்பினும், தேர்களை மேற்பார்வை செய்வோரைப் பற்றி யாதும் பேசப்படவில்லை. ஆகவே இந்நாடகம், தேர்கள் பயன்படுத்தப்படும் வழக்கம் மறைந்த காலத்தில் — (கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னர் என்பதில் ஐயமில்லை) எழுதப்பட்டிருக்கவேண்டும். பரதவாக்கியம், (மங்கல வாழ்த் துப்பா) புகழ்வாய்ந்த வைணவப் பேரரசன்—எடுத்துக்காட் டாக இரண்டாம் சந்திரகுப்த விக்கிரமாதித்தியன்—காலத்தை உணர்த்துகிறது. ஆகவே, இந்நூல் கி. பி. 5-ம் நூற்றாண்டுக் குரியதாகலாம். அக்காலத்திய செய்திகளை அடிப்படையாகக் கொண்டு இந்நாடகம் எழுதியதாகக் காணப்படுகிறது. வட மொழி இலக்கியத்தில் மிகவும் சிறந்த வரலாற்று நாடகமாக இஃது அமையும். சுருக்கமாக மோரியப்புரட்சியைப்பற்றியும், சந்திரகுப்தன், கௌடில்யன் ஆகியோரின் செயல்களையும் இதைக்கொண்டு நாம் அறியலாம். நந்தர் குலத்தினரின் பேரரசு நிலையையும் அவர்களுக்குப் பின் அவர்களது

உண்மை ஊழியரின் செயல்களைப்பற்றியும் முத்திரா ராட்சசம் சிறப்பிக்கின்றது. முடிவாக, இந்நூலைத் தவறுகள் நிறைந்த ஒன்று என்று புறக்கணிப்பதைவிட அதன் குறைகளை நன்கு ஆராய்வது நலமாகும்.§

## மெகச்தனீசு எழுதிய "இந்திகா"

பிற ஆசிரியர்களால் மேற்கோள்களாகக் காட்டப்பட்ட "இந்திகா"வின் துண்டு துண்டான பகுதிகளே இப்பொழுது உள்ளன.† ஒரு காலையுடைய மனிதன், பாதம்வரை நீண்டுள்ள செவிகளையுடையவர்கள், வாய் இல்லாதவர்கள், மூக்கைபெருத மக்கள், பாண்டிய நாட்டில் ஏழு வயதுடைய தாய்மார் ஆகியனபோன்ற நம்பத்தகாத செய்திகளை மெகச்தனீசு கூறுவதால், ஸ்ட்ராபோ இவனை வழக்கமாகப்பொய் கூறுவோன் என்று குற்றம் சாட்டுகிருன். ஆனல் இவை யாவும், இவன், எளிதில் பிறர் கூறுவதை நம்புந்தன்மை வாய்ந்தவன் என்பதையும் இவனுக்குச் செய்திகளை அறிவித்த இந்தியரின் குணத்தையுமே காட்டுகின்றன. மெகச்தனீசு கற்பனைப்போக்கு கொண்டோனெனவும், பிறநாடுகளின் நிலையங்களை இந்தியாவுடன் இணைத்து ஆராயும் இயல்புபெற்றவனெனவும் இக்காலத்திய சில அறிஞர்கள் குற்றம் சாட்டுகின்றனர். இந்தியாவில் அடிமைகள், பொய்கூறுவோர் ஆகியோர் இல்லை எனவும், பஞ்சம் கிடையாதென்றும், களவு மிகவும் அரியதாயிருந்ததாயும், இந்திய இனம் ஏழு தனித்த பிரிவுகளாயிருந்ததெனவும், (தத்துவ அறிஞர்கள், உழவர், இடையர், தொழிலாளிகள், போர்வீரர், உளவாளிகள், அமைச்சர், ஆகியோர்) இவன் பொதுவாகக் கூறுவதே அக்குற்றச்சாட்டுக்குக் காரணமாகும். செய்திகளை ஆராய்ந்து நோக்குவதிலும் மொழிப்பயிற்சியிலும் குறைபாடுகள் எத்துணை இருந்த போதிலும், அரசியல் தூதஞக பாடலிபுத்திரத்தில் சில

---

§ R. Sathianathier, Historical Notes on the Mudrarakshasa (Journal of oriental Research, XII pp. 147—58.

† F. J. Monahan. The Early History of Bengal (1925) Chapters XII—XV.

ஆண்டுகள் தங்கியதால், பல சிறந்த செய்திகளை அவன் குறிப்பிடமுடிந்தது. மோரியத் தலைநகரின் நிலத்திணை விவரமும், அரசியல் முறையைப்பற்றிய விளக்கமும், உள்நாட்டு அமைப்பும், மெகத்தனீசால் மறுக்கமுடியா உண்மையுடன் குறிப்பிடப்பட்டுள்ளன. அவன்காலத்திய இனவாழ்க்கையைப் பற்றிய விளக்கம் (பிறவற்றை உறுதிசெய்யும்) சிறந்த சான்றாக அமைகிறது. அவன், தான்காணாதவற்றைப் பிறர் கூறுவதை நம்பி குறிப்பிட்டிருப்பவை, நகைப்பை விளைவிக்கத்தக்கன. பாடலிபுத்திரம், இந்தியாவில் மிகப்பெரிய நகரமெனவும், 80 × 15 ஸ்டாடியா ($9\frac{1}{2}$-மைல் × $1\frac{3}{4}$) பரப்பையுடையதாகவும், மரச்சுவரினாலும், பள்ளத்தினாலும் அது காக்கப்பட்டதாகவும், மெகத்னீசு வருணிக்கிறான். போர்க்கோலம் பூண்ட பெண்டிர், அரசனுடனிருந்து காவல்புரிந்தும், வேட்டையாட அவனுடன் சென்றும் தொண்டாற்றினர். அவனைக்கொல்ல ஏற்படக்கூடும் சூழ்ச்சிகளைத்தவிர்க்க அவன் படுக்கை அறை அடிக்கடி மாற்றப்பட்டது. பாடலிபுத்திரம் முப்பது உறுப்பினர்களடங்கிய ஒரு ஆணைக்குழுவினால் ஆளப்பட்டது. ஒவ்வொன்றிலும் 5-பேர்களடங்கிய 6-பிரிவுகள், அதில் காணப்பட்டன. நீர்ப்பாசனம், கால்வாய், சாலைகள், ஆறுகள், நிலம், வரிவசூல் முதலியவற்றை மேற்பார்வை செலுத்த பெரிய அரசியல் அலுவலாளர்கள் அமைக்கப்பட்டிருந்தனர். படை, சிறந்த முறையில் அமைந்திருந்தது. பொதுமக்கள் செலவில் போர்கள் நடைபெற்றன. படையின் நான்கு பிரிவுகள், நாவாய், படையுணவுத்துறை ஆகிய ஒவ்வொன்றுக்கும் ஐந்துபேர்களடங்கிய ஒரு தனித்தனியான குழு மேற்பார்வை செய்ய அமைக்கப்பட்டிருந்தது. குற்றங்களுக்கு கடுமையான தண்டனை விதிக்கப்பட்டது. ''இந்திகாவும்'' ''அர்த்தசாத்திரமும்'' ஒன்றுக்கொன்று உதவியாக இருந்து சந்திரகுப்தனின் வரலாற்றையறிய முதன்மையான சான்றுகளாக அமைகின்றன. இவை தரும் குறிப்புகளின் ஒற்றுமையின்மை, இடையீடானவற்றைப் பொறுத்ததேயன்றி அடிப்படையான செய்திகளைப்பற்றியதன்று.

## பகுதி 2.

### மோரியப் பேரரசு.

### மகதப்புரட்சி.

சந்திரகுப்தனின் குலத்தைப்பற்றி முன்னர் குறிப்பிடப் பெற்றது. அவன் க்ஷத்திரியன் என்று பௌத்தர்கள் கூறுவதை ஏற்றுக்கொள்வதற்காக அவனது தோற்றத்தைப்பற்றி பிராமண நூல் கூறுவதை மறுக்கவேண்டியதில்லை.‡ இளமைப்பருவத்தில், பஞ்சாபில் அலெக்சாந்தரை அவன் சந்தித்து, அவ்வமயம் (மகதத்தை) ஆட்சிபுரிந்து வந்த நந்த மன்னனுக்குப் பகையாக, அவனது உதவியை நாடியதாகவும், துணிவான இச்செயலுக்காக அவன் உயிருக்கு இடையூறு விளையக்கூடுமென்று உணர்ந்தபின், மாசிடோனியர் தங்கியிருந்த இடத்தை விட்டு சந்திரகுப்தன் அகன்றதாகவும் கூறப்படுகிறது. பின் தட்சசீலத்தைச் சேர்ந்த கௌடில்யன் என்ற அந்தணனுடன் பாடலிபுத்திரம் சென்று மக்களால் விரும்பப்படாத, பேராசை கொண்ட நந்த மன்னனைத்தோற்கடித்து, தனது ஆட்சியை நிலைபெறச் செய்தான். பிராமணர்களால் நிகழ்த்தப்பட்ட புரட்சியை மக்கள் விரும்பி ஏற்றுக்கொண்டனர். நீண்டகாலம் குருதி சிந்தப்படவேண்டிய நிலை உண்டாயிற்று. நந்தர் பேரரசைவிட விரிவான ஒன்றை ஏற்படுத்துவதில் மோரியர் வெற்றி கண்டனர். சந்திரகுப்தன், அடுத்தபடியாக மாசிடோனியப் படையை விரட்டி, சிந்துவெளியை அயலாரிடமிருந்து மீட்க முயன்றான். கி. மு. 317-ல் பிலிப்போசின் பின்போந்த யூடிமோசு, பின் வாங்கியதுடன் இந்தியாவில், மாசிடோனிய ஆட்சி இறுதியாக முடிவுற்றது. முதலாம் உருத்திரதாமனின் கிர்னர் கல்வெட்டுமூலம் சந்திரகுப்தன், கூர்ச்சரத்தையும், கத்தியவாரையும் தன்னடிப்படுத்தினனென்று தெளிவாகத்தெரிகிறது. சந்திரகுப்தனின் மாகாண அதிபதி (கவர்னர்) யான வைசியபுஷ்யகுப்தன், சுதர்சனம் ஏரி தோன்றக்காரணமானவனென்றும் அது தெரிவிக்கின்றது. கூர்ச்சரம், கத்தியவார் ஆகியன இணைத்துக் கொள்ளப்பட்ட காலம் அறியப்படவில்லை. சமணர், கி. மு. 312-ல் மோரியப்

‡ Ramachandra Dikshitar, op. Cit. Appendix II.

பேரரசன் அரியணையேற்றதாகக் குறிப்பிடுவது வாதத்துக் குரியது.

## செல்யூகஸ் நிக்கேட்டர்.

செல்யூகஸ் நிக்கேட்டர் என்பான், சுமார் கி. மு. 305-ம் ஆண்டில் மீண்டும் கிரேக்கராட்சி ஏற்படுத்தும் குறிக்கோளுடன், சிந்து ஆற்றைக்கடந்து வந்தான். சந்திரகுப்தனும் போருக்குத்தயாராக இருந்தான். போர் நிகழ்ந்ததா என்பது தெளிவாக அறியப்படவில்லை. ஆயினும் செல்யூகஸ்ஸால் நிலைமைகளைச் சமாளிக்க இயலவில்லை. அவர்களிடை ஏற்பட்ட உடன்படிக்கையின் சட்டங்களை மட்டும் நாம் அறிகிறோம். அவை முழுதும் இந்தியப்பேரரசனுக்கு உதவியாகவே அமைந்தன. இவன் 500 யானைகளுக்குப்பதிலாக அரியா, அரகோசியா, கெட்ரோசியா, பரோபானிசடை ஆகிய நான்கு மாகாணங்களைப் பெற்றான். ஆனால் இவற்றுள் இறுதியாக உள்ளதை, சந்திரகுப்தன் பெற்றான் என்பதை அறிஞர் டார்ன் ஏற்றுக்கொள்ளவில்லை.‡ சந்திரகுப்தனுக்கும் செல்யூகஸ்ஸுக்கும் இடையே ஓர் மணவினை உடன்பாடும் ஏற்பட்டிருந்ததாகக் கூறப்படுகிறது. சந்திரகுப்தன் அல்லது பிந்துசாரன், ஒரு செல்யூஸிட் குலத்திய மங்கையை மணந்துகொண்டதாக உள்ள வரலாற்றை உண்மை என அவ்வறிஞர் ஏற்றுக்கொள்வர். மோரியருக்கும் சிரியாப்பேரரசுக்குமிடையே நிலவிய நட்பு, இந்த உறவினால் நன்கு விளக்கப்படுகிறதென்றும் கருதுவர்.† உடன்படிக்கைக் குப்பிறகு, செல்யூகசு, பாடலிபுத்திரத்திற்கு மெகச்தனீசு என்ற தூதுவனை அனுப்பினானென்பதில் யாதொரு ஐயமுமில்லை.

## சந்திரகுப்தன் அரசிருக்கை துறந்ததாகக் கூறப்படும் உறுதிப்படாத செய்தி.

மோரியப் பேரரசன் செல்யூகசுடன் போரிட்டு வெற்றியடைந்தபிறகு சந்திரகுப்தன் ஆட்சியின் இறுதிக்காலத்துக்கு

‡ Tarn, op. cit., p 100

† Ibid , p. 152

நாம் வருகிறோம். பத்திரபாகு, 12000 மாணவர்களுடன் சிரவணபெல்கோலா (மைசூர்) விற்குப்புறப்பட்டதையும், வட இந்தியாவில் 12-ஆண்டுகள் நீடித்த ஓர் பெரும் பஞ்சத்தையும், சமண சமயக்கதைகள் இணைக்கும். சந்திர குப்தன் அரசிருக்கை துறந்து, பத்ரபாகுவின் மாணவனாக, அவரைப்பின் தொடர்ந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. தென்னிந்தியாவில் சமணர்கள் அமர்ந்தவுடன் அம்மதகுரு இறந்தார். 12 ஆண்டுகள் பின்னர் சந்திரகுப்தன் உயிர்நீத்தானும். பனிரெண்டு என்ற எண் திரும்பவும் பயன்படுத்தப் பட்டிருப்பதால், அக்கதையைப்பற்றி ஓரளவு ஐயமேற்படுகிறது. ஆயினும் இச்சமணக்கதை வரலாற்றுச் சார்புடையதென்று பெரும்பான்மையாகக் கருதப்படுகிறது. சந்திரகுப்தன் அரசியலைத்துறந்தபொழுதோ அல்லது இறந்தபொழுதோ அவனது வயது சுமார் 45 ஆக இருக்கலாம்.

## மோரியப்பேரரசின் பரப்பு.

மோரியப்புரட்சி நிகழ்ந்தகாலை நந்தர்பேரரசு கங்கை வெளியில் பரவியிருந்தது. கலிங்கநாடு அதனுட்படவில்லை. சந்திரகுப்தன் நந்தமன்னரின் நாட்டைப்பெற்றதன்றி தனது வெற்றிகளின் மூலம் பஞ்சாப், சிந்து நாடுகளுக்கும் தலைவனானான். மாளவத்திலிருந்து அரபிக்கடல் வரை அவனாட்சி பரவியது. செல்யூகசுடன் அவன் செய்துகொண்ட உடன் பாட்டின்படி காந்தாரம் முதலிய (சிந்துவெளிக்கு அப்பாலுள்ள) சில நாடுகளைப்பெற்றான். ஆனால் இந்துகுஷ் மலைத்தொடர் அவன் பேரரசின் எல்லையாக அமைந்ததா என்பது உறுதி யாக அறியப்படவில்லை தென்னிந்தியாவில் அவன் ஆட்சி பரவியிருந்ததென்று கூறுவதற்கில்லை. இதைப்பற்றி, ஜஸ்தின், ப்ளுடார்க், மகாவம்சத்தின் ஆசிரியர் ஆகியோர் தரும் விளக்க மற்ற குறிப்புக்கள் உறுதியான வகையில் பொருள் கொள் ளப்படத்தக்கன அல்ல. சந்திரகுப்தன் தென்னிந்தியாவில் தங்கியதாகக்கூறும் சமணக்கதை, அவன் தன் பேரரசின் ஒரு பகுதியில் தங்கியததாகக் குறிப்பிடவில்லை என்பதும் நோக்கத் தகும். ஆகவே, முதல் மோரிய அரசனின் ஆட்சி, அஸ்ஸாம்

நீங்கலாக உள்ள வடஇந்தியாவில் (ஆப்கானித்தானத்திலும் பெலுசித்தானத்திலும் சில பகுதிகள் உட்பட) நிலவியதாகவும், அர்த்தசாத்திரம் குறிப்பிட்டுள்ள "சக்கரவர்த்தி க்ஷேத்திரம்" இந்நிலப்பரப்புக்கே பொருந்துமெனவும் கருதுவது தகும்.

## அரசியல்

### முடியாட்சியின் சிறப்பு.

புத்தர் காலத்தில் சிறந்து விளங்கிய குடியரசு முறைக்கு பிம்பிசாரன், அசாத சத்துரு காலந்தொடங்கி வளர்ந்துவந்த வலிமை வாய்ந்த முடியாட்சியும் பேரரசு முறையும் கெடுதி விளைவிக்கலாயின. மாசிடோனியப் படையெழுச்சி நிகழ்ந்த காலை, சிந்து வெளியிலும் இராசபுதனத்திலும் குடியரசு நிலையங்கள் காணப்பட்டன. போரஸ் மன்னன் சிறிது சிறிதாக அவைகளை ஒழிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். அலெக்சாந்தர், போரஸ்ஸின் கொள்கை (இயல் முறை), வலிமையடைய உதவி புரிந்தான். அலெக்சாந்தரின் வெற்றி, சிறிய குடியரசு நாடுகளின் வலியின்மையை உணர்த்தியது. குடியரசுகளில் உள்நாட்டுப்போரும் தேவையான காவலின்மையும், காணப்பட்டன. கௌடில்யனும், சந்திரகுப்தனும் குடியரசு முறையை விரும்பவில்லை. பேரரசு முறைக்கு இடையூருக இருந்த எதையும் அழிக்க அவர்கள் விடா முயற்சியுடனிருந்தனர். கோனுட்சியற்ற அரசியல் முறைகளுக்குப் பகையாக அவர்கள் எழுப்பிய போரில் பெரும்பான்மையாக வெற்றியடைந்தன ரெனினும் முழுமையும் அவற்றை அழிக்க முடியவில்லை.

கௌடில்யன், முடியாட்சியை ஆதரித்தபோதிலும், வரம்பற்ற அதிகாரங்களுடன் கூடிய கொடுங்கோன்மையை ஏற்றுக் கொள்ளவில்லை. மன்னன், பிறர்துணையின்றி, தானுகவே ஆரசாட்சி நடத்த இயலாதெனவும், அவ்வாறு நடத்தப்பெறும் ஆட்சி, ஒருருளைத் தேரைப்போல் சாய்ந்துவிடும் என்றும் அவன் அறிந்திருந்தான். அமைச்சர்குழு இன்றியமையாததென்பது அவன் கருத்து. "ஒரு மாணவன், தன் ஆசிரியரை

யும், ஒரு மகன் தன் தந்தையையும், ஒரு பணியாளன் தன் தலைவனையும் பின்பற்றுவதுபோல் ஒரு அரசன் (புரோகிதன் அல்லது முதல் குருவை) பிற்பற்றுவன்'' என்று கௌடில்யன் பேசுவன். மேலும் அவன் குறிப்பிடுவதாவது ''மக்களின் மகிழ்ச்சியில், அரசனின் மகிழ்ச்சி காணப்பெறும்; அவர்தம் நலத்தில் அவன் நலம் அமையும்; அவன், அவனுக்கு விருப்பமுள்ளவற்றை நன்மையாகக் கருதாமல், மக்களுக்கு விருப்பமுள்ளவற்றையே நாட்டின் நன்மையாகக் கருத வேண்டும்'' சுருங்கக் கூறின், திறமைவாய்ந்த அமைச்சர்களுடன் கூடி மக்களின் நலத்தில் நாட்டம் செலுத்துவதும் ஒழுக்கமுறைக்குக் கட்டுப்பட்டதும் அறிவாற்றல் மிக்கதுமான கோனுட்சியையே கௌடில்யன் சிறப்பிக்கின்றான். மக்கள் உடன்பாட்டினுல் அரசு தோன்றியது என்ற கோட்பாட்டை அவன் ஓரளவு ஏற்றுக்கொள்கின்ருன். அரசன், உயர்ந்த நிலையிலுள்ள ஒரு பொதுப்பணியாளன் என்றும், அவன் பெறும் ஊதியம், அவன் செய்யும் கடமைகளுக்கு ஊதியமாகுமெனவும், நூல்களின் ஆணைகளை அவன் பின்பற்ற வேண்டுமென்றும் அவன் பேசுவான். மேலும், அரசியலிலும் பொருட்டுறையிலும் உள்நாட்டு உரிமைகள் வழங்கப்பட்டிருந்ததால், அரசனின் அதிகாரங்களை அவை, ஓரளவு கட்டுப்படுத்தியிருக்கவேண்டும். ஆனுல் சாதகங்களிலும் வேறுசில நூல்களிலும், கோனுட்சியின் ஆற்றலின்மையைப்பற்றியும், மிகக் குறைந்த அதிகாரங்களைப்பற்றியும் குறிப்பிட்டுள்ள சில எடுத்துக்காட்டுகள், விதிவிலக்கானவை என்றே கொள்ளப்படவேண்டும். ஆயினும், மன்னன், தனி வல்லரசு வாய்ந்தவனுக இருந்தனனென்று கூறுவதற்கில்லை. அரசியல் சட்டங்கள் மூலம் அவன் கட்டுப்படுத்தப் பெறவில்லையாயினும், ஒழுக்கமுறைக் கட்டுப்பாடுகள், கூறப்பட்டிருந்தன. ஆனுல் செயல்முறையில் எவ்வாறு அவை நடைபெற்றன என்று தெளிவாக உறுதியுடன் கூறுவதற்கில்லை.

## அமைச்சர் குழுவும், அதிகாரக்கூட்டமும்.

அரசனின் கடமைகள் பல. ஆற்றலற்ற அரசன், அவற்றைச் செவ்விதாய் செய்து முடிப்பதென்பது இயலாத ஒன்ரும், பல அரசர்கள், அக்கடமைகளைக் கண்டு அஞ்சி அரசிருக்கை

துறந்திருப்பினும் அஃது வியப்புக்குரியதன்று என பேரறிஞர் ப்ளீட் (Fleet) கருதுவர். முதலமைச்சன், ஆசான், படைத் தலைவன், இளங்கோ. ஆகியோர், அமைச்சர் குழுவின் சிறப் பான உறுப்பினராவர். இவர்களையன்றி, பொருளமைப்பு, மக்கட் பொதுப்பணி, அரசியல் கடிதப் போக்குவரத்து, வாணிகம், அளவைகள், சுங்கம், நெசவு, உழவு, நாவாய்ச் செலவு, சூதாட்டகம், நாணய நிலையம், பரத்தையர் இல்லம், நகராட்சி முதலிய பல வகையான செய்திகளையும் இடங் களையும் கண்காணிப்பதற்காக, அதிகாரிகள் அமர்த்தப்பட்டி ருந்தனர்.

## பொருள் வருவாயும் செலவுத் திட்டமும்

மோரியர், நிலத்தினின்று ஆறில் ஒரு பங்கு வருவா யைப் பெற்றனர். வழக்காற்றில், விதிவிலக்காக, கூடுதலாக வும் வசூலிக்கப்பட்ட தென்று கூறப்படுகிறது. பசும்புற்றரை, காடுகள், சுருங்கைகள் ( Mines ) முதலியவற்றினின்றும் வருவாய் கிடைத்தது. நீர்ப்பாசன வசதிபெற்ற நிலங்களுக்கு மிகுதியான வரி விதிக்கப்பட்டது. மேலும் வாணிகவரி, சில உள்நாட்டுப்பொருள்களுக்குத் தீர்வை, சாலைவழியில் சுங்கம், கடை வரி, தொழில்வரி, சூதாட்டவரி முதலியனவும் அரசிய லாருக்குச் செலுத்தப்பட்டன. சட்ட மன்றங்களில், தண்டம் விதிக்கப்பட்டதும், மக்கள் நன்கொடைகள் வழங்கியதும், வருவாயைப் பெருக்கின. வருவாய்க்கேற்ற செலவும் காணப் பெற்றது. சிறப்பாக, அரசனின் குடும்பச்செலவுகள், அரசி யல் அலுவல்கள், அதிகாரக் கூட்டத்தினர், இராணுவவீரர் செலவுகள், பொதுநலனுக்கானவை, ஏழை மக்கள் துயருதவி, சமயம் முதலிய பலவகைப்பட்ட செயல்களுக்காக மிகுதி யான தொகை வழங்கப்பட்டது. வரவு செலவுக் கணக்குகள் சிறப்பான வகையில் தணிக்கை செய்யப்பெற்றன. மக்கள், வரிச்சுமையால் வாடினர் என்று நாம் உறுதியாகக் கூறுவதற் கில்லை. பேரரசு செழிப்பான நிலையிலிருந்ததால் மக்களின், வரி செலுத்தும் நிலைமையும் அதற்கேற்றவாறு அமைந்திருந்ததென்று நம்பலாம்.

## குடிமதிப்பு.

குடிமதிப்பு முறை பண்டைய உரோமில் சர்வியஸ் தல்லியஸ் ஆட்சிக்காலத்தில் (கி. மு. ஆரும் நூற்ருண்டு) தொடங்கியபோதிலும், இக்கால முறையில், மக்களைக்கணக் கணக்கிடும் வழக்கம், முதல் நூற்ருண்டில் ஜூலியஸ் சீசரால் முயற்சிக்கப்பெற்றது. கி. மு. நான்காம் நூற்ருண்டில் மோரி யரின்கீழ் காணப்பட்ட குடிமதிப்புமுறை, சீசரின் திட்டத்தை ஒத்ததாகும். அரசியல் காரணங்களுக்காகவும் பொருட்டுறை நோக்குடனும், மோரியர் மக்கட்டொகையைக் கணக்கெடுத் தனர். நாட்டின் செழிப்பையும், படைவலிமையையும் அறிந்து அதற்கேற்றவாறு திட்டங்கள் வகுக்கவும், அயலார் உள் நாட்டில் புகுவதைக்கண்காணிக்கவும், மோரியர், குடிமதிப்பை ஒழுங்கான முறையில் அறிந்துகொள்ள முற்பட்டனர். சாதி, தொழில் ஆகிய குறிப்புகளுடன் ஆண், பெண், இளைஞர், முதியோர், அடிமைகள், உரிமை வாய்ந்தோர் முதலிய பிரிவினரின் தொகையைத் தனிதனியாகக் கணக்கெடுக்கு மாறு ஊரதிகாரிகள் ஆணையிடப்பட்டனர். மக்களின் குணப் பண்புகள், வருவாய், செலவுத்திட்டம், முதலியனவும் குறிப் பிடப்பெற்றன. ஒவ்வொரு இல்லத்திலுமிருந்த விலங்குகளும் கணக்கிடப்பட்டன. நகரங்களிலும், நகராட்சி நிலையங்கள் அவ்வாறு கணக்கெடுத்தன. இவ்வாறு எடுக்கப்பட்ட கணக் குக்குறிப்புகள், மேலதிகாரிகளால் பார்வையிடப்படும். தனி யாக உளவாளிகள் தரும் குடிமதிப்புக்குறிப்புகளுடன் அவை ஒத்திட்டுப்பார்க்கப்பட்டன. நிலையான ஒரு தனிப்பகுதியினர் மேற்கூறிய அலுவல்களைக் கண்காணித்து வந்தனர்.

## நிலப்படையும் கடற்படையும்.

மோரியப்படை, தேர், யானை, குதிரை, காலாள் என் னும் நான்கு பிரிவுகளாய் வகுக்கப்பட்டிருந்தது; நாவாய்ப் படையும், போர்வீரரின் உடை, உணவு முதலியவற்றைக் கண்காணிக்கும் ஒரு குழுவும் சேர்ந்து ஆறு பிரிவுகளாக அமைந்திருந்தன. ஒவ்வொன்றும் ஐந்து உறுப்பினரடங்கிய ஆறு இராணுவக் குழுவைக்கள், மெகச்தனீசால் சிறப்பாகக்

கூறப்பட்டுள்ளன. பல்வேறு பிரிவுகளும் அரசியலாரால் சிறப்பாகக் கண்காணிக்கப்பட்டன. போர்முறை போற்றற் குரிய முறையில் அமைந்திருந்தது. பல கோட்டைகள் கட்டப் பட்டு, நன்கு காக்கப்பெற்றன. நாவாய்ப்படை, சிறப்பாக பொருட்போக்கு வரத்துக்காகப் பயன்படுத்தப்பட்டது. போர் முறைச்சட்டங்களில் காணப்பட்ட ஒழுக்கம், கிரேக்கரால் போற்றப்பட்டுள்ளது. நேர்மையற்றவகையில் சூழ்ச்சி செய்து, பகைவனை அழிக்கப்பல முறைகள் கையாளப்பெற்றன. ஆனால் இன்றியமையாக் காலங்களில் மட்டுமே அவை பயன்படுத்தப்பட்டன.

## முறைவழங்கல்.

தண்டம் விதித்தல், பிரம்பாலடித்தல், கால், கை வாங்குதல், கொல்லுதல், முடமாக்கல் முதலிய தண்டனைகள், குற்றங்கட்குத்தக்கவாறு விதிக்கப்பெற்றன. கொலைபுரிதல், கலைஞனின் உறுப்பைக்குறைத்தல், அணையை அழித்தல், நாற்பது "பணங்கள்" (சுமார் ரூ. 30) அல்லது அதற்குமேற் பட்ட தொகையைக் களவாடல் முதலியன, கடுங்குற்றங்களாகக் கருதப்பட்டன. குற்றத்துக்குத் தண்டனைகள் மிகவும் கடுமையாக இருந்தன. ஆனால் மனிதன், மனிதனிடம், மனிதத்தன்மையற்ற முறையில் நடந்துகொள்ளும் செய்தி, மக்கள் வரலாற்றில் எந்நாட்டிலும் இழிவான நிலையிலிருந்து வந்ததென்பதைக் கருத்திற்கொள்ளுதல் வேண்டும்.

## மண்டல ஆட்சிமுறையும், ஊராட்சியும்.

மோரியப்பேரரசு, நான்கு பெரும் மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்ததென்று தோன்றுகிறது. பாடலிபுத்திரம், (நடுப் பகுதி) தட்சசீலம் (வடமேற்குப் பகுதி) உச்சயினி (மேற்குப்பகுதி) கிர்னூர், (கூர்ச்சரம், கத்தியவார்) என்பவை, அவற்றின் தலைநகரங்களாம். மண்டலத்தலைவர்கள் பெரும் பாலும் அரசகுல இளங்கோக்களாக இருந்ததாக அறியக் கிடக்கிறது. பாடலிபுத்திரத்தின் நகராட்சியைப்பற்றி மெகச் தனீசு அறிவிக்கின்றனன். நகரங்களின் ஆட்சிமுறை,

கௌடில்யனுலும் விளக்கப்படுகிறது. பாடலிபுத்திரத்தில் நகராட்சிபுரிய ஆறு குழுக்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. முறையே, அவற்றின் தொழில்களாவன :- 1. தொழிற்கலைகள் தொடர்பான அலுவல்களைச் செம்மைப்படுத்துதல்; 2. நகரங்களில் தங்கும் அயல்நாட்டினரை கண்காணித்தல்; 3. குடி மதிப்பு எடுத்தல்; 4. வாணிக அலுவல்களைக்கண்காணித்தல்; 5. பொருள்விளைவும் அதன் விற்பனையும்; 6. விற்பனைவரி வாங்கல். அயல்நாட்டினருக்குத் தீங்குநேராமல் காப்பாற்றவும் அவர் இறந்தால் அவர்தம் பொருளைக்காத்து அவர்தம் சுற்றத்தாருக்கோ, நண்பருக்கோ சேர்ப்பிக்கவும், அரசியலார் பொறுப்பேற்றிருந்தனர். இந்தியா, மேற்கு ஆசியாவுடனும், பிறநாடுகளுடனும் வாணிக உறவு பூண்டிருந்ததென்பது இதனுல் தெளிவாக விளங்குகிறது. நகராண்மைக்கழகத்தின் தலைவன் "நகரகன்" என்றழைக்கப்பட்டான். ஊராட்சி, ஐம்பெருங் குழுவின் உதவிபெற்ற ஊர்த்தலைவனுல் நடத்தப்பட்டது. ஐந்து முதல் பத்து ஊர்களைக் கண்காணிக்கும் அதிகாரிகள் "கோபியர்" எனப்படுவர். அவர்களில் மிகுதியான அதிகாரம் பெற்றோர் "ஸ்தானிகர்" எனப்பெயர் பெற்றனர். அவர்களுக்கு மேலாக, மாவட்ட அதிகாரிகளும், மண்டலத்தலைவர்களும் அமர்த்தப்பட்டிருந்தனர். அவர்கள் முறையே, பிரதேசிகர், இராசுகர் எனப்பெயர் பெறுவர்.

## ஆட்சிமுறையின் பண்புகளும், குறைபாடுகளும்.

ஆட்சிமுறை, சிறப்பு வாய்ந்ததென்பதில் ஐயமில்லை. நாட்டில் அரசியல் ஒற்றுமை நிலவியது. படைப்பகுதியும், அரசியல்பகுதியும் தனித்தனியாக அமைக்கப்பட்டிருந்தன. கி. பி. பதினாரும் நூற்றாண்டில் ஏற்பட்ட அக்பரின் மானியக்காரர் படைமுறையைவிட மோரியர்காலத்திய நிலையான படை அமைப்பு, மிகவும் சிறப்புடையதாகும். பரந்த மோரியப் பேரரசைப்பற்றிய செல்யூகசின் புகழுரை ஆண்டு நிலவிய ஆட்சிமுறையின் சிறப்புக்குச் சான்ருகும். பெரும்பான்மையில் நாட்டில் முன்னேற்றம் காணப்பெற்றது. ஆனுல் குற்றங்கள் மிகவும் கடுமையாகத் தண்டிக்கப்பட்டன. மக்கள் உரிமைகள்

# மோரியப் பேரரசு




— தோராயமாகக் குறிக்கப்பட்ட தெற்கு எல்லை

---- அசோகன் பேரரசின் எல்லை-ஏறக்குறைய குறிப்பிடப் பெற்றது

■ பாறைக்கல் ஆணைகள் ‖ கற்றூண் ஆணைகள்

– கீழே கோடிட்டவை மண்டலத் தலைநகரங்கள்

அரசியலாரால் மிகுதியாகக் கட்டுப்படுத்தப்பட்டிருந்தன. ஒற்றர் வழியாக மக்கள்நிலை துயர்மிகுந்ததாக்கப்பெற்றது. கௌடில்யனின், முறையை அடிப்படையாகக்கொண்ட அரசியல், மிகவும், உயர்வுடையதென்று கூறுவதற்கில்லை. மேலும் வழி வழியாக அரசுரிமைபெறும் கோனாட்சி முறையில், அரசன் அளவற்ற அதிகாரங்களைப் பெற்றிருப்பது நலமுடையதன்று. ஆற்றல் வாய்ந்த அரசர்களே, ஒரு குலத்தில் தோன்றுவதென்பது இயல்பாக எதிர்பார்க்கப்படக் கூடியதன்று.

## பகுதி-3

### பிந்துசாரன். (சுமார் கி. மு. 301—273)

### தென்னிந்தியப் படையெழுச்சி.

அசோகனுடைய பேரரசில் தீபகற்ப இந்தியாவின் பெரும் பகுதி இணைக்கப்பட்டிருந்ததால், அஃது எக்காலத்தில் வெல்லப்பட்டதென்ற கேள்வி எழுகிறது. சந்திரகுப்தன் அதனை வென்றானென்று குறிப்பிடும் சான்று கிடையாது. அசோகனும், கலிங்கநாட்டை மட்டும் வென்றதாகவே கருதப்படுகிறது. பிந்துசாரன், சாணக்கியனின் உதவிபெற்று, பதினாறு தலைநகரங்களில் உள்ள அரசரையும், அமைச்சரையும் அழித்து, குண, குட, கடல்களின் இடைப்பட்ட நாட்டைத் தன்னடிப்படுத்தினனென்று தாரநாதன் என்னும் திபெத்திய, புத்தசமய வரலாற்றாசிரியன் குறிப்பிடுகிறான். "அமித்திரகதன்" (பகைவரைக் கொல்லுபவன்) என்று பிந்துசாரன், கிரேக்கரால் சிறப்பிக்கப்படுகிறான். தாரநாதன் குறிப்பிடும் பதினாறு நாடுகள் வடஇந்தியாவில் உள்ளவை என்று கருதுவதற்கில்லை. சங்ககாலத்திய தமிழ் இலக்கியம், வடநாட்டு மோரியர், தெற்கில் படையெடுத்ததைப்பற்றி நான்கு குறிப்புக்களை அளிக்கின்றது. மோரியரின் தென்னிந்தியப் படையெடுப்பு சந்திரகுப்தன் காலத்திலிருக்கக்கூடுமென்று சிலர் கருதுவர். ஆனால் காரவேலன் என்ற கலிங்க மன்னனின் அதிகும்பா கல்வெட்டு அவனது பதின்மூன்றாவது ஆண்டு

ஆட்சியைக்குறிப்பிடுகையில், 113-ஆண்டுகளாக நிலைபெற்றிருந்த ஒரு திராவிட நாடுகள் சங்கம், அவனுக்குப்பெரும் இடையூருக இருந்ததென்று கூறுகிறது. ஆதலால், அச்சங்கம், [176 (காரவேலனின் ஆட்சித்தொடக்கம்)-11 (பதினேருவது ஆண்டு ஆட்சி) + 113 = ] கி. மு. 278-ல் தோன்றியிருக்க வேண்டும். இவ்வாண்டு, பிந்துசாரனின் ஆட்சி நிலவிய காலமாகும். தமிழ்நாடுகள், அசோகன் பேரரசுடன் இணைக்கப்படவில்லை என நாமறிவோம். ஆகவே தென்னிந்தியாவில் மோரியர் படையெடுத்தகாலை தமிழ் நாடுகள் வலிமைபெற்று விளங்கியதால், அவற்றைவெல்ல முடியவில்லை. பிந்துசாரன் கலிங்கத்தை வெல்ல முயற்சிசெய்யாததற்கு, தெற்கில் அவனடைந்ததோல்வி காரணமாயிருக்கக்கூடும். முடிவாக பிந்துசாரன், போர்விருப்பமுள்ள வாழ்க்கை நெறியைக் கடைப்பிடித்தானென்பதும் தென்னிந்தியாவில் பெரும்பகுதியைக் கைப்பற்றினனென்பதும் தெளிவு.

## மேற்குநாடுகளுடன் தொடர்பு.

அரசியல் துறையிலும் வாணிகத்துறையிலும், பிந்துசாரன் மேற்கு நாடுகளுடன் தொடர்புகொண்டிருந்தான். மெகச்தனீசுக்குப்பிறகு, சிரியாவிலிருந்து தெய்மாகஸ் என்பான், அரசியல் தூதனுக வந்தனன். கி. மு. 260-ல் செல்யூகசு நிக்கேட்டர் கொலையுண்டனன். பின்போந்த முதலாம் ஆந்தியோகஸ் என்ற சிரிய நாட்டு மன்னனுக்கு பிந்துசாரன் ஒரு வேண்டுகோளை விடுத்தனன். அதன்படி தனக்கு மிகவிருப்பமுள்ள இனிய கொடிமுந்திரித்தேறலும் உலர்ந்த அத்திப்பழங்களும் ஒரு கிரேக்க மெய்விளக்க அறிஞனும் இந்நாட்டுக்கு அனுப்பப்படவேண்டும். ஆனல், முதல் இரண்டு பொருள்களையும் அனுப்பிவிட்டு, யவனமன்னன், அவர்தம் சட்டப்படி, பேராசிரியரை விலைக்குக்கொடுப்பது குற்றம் என்று எழுதிவிட்டானும்! எகிப்தின் இரண்டாம் தாலமி, பாடலிபுத்திரத்திற்கு தயோனிசியஸ் என்ற தூதுவனை அனுப்பினன்.

# பகுதி 4

## அசோகன் (கி. மு. சுமார் 273—232)

### ஆதாரங்கள்

### கல்வெட்டுக்கள்.

அசோகனின் பெருமையையும், அருஞ் செயல்களையும் அறிய, அவன் கல்வெட்டுக்கள் துணை செய்கின்றன. கல்வெட்டுக்களின் வரலாற்றில் அவன் காலத்தியவை, தலையாய சிறப்பு வாய்ந்தனவாகும். பேரரசனின் ஆணையின்படி வெளியிடப்பட்ட அக்கல்வெட்டுக்களில், ஆட்சி ஆண்டின் வரிசையில், காலக்குறிப்பு காணப்பெறுவதால், அவற்றின் சிறப்பு மிகுதியாகிறது. மீண்டும் மீண்டும் கூறப்பட்டவற்றை நீக்கினால் ஏறத்தாழ 5,000 சொற்கள், அவற்றினின்று கிடைக்கின்றன. உயர்வானநடை, அவற்றில் புலப்படும். கால முறைப்படி பின்வருமாறு அவை அமையும்:-

இரண்டு சிறிய ஆணைகளும் பாப்ரு ஆணையும் (கி. மு. 257); பதினான்கு ஆணைகளும் இரண்டு கலிங்க ஆணைகளும் (கி. மு. 256); ருமின்தேயி, நிக்லீவா கற்றூண் ஆணைகள் (கி. மு. 249); ஏழு கற்றூண் ஆணைகள் (கி. மு. 243-2); நான்கு சிறு கற்றூண் ஆணைகள் (கி. மு. 242-32).

### கல்வெட்டு ஆணைகள்.

முதலாம் பாறைக்கல் சிற்றாணை, (Minor Rock Edict I) அசோகனின் வாழ்க்கையில் சமயக்கோட்பாடுகளின் வளர்ச்சியையும், விடாமுயற்சியின் சிறப்பையும் குறிப்பிடும். இரண்டாம் சிற்றாணை, பேரரசனின் ஒழுக்கமுறைக்கோட்பாடுகளின் சுருக்கத்தைக் குறிப்பிடும். (பெற்றோருக்குக் கீழ்ப்படிதல்; உறவினரிடமும் விலங்குகளிடமும் அன்புகொள்ளல்; ஆசிரியரிடம் பணிவு; உண்மையுடன் ஒழுகுதல்). பாப்ரு ஆணை, அசோகன் புத்தசமய மும்மணிகளில் (புத்தர், தர்மம், சங்கம்) கொண்டிருந்த நம்பிக்கையையும், அச்சமயச்சட்டநூலின் சில பகுதிகளின் சிறப்பையும் விளக்கும். முதலிரண்டு பெருங்

கல்லாணைகள், மக்களின் நலத்திலும் விலங்குகளின் நலத்திலும், அரசனுக்கிருந்த ஊக்கத்தையும் அவற்றின் பொருட்டு அவன் நிறைவேற்றிய திட்டங்களையும் விளக்கும். மூன்றும் ஆணை, ஒழுக்கமுறைச் சட்டங்களை மக்களுக்கு அறிவிக்க ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை அதிகாரிகள் மாற்றப்பட்டதைக் குறிப்பிடுகிறது. நான்காம்ஆணை, "துன்புறுத்தாமை" என்ற கொள்கையின் முன்னேற்றத்தை விளக்கும். ஐந்தாம்ஆணை "தர்மமகாமாத்திரரின்" அலுவல்களை அறிவிக்கும். ஆரும் ஆணையில், அசோகன் மக்களின் நன்மைக்காக, அதிகாரிகளுக்கு அனுப்பிய கட்டளைகள் காணப்பெறும். 7, 8, எண்களுள்ள ஆணைகளில், தன்னடக்கம், உளத்தூய்மை முதலியன விளக்கப்படுவதுடன், புத்தகயா போன்ற தலங்களுக்குப் புண்ணியச் செலவு செய்யவேண்டியதின் சிறப்பும் போற்றப்படுகிறது. பிறப்பு, மணவினை முதலியவற்றுக்கான கொண்டாட்டங்கள் பயனற்றவை என்றும் ஒழுக்கத்துடன் கடமை புரிவதே சாலச்சிறப்புடைத்து எனவும் ஒன்பதாவது ஆணை கூறுகிறது. பத்து, பதினொன்ருவது ஆணைகள், புகழுடன் கூடிய உண்மையான அறம், (புத்த) தர்மமே என்று கூறும். பனிரெண்டாம் ஆணை, அசோகனின் சமயப்பொறையைப் பற்றியும், சமயத்துறையில் பொறுமையின் இன்றியமையாத் தன்மையையும் விளக்குகிறது. பதின்மூன்றும் ஆணை கலிங்க நாட்டுப்படையெழுச்சியின் வருந்தத்தக்க விளைவுகளைக்கூறுவதுடன் அறத்தினல் வெற்றி பெறுவதே போற்றற்குரியதென்பதை வற்புறுத்தும். தவிர, அசோகன், பல்வேறு நாடுகளுக்கு சமயப்பரப்புக்குழுவினரை அனுப்பிய செய்தியையும், அதில் காணலாம். மேற்கண்ட பதின்மூன்று ஆணைகளுக்கும் பிற்சேர்க்கையாக அமைந்துள்ளது பதினன்காம் ஆணை. அசோகனின் கலிங்க ஆணைகள், மக்கள் துயருருதவகையில் ஆட்சி நடத்துமாறு, கலிங்கநாட்டு அதிகாரிகளுக்கு அறிவிக்கின்றன.

### கற்றூண் ஆணைகள்.

முதல் மூன்று கற்றூண் ஆணைகளில், அறம் விளக்கப்படுகிறது. நான்காம் ஆணை, மண்டலத் தலைவர்களுக்குப்

பேரரசனின் கட்டளைகளைக் கூறுகிறது. ஐந்தாம் ஆணை, துன்புறுத்தாமைக் கொள்கையின் முன்னேற்றத்தைக் குறிப்பிடும். ஆறும் ஆணை சமயத்துறையில் பொறுமைத் தன்மையைக் கூறுகிறது. ஏழாம் ஆணை, அறத்தின் வளர்ச்சிக்காக, அசோகன், தன் பேரரசில், எடுத்துக்கொண்ட முயற்சிகளை விளக்குகின்றது. முதல் மூன்று சிற்றாணைகள், சங்க அமைப்பின் வளர்ச்சிக்கான முறைகளை அறிவிக்கிறது. ரூமின்தேயி கல்வெட்டு, அசோகன், புத்தர் பிறந்த இடத்துக்குச் சென்றதையும், நிலவரியை எட்டில் ஒரு பங்காகக் குறைத்ததையும் குறிப்பிடும்.

## ஆணைகளின் வரலாற்றுச் சிறப்பு.

அசோகனின் கல்வெட்டுக்கள், சமயத் தொடர்பானவையாக இருந்தபோதிலும், வாழ்க்கையின் பல துறைகளைப் பற்றிய செய்திகளை நாம், அவற்றினின்று அறியலாகும். இந்தியாமட்டுமின்றி பிறநாடுகளையும் பற்றி, அவை குறிப்பிடுகின்றன. ஆனால் அசோகன் என்னும் பெயர், ஐதராபாத்திலுள்ள, மாஸ்கி என்னுமிடத்தில் காணப்பட்ட கல்வெட்டு ஒன்றில்மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றவை அவனை "தேவனும்பிரியன்" "பிரியதர்சிகன்" என்றே அழைக்கும். அறவழியையும் சமயத்தையும் வளர்க்க விரும்பிய அசோகன், மற்ற செய்திகளைப் பற்றிக் கல்வெட்டுக்களில் குறிப்பிட விரும்பவில்லை. பதின்மூன்றும் ஆணை, கலிங்கப்போரில் கொல்லப்பட்டோர், சிறை பிடிக்கப்பட்டோர் முதலியவரின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டபோதிலும், போருக்குரிய காரணங்களை அறிவிக்கவில்லை. அவனுடைய சில குறிப்புக்கள் எளிதாக அறியப்படவில்லை. அவன் கல்வெட்டுக் குறிப்புக்களை நன்கு உணர, புத்தசமய இலக்கியமும், அர்த்த சாத்திரமும் இன்றியமையாதன. ஈழநாட்டுச் செய்திக்கோவையும், பாகியான், யுவான்சுவாங் முதலியோரும் சிறிதளவு உதவிபுரிந்தபோதிலும் அசோகனே, அவனைப்பற்றி அறிவிக்கும் சிறந்த வரலாற்றறிஞன் என்று கருதலாகும். முதலாம் உருத்திரதாமனின் கிர்னர் கல்வெட்டில் அசோகனைப் பற்றிக் குறிப்பிடப்படுவதும் நோக்கத்தக்கது.

## அசோகனின் இளங்கோப் பருவ வாழ்க்கை.

பிந்துசாரனின் ஆட்சிக்காலத்தில் அசோகன், முதலில் தட்சசீலத்திலும், பின்பு உச்சயினியிலும் அரசப்பகர ஆளாக (viceroy) அமர்த்தப்பட்டிருந்தனன். அவன், பிந்துசாரனின் இளைய மகனாக இருந்தபோதிலும், அரசுரிமையை ஏற்குமாறு தந்தையால் தேர்ந்தெடுக்கப்பட்டனன். தொடக்கத்தில் அசோகன், இந்துசமயத்தவனாக இருந்ததாகக் காணப்படுகிறது. குடி, களியாட்டம் முதலிய செயல்களில் ஈடுபட்டிருந்தானென்றும் கூறப்படுகிறது. சுமார் கி. மு. 273-ல் பிந்துசாரன் இறந்தவுடன் அரசுரிமைப் போராட்டம் ஏற்பட்டு, முடிவில் அசோகன் வெற்றியடைந்தான். இதனால் சுமார் கி. மு. 269-ல் தான் அசோகன் முடிசூட்டிக்கொள்ள இயன்றதாக அறியப்படுகிறது.

### கலிங்கப்போர். (சுமார் கி. மு 261.)

அசோகனின் முதற்போரும், இறுதிப்போரும் ஆன கலிங்கப்போரின் காரணங்கள் அறியப்படவில்லை. அவனுக்கு முன், அந்நாடு, மோரியரால் வெல்லப்படவில்லை என்று அறியக்கிடக்கிறது. அப்போரில் நூருயிரவர் கொல்லப்பட்டதைக்கண்டு அசோகன் உளம் கலங்கியது. போரின் தீமையை அறிந்து வருந்தினன். புத்தரின் கொள்கைகளில் அவன் கருத்து சென்றது. மோரியப் பேரரசுடன் கலிங்கம் இணைக்கப்பட்டபோதிலும், அன்றுதொட்டு, பேரரசன் போரைப் புறக்கணித்தான். அசோகனின் கீழ் விளங்கியதைப் போன்ற பரந்த பேரரசும், அரசியல் ஒற்றுமையும், அவனுக்குப்பின் போந்த இந்து அரசர் யாவர் காலத்திலும் ஏற்படவில்லை. பேரரசன் ஆட்சிமுறையில் புத்தசமயக் கொள்கைகளைப் புகுத்தினன். அமைதியான அயல்நாட்டுக் கொள்கை பின்பற்றப்படலாற்று. கலிங்கப்போர் அசோகன் வாழ்க்கையில் பெரிய மாறுதலை ஏற்படுத்தியது உண்மையாயினும், போருக்குப்பின் தான் வென்றநாட்டை இழந்துவிட அவன் விரும்பவில்லை, என்பது நோக்கற்பாலது. மன்னனுக்குத் தீமை செய்தவனையும் இயன்றவரை, பொறுத்து அமைதி நிலைநாட்டப்படவேண்டுமென்றே, அசோகன் கல்வெட்டு கூறுகிறது.

### போருக்குப்பின்.

சுமார் கி. மு. 261-ல் அசோகன், "சாக்கிய உபாசகன்" (தீட்சைபெருத பௌத்த மாணவன்) ஆயினன். இரண்டரை ஆண்டுகள் பின்னர், ஒரு "பிக்குகடிகா" (துறவியின் வழியைப் பின்பற்றுபவன்) நிலையை அடைந்தான். கி. மு 259-ல் வேட்டையாடுதலை, அரசன் கைவிட்டனன். புத்தகயாவுக்கு புண்ணியச் செலவு சென்றதுடன் சமயப்பரப்பு இயக்கத்தையும் அமைத்தனன். கி. மு. 256-ல் பௌத்த அறத்தை முன்னேறச் செய்வதற்காக, அதிகாரிகள் அமர்த்தப்பெற்றனர். கி. மு. 249-ல் கபிலவாஸ்துவின் அண்மையில் புத்தர் பிறந்த இடத்துக்கு, அசோகன் சென்றனன் வட இந்திய மரபுரையின்படி அவன், சாரநாதம், ஸ்ரவஸ்தி, குசிநகரம் முதலிய இடங்கட்கும், தன் ஆசான் உபகுப்தனுடன் சென்றதாக அறியக்கிடக்கிறது. மகேந்திரனின் தலைமையில் ஈழநாட்டுக்கு ஒரு சமயப்பரப்புக்குழு அனுப்பப்பட்டதாம். கி. மு. 240-ல் பாடலிபுத்திரத்தில் மூன்ருவது பௌத்த மாநாடு அசோகனுல் கூட்டப்பெற்றது. சுமார் கி. மு. 232-ல் அவன் இறந்தான். அசோகன் வாழ்க்கையில் இருபகுதிகளைக் காண்கிருேம்—கி. மு. 273—261; கி. மு. 261—232.

### அவன் காலத்தில் மோரியப் பேரரசின் எல்லை.

பிந்துசாரனும் அசோகனும் மேற்குநாடுகளுடன் நட்புறவு பூண்டிருந்ததால், சந்திரகுப்தனும் செல்யூகசும் செய்துகொண்ட உடன்பாட்டின்படி முடிவுசெய்யப்பெற்ற வடமேற்கு எல்லை, அசோகன் காலத்திலும் தொடர்ந்து நிலைபெற்றிருக்க வேண்டும். ஆப்கானித்தானத்தில் அசோகன் கட்டிடங்கள் நிறுவியதாக, யுவான்சுவாங் குறிப்பிடுவன். காச்மீரத்தில் அசோகன் ஒரு தலைநகரை நிறுவினனென்பது, கல்ஹணன் குறிப்பிடும் மரபுரையினின்று அறியப்படுகிறது. நேபாளத்தராய் பகுதி பேரரசுக்கு உட்பட்டிருந்ததென்பது ருமின்தேயி கற்றூண் கல்வெட்டிலிருந்து அறியலாகும். நேபாளமும் அசோகனின் கீழிருந்ததென்று சில சான்றுகளால் அறியப்படுகிறது. பாகியானும் யுவான்சுவாங்கும் தாம்ரலிப்தி (தாம்லுக்) யிலும்,

வங்காளத்தின் மற்ற இடங்களிலும் அசோகன் தூபிகள் இருந்த தாகக் குறிப்பிடுவர். கலிங்கநாடும் பேரரசுடன் இணைக்கப்பட் டிருந்தது. இவ்வாறே, அசோகனின் பாறைக் கல்வெட்டுக் களும், கற்றூண்களும், இருந்த இடங்களைக்கொண்டு, அவனுடைய பேரரசின் அளவை முடிவுகட்டலாம். ரெய்ச்சூர் தோவாப், கொப்பால், சித்தபுரம், முதலிய பல இடங்களில் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. சுருங்கக்கூறின், தெற்கில் தமிழ்நாடுகளைத்தவிர இந்தியாவின் மற்றைப் பகுதிகள் யாவும் அசோகனின் பேரரசுக்குட்பட்டிருந்தன. ஆப்கானித்தானமும், பலுசித்தானமும் அவன் கீழிருந்ததாகவும் கருதப்படுகிறது. பிற்காலத்திய பிரிட்டிஷ் இந்தியாவின் பரப்பைவிட அசோகன் பேரரசு பெரியதாகும். அசோகன் பேரரசின் தெற்கு எல்லை சற்றேறக்குறைய வடநில நேர்க்கோடு 12° (North Latitude 12 degrees) வரை இருக்கக்கூடுமென்பது பேராசிரியர் சத்திய நாதய்யர் கருத்து.‡

## அசோகனின் சமயம்.

தொடக்கத்தில் அசோகன் புத்தசமயத்தவனல்லன் என்பதில் ஐயமில்லை. சிலர் அவன் குறிப்பிடும் அறம், இந்து சமயத்துக்கு உரியதென்பர். மற்றும் ஒருசிலர், அசோகன், வாழ்க்கையின் இறுதிப்பகுதியில் புத்தசமயத்தைத் தழுவின னென்பர். ஆனால், அவன் கல்வெட்டுக்களில், அவனுடைய புத்த சமயப்பற்றைக்காட்டும் குறியீடுகள் பல உள. முதலாம் சிறிய பாறைக்கல் ஆணை அவனை "உபாசகன்" என்றும், மாஸ்கி கல்வெட்டு, "சாக்கிய உபாசகன்" என்றும் அறிவிக்கின்றன. (பாப்ருஆணை "மும்மணிகளில்" அவனது நம்பிக்கையைக் குறிக்கிறது.) முதல் மூன்று சிறிய கற்றூண் ஆணைகளில் புத்தசமயச்சங்கம், சிறப்பாக வளர்ச்சியடைவதற் கேற்ற முறைகளை மன்னன் அறிவிக்கின்றான். வேறுமதங் களின் வளர்ச்சிக்காக, அவன் புரிந்த சிறப்பான செயல்களைப் பற்றிய குறிப்பு யாண்டும் காணப்படவில்லை. ஒன்பதாம்

‡ Sathianathier, Studies in the Ancient History of Tondamandalam (1944), pp. 3-10

பாறைக்கல் ஆணையில் சிறப்புக்கொண்டாட்டங்கள், பயனற்றவை என்று அசோகன் கூறியிருப்பதும் நோக்கற்பாலது. அவனது சமயப்பரப்பு இயக்கத்தையும் நாம் உற்றுநோக்க வேண்டும். இலக்கியச்சான்றுகளின்படி, மூன்ருவது பௌத்த மாநாட்டை, அசோகன் கூட்டுவித்தானென்று அறியக்கிடக்கிறது. (பௌத்ததுறவியின் ஆடையுடன் கூடிய அசோகனின் உருவச்சிலை) ஒன்றை, இட்சிங் குறிப்பிடுகிருன். "நிர்வாணம்" என்றசொல், கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படவில்லை என்று கூறப்படுகிறது. ஆனல், அசோகன், மக்களுக்கு, புத்தசமயச் சித்தாந்தத்தைக் கற்பிக்கவில்லை. குடும்ப வாழ்க்கையுடன் கூடிய மக்களுக்கு, இன்றியமையாத செய்திகளை அவன் கூறியுள்ளான். மேலும் "புத்தவசனம்" அவனல் தெளிவாக ஆதரிக்கப்படுவதால், அதனுள் யாவுமடங்கும். கல்வெட்டுக்கள் குறிப்பிடும் கொல்லாமைக் கொள்கை, புத்தசமயத்தொடர்புடையதே. பதின்மூன்ரும் பாறைக்கல் ஆணை, தெளிவாக அசோகன், கலிங்கப்போர் முடிவுற்றவுடனேயே, புத்தசமயத்தைப்போற்றலாயினன் என்று குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

## அசோகனின் சமயத்தொண்டு.

### 1. சமயப்பரப்புக்குழு.

புத்தசமயத்தைப்பரப்ப அசோகன் பலவகையில் முயற்சி செய்தனன். உள்நாட்டிலும், பிறநாடுகளிலும் சமயப்பரப்புக் குழுவினர்மூலம், அவன் தன் குறிக்கோளை நிறைவேற்ற முயன்ருன். சிரியா, எகிப்து, சைரீன், மாசிடோனியா, எபிரஸ், சோழ, பாண்டிய நாடுகள், பேரரசின் வடமேற்கு, தெற்குப் பகுதிகள் (மகாராட்டிரம், ஆந்திரநாடு உட்பட) முதலிய இடங்களுக்கு புத்தத்துறவிகள், அனுப்பப்பட்டதாக, பதின்மூன்ரும் பாறைக்கல் ஆணை அறிவிக்கின்றது. அசோகனின் மகனை மகேந்திரனும், மகள் சங்கமித்திரையும், ஈழம் சென்று புத்தசமயத்தை நிறுவியதாகக் கூறப்படுகிறது. சுவர்ணபூமி என்று குறிப்பிடப்பட்டுள்ள இடம், பர்மா என்று ஒரு சிலர் கருதுவது உண்மையாயின், பர்மாவுக்கும் சமயக்குழு அனுப்பப்பட்டதாகக் கருதலாம்.

## 2. ஆணைகள்

ஒரு சில கல்வெட்டுக்களில் அரசியல் தொடர்பான கட்டளைகள், அசோகனால் பிறப்பிக்கப்பட்டிருப்பினும், பெரும் பாலானவற்றில், குறிப்பிட்ட வழியைப்பின்பற்றி நலமடையு மாறு மக்களுக்கு அறவுரைகள் கூறப்பட்டிருப்பதைக் காண் கிறோம். சாதிப்பாகுபாட்டைக்கருதாது, ஒழுக்கமுறை கற்பிக் கப்படுகிறது. புத்தரைப்போல் அசோகனும் "வர்ண தர்மத்தை" ஏற்றுக்கொள்ளவில்லை. அவன் அறவுரையில், பொதுநோக்கையும், பகுத்தறிவுத் தன்மையையும் காண் கிறோம். இந்து சமயப் பண்புகள் சில அதில் காணப்படினும் "துன்புறுத்தாமை" என்ற கொள்கை அடிக்கடி வற்புறுத்தப் படுவதை நோக்கின், மன்னனின் புத்தசமயப்பற்று விளங்கும். பிற மதத்தினரையும், நன்னடத்தையுடனும் ஈத்துவக்கும் உள்ளத்துடனும் நடாத்துதல் வேண்டுமென, அவன் பறை சாற்றுகின்றான். மேலும் அசோகன், மக்களுக்காக மட்டுமின்றி விலங்குகளின் நலத்திற்காகவும் உழைத்தானென்பது, அவன் கல்வெட்டு ஆணைகளிலிருந்து அறியக்கிடக்கிறது. நன்னெறி யைப் பிறருக்கு எடுத்துக் கூறியதோடு அமையாது தானும் அதனைக் கடைப்பிடித்து ஒழுகினன். மக்கள், அவ்வப்போது ஆற்றவேண்டிய கடமைகளையும் அவன் ஆணைகள் தெரிவிக் கின்றன. "இரக்கம், பெருந்தன்மை, உண்மை, தூய்மை, பணிவிணக்கம், ஒழுக்கம்" முதலிய பண்புகள் மக்களிடம் இருத்தல் வேண்டுமென்று ஏழாம் கற்றூண் ஆணை விளக்கு கிறது. இரண்டாம் சிறிய பாறைக்கல் ஆணையில் அசோகன், தான் கூறும் அறம் பழமையானதே என்றும் அறிவிக்கின்றான்.

## 3. ஆட்சிமுறை அமைப்பு.

அசோகன், ஒழுக்கத்தையும் சமயததையும் பற்றிய தனது கருத்துகளைப் பரப்ப அரசியல் நிலையங்களைப் பயன் படுத்திக் கொண்டான். மூன்றும் பாறைக்கல் ஆணை, பல்வேறு அதிகாரிகளை அறத்தை வளர்க்குமாறு கட்டளையிடுகிறது. முதலாம் சிறிய பாறைக்கல் ஆணை (எர்ரகுடி) மன்னனின் செய்தி, பணித்துறைச் சார்பான முறையில் "இராசுகரு"க்கு

அனுப்பப்பட வேண்டுமென்றும் அவர்கள், மக்களுக்கு அதனை அறிவிப்பர் என்றும் கூறுகிறது. சமயாசிரியர்கள், தத்தம் மாணவர்களுக்கு அச்செய்தியைக் கற்பிக்கவும், அவ்வாறு கற்ற வர் தமது உறவினரிடை அதனைப் பரப்பவும் கடமைப்பட்டிருந்த னர். கி. மு. 256-ல் "தர்மமகா மாத்திரர்" "தர்மயுக்தர்" என்ற தனித்த அதிகாரிகள், அறத்தை வளர்ப்பதற்காக, அமர்த்தப் பெற்றனர். ஐந்தாம், பாறைக்கல் ஆணையும் ஏழாம் கற்றூண் ஆணையும், அவர்தம் அலுவல்களையும், அதிகார அளவையும் குறிப்பிடுகின்றன. விலங்குகளுக்கு இடுக்கண் ஏற்படுவதை யும், அறஒழுக்கத்தை மக்கள் மீறுவதையும், அவ்வதிகாரிகள் தடுத்து வந்தனர். குற்றவாளிகளின் நிலைமை, வயது, வாய்ப்புக்கேடு முதலியவற்றை ஆராய்ந்து, சிற்சிலகாலங்களில் கடுமையான சட்டங்களிலிருந்து விலக்கு அளிக்கவும் அவர்கள் அதிகாரம் பெற்றிருந்தனர். மன்னனின் குடும்பத்தினர் தங்கும் மாளிகை உட்பட, யாங்கணும் அவ்வதிகாரிகள் காணப்பட்ட னர். பனிரெண்டாம் பாறைக்கல் ஆணை, குற்றங்கண்டு பிடிக்கும் பெண்ணதிகாரிகளைக் குறிப்பிடுகிறது. மேலும் கி. பி. 240-ல் தலைநகரில், ஒரு பௌத்த மாநாடு கூட்டப்பெற்று, சங்கத்தின் உட்பகைவர்கள் விலக்கப்பட்டனர்.

### 4. அசோகன், தானே எடுத்துக்காட்டாக ஒழுகியது.

மக்கள் ஒழுக்கமுறையைப் பின்பற்ற தான் ஒரு எடுத்துக் காட்டாக இருக்கவேண்டுமென்பதை அசோகன் உணர்ந்தான். அவன், பிறரைத் துன்புறுத்தாமலும், மக்களுக்கும், விலங்கு களுக்கும் எக்காலத்திலும் நன்மைசெய்துகொண்டும், பிறருக்கு வழிகாட்டினன். இன்பவழியில் காலம்கழிக்காமல் அன்புடன் புண்ணியச்செலவு போயினன். கி. மு. 259-ல் வேட்டை யாடுதல் கைவிடப்பட்டதுடன், அரசமாளிகையிலுள்ள சமைய லறையில் கொல்லப்படும் விலங்குகள் மூன்றாகக்குறைக்கப் பட்டன. இரண்டாண்டுகட்குப் பின்னர், இறைச்சி உணவை அவன் அறவே ஒழித்தனன். (பாடலிபுத்திரத்தில், விலங்கு களை வேள்விபுரிவதும், சில களியாட்டங்களும் நிறுத்தப் பெற்றன. அசோகன், இந்தியா முழுவதிலும், மேற்குநாடு களிலும், மக்களுக்கும், விலங்குகளுக்கும் மருத்துவசாலைகள்

நிறுவியதாகவும், சாலைகளில் மரங்களையும், கிணறுகளையும் தோற்றுவித்ததாகவும், இரண்டாம் பாறைக்கல் ஆணை அறிவிக்கும். கிளிகள், பெண்வாத்துகள், முள்ளம்பன்றிகள், குரங்குகள், கல்லாணைகள், (காண்டாமிருகங்கள்) முதலிய பல விலங்குகள் கொல்லப்படக் கூடாதென்றும், ஆண்டின் சில நாட்களில் மீன்பிடித்தலும், மீன்விற்றலும் தடைப்படுத்தப் படுமென்றும் சிற்சில நாட்களில் விலங்குகளுக்கு, சூடு போடவோ, அவற்றை விதையடிப்படுத்தவோ கூடாதென்றும், கி. மு. 243-ல் மன்னன் கட்டளையிட்டதாக, ஐந்தாவது கற்றூண் ஆணை அறிவிக்கிறது. அறச்சாலைகள், சோலைகள் முதலியவற்றை அசோகன் நிறுவியதுடன், மக்களும், அத் தகைய பொதுப்பணியில் ஈடுபடவேண்டுமென்று மக்களை வேண்டினனென்பது ஏழாம்கற்றூண் ஆணையிலிருந்து அறியக் கிடக்கிறது.

## அரசன் பின்பற்றிய புத்தசமயக் கொள்கையால் ஏற்பட்ட விளைவு.

அசோகனின் முயற்சிகளால், புத்தசமயம் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் முன்னேறியது. அச்சமயக் கருத்துக்களும், ஒழுக்கமுறையும் அரசன் எதிர்பார்த்த அளவு விரைவாகப் பரவாதபோதிலும், அவை வெற்றியுடன் முன்னேறியதற்கு அசோகனே சிறந்த காரணமாவன் என்பதில் ஐயமில்லை. அசோகன், காலத்திற்கேற்றவாறு ஒழுக்கத்தை மாற்றிக்கொண்டவன் அல்லன். அவன் குற்றமற்ற 'துறவிப்பேரரசன்' என்றே கருதப்படுகிறான். புத்தருக்குப்பின் அவன் சமய வரலாற்றில் மிகவும் சிறந்த தலைவன் இவனே. புத்தசமயத்தை முன்னேறச்செய்ததால் இவன் புகழ் மிகுதியாயிற்று. ஆனால் சிலர் அச்சமயத்தின் அழிவிற்கு இவன் காரணமாவன் என்று கூறுவர். மிகுந்த நன்கொடைகள் அச்சமய நிலையத்திற்கு அளிக்கப்பட்டதால் பல கேடுகள் விளைந்தன என்பது அவர் தம் கருத்து. அவ்வாறே புத்தசமய அமைதிக்கொள்கைகளை அசோகன் பின்பற்றியதின் விளைவாக மோரியப்பேரரசு சீர் குலைந்தது என்று கூறுவாருமுளர். சில அறிஞர்கள் அசோகனின் புத்தசமய ஆதரவின் விளைவாக இந்தியரின் வீர

உணர்ச்சி குன்றியது எனக்கூறுவர். ஆனால் சமயப்பற்று மிக்கோனாக இருந்தும் அம்மன்னன் ஒரு பேரரசனாய் இருந்ததை நாம் நோக்குதல் வேண்டும். வலுக்கட்டாயமுறையில் பிறநாட்டைக் கைப்பற்றுவதை அவன் வெறுத்தபோதிலும், தற்காப்புக்கு இன்றியமையாத முன்னேற்பாடுடனிருந்தான். இயன்றவரை போரைத்தடுக்க அவன் கொண்ட உறுதி, தோல்வியின் விளைவாக ஏற்பட்டதன்று. அவனுக்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் இந்தியா படைவலிமையற்ற நாடாகிவிடவில்லை. மேலும் அசோகன் புத்தசமயத்தை ஆதரித்ததால் இந்துசமயத்தினர் அவன் அரசியலை எதிர்க்கத் துணிந்தனர் எனக்கூறப்படுகிறது. அதனால் மோரியப்பேரரசு வீழ்ச்சியுற்றது என்று சிலரால் கருதப்படும். இந்துசமயத்தவர், பிற்காலத்தில் மோரியப்பேரரசின் வீழ்ச்சிக்கு உதவிபுரிந்தது உண்மையான போதிலும், அசோகனின் கொள்கைகளும் முறைகளும் கொடுமை வாய்ந்தன அல்ல. மக்களின் நலத்தில் மிகுந்த பற்றுகொண்ட அசோகன் எக்காலத்திலும் வரம்பு மீறிய கட்டளைகளால் மக்களைத் துன்புறுத்தவில்லை. அந்தண வகுப்பாரிடை மகிழ்ச்சியின்மை நிலவியிருக்கக்கூடும். ஆனால் அவர்கள் கலகம் செய்வதற்குப்போதுமான காரணம் கிடையாது. ஆதலால் அசோகனின் இயல்முறை (Policy), புத்த சமயத்திற்கோ, மோரியப்பேரரசுக்கோ அல்லது இந்தியாவுக்கோ, அழிவை விளைவித்தது என்ற கருத்தை ஏற்றுக் கொள்வது எளிதன்று.

### சமயத்துறையில் பொறையுடைமை

சமயத்துறையில் அசோகனின் பொறுமை, வரலாற்றில் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். கி. மு. 3-ம் நூற்றாண்டில் அத்தகைய கொள்கை நிலவியது வியப்புக்குரியது. பிறசமயங்களுக்குக் கேடுசெய்வதால் தனது சமயத்திற்கு கேடு நேரும் என்றும், பிறசமயங்களை ஆதரிப்பவன் தன் சமயத்திற்குப் புகழை தேடிக்கொள்பவன் என்றும், பனிரெண்டாவது பாறைக்கல் ஆணையில் அசோகன் குறிப்பிட்டிருப்பது நோக்கத் தகும். அசோகன் புத்தரைப் போலவே மக்கள் யாவரையும்

தன்னுடைய குழந்தைகளாகக் கூறியபோதிலும், புத்தசமயத் துறவிகளிடம் மிகுந்த அன்புபாராட்டினன் என்பது கல்வெட்டுக் களிலிருந்து அறியலாகும். ஆயினும் பிராமணர், சமணர், ஆசிவகர், முதலிய பல சமயத்தினர்களுக்கும் நன்கொடைகள் வழங்கப்பட்டன. அசோகன் சமயத்துறையில் கொண்டிருந்த பொறுமை காரணமாக, சமயத்தின் பேரால் செய்யப்படும் எச் செயலையும் பொருட்படுத்தாமலிருந்தானென்று கருதுவதற் கில்லை. ஒவ்வொருவரும், மனச்சான்றுக்கு மாருமல் பகுத் தறிவுடன் ஒழுகுதல் வேண்டுமென்று அவன் குறிப்பிடுகிருன்.

## ஆட்சிமுறை.

பல்வேறு துறைகளிலும் மக்கள்நிலை உயரவேண்டு மென்பதே அசோகனின் குறிக்கோள். அர்த்த சாத்திரம் குறிப்பிடும் வகையில், அமைசசரின் அறவுரை பெற்று, செங்கோல் செலுத்த அவன் விரும்பினன். குடிமக்களைத் தனது குழந்தைகள்போல் கருதிய அசோகன், ஒரு தந்தை, செவிலித்தாயிடம் தனது குழந்தையை ஒப்புவித்து, உளவமைதி கொண்டிருப்பதுபோல், தானும், மக்களைச் சிறந்த முறையில் காக்கும் அதிகாரிகளிடம் ஒப்புவித்திருப்பதாகக் கல்வெட்டில் (நான்காம் கற்றூண் ஆணை) கூறுகிருன். பொதுப்பணியாளர் நேர்மையாகவும் ஊக்கமுடனும் முறைதவருது அதிகாரம் செலுத்துமாறு அசோகன் விடுத்த கட்டளைகள் பல காணப் படுகின்றன. அவன் காலத்தில் காணப்பட்ட அரசியல் முறை யில் மிகவும் இன்றியமையாத மாறுதல்களே புகுத்தப்பெற்றன. தட்சசிலம், உச்சயினி, கிர்நார், தோசாலி, சுவர்ணகிரி, பாடலிபுத்திரம் ஆகிய தலைநகரங்களைக் கொண்ட ஆறு மண்ட லங்கள் காணப்பெற்றன. ஆரும் பாறைக்கல் ஆணையில், அமைச்சர் குழுவின் செயல்கள் குறிப்பிடப்படுகின்றன. தர்ம மகாமாத்திரர் என்ற புதிய அதிகாரிகளைப் பற்றி முன்னர் குறிப் பிடப்பட்டது. ஐந்தாண்டுகட்கு ஒருமுறை அறத்தின் முன்னேற் றத்தின் பொருட்டு, அதிகாரிகள் மாற்றப்பட்டனரென்று, மூன்றும் பாறைக்கல் ஆணை அறிவிக்கும். முறை வழங்கும் செயலை ஒழுங்குபடுத்த, அதிகாரிகள், மூன்ருண்டுகட்கு ஒருமுறையும் ஐந்தாண்டுகட்கு ஒருமுறையும் மாற்றப்பட்டன

ரென்பது கலிங்கநாட்டுக் கல்வெட்டினால் அறியப்படுகிறது. ஆண்டுக்கொருமுறை, சிறையிலிருப்போரை விடுதலைசெய்யும் பழைய வழக்கம் அசோகனால் தொடர்ந்து பின்பற்றப்பட்டது. அரசன், நாட்டின் நலத்திற்காக, ஓயாமல் உழைத்துவந்த னன். இச்செயல், ஹர்ஷன், ஷர்ஷா, ஔரங்கசீப் முதலிய வர்களை நமக்கு நினைவூட்டும். அரசியல் சட்டங்களால்மட்டும், நாட்டில் செழிப்பு ஏற்பட்டுவிடாதென்று அசோகன் உணர்ந்து பணியாளருக்கும் மக்களுக்கும் அடிக்கடி அறவுரை கூறி வந்தான். அசோகனின் திறமையும், பண்பாடும், அரசியல் முறையில் கௌடில்யன் காலத்திய கடுமையைக் குறைத்தன.

## அசோகனைப் பற்றிய மதிப்புரை.

அசோகன் சிறந்த குறிக்கோளைக்கொண்டு, அதனை நிறை வேற்ற ஓயாது உழைத்தான். எவ்வகைக் காரணத்தாலும், அவன் புத்தசமயத்தில் கொண்டிருந்த ஆர்வம் மங்கவில்லை. பல நாடுகளுக்கு அவன் சமயக் குழுவினரை அனுப்பியது துணிகரமான அருஞ் செயலேயாகும். அவனுடைய அற வுரைகள் நிலைபெற்றிருப்பதற்காக, அவை ஆணைகள்மூலம் கற்களில் பொறிக்கப்பட்டது போற்றற்குரியதோர் செயலாகும். அவற்றால்மட்டும் முழுப்பயன் ஏற்படாதென்றுணர்ந்த அசோகன் மக்களின் செயலாண்மையை நம்பி, அதற்கு ஏற்ற பணிகளைப் புரிந்தான். பிறரைத் தூண்டுவதற்குத் தான் ஒரு எடுத்துக் காட்டாகச் செயலாற்றி வந்தனன். சுருங்கக்கூறின், ஒரு குறிப்பிட்ட கொள்கையை முன்னேற்றமடையச் செய்வதற் கேற்ற முறை,. அவனால் அறியப்பட்டிருந்தது. இந்தியாவில் புத்தசமயம், இந்துசமயத்தை அடக்கி, முன்னேறவில்லை என்றகாரணத்தால், அசோகன் தோல்வியுற்றனன் என்று கருதுவது முறையன்று. ஒவ்வொருவரும் தத்தம் உள்ளக் கிடையை ஆராய்ந்து நன்மை தீமையை உணரவேண்டு மென்று அப்பேரரசன் கூறியுள்ளதை ஈண்டு நினைவுக்குக் கொண்டுவரவேண்டும்.

சமயத்தொண்டைப் பொறுத்தவரை, அசோகன், பவுல் துறவி, கான்ஸ்ட்டண்ட்டைன், சார்லிமேன் முதலியோருடன்

ஒப்பிடப்பட்டிருக்கிறான். சார்லிமேன் அல்லது சீசரைவிட மிகுதியான அளவில் அசோகன், பிற்காலத்தவரின் உள்ளத்தில் புகுந்து புகழெய்தியுள்ளான் என்று ஓரறிஞர் குறிப்பிட்டுள்ளார்.‡ அசோகனும் பவுல் துறவியும் தத்தம் சமயங்களை சிறப்பானதாகவும், பலவற்றை உட்கொண்டதாகவும் செய்தனர். ஆனால், அசோகன், புத்த சமயத்தை எளிய தன்மைவாய்ந்ததாகச் செய்தனன். பவுலோ, கிறித்தவ சமயத்தைச் சிக்கல் நிறைந்ததாக்கினன். சிலர், அசோகனை, மார்க்க அரீலியனுடன் ஒப்பிடுவர். ஆனால், அசோகனைப் பிறருடன் ஒப்பிடுவதில் பல இடையூறுகள் உள்ளன. ஏனெனில் அவன் தனிச்சிறப்பு பெற்றவனானவன். "புத்தசமயத்தின் கான்ஸ்ட்டண்ட்டைன்" என்று கூறத் தக்கவன் கனிஷ்கன்; அசோகனன்று. ஏனெனின், முன்னவன், சிறப்புற்றோங்கிவரும் ஒரு பெரும் மதத்திற்குக் கீழ்ப்படிந்தான். அசோகனோ, சிறிய மதத்தைப் பெரியதாகச் செய்தனன். தன்னலத்தைக்கருதி மோரியப் பேரரசன் அவ்வாறு செய்யவில்லை என்பதும் குறிப்பிடத்தகும், துறவற வாழ்க்கை கொண்டிருந்தபோதிலும், 'அரசன்' என்ற அவன் சிறப்பு குன்றவில்லை. பயனற்றவற்றையோ, இயல்பலாதனவற்றையோ, செய்ய அவன் முற்பட்டானில்லை. அலெக்சாந்தர், அவன் வாழ்க்கையின் இறுதிப்பகுதியில், மக்களின் ஒற்றுமைக்காக முயன்றதாகக் கூறப்படுகிறது. அசோகனோ, விலங்குகளும், மக்களும் ஒற்றுமையுடனும் செழிப்புடனும் விளங்குவதற்காக இயன்றவரை முயன்றான். அவன் கற்பித்தவை, இக்காலத்தவராலும் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகும். அவனுடைய சமயம், இந்தியாவில் புறக்கணிக்கப்பட்ட போதிலும், அசோகனின் "நற்செய்தி" இந்தியாவின் மெய்யறிவில் கலந்துள்ளது.

உள்ளத்திலெழும் பேராசைப் பெருவேட்கையைத்தானே தடை செய்துகொண்டுப் புகழ்பெற்ற பேரரசர்களின் எண்ணிக்கை வரலாற்றில் மிகக்குறைவு. "போரில் வெற்றியடைந்த காலத்தில் போரை வெறுத்த பெருமை அசோக

‡ (Koppen) Encyclopaedia Britannica (14th Edition 1929) II p 546.

னுடையது" என்று அறிஞர் வெல்ஸ் கூறுவர். கலிங்கப் போருக்குப்பின், அசோகன் தன் பேரரசைச் சிறிதும் குறைத்துக்கொள்ள விரும்பவில்லை. ஆட்சிமுறையில், அரசன், தந்தை அல்லது தாயைப் போன்றவன் என்ற கொள்கை அவனிடம் காணப்பெற்றது. சமயத்துறையில், பொறையை அவன் விரும்பியபோதிலும் மனச்சான்றுக்கும் பகுத்தறிவுக்கும் மீறிய வகையில் அதனைப் போற்றவில்லை. புலங்கடந்த நுண்பொருள் ஆராய்ச்சியுடன் கூடிய 'வீடு' என்னும் குறிக்கோளைப்பற்றி மிகுதியாகப் பேசி, குழப்பம் விளைவிக்காமல், பகுத்தறிவுக்கெட்டக் கூடிய, அறவுரைகளையே அசோகன் விளக்கினன். அறம் என்ற உயர்ந்த பண்பின் ஆட்சியின்கீழ் மக்களும் விலங்குகளும் மிகுதியான நலத்தைப்பெற்று வாழ வேண்டுமென்பதே இனத்தைப் பற்றிய அவனது குறிக்கோள்.

அவன் குறிக்கோள்களுக்கு உண்மையாகவே அசோகன் நடந்தனன். ஆனல் சாதிமுறைக் கட்டுப்பாடுகள் உறுதியாக அமைக்கப்பட்ட இந்தியாவில், அவனுடைய கொள்கைகள் அவனுக்குப் பிறகு செழிப்படையவில்லை. அவனது, "கொல்லாமை" "பொறையுடைமை" முதலிய கொள்கைகள், வாழ்க்கையைப் பற்றி இந்துக்களின் கருத்தில் மாறுதலை உண்டாக்கின. ஆனல் அமைதி, வலியத்தாக்குதலின்மை முதலிய அசோகனின் பண்புகள், பிற்காலத்தவரால் ஊக்கமுடன் போற்றப்படவில்லை. அசோகன், தன்னுடைய பிள்ளைகளும் பெயரன்களும், வலிமையும் அமைதியும் பெற்றிருக்க வேண்டுமென விரும்பினன். வலிமையுடன் கூடப்பெருத அமைதியை அசோகன் போற்றவில்லை.

## அலெக்சாந்தருடனும் சீசருடனும் அசோகன் ஒப்பிடப்படுதல்.

மன்னர் யாவரிலும் மிகச்சிறந்தவன் அசோகன் என்றும், அக்காலத்திய நிலையைவிட மிகுந்த முன்னேற்றப் பண்புகள் அவனிடமிருந்தன வென்றும் ஒரு உலகவரலாற்றறிஞர் கூறியிருப்பதை பேரறிஞர் பண்டர்கார் ஏற்றுக்கொள்வர்.‡ இதனல்,

‡ D. R. Bhandarkar, Asoka (1925), P. 232.

அலெக்சாந்தர், ஜூலியஸ்சீசர், மற்றும் பல சிறந்த தலைவர் களைவிட, அசோகன் உயர்ந்தவன் என்று பெறப்படும். உலக வரலாற்றில் அசோகனின் சிறப்பை அறிய, முதலில் நாம் ஒரு அரசனின் கடமைகளை நன்கு உணரவேண்டும். நாம் குறிப்பிட்டுவரும் காலப்பகுதியில் ஒரு உயர்வான அரசன், சிறந்த குணப்பண்புகள் பெற்றோனாகவும், படைவலிமையும், அரசியல் ஆற்றலும் வாய்ந்தோனாகவும் இருக்கவேண்டும், என்பது நாமறிந்ததே. இப்பண்புகளுடன் அவன் ஓர் துறவி யாகவும் பரந்த நோக்கமுள்ளவனாகவும் இருந்தால் மிகவும் நலமாகும். அசோகனிடம் மேற்கூறிய பண்புகள் மிகுதியாகக் காணப்பெற்றன. ஆனால் ஒரு சில அறிஞர், அவன் வெளி யிட்ட ஆணைகளை மேற்கோள்களாகக்காட்டி, அவன் தன்னைப் புகழ்ந்துகொள்ளும் தன்மைவாய்ந்தவன் என்று கூறுவர். ஆனால் ஒரு சில செய்திகள் மிகைப்படுத்தப்பட்டிருப்பினும், பொதுவாக நோக்குமிடத்து அசோகனின் பண்புகள் போற் றற்குரியனவே. அலெக்சாந்தரிடம் காணப்பட்ட குறைபாடு கள் சிலவற்றை நாமறிவோம். அசோகனிடம் நாம் காணும் உயர்ந்த பண்புகள் சில அவனிடமில்லை. சீசரின் ஒழுக்கநெறி போற்றற்குரியதன்று. அவனுடைய நாட்டுப் பற்று, விரிவான தன்னலப்பற்றேயாகும். பண்புடைமையைப் பொறுத்தவரை, அசோகன், அலெக்சாந்தரையும் சீசரையும் விட உயர்ந்தவன் என்பதில் ஐயமில்லை. பிந்திய இருவரின் புகழைவிட முன்னவனின் புகழ் மிகுதியாகும். அலெக்சாந் தர், கலைப்பண்பு முன்னேற்றத்துக்காக, முதன் முயற்சி புரிந்தவன் என்பது உண்மையே. கலப்புமணம், ஒற்றுமைப் பட்ட இராணுவப்பணி, கிரேக்கக் கல்வியைப் பரவச்செய்தல், முதலிய செய்திகளில் அவனுடைய கருத்துக்கள் மிகவும் சிறப்பானவையாகும். படைவீரன் என்ற முறையிலும் அலெக் சாந்தரின் பெருமை இணையற்றதாகும். ஆனால் அசோகனின் நிலை முழுதும் வேறு வகையானதாகும். அவனுடைய படைத் திறமையைப் பிற சிறந்த போர் வீரருடன் ஒப்பிடுவதற்குத் தேவையான குறிப்புக்கள் நமக்குக் கிடையாது. சீசர், சிறந்த படைத்தலைவனாகவும், அரசியல் திறமை வாய்ந்தவ னாகவும், ஆற்றல் வாய்ந்த சொற்பொழிவாளனாகவும் சிறந்த

வரலாற்றறிஞனுமிருந்தனன். ஆகவே ஒவ்வொருவரிடமும் சில தனிச் சிறப்புக்கள் காணப்படுகின்றன. அசோகன் அரசியல் ஆற்றலில் எவ்வாற்றானும் சிறப்புடையவனே. ஒழுக்கத்துறைக்குரிய பண்பில் அசோகன் பிற மன்னர்களை விடச் சிறந்தவன் என்ற கருத்தைக்கொண்டு சில அறிஞர் அவனை மன்னர் மன்னன் என்று புகழ்வர். தனித்தனிச் சிறப்புப் பண்புகளைப் பொறுத்தவரை, அசோகனுடன் பிறரை ஒப்பிடுதல் பயனற்றதாகும். பல பண்புகளில் அசோகன் உயர்ந்தவன். அவனுக்குரிய தனிப் பண்புகளில் அவன் இணையற்றவன்.

## பகுதி 5

### பிற்கால மோரியர்.

### (கி. மு. சுமார் 232 — 188).

### அசோகனின் பின்வந்த மன்னர்.

அசோகன் சுமார் கி. மு. 232ல் இறந்தபின், புஷ்ய மித்திரன் அரசு கட்டிலேறிய வரையுள்ள சுமார் அரை நூற்றாண்டில் குறுகிய கால வாழ்வுபெற்ற பல மோரிய அரசர் ஆட்சிபுரிந்தனர். ஆனால் அவர்தம் குல வழி, கால வரலாறு முதலிய குறிப்புக்கள், பெரும்பாலும் தெளிவற்றவை. அசோகனுக்குப் பல பிள்ளைகளும், பல பெயரன்களுமிருந்தனர். குனாளன் என்ற அவன் மகன் எட்டாண்டுகள் பெயரளவில் ஆண்டதாகத் தெரிகிறது. பின்போந்த அவன் மகன் தசரதன், நாகார்ச்சுனி குன்றத்தில் எடுத்த கற்குகைகளில் மூன்று கல்வெட்டுக் குறிப்புக்கள் காணப்பெறும். அவன், அவற்றில் “ தேவனாம்பிரிய தசரதன் ” என்று குறிப்பிடப்படுகிறான். அவனுக்குப் பின்வந்த அவன் உடன்பிறந்தானான சம்பிரதி, சமண நூல்களில் புகழப்படுகிறான். அவன் பல சமணப் பள்ளிகள் எடுத்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பாடலிபுத்திரத்திலும் உச்சயினியிலும் அவன் ஆட்சி உறுதியுடனிருந்ததாகக் காணப்படுகிறது. மோரிய மரபின் இறுதி மன்னன்

பிருகத்ரதன் என்பானுவன். குலவழியில் அவன்நிலை தெளி வாக அறியப்படவில்லை. அவ்வரசன், தன் சொல்லைக் காப்பாற்றுதவன் என்றும், தன் படையைப் பார்வையிடும் பொழுது, புஷ்யமித்திரன் என்ற படைத்தலைவனுல் கொல்லப் பட்டனன் என்றும் பாணன் என்ற கவி குறிப்பிடுகிருன். பிற்கால மோரியர் பெரும்பாலும் பேரரசின் நடுப் பகுதியுடன் இணைக்கப்பட்டிருப்பதால், தொலைவிலிருந்த மண்டலங்களை அவர்கள் இழந்திருக்கக் கூடும். கலிங்கத்தின் ஆதிக்கம் வளர்ந்தது. விதர்ப்ப நாடும், ஆந்திர நாடும் உரிமையுடன் வளர்ச்சியுற்றன. காச்மீரமும், காந்தாரமும் தன்னரசு எய்தின. மோரியப் பேரரசு வீழ்ச்சியுற்ற பின்னரே, வெளி நாட்டினர் படையெழுச்சி வட இந்தியாவில் ஏற்பட்டதாகக் கருதுவது தகும்.

## வீழ்ச்சிக்குக் காரணங்கள்.

ஒரு துணைக்கண்டமான இந்தியாவில், மண்டலங்கள் உரிமைபெற்று எழுவதால் நடு ஆட்சி மெலிவடைவது இயற்கை. மிகுந்த ஆற்றல்வாய்ந்த மன்னர், திறமையான அமைச்சருடன், பரந்த பேரரசை நிறுவினர். சிக்கலான ஆட்சிமுறை அமைப்பினுல், பேரரசு கண்காணிக்கப்பட்டு வந்தது. வழிவழியாக அரசுரிமைபெறும் குலத்தில் (இளங் கோக்கள், அர்த்த சாத்திரமுறையில் நன்கு கல்விப் பயிற்சி அளிக்கப்பட்டிருப்பினும்,) பெருமைசால் வேந்தர் பலர் தோன்றுவது அரிது. பெரும்பான்மையில், தந்தையின் அரிய வெற்றிகள், பிள்ளைகளின் உள்ளுறைவான திறமைக்குக் கெடுதி விளைவிக்கக்கூடும். ஆனுல் இக்கருத்துக்கு பிம்பிசார னும் அசோகனும் விலக்காவர். முடியாட்சி என்ற பெய ருக்கு நாம் கொள்ளும் கருத்து, அக்காலத்தவரால் அறியப் படவில்லை. அதிகாரங்கள் முழுமையும் ஒரே இடத்தில் மையப்படுத்தியிருப்பதுவே அக்காலத்தில் காணப்பட்ட முறை யாகும். அசோகனுக்குப் பின்போந்த மன்னருள் முதல்வனுகக் கருதப்படும் குணுளன் குருடன். இவனும் இவன் பின் போந்த பலரும், அர்த்தசாத்திர முறையின்படி ஆட்சி நடத்துவ

தென்பது இயலாததாயிருந்தது. அசோகனுக்கு, நான்கு மனைவியர் இருந்ததால், அவர்கள் பிள்ளைகளும் பெயரன்களும் அரசுரிமைக்காகக் கலகம் செய்ததிலும் வியப்பில்லை. நடு அரசின் ஆற்றலின்மை, மண்டலங்கள் தன்னரசு பெறுவதற்குக் காரணமாயிற்று. அசோகனின் காலத்தில், புத்த சமயம் கற்பித்த அமைதிக் கொள்கையினுல் கேடு விளைந்தது என்று கூறுவது பொருந்தாதது என்பது முன்னர் குறிப்பிடப் பட்டது. பின்வந்தோரில் பலர் பௌத்தரல்ல. சம்பிரதி ஒரு சமணன். ஜலுகன் ஓர் சைவன். மேலும் அசோகன் காலத்திலேயே, ஆட்சிமுறையில் சில இடையூறுகள் காணப்பட்டதென்பது, இரண்டாவது கலிங்க ஆணையிலிருந்து அறியக் கிடக்கிறது. தட்சசீலத்தில், பிந்துசாரன், அசோகன் ஆட்சிக் காலங்களில் அமைதியின்மை நிலவியதாகவும் பின் அது நீக்கப்பட்டதாகவும், இலக்கியங்களிலிருந்து தெரியவருகிறது. இவை யாவும் பாடலிபுத்திரத்திலிருந்து தொலைவிலிருந்த மண்டலங்களை ஆட்சிபுரிவது எளிதானதன்று என்பதை உணர்த்தும். தமக்குள் கலகம் செய்துகொண்ட ஆற்றலற்ற பல அரசர்களின்கீழ் சீர்கேடுகள் பெருகலாயின.

## சமயத்தொடர்பான காரணங்கள்.

அசோகன், இந்து சமயத்தைப் போற்ருது புத்த சமயத்தைப் பின்பற்றியதால் கேடுகள் விளைந்து பேரரசு மெலிவுற்று வீழ்ச்சியுறத் தொடங்கியது என்ற கருத்தை நாம் நன்கு ஆராய்வது இன்றியமையாததாகும். அசோகன் இந்து சமயத்தின் பகைவனுக இல்லாதபோதிலும், அவன் கொள்கையை விரும்பாதவர் இல்லை என்று கூறமுடியாது. அவனுக்குப்பின் போந்தோர், பல மதத்தினராவர். பௌத்த மன்னர்களும், அசோகன் கொள்கையை முறையாகக் கடைப்பிடித்திருக்க முடியும் என்று கூறுவதற்கில்லை. புஷ்யமித்திரன் என்ற பிராமணன் புத்த சமயத்தை வெறுத்துத் துன்புறுத்தினுன். ஆயினும் அப்படைத்தலைவன், பகற்பொழுதில், பிருகத்ரதனைக் கொலைபுரிந்தது, பின்னவனின் ஆற்றலின்மையை நன்கு காட்டா நிற்கும். அத்தானைத்தலைவனின் உட்கருத்து தெளி

வற்றதாயிருப்பினும், அரசுரிமையைப் பெற்றபின்பு பிராமண சமயத்தைப் போற்றி வளர்த்தான் என்பது தெளிவு. ஆகவே முடிவாக, மோரியப் பேரரசின் வீழ்ச்சி உள்நாட்டுக்காரணங் களைப் பொறுத்ததே; வெளிநாட்டினர் படை யெழுச்சியால் ஏற்பட்டதன்று. பிற்கால மன்னரின் ஆற்றலின்மை, பேரரசின் சிதைவை விரைவுறச்செய்தது. நடு ஆட்சியின் சீர்கேடான நிலையை, பிராமண சமயத்தினர் பயன்படுத்திக்கொண்டனர்.

## பகுதி-6

### சமயம்.

புத்த சமயத்தின் முன்னேற்றம் முன்னர் குறிப்பிடப் பெற்றது. அசோகனுக்கு முன்பு, சமணம் மிகுந்த (புத்த சமயத்தைவிட மிகுதியாக) முன்னேற்றத்தைப் பெற்றிருந்தது. சந்திரகுப்தன், தென்னிந்தியாவுக்குச் சென்றதாக உள்ள கதை, அப்பகுதியில் சமணம் பரவியதைக் குறிக்கும். சுமார் கி. மு. 300ல், ஆடை அணிவதைப்பற்றிய கருத்துவேறு பாட்டினுல், சமணரிடை, திகம்பரர், சுவேதாம்பரர் என்ற இரு பிரிவுகளேற்பட்டன. பின்னவர் பாடலிபுத்திரத்தில் ஒரு மாநாடு கூட்டி அதன் பயனுக ஏற்றுக்கொண்ட சமயச் சட்டங் களை, திகம்பரர் மறுத்தனர். கி. பி. முதல் நூற்றுண்டில் இப் பிரிவு முடிவான உருவையடைந்தது. அசோகனும், சம்பிரதி யும் சமணத்தை ஆதரித்தபோதிலும், மகத நாட்டில் அதன் செல்வாக்கு குறைந்து, கி. மு. மூன்றும் நூற்றுண்டில் அது உச்சயினிக்குப் பரவியது. அந் நூற்றுண்டில் ஆசீவகர் செழிப்புடனிருந்தனர். மலைப்பகுதிகளில் சைவமும், வட மதுரையில் வைணவமும், சிறப்புற்றிருந்தன. கந்தன் வழி பாடும் இருந்ததாகத் தோன்றுகிறது.

## பகுதி 7.

### பொருளாதார நிலை

#### ஊர்களும் நகரங்களும்.

ஊர்கள், ஆங்காங்கு அமைந்த சாதனங்களுக்குத் தக்க வாறு பலவகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அவை உரிமை யுடன் தமது அலுவல்களைக் கண்காணித்து வந்தபோதிலும்,

மத்திய அரசியலார், அவற்றின் முன்னேற்றத்தில் முயற்சி எடுத்துக்கொண்டனர். பல நகரங்கள் இருந்தன. மிகவும் சிறப்பானவை, கோட்டைகளால் காக்கப்பெற்றன. சாலை களில், கழிவுநீர்ப்பாதைகள் அமைக்கப்பட்டிருந்தன. தீயினால் அழிபாடு நேராமல், முன்னேற்பாடு செய்யப்பட்டிருந்தது. உடல்நலத்துக்குரிய வழிகள் வகுக்கப்பெற்றன.

## உழவுத்தொழில்.

பல கூலங்கள் பயிரிடப்பட்டன. சிறப்பாக கரும்பு வளர்ச்சிக்கு அரசியலார் மிகுதியாக உதவினர். மெகஸ்தனீசு, உழவர் "நேர்மையாகவும், சிக்கனமாகவும் அறிவாற்றலுட னும், உழைப்பாளிகளாகவும்" இருந்ததாகக் குறிப்பிடுவன். போரினால் அவர்களுக்கு இடையூறு ஏற்படவில்லையாம். காடு களைச் செழிப்புறச் செய்ய ஒரு தனி அதிகாரி அமர்த்தப்பட் டிருந்தனன்.

## கைத்தொழில்.

சுருங்கைவேலை, நெசவு, நாவாய்கட்டுதல் முதலியன சிறப் பாகக் குறிப்பிடத்தக்கன தச்சுவேலையும், வடிவமைத்தலும் முன்னேறின. தொழிற் கழகங்கள் செழிப்பான நிலையிலிருந் தன. கலைத்தொழிலாளர், அரசியலாரால், தனித்தமுறையில் காப்பாற்றப்பட்டனர். அடிமை முறை நிலவியது.

## வாணிகமும், நாணயமுறையும்.

நாவாய்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி, துறை முகச் சட்டங்களை நிறைவேற்றுவதுடன், ஆண்டுவரும் பொருள் களுக்கு வரிகள் விதித்துவந்தான். அயல்நாட்டு வாணிகம், சிறப்பான நிலையிலிருந்தது. உள்நாட்டு வாணிகம், ஆறுகள், சாலைகள், கால்வாய்கள் முதலியவற்றின் வழியாக நடை பெற்றது. தலைமையான சாலை, பாடலிபுத்திரத்தை, தட்ச சீலத்துடனும் சிந்துவெளியுடனும் இணைத்தது. தென்னிந்தியா வுடனும் வாணிகத் தொடர்பு நிலவியது. வைரம், முத்து,

பொன் முதலியன தென்னிந்தியாவிலிருந்து வட இந்தியாவுக்கும் தோல், குதிரை, கம்பளம் முதலியன வடக்கிலிருந்து தெற்கேயும் அனுப்பப்பட்டன. உள்நாட்டு, வெளிநாட்டு வாணிக முறைகள் அரசியலாரால் கட்டுப்படுத்தப்பெற்றன. வணிகர் கழங்கங்கள் பல தனி உரிமைகளுடன், செழிப்புற்று விளங்கின. அர்த்தசாத்திரத்தில், பொன், வெள்ளி, செம்பு நாணயங்களும், தவணை உண்டியும் ( Bill of exchange ) குறிப்பிடப்படுகின்றன.

### வாழ்க்கை நிலை.

மெகச்தனீசு, நாட்டில் வறுமை கிடையாது என்று குறிப்பிட்டிருப்பதற்கு மாருக, சமணர் மரபுரையில் பன்னிரெண்டு ஆண்டுகள் வறுமை நிலவியதாக ஓர் செய்தி உளது. மேலும், அர்த்தசாத்திரம், அரசியலார், வறுமைக்காலத்தில் எடுத்துக் கொள்ளும் முயற்சிகளை விளக்குகிறது. பேரரசின் சிறப்பு மக்களின் பெரும்போகவாழ்க்கைக்கு உதவியளித்தது.

## பகுதி-8.

### இன வாழ்க்கை.

### சாதி முறை.

சாதிமுறை, *சிக்கல் நிறைந்ததாயிருந்தது. கலப்பு மணமுறையினலும், தொழில் வளர்ச்சியாலும், சாதிகளில் பல உட்பிரிவுகள் தோன்றியிருந்தன. பிராமணர் குருமாராக இருந்தபோதிலும், வேதகாலத்திய பிராமணர் நிலைக்கும் நாம் குறிப்பிடும் இக்காலத்திய அவர்தம் நிலைக்கும் வேறுபாடுகளிருந்தன. அவர்களுக்குச் சில தனி உரிமைகள் அளிக்கப்பட்டிருந்தன.

### பெண்டிர் நிலை.

தர்ம சூத்திரங்களைவிட, அர்த்தசாத்திரம், பெண்டிரைப் பொறுத்தவரை, கடுமையற்றதாக இருப்பது நோக்கற்பாலது. அவற்றில் உள்ளதுபோலவே, எட்டுவகையான மணவினை,

அர்த்தசாத்திரத்தில் குறிப்பிடப்படும். மகளிருக்கு கௌடில்ய னின் நூல் மிகுந்த உரிமை அளிக்கிறது. பிள்ளைப்பேறில் லாத காரணத்தால் மனைவி விலக்கப்படக்கூடும். குறிப்பிடப் பட்ட சில காரணங்களைக்கொண்டு, கணவன், மனைவியாலும் விலக்கப்படலாம். அதுபோலவே ஆடவர், சில காரணங்களுக் காக, மறுமணம் புரிந்துகொள்ள முடியும். சட்டங்களால், மங்கையரின் வாழ்க்கைநிலை கட்டுப்படுத்தப்பட்டது.

## பகுதி 9.

### மக்கள் பண்பாடு.

### எழுதும் முறையும் மொழியும்.

அரசனின் கட்டளைகளைப்பற்றி கௌடில்யன், ஒரு அதிகா ரத்தில் குறிப்பிடுவதைக்கொண்டு, எழுதும் முறையில் மிகுந்த முன்னேற்றம் காணப்பட்டதாக அறிகிறோம். மெகச் தனீசு, மக்கள் எழுதும் முறையை அறிந்திலர் என்றும், எழுதப்பெற்ற சட்டங்கள் கிடையாதென்றும் கூறியிருப்பதை, மறுக்கும் வகையில், அசோகன் கல்வெட்டுக்கள் அமைந் துள்ளன. வடமொழி இந்துசமய இலக்கியங்களிலும், பிரா கிருதம் அரசியலிலும் பயன்படுத்தப் பெற்றன. உள்நாட்டு மொழிகளின் முன்னேற்றத்திற்கு அசோகனின் ஆணைகள் உதவின.

### இலக்கியம்.

அர்த்த சாத்திரத்தின் சிறப்பைப்பற்றி முன்னர் குறிப் பிடப்பெற்றது. பிற்பகுதி " தர்ம சூத்திரங்கள் " இக்காலப் பகுதியில் தோன்றின. பிந்துசாரனின் அமைச்சனுன சுபந்து (வாசவதத்தை எழுதிய ஆசிரியனன்று) ஒரு வடமொழி நாடகம் எழுதினுனென்று, பிற்கால இலக்கியக் குறிப்பி லிருந்து அறியப் படுகிறது. சந்திரகுப்தன் காலத்தில் சமண சமயச் சட்டங்களும் அசோகனின்கீழ் பௌத்தச்சட்டங்களும் ஓரளவு உருவாயின. அசோகனின் கல்வெட்டு ஆணைகளையே ஒருவகையில் இலக்கியமாகக் கொள்ளலாகும்.

## கல்வி.

மோரியப் பேரரசினுல், தட்சசீலத்தின் பல்கலைக்கழகம் நற்பயன் அடைந்திருக்க வேண்டும். கௌடில்யன், கல்வியின் பல பகுதிகளை விளக்குகிருன். அவற்றுள் மெய்விளக்க நூல் தலையான சிறப்பைப் பெறுகிறது. சாங்கிய தத்துவமும் அதி லடங்கும். சமணமும் புத்தமும் மக்கள் கல்விக்கு மிகவும் உதவிபுரிந்தன.

மீமாம்ச சூத்திரங்களின் ஆசியரான சைமினி, கி. மு. மூன்ரும் நூற்ருண்டில் வாழ்ந்திருக்கவேண்டுமென்று, பேரறிஞர் ஜாகோபி கூறுவர். பிரம்ம (வேதாந்த) சூத்திரங்கள் எழுதிய பாதராயணர், சைமினியின் காலத்தவர்.

## கலை.

பார்க்காமிலும் பாட்னுவிலும் கிடைக்கப்பெற்ற உருவச் சிலைகள் சிசுநாக மன்னரைக் குறிக்குமென்ற கோட்பாடு மேலும் ஆராய்ச்சியினுல் நன்கு வலியுறுத்தப்படுமாயின், இந்தியக் கலையின் தோற்றத்தைப்பற்றிய நமது கருத்து மாறுத லடையும். அசோகனுக்கு முற்பட்ட காலத்தில் பெரும்பாலும் காணப்பெற்ற மரக்கட்டையாலான கலை வேலைகள் முழுவதும் அழிந்துவிட்டன. கிரேக்கர் தரும் இலக்கியச் சான்றுகள் மட்டுமே சந்திரகுப்தன் காலத்திய கலைச்சிறப்பை அறிய உதவுகின்றன. அசோகன் காலத்திய சிற்பக்கலை உயர்வைக் கொண்டும் சந்திரகுப்தன் காலத்திய கலை மேன்மையை ஓரளவு ஊகித்துக்கொள்ளலாம். பாடலிபுத்திரத்தில் கண்டு பிடிக்கப்பட்ட பல தூண்களையுடைய ஒரு மண்டபத்தின் எஞ்சிய பொருள்களில் ஈரானியக் கலைச்சாயல் புலப்படு கிறது. அசோகன் காலத்திய பல நினைவுச் சின்னங்களில் ஒரு சிலவே கிடைத்துள்ளன. அக்காலத்திய தூபிகள் (ஒவ் வொன்றும் ஓரே கல்லில் உருவாக்கப்பட்டவை) நேர்த்தியான மணற்கல்லால் செய்யப்பட்டிருப்பினும் உலோகத் தூண்கள் போலச் சிறப்பானவை. அவற்றின் உயரம் 40 முதல் 50

அடிவரை உள்ளது. அவற்றில் பத்து தூண்களில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றின்மேல் சிங்கம், யானை, காளை முதலிய விலங்குருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிலெல்லாம், மிகவும் சிறப்பாக விளங்குவது, சாரநாத் சிற்பமேயாகும். நான்கு சிங்கங்களை அதில் காண்கிறோம். அவ்விலங்குகளின் வலிமையை, சிற்பம் நன்கு எடுத்துக் காட்டுகிறது. உயிர்பெற்றுள்ள விலங்குகளைப்போல் அவை காட்சி அளிப்பது மிகவும் போற்றற்குரியது. அறிஞர்கள் அச் சிற்பத்தை மிகவும் வியந்துள்ளனர். சாஞ்சி கற்றூண் சிங்கமும் சிறப்புக்குரியதே. இந்திய சிற்பத்தின் முதிர்ச்சி இதனால் நன்கு விளக்கப்படுகிறது.)

(அசோகனும், தசரதனும், ஆசீவகருக்குப் பரிசாக அளித்த, கற்குகைகள் (கடினமான தீப்பாறையாலானவை) விடாமுயற்சியுடனும் சிறந்த திறமையுடனும் ஆக்கப்பெற்றவை. அவற்றின் உட்புறம், "கண்ணாடியைப்போல் மெருகிடப்பட்டுள்ளது". அடையாளங்களிடப்பட்ட காசுகளில் கலைவேலை யாதுமில்லாதபோதிலும், அக்கால நகைத்தொழிலாளர், மணி இழைப்போர் முதலியோரின் திறமை, போற்றப்பட வேண்டியதாகும்.)

பாறைக் கல்வெட்டுக்கள் பின்வரும் இடங்களில் காணப்பட்டுள்ளன. ஷாபாஸ்காரி மான்சேரா. (பெஷாவர், ஹஸாரா மாவட்டங்கள்), கால்சி (டேராடூன் மாவட்டம், உத்தரபிரதேசம்), பெய்ராத் (ஜெய்பூர் - இராசபுதனம்), சகஸ்ரம் (ஷாஹாபாத் மாவட்டம் - பீஹார்), ரூப்நாத் (ஜபல்பூர் மாவட்டம் - மத்திய நாடு), கிர்னார் (கத்தியவார்), சொப்பாரா (தாணா மாவட்டம் - பம்பாய்), மாஸ்கி, கோபால் (ஹைதராபாத்), எர்ரகுடி (கர்நூல் மாவட்டம் - சென்னை), சித்தபுரம், ஜதிங்க இராமேஸ்வரம், பிரம்மகிரி (சிதால்-ட்ரக் மாவட்டம்-மைசூர்), தௌளி (பூரி மாவட்டம் – ஒரிஸ்ஸா), ஜௌகதா (ஒரிஸ்ஸா). இப்பாறைகள், தூண்களுடன் ஒப்பிடுகையில், குறைவான கலைச் சிறப்பைப் பெற்றுள்ளபோதிலும், அவற்றிலுள்ள எழுத்துக்கள் மிகவும் அழகாக உள்ளன.

## மோரியக் கலையின்தன்மை.

மோரியக்கலையின், உயர்வையும், நுட்பமான அமைப்பையும், உணர்ச்சிதரும் தன்மையையும், சர்ஜான் மார்ஷெல் சிறப்பித்துள்ளார். பேரறிஞர் ஸ்மித், அக்காலத்தில், கல்லை வெட்டி வேலைசெய்வோரின் திறமையை மிகவும் புகழ்ந்து பெரும்பாலும் இருபதாம் நூற்றுண்டின் ஆற்றலையும் அது விஞ்சி நிற்கிறது என்று கூறுவர். §

சார்ஞத்சிற்பத்தில், ஈரானிய, கிரேக்க கலைச்சாயல் காணப்படுவதாக, சர்ஜான் மார்ஷெல் கருதுகிருர். ‡ ஆயினும் ஈரானிய சிற்பத்தைவிட, கலை அமைப்பில் மோரிய சிற்பம் சிறந்ததென்பர். மோரியர், அயலாருடன் தொடர்பு கொண்டிருந்ததை நோக்குங்கால் கலைத்தொடர்பும் ஏற்பட்டிருக்கலாம் எனத்தோன்றுகிறது. பாறைகளிலும் தூண்களிலும் எழுத்துக்கள் வெட்டும் கலை மிகுதியாக விரும்பப்பட்டமைக்கு ஈரானியத்தொடர்பு காரணமாகுமென்று கருதப்படுகிறது. இந்தியர் பிறரிடமிருந்து பெற்ற கலைப்பண்புகளை, தமக்கே உரிய பண்புகளுடன், எளிதில் பிரித்தறிய முடியா வகையில் கலந்துகொள்ளும் திறமை வாய்ந்தவ ரென்றும், மோரியக்கலையில் போதுமான அளவு, பிறிதின் சார்பற்ற தனித்தன்மை விளங்குகிறதென்றும் ஓர் பிரெஞ்சு அறிஞர் (Le Bon) கூறுவர். கி. மு. ஐந்தாம் நூற்றுண்டில் ஆதென்ஸ் நகர்க்கலைஞரின் சிறப்பும் அத்தகையதே.

ஒரு சில அறிஞர், மோரியப் பேரரசின் தோற்றம், ஈரான், மாசிடோனியா முதலிய நாடுகளுடன் இந்தியா கொண்டதொடர்பால் விளைந்ததாகும் என்றும் சாலை அமைத்தல், நீர்ப்பாசனமுறை முதலியனவும் ஈரானிய முறையைப் பின்பற்றி ஏற்பட்டவை என்றும் வேறுசில பழக்க வழக்கங்களும் அத்தொடர்பால் ஏற்பட்டதாகவும் கூறுவர். ஆனல் சில பழக்கங்களில் ஒற்றுமையிருப்பதற்கு விளக்கம்கொடுக்க,

§ Smith, Asoka, p. 136.

‡ C. H. I., p. 622.

அயலாரிடமிருந்து பெறப்பட்டிருக்கக்கூடும் என்று கூறுவது சிறப்பன்று. பொதுவான மரபிலிருந்து தோன்றியதின் விளைவாக அத்தகைய ஒற்றுமை ஏற்பட்டிருக்கலாம். மேலும், அயல் நாட்டைப்பற்றி முதலில் கருதுவதைவிட, இந்தியாவில் உள்ள நிலையை ஆராய்ந்து, விளக்கம்காண முயல்வது சிறப்புடையதாகும். வேதகாலத்திலிருந்து சிறிது சிறிதாக, இந்தியாவில் அரசியல் ஒற்றுமை வளர்ந்து வந்ததென்று நாமறிவோம். தவிர, பண்டையசெய்திகளை நினைவுறுத்தும் தன்மை, கௌடில்யனின் அர்த்தசாத்திரத்தில் புலப்படும். ஆகையால் தக்கசான்றுகளின்றி, இந்தியா, ஈரான் அல்லது கிரீசுக்குக் கடப்பாடுடையது என்று வற்புறுத்திக் கூறுவதற்கில்லை. ஆயினும் மோரியர்காலத்திய இந்தியாவில் ஓரளவு அயலார் கருத்துக்கள் பரவின என்பது உண்மையே.

### மோரியரின்கீழ், கலை முன்னேற்றத்துக்குரிய காரணங்கள்.

முதல் மூன்று மோரியப் பேரரசர், கலைப்பண்பு முன்னேற்றத்துக்கு இன்றியமையா அருஞ் செயல்களாற்றி கலையை வளர்த்தமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். பேரரசின் பொருளாதார மேன்மையும் மக்களை, கலைத்தொண்டில் ஈடுபடச்செய்தது. மேற்கு ஆசியாவுடன் இந்தியா கொண்ட தொடர்பும் கலை வளர்ச்சிக்கு ஒரு காரணமாகும். அனைவற்றிற்கும் மேலாக, அசோகனின் கொள்கைகள் கலை முன்னேற்றத்துக்கு உதவின.

## பகுதி-10

### தென்னிந்தியா.

அர்த்தசாத்திரத்தில், பாண்டியநாட்டைப்பற்றியும், முத்து, பருத்திஆடை முதலிய அந்நாட்டின் சிறந்த பொருள்களைப்

பற்றியும் குறிப்புக்கள் காணப்படுகின்றன. மெகத்தனீசும் பாண்டிய நாட்டைச் சிறப்பிக்கின்றன். சங்க இலக்கியத்தில் மோரியர் தென்னிந்தியாவில் படையெடுத்ததைப்பற்றிய குறிப்புக்கள் உள. அசோகனின் கல்வெட்டுக்கள், தென்னிந்தியாவின் அரசியல் நிலையையும், ஈண்டு புத்த சமயம் பரவியதையும் அறிவிக்கும். ஈழநாட்டுச் செய்திக் கோவையும், தீபகற்ப இந்தியாவில் புத்த சமயம் பரவியதைத் தெரிவிக்கின்றது. கலிங்கநாட்டைப்பற்றி முன்னர் குறிப்பிடப் பெற்றது. இரண்டாம் பாறைக்கல் ஆணை, "தாம்ர பருணி" வரை நிலைத்திருந்த சோழர், பாண்டியர், சத்தியபுத்திரர், கேரள புத்திரர் ஆகியோர், அசோகன் பேரரசின் பக்கத்திலிருந்ததாகவும், அப்பேரரசனின் திட்டங்களால் அவர்கள் நலமடைந்தனரெனவும் குறிப்பிடுகிறது. பதின்மூன்றும் பாறைக் கல் ஆணை. சோழர், பாண்டியர் ஆகியோரின் இடங்களிலும் (தாம்ர பருணி வரை) அசோகன் அறிவிக்கும் அறம் பரவியதாகக் கூறும். சத்தியபுத்திரர் என்ற சொல் யாரைக் குறிப்பிடுகிறதென்பது சிக்கலான செய்தியாகும். சத்தியபுத்திர நாடாக, பல இடங்கள் பல அறிஞரால் பேசப்பட்டுள்ளன. நாம் கேரளத்திற்கும் (திருவாங்கூர், கொச்சி, மலையாளம்) சோழபாண்டிய நாடுகளுக்கும் இடைப்பட்ட பகுதியே (அஃதாவது கொங்குதேசம் - கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்கள்) சத்தியபுத்திர நாடாகக் கொள்ளலாம். தாம்ரபருணி என்ற சொல், தாமிரவருணி ஆற்றுப் பகுதியைக் குறிக்கலாமென்று கருதப்படும். ஆனால் அப்பகுதி பாண்டிய நாட்டில் உட்பட்டு விட்டது. ஆகையால் அச்சொல், தாப்ரபோன் என்று கிரேக்கரால் அழைக்கப்பட்ட ஈழநாட்டைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். சாதவாகனரும், கலிங்கநாட்டு சேதரும் கி. மு. மூன்றும் நூற்றாண்டினிறுதிப் பகுதியில் உரிமை பெற்றனர். கிறித்தவ ஆண்டின் ஆதி நூற்றாண்டுகள்வரை, தமிழ்நாடுகளின் தெளிவான அரசியல் வரலாறு அறியப்படவில்லை. நாம் குறிப்பிட்டு வரும் காலப்பகுதியில் "தொல்காப்பியம்" என்ற புகழ்பெற்ற தமிழ் இலக்கண நூல் தோன்றியிருக்கலாம் என்பது சிலர் கருத்து.

## அதிகாரம் 5.

## கி மு. இரண்டாம் நூற்றுண்டு முதல் கி பி. மூன்ரும் நூற்ருண்டுவரை.

## பகுதி 1

### சுங்கரும் கண்ணுவரும்.

**காலம் :-**

மோரியர், 137 ஆண்டுகள் ஆட்சி புரிந்ததாக புராணங்களினின்று அறியப்படுவதால், புஷ்யமித்திரனுல் அவர்கள் தோற்கடிக்கப்பட்டது (325—137) = கி. மு. 188ம் ஆண்டில் என்று கருத வேண்டும். புஷ்யமித்திரசுங்கன், 36 ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததால் (188 — 36) = கி. மு. 152 இவனது இறுதிக்காலமாகும். இவனுட்பட பத்து சுங்க மன்னர் 112 ஆண்டுகள் ஆட்சிப்புரிந்ததால் இக்குலம் (188-112)= கி. மு. 76ல் முடிவுற்றிருக்கவேண்டும். சுங்கருக்குப் பின் போந்த கண்ணுவர் 45 ஆண்டுகள் (அஃதாவது 76-45= கி. மு. 31 வரை) ஆட்சி புரிந்தனர்.

### புஷ்யமித்திர சுங்கன்.

பிருகத்ரத மோரியன் (சுமார் கி. மு. 118 — 152) படை உதவிகொண்ட அமைச்சரால் நம்பிக்கைக் கேடான வகையில் கொலே செய்யப்பட்டான். புஷ்யமித்திரன் ஒரு "அனுர்யன்" (தாழ்ந்தவன்) என்றும், கொலேயுண்ட மன்னன் தன் வாக்குறுதியை நிறைவேற்றத் தவறினுனென்றும் பாணன் குறிப்பிடுகிருன். படைத்தலேவனுல் பிருகத்ரதன் அழிக்கப் பட்டதாகப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. 'சுங்க' என்பது புஷ்யமித்திரனின் மரபுப்பெயர். இவனது குடும்பப் பெயர் 'பெய்ம்பிகா' (**Baimbika**) என்பதாகும். இவன், குருமார் வகுப்பைச் சேர்ந்த ஒரு பிராமணனுகக் கருதப்படுகிருன். ஆனுல், கி. மு. இரண்டாம் நூற்ருண்டில், ஒரு பிராமணன் பேரரசின் படைத்தலேவனுக அமர்வது இயல்புக்குப் பொருந் தாததாக இருக்கின்றது. ஆகவே இவன் பிராமண குலத்த வன் என்ற கருத்து, அறிஞரால் ஆழ்ந்து ஆராயப்படும்

ஒன்றுகும். உச்சயினுக்கு அண்மையில் விதிசா என்ற பகுதி, சுங்க மரபினரின் புராதன இடமாக இருக்கக் கூடும்.

## பேரார் வெல்லப்படுதல்.

முதல் மூன்று சுங்க மன்னரைப்பற்றி காளிதாசனின் மாளவி காக்னிமித்திரம் சிறிதளவு அறிவிக்கின்றது. புஷ்யமித்திரனின் மகனும் விதிசாவின் அரசப்பகர ஆளும் (Viceroy) ஆன அக்னிமித்திரன், விதர்பநாட்டின் யஜ்னசேனனுடன் பகைமைகொண்டு அவன் நாட்டில் படையெடுத்து, மன்னனை விரட்டிவிட்டு, பட்டத்துக்குரிய இருவர்களுக்கு அந்நாட்டைப் பங்கிட்டுக் கொடுத்து, அவர்களை சுங்கருக்குப் பணியச்செய்தான். காளிதாசனின் நாடகம், அக்கினிமித்திரனின் மகன் வசுமித்திரன் சிந்து ஆற்றங்கரையில் கிரேக்கருடன் போரிட்டு வென்றதையும் குறிப்பிடுகிறது. இலக்கண அறிஞர் பதஞ்சலி குறிப்பிட்டுள்ள புஷ்யமித்திரனின் அசுவமேத வேள்விக்கு இஃது முன்னேற்பாடாகும். புஷ்யமித்திரனின் ஆருவது மகனுன தனதேவனின் அயோத்திக் கல்வெட்டு (வடமொழியிலுள்ளது) முன்னவனை "மூன்று குதிரை வேள்விகள் செய்தவன்" என்று சிறப்பிக்கின்றது. பதஞ்சலி குறிப்பிடுவது முதலாம் வேள்வியா அல்லது இரண்டாவதா என்பது அறியப்படவில்லை.

## காரவேலனல் தோற்கடிக்கப்படுதல்.

கலிங்க மன்னன் காரவேலனின் "அதிகும்பா" (Hathigumpha) என்னும் யானைக்குகையில் செதுக்கப் பெற்றிருக்கும் கல்வெட்டொன்று, அவனது எட்டாம் ஆண்டு ஆட்சியைப்பற்றிக் குறிப்பிடுகையில், கோரதகிரியை அவன் தாக்கிச் சூறையாடியதாகவும், இராசகிருகத்தில் அவன் படையெடுத்த காரணத்தால், டெமெட்ரியஸ் (Demetrios) என்ற யவன வேந்தன் (வட) மதுரைக்குப் பின் வாங்கியதாகவும் அறிவிக்கிறது. பத்தாம் ஆண்டு ஆட்சியில் பாரத வர்ஷத்தில் அவன் (காரவேலன்) படையெடுத்தானும். பனி

ரெண்டாம் ஆண்டு ஆட்சியில் மீண்டும் காரவேலன் மகதத்தில் படையெடுத்து, தனது யானைகளை "சுகங்கிய" மாளிகையில் கட்டிவைத்து, மகத மன்னன் பகசதிமித்திரனை அடக்கி, நந்தகுல மன்னன் ஒருவனால் முன்னர் எடுத்துச் செல்லப்பட்ட ஒரு சமண உருவச்சிலையுடனும், போரில் கைப்பற்றப்பட்ட வேறுபல பொருள்களுடனும் தனது நகருக்குத் திரும்பியதாக அக்கல்வெட்டினின்று அறியலாகும். இக் குறிப்புகளிலுள்ள 'பகசதிமித்திரன்' என்ற பெயர், பிருகஸ் பதிமித்திரனைக் குறிப்பிடுகின்றதா என்ற கேள்வி விளக்கப் படுதல் வேண்டும். அறிஞர் K. P. செயஸ்வால், கல் வெட்டுகள், காசுகள் முதலியவற்றின் சான்றுகளைக்கொண்டு அப்பெயர் புஷ்யமித்திரசுங்கனையே குறிப்பிடுவதாகக் கூறுவர். பகசதி என்பது பிருஹஸ்பதி என்ற வடசொல்லின் பிராகிருதமாகையாலும், பிருகஸ்பதி, புஷ்ய (நட்சத்திரம்) விண்மீனுக்குத் தலைவனானபடியாலும், இவ்வாறு அவர் கருதினார். ஆனால் இதற்குத்தடையாக, காரவேலனின் பகைவன் மகத மன்னன் என்றும், இராச கிருகத்தையே அவன் கைப் பற்றியதாகவும் குறிப்பிடப்பட்டிருப்பதாகச் சிலர் கருதுவர். ஆனால் இவ்வாதாரத்தைக்கொண்டு செயஸ்வாலின் முடிவை எதிர்ப்பது, பாடலிபுத்திரத்தின் "சுகங்கிய" மாளிகையைக் கைப்பற்றிய செய்தியைப் புறக்கணிப்பதுடன், பண்டைக் காலத்திய சுட்டுக்குறிப்புகளுக்கு இயல்புகடந்த சிறப்பை அளிப்பதுபோலவுமாகும். காளிதாசனின் நாடகத்தில் புஷ்யமித்திரன், இறுதிவரை, ஒரு துணைத் தலைவனாகக் காட்சியளிக்கிறான்; இதனால் அவன் பேரரசன் என்பது மறுக்கப்படவில்லை. இராசகிருகம் காவலுடையதாக இருந்தபடியால் அரசன் குழப்பமான காலங்களில் அங்கு தங்கியிருந்திருக்கக்கூடும். ஆகையால், புஷ்யமித்திரனுக்குப் பகையாக, காரவேலன் வட இந்தியாவில் நிகழ்த்திய செயல்கள், ஏற்றுக் கொள்ளத்தக்கன. கிரேக்கர், பாடலிபுத்திரத்தைக் கைப்பற்றியிருந்தகாலத்தில் (கி. மு. 175—168) புஷ்யமித்திரன் தோற்கடிக்கப்பட்டிருக்கக்கூடும். கி. மு. 168-ல் கிரேக்கர் பேரரசுத்தலைநகரை விட்டு வெளியேறியபிறகு, அவனது (புஷ்யமித்திரனின்) இரண்டாவது அசுவமேதவேள்வி நிகழ்ந்திருக்கலாம்.

## கிரேக்கருடன் போர்.

பாக்டிரிய கிரேக்கர் (Bactrian Greeks) பாடலிபுத்திரம் வரை முன்னேறினர் என்பதற்குப் போதுமான சான்றுகள் உள. ஆனால், புஷ்யமித்திரனை எதிர்த்த கிரேக்கப்பகைவன் டெமெட்ரியஸ்ஸா அல்லது மெனண்டரா என்பதுபற்றிக்கருத்து வேறுபாடு இருக்கின்றது. அறிஞர் டார்ன் (Tarn) கிரேக்கச் சான்றுகளைக்கொண்டு, டெமெட்ரியஸ் அவனது துணைத் தலைவர்களான அபோலோடோடஸ், மெனண்டர் ஆகிய இருவருடன் இந்தியாவில் படையெடுத்து வெற்றிகொண்டதாகக் கூறுவர். தட்சசிலத்தைக் கைப்பற்றிய பின்பு, டெமெட்ரியஸ் மெனண்டரைத் தென்கிழக்கு வழியாகப்படையைச் செலுத்துமாறு அங்கு விடுத்து, சிந்துப்பகுதியைத் தான்வென்று, தெற்கில் படையுடன் செல்லுமாறு அபோலோடோடஸ்ஸைக் கட்டளையிட்டு, தட்சசிலத்திற்குத் திரும்பினனும். ஆகவே சாகல நாடு (சயால்காட்) வடமதுரை, சாகேதம் (அயோத்தியில் உள்ளது) பாடலிபுத்திரம், ஆகிய பகுதிகளை வென்றது மெனண்டர் ஆகும். ஆனால், கர்கிசம்ஹிதையின் யுகபுராணம் பின்வருமாறு கூறுகிறது:— "போரில் மூர்க்கத்தனம் மிகுந்த யவனர் மத்தியதேசத்தில் தங்கார். ஐயமின்றி ஒருவருக்கொருவர் கலகம் நிகழும். அவர்களிடையே அச்சந்தரத்தக்கதும் துயரம் மிக்கதுமான போட்டியும் போரும் எழும்".‡ இக்கூற்று கிரேக்க ஆதாரங்களாலும் வலியுறுத்தப்பெறும். யூக்ரடைடீஸ் என்பானல் விளைவிக்கப்பெற்ற குழப்பநிலை, பாடலிபுத்திரத்தை விட்டு கிரேக்கர் வெளியேறக்காரணமாயிற்றென்று அவை அறிவிக்கின்றன. மெனண்டர், தன் தலைவன் டெமெட்ரியஸ்ஸின் கட்டளைப்படி செயலாற்றினன். பகையான இந்திய அரசுகளை எதிர்த்து பாடலிபுத்திரத்தை ஆட்சிபுரிவதில் அயல்நாட்டினருக்கு ஏற்பட்ட இடையூறுகளும், காரவேலன், வடஇந்திய அரசியலில் தலையிட்டதும், கி. மு. 168-இல் கிரேக்கர் பின்வாங்கியதற்கு ஒருவேளை காரணங்களாக இருக்கக்கூடும். அயோத்திவரை (அப்பகுதிஉட்பட) உள்ளபகுதியை புஷ்யமித்திரன் மீண்டும் பெற்றான். தலைநகரையும் அவன்

‡ Tarn, op. cit., p. 454.

அடைந்திருக்கவேண்டும். காளிதாசனல் குறிப்பிடப்பட்டிருப்பது பெரும்பாலும் இரண்டாம் அசுவமேத வேள்வியாக இருத்தல் கூடும். ஏனெனின், தனது பேரன் குதிரையைச் செலுத்துவ தற்குத்தக்க பயிற்சிபெற்றிருந்த சமயத்தில் புஷ்யமித்திரன் மிகவும் வயது கடந்தவனுக இருத்தல் வேண்டும்.

## பௌத்தசமயத்தைத் துன்புறுத்தியதாகக் கூறப்படும் தெளிவாக விளக்கப்படாத செய்தி.

பௌத்த சமயத்தை, புஷ்யமித்திரன் கடுமையாகத் துன்புறுத்தியதாகவும், பல மடங்களை அழித்துப் பல துறவி களைக் கொன்றதாகவும், அம்மதத்தின் பரம்பரைக்கதைகூறும். "ஆரிய மஞ்சுஸ்ரிமூலகல்பம்," அவனை மிகவும் கொடியவ னென்றும் நரகில் அவனுக்கு இடமிருப்பதாகவும் பேசும். புஷ்யமித்திரன் பிராமண மதத்தை ஆதரித்தானென்பது அசுவமேத வேள்விகளினின்று நன்கு புலப்படுகிறது. அவன் பௌத்த மதத்தைப்போற்றினனென்பதற்குச் சான்றுகளில்லை. ஆனல் மோரியரை அவன் முறியடித்தபோதிலும், பௌத்த சமயத்தை வேருடன் அறுக்க முற்பட்டானென்று கூறத்தக்க ஆதாரமில்லை. ஆயினும் அவனுடைய தவறுன செயல்களைப் பற்றிய கதை, பௌத்தர்களின் கற்பனையாலுண்டாகியதென்று கூறுவது வரலாற்றுக்குப் பொருந்தாததாகும்.

## அவன்பேரரசின் பரப்பு.

நர்மதை ஆறு வரையுள்ள மோரியப் பேரரசின் நடுப் பகுதியையும், மேலும் சிறிது தெற்கில் (விதர்பநாடு) உள்ள பகுதியையும் புஷ்யமித்திரன் ஆட்சிபுரிந்தான். பஞ்சாபில் அவனுட்சி ஏற்பட்டிருந்தால், கிரேக்கரின் முன்னேற்றத்தை எதிர்த்து நீண்டகாலம் அஃது அங்கே நிலைபெற்றிருந்திராது.

பதஞ்சலி, சுமார் கி. மு. 150-ல் வாழ்ந்ததாகக்கருதப் பட்டபோதிலும், புஷ்யமித்திரனும் அவரும் ஒரே காலத்தவரா என்பது அறியப்படவில்லை.

## அக்கினிமித்திரனும் அவன்பின் வந்தோரும்.

தன் தந்தையின் அரசப் பகர ஆளாக (Viceroy) அக்கினி மித்திரன் செயலாற்றியது முன்னர் குறிப்பிடப்பட்டது. அடுத்த படியாகச் சிறப்புவாய்ந்த மன்னன், சுங்கர் குலத்தின் ஒன்ப தாவது வேந்தனுகிய பாகன் (Bhaga) என்பானுகும். புராணங் களின்படி அவன் 32-ஆண்டுகள் ஆட்சிபுரிந்தனன். அவனது பதினுன்காவது ஆண்டு ஆட்சியில், பெஸ்நகரில் (குவாலியர் பகுதி) ஒரே கல்லில் ஆகிய ஒரு கருட உருவம் அமைக்கப் பட்டது. "ஆந்தியால்கிடஸ் என்ற பேரரசனிடமிருந்து (யவ னன்) காக்குங்கருணையுடன் கூடிய கசிபுத்திர பாகபத்திரனிடம் கிரேக்கத்தூதுவனுக வந்தவனும், தட்சசீலத்தில் வசிப்போனும், டியன் (Dion) என்பானின் மகனும், விட்டுணுவை வழிபடு பவனும் ஆகிய ஹெலியோடோரஸ்ஸால் (Heliodoros) கடவுளர்க்கெல்லாம் கடவுளாகிய வசுதேவனுக்கு" அச்சிலை உரிமையாக்கப்பட்டது. மேற்காணும் விளக்கம் கருடகம்பத்தில் காணும் கல்வெட்டொன்றில் பொறிக்கப்பெற்றுள்ளது. "தன் னடக்கம், அறம், மனச்சான்றுக்கு மாறுபடாமை" ஆகிய மூன்று அழியுருத கட்டளைகளைப் பயிற்சிசெய்வதே, வானுலகை அடையும் வழி என்பதுடன் அக்கல்வெட்டு முடிகிறது.

மேலே குறிப்பிடப்பட்ட இந்தோ-கிரேக்க அரசனுக்கும் சுங்கர்களுக்குமிடையே நிலவிய நட்பையும் ஒரு கிரேக்க அரசியல் தூதுவன் வைணவ மதத்திற்கு மாற்றப்பட்டானென் பதையும், மகாபாரதம் அவனுல் அறியப்பட்டிருந்ததென்பதை யும் இக்கல்வெட்டு புலப்படுத்துகிறது. இக்கல்வெட்டின் முடிவுரை, மகாபாரதத்தினின்று பெறப்பட்டதாகும். சில அறிஞர்கள், ஈண்டு குறிப்பிடப்பட்ட பாகபத்திரனும், ஐந்தா வது சுங்கமன்னனுன ஒத்திரகன் அல்லது பத்திரகனும் ஒருவனே என்று கருதுவர்.

தேவபூதி என்னும் சுங்க வமிசத்தின் இறுதியான அரசன் நெறி கெட்டவன். வாசுதேவ கண்ணுவன் என்ற பிராமண அமைச்சனுல் அவன் கொல்லப்பட்டான். கண் ணுவரையும் எஞ்சியிருந்த சுங்க ஆட்சியையும் ஆந்திரர்

அழித்ததாகப் புராணங்கள் பேசுவதால், தேவபூதிக்குப்பிறகு புகழ்பெருத சில இளவரசர்கள் இருந்திருக்க வேண்டுமென அறியலாகும்.

## சுங்கர்காலச் சிறப்பு.

மோரிய குலத்தைத்திட்டமிட்டு முடிவுறச் செய்ததுடன் கங்கைச்சமவெளியை பாக்டிரிய கிரேக்கரின் தாக்குதல்களினின்று காப்பாற்றியும், பின் அவர்களுடன் நேச உறவு பூண்டும், சுங்கர் சிறப்பெய்தினர். இவர்கள் பிராமண சமயத்தைத்தழுவி, வேதகாலமதமும் குதிரைவேள்வி முறையும் மீண்டும் வளர்ச்சியடைய உதவினர். வைணவம் முன்னேற இவர்கள் செய்த தொண்டு சிறப்பானது. கலைத் துறையில் இவர்தம் தொண்டு பின்னர் கூறப்பெறும். சுங்க, கண்ணுவ ஆட்சிப்பகுதியில் சில பெரும் வடமொழி நூல்கள் இயற்றப்பெற்றிருக்க வேண்டுமென சில அறிஞர் ஊகிக்கின்றனர். ஆதலால் இலக்கியத்துறையிலும் இக்காலம் மேன்மை வாய்ந்ததெனவும், சுருக்கமாக பின்னர் குப்தரின்கீழ் நிலவிய பொற்காலத்தை இஃது முன்னறிவிப்பதாகவும் அவர்கள் கருதுவர். எப்படியாயினும் ஆக்கச்சார்பான வகையில் (Constructive side) மோரியப் புரட்சியைவிட சுங்கப்புரட்சி குறைவுபட்டதென்பது குறிப்பிடப்படவேண்டும்.

## கண்ணுவர். (Kanvas)

புராணங்களின்படி கண்ணுவர், "சுங்கபிருத்தியர்" எனப்படும் பிராமண குலத்தவராவர். சுங்கப்பேரரசின் ஒரு பகுதியை, இக்குலத்தைச்சேர்ந்த நான்கு மன்னர்கள், 45-ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததாக அவைபேசும். முதல் அரசன், வாசுதேவன் என்பானுகும். இறுதி மன்னன் சுசர்மன், ஆந்திரரால் துரத்தப்பட்டனன். கண்ணுவரின் வீழ்ச்சிமுதல் குப்தரின் எழுச்சிவரை, மகதநாட்டின் வரலாறு மங்கியிருந்தது.

## பகுதி 2.

### கலிங்கத்தின் காரவேலன்.

### (காலம் சுமார் கி. மு. 176—163)

அதிகும்பா கல்வெட்டு மோரிய ஆண்டு 165-க்கு உரியது என்று ஏற்றுக்கொண்டால் அதன் காலம் 325—165=கி. மு. 160 என்று கருதலாகும். அக் கல்வெட்டில் காணப்பெறும் 13-ஆண்டுகளின் குறிப்பைக்கொண்டு, காரவேலனின் ஆட்சி, (160+13=) கி. மு. 173-ல் தொடங்கியதாகக்கொள்ளப்படுகிறது. ஆனால் அக்கல்வெட்டு திருத்தி வாசிக்கப்பட்டகாலே, இத்தகைய காலவரையறைக் குறிப்பு புலப்படவில்லே. காரவேலனின் ஆட்சியின் எட்டாவது ஆண்டில் அவன் வட இந்தியாவில் படையெடுத்தான். டெமெட்ரியஸ் மதுராவுக்குப் பின்வாங்கினன். கிரேக்கர் கி. மு. 175-ல் பாடலிபுத்திரத்தைக் கைவிட்டு வெளியேறினர் என்ற கருத்தை ஆதாரமாகக் கொண்டு, காரவேலனின் எட்டாவது ஆண்டு ஆட்சியில் இஃது நிகழ்ந்ததால், காரவேலன் (175 + 8 =) கி. மு. 183-ல் பட்டமேற்றிருக்க வேண்டுமெனக்கூறுவாருளர். ஆனல் அறிஞர் டார்ன் (Tarn) கிரேக்கர் பாடலிபுத்திரத்தினின்று வெளியேறிய காலம், கி. மு. 168 என்று கருதுவதே மிகவும் பொருத்தமானதென்று கருதுவதால்,† (168+8=) கி. மு. 176-ல் காரவேலன் அரியணையேற்றதாக நாம் கூறலாம். பட்டமேற்கையில் அவன் வயது 24 என்பதைக்கொண்டு, (176+24) கி. மு. 200-ல் அவன் பிறந்திருக்கலாமெனக் கருதலாம். குறைந்தது 13 ஆண்டுகள் அவன் ஆட்சிபுரிந்தானென்பது உறுதியாயினும், அவனது இறுதிக்காலத்தை அறுதியிட்டுக்கூற சான்றில்லே. எழுத்து அமைப்பு ஆராச்சியைக்கொண்டு, அறிஞர் பூலர் (Buhler) சுமார் கி. மு. 160-ம் ஆண்டுக்கு அக்கல்வெட்டு உரியதென்பர்.

---

† Ibid., p. 133.

## அதிகும்பா கல்வெட்டு.

கட்டாக் (Cuttack) இற்கு அண்மையில் உதயகிரிமலையின்கண் இந்த யானைக்குகைக் கல்வெட்டு காணப்பெற்றது. சில நிலைகளில் இஃது வாசித்தறியப்பட்டிருப்பது முடிவானதாக இல்லை. காரவேலனின் ஆட்சியில் முதல் பதின்மூன்று ஆண்டுகளில் போர், அமைதி முதலிய அவனது செயல்களை ஒவ்வொரு ஆண்டாக, இக்குறிப்பு சிறப்பித்து வருகிறது. இஃது கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் முற்பாதியில் கலிங்க நாட்டின் ஆதிக்க நிலையை நன்கு விளக்கும், இணையற்ற மதிப்பு வாய்ந்த ஒரு வரலாற்றுப் பத்திரமாகும். சமுத்திர குப்தனின் அலகாபாத்துத் தூண் கல்வெட்டைப்போலவே இதுவும் ஒரு பெரும் வீரனைப்பற்றி அறிய உதவும் நமது ஒரே ஆதாரமாகும். காலமுறைப்படி ஒரு அரசனின் செயல்களையும், அவன் பட்டமேற்குமுன் அவனறிந்த செய்திகளையும் விளக்கும் இந்தியக்கல்வெட்டுக்குறிப்பு இஃது ஒன்றேயாகும்‡ காரவேலனின் "செதுக்கப்பட்ட (உளியால்) வரலாறு" என்று இது போற்றப்பட்டிருப்பது பொருத்தமானதே. இஃது பிராமி எழுத்து வடிவில் அமைந்த பிராகிருதமொழியிலுள்ளது.

### பொருளடக்கம்.

காரவேலனின் மூதாதையரும் சேத (Cheta) குலத்தவனுமான மகாமேகவாகனனைப்பற்றி, முன்னுரைப்பகுதியில் குறிப்பிடப்படுகிறது. பதினைந்தாவது வயது முதல் இருபத்திநான்காம் வயது வரை, பட்டத்துக்குரியவனாக இருந்தகாலத்தில் காரவேலன், முடங்கல் போக்கு வரவு முறை, நாணய முறை, செல்வ அமைப்பு, அரசியல், சமயத்தொடர்பான சட்டங்கள் முதலியனவற்றைக் கற்றறிந்தான். இருபத்தி ஐந்தாம் வயதில் அவன் அரசனானான். அவனது (1) முதல் ஆண்டு ஆட்சியில் தலைநகரை விரிவான முறையில் மிக்க செலவு செய்து செம்மையாக்கி மக்களை மகிழ்வித்தான். (2) மேற்குநோக்கிச்சென்று சாதகர்ணியை மதியாது மூஷிகர்களை அச்சுறுத்தினான். (3) பலவகையான பொழுதுபோக்கு

‡ R. D. Banerji, History of Orissa (1930) I. pp. 71 & 73.

ஆட்டங்களின்மூலம் மக்களை மகிழ்வித்தான். (4) இராஷ்டிரிக ரையும் போஜகரையும் (மேற்கு இந்தியா) வென்ருன். (5) நந்த மன்னன் ஆண்டு 103-இல் (கலிங்கத்தில்) வெட்டப்பட்ட கால் வாய் ஒன்றைத் தன் தலைநகரம் வரை நீட்டினுன். (6 & 7) இராசசூய வேள்விசெய்து, மக்கள் செலுத்திய வரிகளை அவர் களுக்கே திரும்ப் அனுப்பியதுடன் நகர, ஊர்க்கழகங்களுக்கு உரிமைகளை வெளியிட்டான். இவ்வாறு மக்களின் தந்தையாக விளங்கினன். (8) கோரதகிரியை (கயா மாவட்டம்) ச் சூறை யாடி இராசகிருகத்தைத் தாக்கி, டெமெட்ரியஸ்ஸை மதுரா விற்குப் பின்வாங்கச்செய்தான். (9) பல அறங்களைச்செய்து மகா விஜயம் அல்லது பெரும்வெற்றி எனப்பட்ட மாளிகை யைக்கட்டினுன். (10) வட இந்தியாவைத் தாக்கிக் கொள்ளை யிட்டான். (11) ஆவா மன்னனுக்கு உரிய ஒரு வாணிக நகரத்தை அழித்து, 113 ஆண்டுகளாக நிலை பெற்றிருந்த ஆற்றல்வாய்ந்த தமிழ் நாடுகள் கூட்டுறவைத் தனித்தனியாகப் பிரித்தான். (12) பிரகஸ்பதிமித்திரனைத் தோற்கடித்தான்; நந்தமன்னனல் எடுத்துச்செல்லப்பட்ட ஒரு கலிங்கநாட்டுச் சமண உருவச்சிலையை மீண்டும் கைப்பற்றிக்கொண்டான். அங்க நாட்டிடமிருந்தும் மகதத்திடமிருந்தும் மிகுந்த கொள்ளைச் செல்வத்தையும், பாண்டிய மன்னனிடமிருந்து விலையுயர்ந்த பரிசுகளையும் பெற்ருன். (13) சமணத் துறவிகளுக்கு நன் கொடைகள் வழங்கினுன். உயிருக்கும் உடம்புக்குமுள்ள வேறுபாட்டை உணர்ந்தான். பல இடங்களினின்று விருப்பு வெறுப்பு அற்ற துறவிகளை அழைத்துப் பேரவைகூட்டி, விலையுயர்ந்த நிறக் கல்பதிக்கப்பெற்ற நான்கு தூண்களை நிறுவி, ஏழு சமண ஆகமப்பகுதிகள் இயற்றப்படுமாறு செய்தான்.

அமைதியின் மன்னன்; செழிப்பின் வேந்தன் துறவி களின் அரசன்; அறத்தின் வேந்தன்; ஒவ்வொரு பிரிவின ருக்கும் நன்மதிப்பு அளிப்பவன்; பல கோயில்களையும் சீர் செய்வோன்; பெரும் வெற்றிவீரன் முதலிய காரவேலனின் பல பட்டங்களைக் குறிப்பிடுவதுடன் இக்கல்வெட்டு முடிவடை கிறது. அசோகனின் வியப்புக்குரிய அடக்கமான தன்மைக்கு மாருக இஃது அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

## வரலாற்றுச்சிறப்பு.

இந்நீண்ட கல்வெட்டுக்குறிப்பு காரவேலனின், பெற்ரோர், கல்வி, போர்கள், பொதுச்செயல்கள், சமயம், சமயக் கொள்கைமுறை ( Religious Policy ), அரசியல், குணப் பண்பு முதலியவற்றைப்பற்றி அறிவிக்கின்றது. ஆனால் அவனால் இணைத்துக்கொள்ளப்பட்ட நாடுகளைப்பற்றி அது யாதும் கூறவில்லை. அருஞ்செயல் தேடியலையும் வீரனைப்போலவே அவன் காட்சியளிக்கின்றான். அடிக்கடி அவன் போர்புரிந்து வந்தபோதிலும் தன்னை அமைதியின் மன்னன் எனக்கூறிக் கொள்வது நோக்கத்தகும். சாதவாகனருடன் நேர்முகமாக, அவன் போரிலிறங்கினனா என்பதை நாமறியோம். சில அறிஞர் அவன் கூறும் வெற்றிகளைப்பற்றி, சிறப்பாக, புஷ்யமித்திரனின்மீது பெற்ற வெற்றியைப்பற்றி ஐயுறுவர். ஆனால் காரவேலனும் மெனண்டரும் புஷ்யமித்திரனை இருதலைக் கொள்ளி எறும்புபோலத் துயருறச்செய்தனரென்று தோன்றுகிறது. மாறுபாடாகக்கூறும் தக்கசான்றுகள் இல்லாதவரையிலும், - அவைகிடைக்கும் வரையிலும் - காரவேலனின் சொற்களை உள்ளவாறே நாம் நம்பவேண்டிய நிலையிலுள்ளோம். அசோகனைப்போலவே காரவேலனும் பலசமயப் பிரிவினரையும் நன்கு மதிப்பதாகக் கூறுகிறான். சமண சமயத்தை அவன் பின்பற்றியபோதிலும் பிற மதங்களை மறக்கவில்லை. சமணமத விருப்பம் அவனை ஒரு கடுந்தூய்மைச் சமயத்தவனாகச் செய்துவிடவில்லை. பல கட்டிடங்கள் அவனால் எடுக்கபெற்றன. சுருங்கக்கூறின் அவன், கலைத்திறம் நிறைந்த அரசனாயும், விரைவாகப் படைசெலுத்தும் ஆற்றல்மிக்கோனாயும், பெருந்தன்மை பொருந்தியவனாகவும், மக்களால் விரும்பப்பட்டவனாகவும், விடாமுயற்சி கொண்டோனாகவும், ஆட்சி நடத்தினன். அதிகும்பா கல்வெட்டு அதன் காலத்திய நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுவதுடன், நந்தரைப்பற்றியும் தமிழ் நாட்டுக் கூட்டுறவைப்பற்றியும் குறிப்பிடுகிறது. காரவேலனின் வரலாறு அறியப்பட்டமை, பழைய எழுத்துக்கள் ஆராயும் கலையின் உயர்ந்த வெற்றியைக் காட்டா நிற்கும்.

## பகுதி 3

### கிரேக்கரின் படையெழுச்சி.

#### பாக்டிரியா தன்னரசு பெறுதல்.

பார்த்தியா, செல்யூக்கிய ஆட்சியை எதிர்த்துக்கிளர்ச்சி செய்தது. கி. மு, 249—8 இல் அங்கு எற்பட்ட ஆர்சகீதன் மரபு கி. பி. 226—7 இல் சசானிய மரபினரால் தோற் கடிக்கப்படும்வரை தொடர்ந்து ஆட்சிபுரிந்தது. கி. மு. 250-ல் பாக்டிரியா கிளர்ச்சி செய்ததென்பதை அறிஞர் டார்ன் (Tarn) மறுக்கிறுர். முதலாம் டையோடோட்டஸ் (Diodotos) என்ற பாக்டிரிய மண்டலத்தலைவன் கி. மு. 246 இல் இரண்டாம் செலியூக்கஸின் (ஆந்தியாக்கஸ்ஸின் மகன்) உடன் பிறந்தாளை மணந்தான். கி. மு. 230 இல், தான் இறக்கும்வரை டையோடோட்டஸ் கீழ்ப்பட்ட நிலையிலேயே இருந்து வந்தான். அவன் மகன் இரண்டாம் டையோடோட்டஸ், செல்யூக்கிய மரபினருக்குப் பகையாக இருந்தனன். ஆதலால் செல்யூக் கிய இளவரசி ஒருவளை மணம்புரிந்து கொண்ட யூத்திடீமஸ் (Euthydemos) என்பான் இரண்டாம் டையோடோட்டஸைக் கொலைசெய்தான். பின் முடிசூட்டிக்கொண்ட முதலாம் யூத்திடீமஸ் கி. மு. 208-ல் மூன்றும் ஆந்தியாக்கஸ் (செல் யூக்கியப் பேரரசின் தலைவன்) ஸ்டன் சச்சரவிட்டு, பின் கி. மு. 206 இல் அவனுடன் உடன்படிக்கை செய்துகொண் டான். இதனுல், யூத்திடீமஸ்ஸின் கீழ் பாக்டிரியா உரிமை யடைந்தது. சுமார் கி. மு. 189 இல் அவன் இறக்கும்வரை நாட்டை விரிவுறச்செய்வதில் அவன் கருத்தைச்செலுத்தினுன். அவன் மகன் டெமெட்ரியஸ், மேலும் பாக்டிரிய எல்லையைப் பெருக்கினுன். இந்தியாவில் படையெடுத்தவன் இவனே; இவன் தந்தை அன்று.

டெமெட்ரியஸ்:— மாசிடோனிய வரலாற்றுடன் ஒப் பிடத்தக்க வரலாற்று நிலை இக்கிழக்குப்பகுதியிலும் ஏற்பட்ட தாக அறிஞர் டார்ன் (Tarn) கருதுவர். யூத்திடீமஸ்ஸை இரண்டாம் பிலிப்புடனும் பாக்டிரியாவை மாசிடோனியாவுட னும், துணையற்ற மோரியப் பேரரசை பாரசீகப் பேரரசுட

னும் ஒப்பிடலாமென்றும், டெமெட்ரியஸ், இரண்டாம் அலெக் ஸாந்தர் எனத்தக்கவனெனவும் அவர் குறிப்பிடுகிறுர்.‡

டெமெட்ரியஸ், இந்தியாவில் புரிந்த அருஞ்செயல்களை நோக்கின், அவன் முதலாம் தரயஸ்ஸைவிடச் சிறந்தவன் என்பது தெளிவாகும். சுங்கர் வரலாற்றில் டெமெட்ரியஸ் ஸூம் அவனது துணைத்தலைவன் மெனுண்டரும், இந்நாட்டில் போரிட்டதைப்பற்றி குறிப்பிடப்பட்டது. மெனுண்டர், டெமெட் ரியஸ்ஸின் அதிகாரியாக இந்தியாவில் தங்கினன். உச்சயினி, தட்சசீலம், பாடலிபுத்திரம் முதலிய பகுதிகளும், ஆப்கானித் தானம், பெலுசித்தானத்தின் பெரும்பகுதி, ருஷ்ய துருக்கித் தானம், சீன துருக்கித்தானத்தின் ஒருபகுதி, ஆகிய நாடுக ளும், டெமெட்ரியஸ்ஸின் பேரரசுக்குட்பட்டன. செல்யூகஸ் நிக்கேட்டரின் பேரரசைவிட அது பரப்பில் பெரியதாகும்.

## மெனுண்டர்.

நான்காம் ஆந்தியோகஸ்ஸின் அதிகாரி யூக்ரடைடீஸ், (Eukratides) பாக்டிரியாவை வென்று பின் கி. மு. 195-ல் அபோலோடோட்டஸை முறியடித்து, சிந்து ஆற்றைக்கடக்க முயற்சித்தனன். ஆனுல், மெ னு ண் ட ர் அவனைத்தடுத்து வெற்றிகொண்டான். டெமெட்ரியஸ்ஸின் மகளை மணந்து கொண்ட மெனுண்டர், கி. மு. 160 முதல் 150 வரை, காந்தாரம் முதல் மதுரா வரை இருந்த இந்து - பாக்டிரிய நாடுகளின் தலைவனுக இருந்தான். சிந்துவெளியின் பெரும் பகுதி அவன் கீழிருந்தது. சிறிதளவே, கிரேக்கரின் ஆட்சி முறை அவனுல் பின்பற்றப்பட்டது. இந்தியக் கருத்துக்களை அவன் ஆதரித்தனன். டெமெட்ரியஸ் இறந்தபின், சாகலத்தை (Sagala)த் தலை நகராக்கிக் கொண்டு, மெனுண்டர், தானே மன்னனுயினன். 'மிலிந்தபன்னு' (Milindapanha) அல்லது மிலிந்தனின் (மெனுண்டர்) கேள்விகள் என்ற புத்த நூலில், அவன் புத்தசமயத்தை விரும்பிப் போற்றியதாகக் குறிப்புக்கள் உள. ஆனுல் அறிஞர் டார்ன், அவன் பௌத்தன் என்ற கருத்தை மறுப்பர்.

‡ Tarn, op. cit., P. 410.

## பிற்கால இந்தோ கிரேக்கர்.

மெனண்டர் இறந்தபின் ஒரு நூற்றுண்டுக்கு மேலாக, வடஇந்தியாவில் கிரேக்கராட்சி நிலவியது. பாக்டிரியாவில் யூக்ரடைடிஸ்ஸுக்குப்பின்வந்த ஹெலியோகிளீஸ், (Heliokles) கி. மு. 145-க்கும் 141-க்கும் இடைப்பட்ட காலத்தில் காந்தாரத்தையும் தட்சசீலத்தையும் தன்னடிப்படுத்தினன். மெனண்டருக்குப்பின் அவன் மகன் முதலாம் ஸ்ட்ரேட்டோ, (Strato) பருவத்தில் இளையவனுயிருந்ததால் அவன் தாய் அகத்தாக்கிளியா (Agathokleia) என்பாள் அரசியலை நடத்தி வந்தாள். சீலம் ஆறுமுதல் மதுராவரை, அவளாட்சி நிலவியது. சிந்து, கத்தியவார் முதலிய தெற்கு மண்டலங்கள், தன்னரசு பெற்றன. ஹெலியோகிளீசுக்குப்பிறகு, பாக்டிரியாவில் நாடோடி வகுப்பினர் (கி. மு. 140-க்குப்பிறகு) ஆதிக்கம் பெறலாயினர். அறிஞர் டார்ன், அம்மக்கள் யூசி எனப் பெயர்பெற்றவர் என்று கருதுகிறுர். ஹெலியோகிளீசின் பின்வந்த மன்னர்கள், சிறிதுகாலம் இந்துகுஷ்மலைக்கும், சீலம் ஆற்றுக்கும் இடைப்பட்ட பகுதியை ஆட்சிபுரிந்ததாகத் தெரிகிறது. மெனண்டரின் பின்வந்தோர், மேலே குறிப்பிட்டவாறு, சீலம் முதல் மதுரா வரை, உள்ள நாட்டை ஆண்டனர். ஆகவே, வடமேற்கு இந்தியாவில் இரண்டு தனித்த அரசகுலங்கள் ஆட்சிபுரிந்தன.

பெஸ்நகர் கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் அண்டியால் கிடாஸ், (Antialkidas) ஹெலியோகிளீசுக்குப்பின் அரசு கட்டிலேறினன். அவன் தலைநகர் தட்சசீலம். முதலாம் ஸ்ட்ரேட்டோவுக்குப்பின், கிழக்குப்பகுதியில், ஆட்சிபுரிந்த மன்னர், தலைநகரை, சாகலாவிலிருந்து, புசிபலா (Bucephala) வுக்கு மாற்றினர். கி. மு. 120-ல் சகர் என்பார், இந்தியாவில் படையெடுத்து, சிந்துமுதல் கத்தியவார் வரை உள்ள நாட்டைக்கவர்ந்தனர். கி. மு. 80-ல் அவர்கள், சிந்துவெளியில் முன்னேறி தட்ச சீலத்தையும் காந்தாரத்தையும் கைப்பற்றினர்- கி. மு. சுமார் 90-ல் மதுரா, தன்னரசு பெற்றது. ஆனல் கி. மு. சுமார் 60-ல் சகர் அதனை வென்றனர், முப்பது ஆண்டுகள் பின்னர், சீல ஆற்றுக்குக் கிழக்கிலிருந்த ஹிப்போஸ்டிரேடஸ் (Hippostratos) ஸின் நாட்டையும் அவர்,

தம்மடிப்படுத்தினர். சில ஆற்றுக்கு மேற்கில், ஹர்மியூஸ் (Hermaios) என்பானே, யூக்கிரடைடீசின் மரபில் இறுதியானவன். அவன் நாடு, தட்சசீலம், புஷ்கலாவதி, காபிச நாடு என முப்பகுதிகளாகப்பிரிந்தது. கி. மு. 30-ல் பார்த்தியர் அப்பகுதிகளை வென்றனர்.

## இந்திய கிரேக்கராட்சியால் விளைந்த பயன்.

புஷ்கலாவதி, புசிபலா, டெமட்ரியஸ் முதலிய புதிய நகரங்கள் கிரேக்க முறையில் அமையப்பெற்றன. கிரேக்கரின் ஆட்சிமுறையும், கிரேக்க மொழியும் இந்தியாவில் நிலவின. சகர், பார்த்தியர், ஆதிகால குஷானர் முதலியோர், இருமொழிக் காசுகளை வெளியிட்டனர். செல்யூக்கிய ஆண்டு முறை மிகுதியாக வழக்கிலிருந்தது. தவிர, பின்வந்த குலத்தினரால் வேறு புதிய ஆண்டுகளும் தோற்றுவிக்கப்பெற்றன. மேற்குநாடுகளுடன் வாணிகம் மிகுதியாக முன்னேறியது. சில பழக்கவழக்கங்களில், கிரேக்கச்சாயல் இந்தியரிடமும் இந்தியச்சாயல் கிரேக்கரிடமும் பரவியபோதிலும் அவை சிறிது காலமே நீடித்தன. கிரேக்கராட்சியால் இந்தியா சிறப்பான மாறுதலைப் பெரும்பான்மையில் அடையவில்லை என்று அறிஞர் டார்ன் கருதுவர். ‡ முடிவாக, கிரேக்க அரசகுலங்களிடை ஒற்றுமையின்மையாலும், இந்திய நாடுகளின் வலிமையாலும், வெளிநாட்டு நாடோடிகளின் படையெடுப்பாலும், கிரேக்கர் இந்தியாவில் தோல்வியுற்றனர்.

## பகுதி 4

### சகரும் பஹ்லவரும்
### (The Sakas and The Pahlavas)

**சகர்**

இந்தியாவில் இந்தோ - கிரேக்கராட்சி அழிந்தபின்பு குஷானரின் எழுச்சிவரை உள்ள காலப்பகுதியில் பல அயல் நாட்டுச் சிற்றரசரின் ஆட்சி காணப்பட்டது. அவர்தம் குலவழி, காலவரலாறு, பிற செய்திகள் யாவும் தெளிவாக அறியப்

‡ Ibid., p. 408.

பட்டில. இவ்விடையூற்றை நீக்கும் வகையில், சில அறிஞர், சகர் அல்லது சித்தியர் என்பார் அக்காலப்பகுதியில் ஆட்சி புரிந்ததாகக் கருதுவர். இந்தியப் பார்த்தியர் அல்லது பஹ்லவர், என்பார். பார்த்தியரின் கருத்துக்களைப் பின்பற்றிய சகர் என்று கருதப்படுகிறது. கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், யூச்சி என்னும் மக்கள், சகரை, நட்டாசியாவிலிருந்து விரட்டி யிருக்கக்கூடும். சகர், இந்திய கிரேக்கரின் காசு முறையைப் பின்பற்றினர். ஆட்சிமுறையில், பார்த்தியர், கிரேக்கர் ஆகிய இருவகுப்பினரின் பண்புகள், பின்பற்றப்பட்டன. "இராச ராசன்" என்ற பட்டமும் சகரகுல மன்னரால் சூட்டிக் கொள்ளப்பட்டது. அவர்தம் பெயரைப்பெற்ற ஒரு ஆண்டு தோற்றுவிக்கப்பட்டுள்ளது. சகர் அரச குடும்பத்துக்கடிப்பட்ட மண்டதலத்தலைவர் சத்திரபர் எனப் பெயர் பெறுவர். சிறிது சிறிதாக, அவர்கள்; உரிமையான தமதாட்சியை நிறுவலா யினர். வடக்குச் சத்திரபர் என்று அவரை அழைப்பர். மாவஸ் (Maues) என்ற மன்னனும் அவன்பின் போந்தோரும் சிறப் பாகக் குறிப்பிடத்தக்கவர். லியக்கன், படிகன் என்ற இரு சத்திரபரின் பெயர்கள் தட்சசீலச்செப்புப் பட்டயத்தில் குறிப் பிடப்பட்டுள்ளன. மதுராவில், இராசுவூலன், சோடசன் என்ற இரு சத்திரபர் குடும்பங்கள் காணப்பட்டன. முதலாம் ஏசெஸ் என்பான் மாவசுக்குப்பின் பட்டமெய்தினன். தட்ச சீலத்தில் இருந்த சத்திரபர், பஹ்லவராலும், மதுராசத்திரபர் குஷானராலும் முறியடிக்கப்பட்டனர்.

## பஹ்லவர்.

இந்தோ-பார்த்தியர் என்பார், வோனேனஸ், (Vonones) கொண்டோபர்னஸ் (Gondophernes) என்னும் இரு தலைவர் களால் முறையே தோற்றுவிக்கப்பட்ட இரு மரபுகளைச் சேர்ந் தோராவர். அவர் தம் வரலாறு, நாணயச் சான்றுகளைப் பொறுத்ததாகும். கி. பி. 19 முதல் 45 வரை, கொண்டோ பர்னஸ் ஆட்சிபுரிந்தனன். ஆப்கானித்தானமும், தட்சசீலமும் அவனாட்சிக்கு உட்பட்டிருந்தன. கி. பி. மூன்றும் நூற்றாண்டுக் குரிய ஒரு கிறித்துவக்கதையில், அம்மன்னன், தாமஸ் என்ற கிறித்தவத் துறவியால் அவனுடைய மதத்துக்கு மாற்றப்

பட்டனன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அத்தாமஸ், உயர்ந்த குறிக்கோளுக்காக, உயிர்விட்டவர் என்றும் அக்கதை குறிப்பிடுகிறது. பேரறிஞர் ஸ்மித், மைலாப்பூரில் (சென்னை) அத்துறவி உயிர்நீத்திருக்கக்கூடுமென்று கருதுவர். கொண்டோபர்னஸின்பின் வந்தோர் தமக்குள் கலகம் செய்துகொண்டிருந்து முடிவில், குஷானரால் முறியடிக்கப்பட்டனர்.

## பகுதி 5.

### குஷானியர்.

#### கால ஆராய்ச்சி:— தீர்க்கப்படவேண்டிய இடைபாட்டின் தன்மை.

குஷானியரின் காலத்தைப்பற்றிய சிக்கலான செய்தி கனிஷ்கனின் காலத்தைப்பற்றிய ஆராச்சியேயாகும். காட்பிசிஸ் (Kadphises) மன்னர்கள் (முதலாம் காட்பிசிசும் இரண்டாம் காட்பிசிசும்) கனிஷ்கனுக்கு முன்னர் இருந்தவர்கள் என்பது, பழம்பொருள் ஆராய்ச்சிச்சான்றுகளால் தெளிவாக்கப்படுவதால், கனிஷ்கனின் காலத்தைக்கொண்டு, அவர்கள் காலத்தை நாம் முடிவுசெய்யலாம்.

விக்கிரம - சக சகாப்தங்கள் (வரலாற்றுப் பிரிவுகள்) என்ற இரண்டின் தோற்றத்துடன் இக்கால ஆராய்ச்சி தொடர்பு கொண்டுள்ளது. கனிஷ்கன், அவனாலும் அவன் பின்வந்தோராலும் பயன்படுத்தப்பெற்ற ஒரு ஆண்டை (சகாப்தத்தை) தோற்றுவித்தான் என்பதில் ஐயமில்லை. பேரறிஞர் ப்ளீட்டும் (Fleet) மற்றும் சில அறிஞர்களும், கி. மு. 58-57-ல் தொடங்கும் விக்கிரம ஆண்டையே அவன் தோற்றுவித்ததாகக் கருதுகிறார்கள். இவ்வாண்டுகளின் தோற்றத்தைப்பற்றி பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

#### கனிஷ்கனும் சக ஆண்டும்.

விக்கிரம ஆண்டு, முதலாம் ஏசெஸ் (சகர மரபினன்) என்பானாலும் சக ஆண்டு, நகபானன், சஸ்தனன், இரண்

டாம் காட்பிசிஸ் அல்லது கௌதமிபுத்திரசாதகர்ணி என்பாராலும் தொடங்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. சாதவாகனர், அவர்களது ஆட்சியின் ஆண்டுகளை அவர்களது குறிப்புக்களில் தருவதால், ஈண்டு அன்னுரை நீக்கிவிடலாம். நகபானனும், சஸ்தனனும் மண்டலத்தலைவர்களே. ஆண்டுத்தோற்றத்தை மண்டலத்தலைவர்களுக்கு (மாகாண கவர்னர்கள்) உரியதாக்குவதைவிட அரசர்களுக்கு உரியதாக்குவதே சிறந்தாகும். இரண்டாம் காட்பிசிசின் காசுகளும் கல்வெட்டுக்களும், எவ்வாண்டுடனும் இணைக்கப்படக்கூடிய ஒரு காலத்தைக் குறிப்பிடவில்லை. ஆகவே, கனிஷ்கன், காட்பிசிசுகளுக்குப் பிற்பட்டவன் என்ற காரணத்தால் விக்கிரம ஆண்டு அவனுடன் இணைக்கப்பட முடியாது. ஆகவே, சக ஆண்டைத் தோற்றுவித்தவன் கனிஷ்கன் என்று கருதலாம்.

## நான்கு சிறப்பான கோட்பாடுகள்.

கனிஷ்கனின் காலத்தைப்பற்றிய பல கோட்பாடுகளில் ஈண்டு நான்கை மட்டும் ஆராய்தல் போதுமானதாகும் அவையாவன:- கி. மு. முதல் நூற்றுண்டு;- கி. பி. முதல் நூற்றுண்டு;- கி. பி. இரண்டாம் நூற்றுண்டு;- கி. பி. மூன்றும் நூற்றுண்டு.

### கி. மு. முதல் நூற்றுண்டு.

முதல் கோட்பாட்டிற்கு உரிய ஆதாரங்களாவன:- கனிஷ்கனின் காசுகளில் எழுதப்பெற்றுள்ள விளக்கச்சொற்களில் கிரேக்கமொழி காணப்பெறுதல்; கி பி. முதல் நூற்றுண்டின் முற்பாதிக்குரிய முதலாம் காட்பிசிசுக்கு முன்னரே கனிஷ்கன் ஆட்சி புரிந்தானென்ற ஒரு கருத்து; புத்தரின் மறைவுக்கு 400 ஆண்டுகள் பின்னர் கனிஷ்கன் வாழ்ந்ததாக யுவான்சுவாங் குறிப்பிட்டிருத்தல் முதலியனவாகும். ஆனல் தட்சசீலத்தில் நடைபெற்ற புதைபொருள் ஆராய்ச்சிகளின் மூலம் கனிஷ்கன், காட்பிசிசுகளுக்குப் பிற்பட்டவன் என்பது தெளிவாகிறபடியால் முதற்கருத்து இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

## கி. பி. முதல் நூற்றாண்டு.

இரண்டாவது கோட்பாடு நாணயச்சான்றுகளை அடிப்படையாகக்கொண்டது. பல இ ட ங் க ளி ல் சேர்ந்து கிடைக்கும், இரண்டாம் காட்பிசிஸ், கனிஷ்கன் ஆகியோரின் நாணயங்களில் ஒற்றுமைப்பண்புகள் காணப்படுகின்றன. கனிஷ்கன், முதலாம் காட்பிசிசுக்கு முற்பட்டவனாக இருந்திருப்பின் இத்தகைய நிலை ஏற்பட்டிருப்பதற்கில்லை. மேலும், வாசுதேவன் முதலாம் காட்பிசிஸ் ஆகியோரின் காசுகள் சேர்ந்து காணப்பட்டிருத்தல் வேண்டும். ஆனால் அவ்வாறில்லை. ஆதலால் கனிஷ்கன், இ ர ண் ட ா ம் காட்பிசிசுக்குப்பின் வந்தவனாக இருத்தல் வேண்டும் என்று கருதலாம். மேலும் முதலாம் காட்பிசிசின் செப்புக்காசுகளில் உ ள் ள அ வ ன து தலை, உரோமப்பேரரசனை அகஸ்தஸ் (கி. மு. 27—கி. பி. 14) டைபீரியஸ் (கி. பி. 14—37) அல்லது கிளாடியஸ் (கி. பி. 41—54) தலையுடன் ஒத்துள்ளது. தவிர இரண்டாம் காட்பிசிசின் பொற்காசுகள், உரோமப் பேரரசின் ஆதிகாலத்திய சில நாணயங்களுடன் எ டை யி ல் ஒற்றுமைப்பட்டுள்ளன. ஆதலால், இரண்டு காட்பிசிஸ் மன்னர்களும் கி. பி. முதல் நூற்றாண்டின் முற்பாதிக்கும் கனிஷ்கன், அதே நூற்றாண்டின் பிற்பாதிக்கும் உரியோராகக்கருதலாம். காட்பிசிஸ் மன்னர் கனிஷ்கனுக்கு முற்பட்டோரென்பது புதைபொருளாராய்ச்சியால் வலியுறுத்தப்பெறும். ஆ த ல ா ல் கனிஷ்கன், கி. பி. 78-ல் தொடங்கும் சக ஆண்டைத் தோற்றுவித்தவனாகக் கருதப்படலாம்.

## கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.

ஆனால் சில அறிஞர்கள் அ வ ன் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு உரியவனென்பர். திபெத்திய சீன பத்திரக் குறிப்புகளைக்கொண்டு, பே ர றி ஞ ர் ஸ்டென்கொனௌவும் (**Stenkonow**) பழம்பொருள் ஆராய்ச்சிச் சான்றைக்கொண்டு சர்ஜான் மார்ஷலும் இவ்வாறு கருதுவர். சிர் ஸ்டூபா (தட்ச சீலம்) வில் கண்டுபிடிக்கப்பெற்ற கட்டிடங்களில் நான்கு தனித்தனி அடுக்குகள் (படுகை) புலப்படும். ஒவ்வொரு

அடுக்கும் தனித்தனி மன்னர்களின் காசுகளுடன் காணப் பெற்றது. முதல் அடுக்கு (மேற்புறத்தில்) வாசுதேவனின் காசுகளையும் இரண்டாவது, கனிஷ்கன் ஹவிஷ்கன் ஆகியோருடைய காசுகளையும், மூன்றாவது, இரண்டு காட்பிசிஸ் மன்னர்களின் காசுகளையும், நான்காவது, சகர், பஹ்லவர் ஆகியோருக்கு உரியனவற்றையும் கொண்டுள்ளன. கனிஷ்கனுடன் இணைக்கப்பட்டுள்ள நினைவுச்சின்னங்கள், கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்குரிய தட்சசீலச் சின்னங்களை ஒத்துள்ளன. ஆதலால் அவன் அந்நூற்றாண்டவனாக இருத்தல் வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. பேரறிஞர் ஸ்மித், இம்முடிபை ஏற்றுக்கொண்டு குஷானியர் கால வரலாற்றைப் பின்வருமாறு விளக்குவர் :— முதலாம் காட்பிசிஸ் கி. பி 40-ல் ஆட்சி தொடங்கி, 38-ஆண்டுகள் ஆட்சிபுரிந்திருக்கக் கூடும். ஏனெனின், அவன் தனது எண்பதாவது வயதுக்கு மேல் இறந்தபடியாலும் கி. பி. 78-ல் தொடங்கும் ஓர் புதிய ஆண்டை அவன்பின் வந்தோன் தோற்றுவித்திருக்கலாமாகையாலும் இவ்வாறு அவரால் கொள்ளப்பட்டது. அடுத்தபடியாக இரண்டாவது காட்பிசிசின் மிகுந்த வெற்றிகளினாலும், ஏராளமான காசுகளினாலும் அவன் 32-ஆண்டுகள் அரசு செலுத்தியிருக்கலாமென்று கருதப்படுகிறது. பின்னர், காசுகளில் பெயர் குறிப்பிடப்பெறாத ஒரு அரசனுக்கு சுமார் 10-ஆண்டுகள் வழங்கிவிட்டு கனிஷ்கன், (40+38+32+10=) கி. பி. 120-ல் பட்டமேற்றிருக்கலாமென்று எண்ணப்படுகிறது. ஆனால் இரண்டாம் காட்பிசிஸ் ஒரு புதிய ஆண்டைத் தோற்றுவித்தானென்பதற்குத் தக்க ஆதாரமில்லை என்பதை நோக்குதல் வேண்டும். மேலும் முதலாம் காட்பிசிஸ் மிகவும் முதுமைப்பருவத்திலிறந்தபடியால் அடுத்தபடி அவனுக்குப்பின் வந்த மன்னனின் ஆட்சிக்காலம் மிகவும் குறைக்கப்படவேண்டியதாகலாம். இரண்டாம் காட்பிசிசுக்கும் கனிஷ்கனுக்குமிடையே இடைவெளி இன்றியமையாததன்று. அனைவற்றிற்கும் மேலாக, கி. பி. 120-ல் ஒரு புதிய ஆண்டு தொடங்கப்பட்டதென்று நம்புவதற்குத் தக்க காரணங்களில்லை.

## கி. பி. மூன்ரும் நூற்ருண்டு.

கி. பி. 248-9-ல் தொடங்கும் திரெய்கூடக (Traikutaka) ஆண்டுடன் இணைத்து, கனிஷ்கனை, கி. பி. மூன்ரும் நூற்ருண்டுக்கு உரியவனுக்கும் நான்காவது கோட்பாடும் ஏற்றுக்கொள்வதற்கில்லை. ஏனெனின், கனிஷ்கனும், வாசுதேவன் வரையுள்ள அவன் பின் போந்தாரும் சுமார் நூறு ஆண்டுகள் ஆட்சிபுரிந்தனர். முன்னவன் சுமார் கி. பி. 250-ல் வாழ்ந்ததாகக் கருதப்பட்டால், மதுராவையும் ஆட்சி புரிந்த பின்னவனின் காலம் சுமார் கி.பி. 350-ஆகும். ஆனல் சமுத்திர குப்தனின் அலகாபாத் தூண்கல்வெட்டு (சுமார் கி. பி. 350-க்கு உரியது) மதுராவுக்கு மேற்கேயுள்ள இந்தியப்பகுதி, பல குடியரசுக்கூட்டத்தினரின் கீழிருந்ததாக நமக்கு அறிவிக்கின்றது. இக்கல்வெட்டில் விளக்கப்பட்டுள்ள அரசியல் நிலைமை வளர்ச்சியடைவதற்கு, வாசுதேவனுக்கும் சமுத்திரகுப்தனுக்குமிடையே நீண்டகாலம் கடந்திருக்கவேண்டும். ஆகவே, முதல் கோட்பாடும் நான்காவதும் எளிதில் மறுக்கப்பட்டுவிட்டபடியால், இரண்டாவது மூன்ருவது கருத்துக்களிடையே உண்மையான போட்டி காணப்படுகிறது. கி. பி. 78-ல் ஒரு புதிய ஆண்டு தொடங்கும் காரணத்தால் இதனையே கனிஷ்கனின் ஆண்டாக நாம் ஏற்றுக்கொள்வது சிறப்பாகும். ஆதலால் அவ்வாண்டுக்கு முற்பட்ட காலத்தை, முதலிரண்டு காட்பிசிஸ் மன்னர்களுக்கு உரியதாக்கிவிட்டு கி. பி. 78-முதல் கனிஷ்கன் ஆட்சிபுரிந்திருக்கலாமென்று நாம் முடிவு செய்யலாம். அவனது இறுதியான கல்வெட்டு 41-வது ஆண்டைக் (அவனது ஆட்சியின் ஆண்டு) குறிப்பிடுவதால் கி. பி. 120-வரை அவனுட்சி நிலவியிருக்கக்கூடும். ஹுவிஷ்கன், 120-முதல் 138-வரையிலும், வாசுதேவன் 152-முதல் 177-வரையிலும் ஆண்டனராகலாம். இடைப்பட்ட 14- ஆண்டுகளைப்பற்றிய ஆராய்ச்சி தெளிவாகவில்லை.

## முதலாம் காட்பிசிஸ்.

பாக்டிரியாவை, யூச்சி மக்கள் கைப்பற்றிய பின்னர், அவர்கள் ஐந்து (பிரிவினர்களாகி, ஐந்து) குறுநில அரசுகளை

ஏற்படுத்திக்கொண்டனர். அவற்றுள் ஒன்ருன குஷான் அரசின் தலைவனுன, குஜூலா காட்பிசிஸ் (முதலாம் காட்பிசிஸ்) மற்ற பிரிவுகளைத் தன்னடிப்படுத்தி வலிமையுற்ருன். பஹ்லவ அரசின் எஞ்சிய பகுதியை அழித்து அவன் தனது நாட்டை இந்திய எல்லைவரை பரப்பினன். அவனது காசுகளில் உரோமானியச்சாயல் புலப்படுகிறது. "பேரரசன்; மன்னர் மன்னன்" என்று அவன் தன்னைப்போற்றிக்கொள்கிருன். அவன் பௌத்த சமயத்தைச் சார்ந்தவனுகக்காணப்படுகிறது. கி. பி. முதல் நூற்ருண்டின் முற்பாதியில் வாழ்ந்த இவன் தனது எண்பதாவது வயதுக்குமேல் இறந்தனன்.

## இரண்டாம் காட்பிசிஸ் அல்லது வீமா காட்பிசிஸ்.

இவனே இந்தியாவின் வடமேற்குப் பகுதியைக்கைப் பற்றினவனுவன். கிழக்கில் காசிவரை இவனது காசுகள் காணப்பெற்றன. ஆனுல் இதைக்கொண்டு அவன்கைப்பற்றிய பகுதிகள் யாவையும் முடிவுசெய்யலாகாது. மதுராவரையுள்ள நாட்டை அவன் ஆட்சிபுரிந்தானென்று காணப்படுகிறது. "உலகம் முழுமைக்கும் தலைவன்" என்பது போன்ற பல பேரரசப்பட்டங்களை அவன் சூடியிருந்தான். கிரேக்க, இந்திய, எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட அவனது செப்புக்காசுகளும் பொற்காசுகளும் அவன் சிவனை வழிபட்டானென்பதைக் காட்டா நிற்கும்.

## கனிஷ்கனின் பேரரசு. *(கி. பி. 78—120)*

கனிஷ்கன், குஷானருள், மிகவும் போர்ப்பிரியனுயும் திறமை மிக்கவனுயுமிருந்தான். இவன் தான்பெற்ற இந்தியப் பகுதியை, பாடலிபுத்திரம், புத்த-கயா, மாளவம், சிந்து ஆகிய எல்லைகள்வரை விரிவுறச்செய்தான். பாடலிபுத்திரத்திலிருந்து அசுவகோஷன் என்னும் பெரிய பௌத்த ஆசிரியரை இவன், கடத்திச்சென்றதாகக் கூறப்படுகிறது. அவன் பேரரசில் காச்மீரம் உட்பட்டிருந்தது. அவ்விடத்தில் அம்மன்னனின் நினைவுச்சின்னங்கள் காணப்பெற்றுள்ளன. கனிஷ்கபுரம் என்ற நகரை இவன் தோற்றுவித்தான். கனிஷ்கனின் காசுகளும்,

கல்வெட்டுக்களும் பெஷாவர் முதல், காசி, கோரக்பூர் (உத்தரப் பிரதேசம்) நகரங்கள் வரை காணப்பெறும். புருஷபுரம் அல்லது பெஷாவர் என்ற தன் தலைநகரிலிருந்துகொண்டு, க்ஷத்திரிபர், மகாக்ஷத்திரிபர் என்ற அதிகாரிகளின் உதவி கொண்டு இவன் பேரரசை ஆண்டுவந்தான். இந்தியாவுக்கு வெளிப்புறத்திலும் இவன், தன் முன்னோரிடமிருந்து பெற்ற நாட்டைப் பெருக்கினன். கி. பி. 87-ல் "தேவபுத்திரன்" என்று தன்னைப்புகழ்ந்துகொண்டு சீனப்பேரரசனுடன் பகைத் தான். கனிஷ்கனின் முதல் சீனப்படையெடுப்பு தோல்வியில் முடிவடைந்தது. பாஞ்சவோ (Pan-chao) என்னும் சீனத் தானைத் தலைவன் இவனைத் தோற்கடித்தான். ஆனால் பின்னர் பாஞ்சவோவின் மகனான பான்-யாங் (Pan-yang) என்பானை முறியடித்து, கனிஷ்கன், காஷ்கர், யார்க்கந்த், கோடான் (Khotan) முதலிய இடங்களை சீனுவிடமிருந்து பெற்றான். இவன் பார்த்திய மன்னனையும் வென்று புகழெய்தியதாகவும் கூறப் படுகிறது. வடக்கில் படையெடுத்திருந்த காலத்தில் கனிஷ்கன் கொலையுண்டான். கெய்சர் அல்லது சீசர் என்ற பட்டத்தை யும் இவன் சூடியிருந்ததாகக் காணப்படுகிறது. ஒரு புதிய ஆண்டை (பெரும்பாலும் சக ஆண்டு) இவன் தோற்றுவித்தது இவனது பேரரசின் வெற்றி முழக்கத்தைக்காட்டா நிற்கும்.

## கனிஷ்கனின் புத்தசமயப்பற்று.

கனிஷ்கன் புத்தசமயத்தைப் பின்பற்றத்தொடங்கிய காலம் அறியப்படாத போதிலும், அந்நிகழ்ச்சியைப்பற்றி யாதொரு ஐயமுமில்லை. இவன் தன்னுட்சியின் மிக முற்பகுதியிலேயே இச்சமயத்தைத் தழுவினதாகக் காணப்படுகிறது. பௌத்த சமய வரலாறு (கதை) பெரும்பாலும் அசோகனுடன் இணைக்கப் பட்ட செய்திகளைத் திரும்பத் திரும்ப கூறிவருவதால், கனிஷ்கன் புதிய மதத்திடம் கொண்டிருந்த ஆர்வத்தை உண்மையான வகையில் (அதனின்று) அறிதற்கு இடமில்லாமலிருக்கிறது. கனிஷ்கனின் காசுகளில் ஒரு சிலவே, புத்தரின் உருவத்தைக் கொண்டுள்ளன. மற்ற அவனது நாணயங்களில், கிரேக்க, ஸொராஸ்திரிய, இந்துக்கடவுளர்களின் உருவங்கள் காணப் படும், இதனால் இப்பெரிய குஷானப் பேரரசன், சமயத்

துறையில், நற்பண்பு பிரித்தெடுத்துக் கூட்டுகிற தன்மை வாய்ந்தவனாகக் கருதப்படுகிறது (Eclectic). ஆனால் நாணயச் சான்றிலிருந்து இம்முடிவை ஏற்றுக்கொள்ளவேண்டியது இன்றி யமையாததன்று. ஏனெனின், காசுகளில் காணப்பெறும் பல் வேறு கடவுளுருவங்கள், அம்மன்னனின் கீழிருந்த பலதிறப் பட்ட மக்களின் மதங்களைக் குறிப்பிடுவதாகக் கருதலாம். ஆயினும், கனிஷ்கன், புத்தசமயத்தின் அமைதிக்கோட்பாட்டை மனதிற்கொள்ளவில்லை என்பது, அவனது தடையற்ற போர் விருப்பமுள்ள வாழ்க்கை நெறியிலிருந்து புலப்படும். சமயத் துறையில் அவனது உள்ளக்கிடக்கை எவ்வாறிருந்தபோதிலும், தான் தழுவிய மகாயான-புத்தசமயத்திற்கு கனிஷ்கன் மிகுந்த முயற்சியுடன் ஆதரவு அளித்து வந்தான்.

### மகாயானம்.

புத்தரால் கற்பிக்கப்பட்டு, அசோகனால் பரப்பப்பெற்ற பௌத்தசமயத்தினின்றும் மாறுபட்ட புதியவகையான ஒரு புத்தசமயம், கனிஷ்கனின் காலத்தில் தோன்றி வளர லாயிற்று. மாறுபாடுகளடங்கிய புததசமயத்தை 'மகாயானம்' எனவும், பண்டைய அறச்சமயத்தை "ஈனயானம்" என்றும் மகாயான வகுப்பினர் அழைக்கலாயினர். முறையே இவை "பெருவழி" "சிறுவழி" எனப் பொருள்படும். இவற்றின் சிறப்பான வேறுபாடுகளை இவண் சுருக்கிவரைவாம். "நிர்வாணம்" என்ற பயனுள்ள இலக்கை, தன்முயற்சியா லேயே ஒருவன் அடைவான் என்பதை புத்தர் வற்புறுத்தி இருந்தார். அப்பேற்றை அடைவதற்கு பிறருடைய உதவி யையோ, கடவுளரின் துணையையோ நாடுவது பயன் அளிக் காதென்பது அவர்கருத்து. அஃதாவது விதைவிதைத்தவர்களே அதன் பயனையடைய முடியுமென்பதாம். எளிமையும் அவா வெறுப்பும் (கண்டிப்பும்) நிறைந்த இக்கொள்கை கி. பி. முதல் நூற்றுண்டில் மாறுதலடைந்து, புத்தரும், இறந்துபோன மற்ற பல துறவிகளும் மக்களுக்கு, சமய வாழ்க்கையில் துணைபுரியக்கூடுமென்று கருதப்படலாயிற்று. சுருங்கச்சொல் லின், தகுதியுடைமையை இடமாற்றம் செய்வது இயலுமென் பதும் அஃது இன்றியமையாததென்பதும் ஒப்புக்கொள்ளப்

பட்டன. மேலும், "நிர்வாணம்" என்னும் இலக்கை அடைவதிலுள்ள இடையூறுகள் வற்புறுத்தப்பெற்றன. நன்னெறி கொண்ட வாழ்க்கையையுடைய அளவற்ற பிறவிகள் மக்களை போதிசத்துவர்களாகவும், புத்தர்களாகவும் செய்யும் என்றும் முடிவில் "நிர்வாணம்" அடையமுடியுமென்றும் "சத்தர்ம புண்டரிகம்" என்னும் மகாயானநூல் கூறுகிறது. ஆகவே இதன்படி நிர்வாணமாகிய நோக்கம் மிகவும் தொலைவிலுள்ளதாகச் செய்யப்பட்டது. சமய ஒழுக்கத்தில் முன்னேற்றமடைய, வழிபாடும், துதியும் இன்றியமையாதனவாயின. சிலைகள் உருவாக உள்ள பௌத்தக்கடவுளரை, பூவாலும், நறுமணப் பொருள்களாலும், ஆடைகள் அணிவித்தும், விளக்குகளாலும் வழிபட்டுத்துதித்து, அவர்களை மகிழ்விக்கவேண்டுமெனக்கருதப் படலாயிற்று. அறம், தற்பலி (தன்மறுப்பு) சமயப் பற்றுறுதி, முயற்சியான நன்னெறி, யாவும் சிறப்பாகவற்புறுத்தப்பெற்றன. இவ்வாறு, மக்களால் விரும்பப்பெற்று நிலைத்துள்ள ஒரு சமயத்திற்கு இன்றியமையாப் பண்புகள் யாவும், பண்டைய (துறவிகளின்) மட வாழ்க்கை முறையில் புகுத்தப்பெற்றன. புத்தரிடம் மக்கள் கொண்டிருந்த பண்டைய நன்மதிப்பு, அவரை வழிபடும் சடங்குமுறையாக வளர்ச்சியடைந்தது.

## தோற்றம்.

இந்தியாவுடன் கிரேக்கர்கொண்ட உறவு புத்தரை வழிபடுதற்கேற்ற சிலைகள் அமைக்கப்படுவதற்கு ஊக்கமளித்தது.§ அயல் நாடுகளில் பயன் விளையத்தக்க வகையில் மதத்தைப் பரப்புவதன்பொருட்டு பழைய புத்தசமயக் கொள்கைகளில் சில அடிப்படையான மாறுதல்கள் இன்றியமையாதனவாயின. ஆனபோதிலும், கொள்கைகளைப் பொறுத்தவரை, மகாயானத்தின் தோற்றம், பெரும்பாலும் உள்நாட்டுக்குரியதென்றே கருதப்படவேண்டும்.

நீண்டகாலமாக, பல்வேறு பௌத்தப்பிரிவினர் தமக்குள் விவாதித்துக்கொண்டும், கொள்கைகளில் வேறுபட்டுக்கொண்டு

§ A. B. Keith, Buddhist philosophy in India and Ceylon (1923) pp. 216—17.

மிருந்தனர். தகுதி, மாற்றப்பட்க்கூடுமென்ற கோட்பாடு பீட கங்களினல் தோன்றலாயிற்று. திருநிலைத்தூய்மை எய்த (Sanctity) முன்னர் வற்புறுத்தப்பெற்ற நான்கு படிகள் (நிலைகள்) மகாயானப் பிரிவின் "நிர்வாணக்" கொள்கையாக வளர்ந்தன. மேலும், பிராமண மதத்திலும், சைவ, வைணவப் பிரிவுகளிலும் காணப்பட்ட புதிய இயக்கங்கள், மகாயானத்தின் வளர்ச்சிக்குக் காரணமாயின. இப்"பெருவழி", பகவத் கீதைக்குக் கடப்பாடுடையதாகும்.

## சிறப்பு

ஈனயானத்திலிருந்து மகாயானம் வளர்ந்தது, புத்தசமயத் திற்குக் கேடுபயப்பதாகுமென்பது சிலர் கருத்து.‡ சிலவகை களில் இதற்கு ஆதாரமுளது. புதிய புத்தமதம், முரண் புணைவான வானுலகம், நரகம் ஆகியவற்றைச் சிறப்பித்து மக்களின் மூடநம்பிக்கையைப் பெருக்கியது. இம்மதம், புத்த ரின் அடிப்படைக்கொள்கைகளைத் தியாகம் செய்து மக்களின் மதிப்பைப்பெற்றது. ஆனல் புத்தசமயத்தில், பழையமுறை யின் கடுமையான தன்மையைப் பின்பற்ற இயலாத பெரு வாரியான மக்களுக்கு இம்மாறுதல் உதவியாயிருந்தது. இவ்விரு வழிகளும், தனித்தனியே வளர்ச்சியடைந்தபோதிலும், ஒன்றின் குறைபாட்டை மற்றயது நிறைவுபடுத்தும் தன்மை வாய்ந்தனவாகக் கருதப்படவேண்டும்.

## புத்த சமயத்திற்குக் கனிஷ்கனின் ஆதரவு.

சுமார் கி. பி. 100-ம் ஆண்டில் கனிஷ்கன், புதிய சமயத்தின் சட்டங்களை நிலைப்படுத்துவதற்காக, ஸ்ரீநகரின் (காச்மீரம்) அண்மையில் குண்டலவன மடத்தில் நான்காவது பௌத்த மாநாட்டைக் கூட்டினன். ஈழநாட்டுச் செய்திக் கோவையில் இம்மாநாடு குறிப்பிடப்படவில்லை. வேறு சில வரலாற்றுக் குறிப்புகளில், இம்மாநாடு நிகழ்ந்த இடம், காந்தாரம் என்றும், பஞ்சாப் என்றும் இருவகையாகக்கூறப் படுகிறது. வசுமித்திரன், அசுவகோஷன், உட்பட ஐந்நூற்றுவர்

‡ **Eliot, C., Hinduism and Buddhism, II pp. 8—9.**

மாநாட்டில் கலந்துகொண்டனர். திரிபிடகங்களின் விரிவுரையான "மகாவிபாஷா" என்ற நூலை அசுவகோஷன் தயாரித்து வெளியிட்டனன். பின்னர் அவ்விரிவுரைகள் செப்பேடுகளில் பதிக்கப்பெற்று ஒரு பௌத்தத்தூபியின் கீழ் புதைக்கப்பட்டன.

கனிஷ்கன், நட்டாசியாவிலும், சீனுவிலும் புத்தசமயத்தைப் பரப்புவதற்கான முயற்சிகளை எடுத்துக்கொண்டதாகக் கருதலாம். பௌத்தக்கலையையும் இலக்கியங்களையும் இவன் மிகவும் ஆதரவளித்துப் போற்றினுன். அசுவகோஷன், நாகார்ச்சுனன், சரகன் ஆகிய மூன்று தலையான ஆசிரியர்கள் முறையே இலக்கியம், தத்துவம், மருத்துவம் ஆகியவற்றில் சிறந்து விளங்கினர். மதுராவிலும், சாரநாத்திலும் தனித்த உள்நாட்டுக்கலையே சிறப்பெய்தியிருந்தது. மதுராவுக்கு அண்மையில் கண்டெடுக்கப்பெற்ற தலை இல்லாத கனிஷ்கச்சிலையிலும் கிரேக்கச்சாயல் புலப்படவில்லை. ஆயினும் கலைத்துறையில் வட மேற்கு இந்தியா, காந்தாரத்தின் கிரேக்க — பௌத்தக் கலைக்கூடத்தின் ஆதிபத்தியத்தின் கீழிருந்து வந்தது. இதனுல் பல புத்தர் சிலைகள் தயாரிக்கப்பெற்றன. கனிஷ்கன், பெஷாவரில், புத்தரை நினைவூட்டும் அடையாளங்கள் பதிப்பிக்கப்பெற்ற ஒரு ஸ்தூபியை நிறுவினுன். இதைச்செய்தவன் அகிசிலாஸ் **(Agesilaos)** என்ற ஒரு கிரேக்கச்சிற்பி. காந்தாரத்தின் கலை, கிரேக்க, உரோம, இந்தியக்கலைப் பண்புகளின் கலப்பாகும். இதன் தன்மையையும் மதிப்பையும் பற்றி அறிஞர்களிடை கருத்து வேறுபாடு உளது.

இருமொழிகள் கொண்ட கனிஷ்கனின் காசுகளில் பல ஆசியப்பண்புகளைத்தவிர, அவனது முன்னேர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட உரோமானியக் கலைத்திறனையும் காணமுடியும். புத்த இலக்கியம், கனிஷ்கன் அசோகன் இருவரையும் பௌத்த சமயத்தின் உதவியாளர் என்ற வகையில் ஒரே நிலையில் வைத்துப் பேசியபோதிலும், இருவருக்குமிடையே உண்மையான ஒற்றுமையைக்காண்பதற்கில்லை. பௌத்தர்கள் என்ற முறையில், அவர்களிடை வேறுபாடுகள் பலவுள. மேலெழுந்த நோக்குடன் கருதுமிடத்து, இருவரும் மதமாற்றத்தின் விளைவாக பௌத்தர்களாயினர். இருவரும், சமய

சித்தாந்திகள் மாநாடு கூட்டுவது, மதத்தைப்பரப்புதல், சமயத் தொடர்பான கட்டடங்கள் நிறுவுதல் முதலிய தொண்டுகளாற்றி மதநிலேயத்துடன் ஒத்துழைத்தனர். ஆனல் பௌத்த சமயத்தின் ஆதரவாளர் என்ற முறையில் அசோகனுடன் கனிஷ்கனை ஒத்த நிலேயில் வைத்துக்கூறுவதற்கில்லே. எவ்வகையிலும், பிந்தியவனைவிட, முந்தியவனைப்பற்றி நாம் மிகுதியாகவும், தெளிவாகவும் அறியமுடிகிறது. கனிஷ்கன், மகாயானசமயத்தின் சிறந்த ஆதரவாளன் என்பதில் ஐயமில்லே. ஆதலால் இவனை இரண்டாவது அசோகன் என்று கருதுவதைவிட, ''புத்தசமயத்தின் 'கான்ஸ்டண்டைன்'' (Constantine) என்று கூறுவது பொருந்தும்.

## இக்காலப்பகுதியின் மேன்மை.

கனிஷ்கனின் ஆட்சியில் குஷானப்பேரரசு மிகுந்த எல்லேப் பரப்பையும் ஓங்கிய புகழையும் பெற்று விளங்கியது. மகாயான புத்தசமயம், ஆசியாவில் மிகப்பெருஞ் செயல்களை நிறைவேற்றத்தக்க நிலேயில், வலிமையுறச் செய்யப்பட்டது. மதுராவில் சமணசமயம் செழிப்புற்றேங்கியது. சிறிதுசிறிதாக கிழக்கு நோக்கிப்பரவிவந்த உரோமப் பேரரசுடன் குஷானர் கொண்டிருந்த நெருங்கிய தொடர்பு, அக்காலத்திய வாணிகத்திலும், கலேப்பண்பியல்பிலும் நன்கு புலப்படும். சீனவுக்கும் இந்தியாவுக்குமிடையே நிலவழி வாணிக உறவு நிலவியது. அயலார் விரைவில் இந்தியராக்கப்பட்டமை, அக்கால கலேப் பண்பு முன்னேற்றத்தின் சான்ருகும். வெல்லப்பட்ட மக்களின் சமயத்திற்கும் நாகரிகத்திற்கும், அயல் நாட்டினர் பகையாக இல்லே என்பது குறிப்பிடத்தகும்.

## கனிஷ்கனின் பின் தோன்றியோர்.

**(ஹவிஷ்கன். கி. மு. சுமார் 120—138)**:- மாளவத்திலும் சிந்துநாட்டிலும் முதலாம் உருத்திரதாமன் என்ற மன்னன் ஆதிக்கநிலேயடைந்ததின் விளைவாக அப்பகுதிகள் குஷானியப் பேரரசிடமிருந்து பிரிந்ததாக அறியக்கிடக்கிறது. ஆயினும் ஹவிஷ்கன் தன் தந்தை கனிஷ்கனின் நாட்டைச்சிதறவிடாது

ஆட்சிபுரிந்தான். தந்தையைப்போலவே இவனும் பௌத்தனுக இருந்து அச்சமயத்தை ஆதரித்தான். ஹுவிஷ்கனின் காசுகள் கனிஷ்கனுடைய காசுகளைப்போலவே உரோமா முதலிய பல தெய்வங்களின் வடிவங்களைக் கொண்டுள்ளன. மதுராவில் ஒரு பௌத்த மடத்தையும், காச்மீரத்தில் ஹுவிஷ்கபுரம் என்ற நகரையும் இவன் கட்டுவித்தான்.

### வாசுதேவன். (சுமார் கி. பி. 152-177)

குஷானிய வம்சத்தின் கடைசி மன்னனுன வாசுதேவனின் கீழ் குஷானியப் பேரரசின் பரப்பு குன்றியது. இவனது காசுகள், உத்தரப்பிரதேசம், பஞ்சாப், வடக்குசிந்து ஆகிய பகுதிகளில் காணப்படினும், இவனது கல்வெட்டுக்கள் மதுராவில்மட்டுமே உள்ளன. ஹுவிஷ்கனுக்கும் வாசுதேவனுக்குமிடையே உள்ள பதினுன்கு ஆண்டு இடைவெளி, அக்காலத்திய பேரரசுக்கு ஏற்பட்ட இடுக்கண்களை உணர்த்துவதாகக் கருதலாம். வாசுதேவன் என்ற இவன் பெயர் குஷானர் இந்தியராகிவிட்டதை உணர்த்தும். இவனது காசுகளில் சிவனுடைய வடிவமும், நந்தியின் வடிவமும் சிறப்பாகக் காணப்படுகின்றன. பிற்கால இலக்கியங்களினின்று இவன் கல்வி ஆதரவாளன் என்று அறியப்படுகிறது.

### குஷானப்பேரரசின் வீழ்ச்சி.

வாசுதேவனுக்குப்பிறகு வடமேற்கு இந்தியாவில் சிற்சில காலங்களில் உண்ணுட்டு வலிமை பெற்ற குஷானியச்சிற்றரசுகள் சில கி. பி. 9-ம் நூற்றுண்டுவரை காணப்பெற்றன. குஷானியரின் வீழ்ச்சிக்குரிய காரணங்களை விளக்குவது எளிதாக இல்லை. கி. பி. 167-ல் மேற்கில் பரவியிருந்த கொள்ளைநோய் இப்பேரரசைத் தாக்காமலிருந்திருக்க முடியாதென்ற கருத்தை அறிஞர் ஸ்மித் வற்புறுத்துகிருர். குஷானியரின் காசுகளில் பாரசீகப்பண்புகள் காணப்பெறுவதால், வாசுதேவனின் பின் போந்தார் சஸ்ஸானியரின்* வலுக்கட்டாயத் தாக்குதல்கட்கு உட்பட்டிருக்கக் கூடுமென்று எண்ண

* பாரசீகப் பேரரசை, கி. பி. 211 முதல் 651 வரை ஆட்சி புரிந்த குலத்தினர்.

இடமுண்டு. புராணங்களினின்றும், அக்காலத்தில் இந்தியாவில் அயலாரின் படையெழுச்சிகள் அளவிறந்தன என்று அறியக்கிடக்கிறது. குஷானியர் விரைவில் இந்தியராக்கப் பட்டதால், சிந்து ஆற்றுக்கு அப்பாலிருந்த அரசுகளுடன் அவர்கள் போரிட்ட காலங்களில் அவர்களது ஆற்றல் குறைந்திருக்கலாம். கி. பி. மூன்றும் நூற்றுண்டில் வடஇந்தியாவின் வரலாறு தெளிவற்றதாக உள்ளது. சிற்சில காலங்களில், சில பகுதிகளில் மட்டும் சில செய்திகளைப்பற்றி அறிய முடிகின்றது.

## பகுதி-6

### மேலைச்சத்திரபர்.

#### தோற்றம்.

மேலைச்சத்திரபர் அயல் நாட்டவரென்பதற்குச் சான்றுகள் உள. முதலாவதாக அவர்களது ஆதிகாலக் காசுகளில் காருஷ்தி (Kharoshthi) எழுத்து காணப்படுகிறது. மேலும், நாட்டைக்காப்பவன் என்ற பொருளையுடைய "க்ஷத்திரபவன்" என்ற பாரசீகச்சொல் வடமொழியில் க்ஷத்திரபா (அல்லது சத்திபர்) எனப்படும். கல்வெட்டுக்கள் இவர்களை சகர் என்றும் பஹ்லவர் என்றும் வருணிக்கும். தாலமியின் இந்தோசித்தியாவும், முதலாம் உருத்திரதாமனின் நாடும் பெரும்பாலும் ஒன்றுகும். மேற்குச்சத்திரபரில் இரு வமிசங்கள் இருந்தன. ஒன்று பூமகன் மரபு; மற்றயது சஷ்தனனுடையது. பூமகனும் நகபானனும், பஹ்லவர் என்றும், சஷ்தனனும் உருத்திரதாமனும் சகர் என்றும் சிலரால் கருதப்படுவர். சகரும் பஹ்லவரும் ஒன்றுகக்கலந்ததால், அவர்கள் தோற்றத்தைப் பற்றி தெளிவு ஏற்படவில்லை.

#### நகபானன்.

கி. மு. இரண்டாம் நூற்றுண்டின் இறுதியில் இந்தியாவில் படையெடுத்த சகர், சிறிது சிறிதாக மராத்திய நாட்டில் பரவினர். கி. பி. முதல் நூற்றுண்டில், சாதவாகனர் ஆட்சி அவர் வருகையால் வீழ்ச்சியுற்றது. பூமகன், நகபானன்

இருவரின் தலைமையில் மேலைச்சத்திரபர், தமது காசுகளை வெளியிட்டதால் அவர்கள் உரிமை எய்தியிருந்தனரென்று அறியப்படுகிறது. நகபானனின் நாடு பூனைவிலிருந்து அச்மீரம்வரை பரவியிருந்தது. கத்தியவாரும், மாளவமும் அதனுட்பட்டன. பெரும்பாலும் அவன் தலைநகர் நாசிக் என்று கருதப்படுகிறது. கௌதமிபுத்திர சாதகர்ணி என்ற சாதவாகனனால் அவன் தோற்கடிக்கப்பட்டனன்.

### சஷ்தனன்.

மேலைச்சத்திரபரின் இரண்டாவது மரபைத்தோற்றுவித்த சஷ்தனனைப்பற்றி மிகுதியாக அறியப்படவில்லை. அவன், மாளவத்தில் குஷானியரின் கீழிருந்த ஒரு சத்திரபனாக இருந்திருக்கக்கூடும். சாதவாகனரால், மேலைச்சத்திரபருக்கு ஏற்பட்ட இடுக்கண், சஷ்தனின் பெயரன் உருத்திரதாமனால் நீக்கப்பட்டது. இனி உருத்திரதாமன் வரலாற்றை வரைவாம்.

### முதலாம் உருத்திரதாமன். *(சுமார் கி. பி. 130—150)*

உயர்வான வடமொழியிலுள்ள முதல்பெரும் கல்வெட்டு உருத்திரதாமனுடையதாகும். இதுவே புகழ்வாய்ந்த கிரினார் கல்வெட்டு. பெரும் புயற்காற்றினாலுண்டான வெள்ளத்தால் அழிவுற்ற சுதர்சனா ஏரியின் அணைக்கட்டு மீண்டும் நிறுவப்பெற்ற பின்னர் அக்கல்வெட்டின் செய்தி இயற்றப்பெற்றது. (நவம்பர் 16 கி. பி. 150) அக்குறிப்பில் அவ்வேரியின் வரலாறு சுருக்கமாக வரையப்பட்டுள்ளது. சந்திரகுப்த மோரியரின்கீழ் மாவட்டத்தலைவனாயிருந்த வைஸ்யபுஷ்யகுப்தனால் அது கட்டப்பட்டது. யவனதுஷாஸ்பன் என்பானால்,† (ஈரானியனாக இருக்கக்கூடும்) அசோகமோரியனின் சார்பில் நீர்ப்பாசனக்கால்வாய்கள் அமைக்கப்பெற்றன. குழாய்களும் வடிகால்களும் பொருந்தி அழகுடனும், திண்மையுடனும் விளங்கிய ஏரியின் கரைகள், கல்வெட்டில் சிறப்பிக்கப்படுகின்றது. சுருக்கமாக "அழகுநிறைந்தது" என்ற பொருளையுடைய சுதர்சனம் என்னும் பெயருக்குப்பொருத்தமாக

† M. S. Commissariat, A History of Gujarat (1938), p. XXV

அவ்வேரி, பெரும்புயற் காற்றுக்கு முன்பு காட்சியளித்ததாக அறியப்படுகிறது. அதனை, "துர்தர்சனம்" அல்லது அழகற்ற ஏரியாகச்செய்த புயலின் அழிபாடுகள், கவரத்தக்கவகையில் வருணிக்கப்பட்டிருக்கின்றன. உருத்திரதாமன், அவ்வேரி முன்னிலும் மும்மடங்கு வலிமையுற்றிருக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் குறுகிய காலத்தில் மிகுந்த செலவுசெய்து பழுது பார்த்து அதனை "சுதர்சனதாரம்" (மிகுந்த அழகு பொருந்தியது) என விளங்குமாறு செய்தான்.

## உருத்திரதாமனின் குணப்பண்பும், திறமையும்.

உருத்திரதாமனின் குணப் பண்பையும், திறமையையும் விளக்கும் கல்வெட்டுக் குறிப்புகளிலுள்ள யாவற்றையும், சில அறிஞர்கள், சிறிதும் மாறுபடாத உண்மையாக ஏற்றுக்கொண்டபோதிலும், அவை மரபு வழக்கமுறையை யொட்டியதாகவே காணப்படுகின்றது. அவன் மக்களால் மன்னனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. போரில் அன்றி மற்ற எக்காலத்திலும் மக்களை அவன் கொன்றதில்லையாம். கொள்ளைக்காரர்களாலும், பாம்புகள், நோய்கள் முதலியவற்றாலும் அவ்ன் நாடு துயருறுத்தப்படவில்லை என்றும் கூறப்படுகிறது. இலக்கணம், அரசியல், இசை, தருக்கம் முதலிய கலைகளில் அவன் தேர்ச்சிபெற்றிருந்ததன்றி படை ஆற்றலிலும் சிறந்து விளங்கினான். அவன் இயற்றிய உரைநடைப் பகுதிகளும், செய்யுட்பகுதிகளும், அழகாகவும், தெளிவாகவும், மனத்திற்கேற்றதாகவும், கவர்ச்சிகரமாயும், இனிமையாகவும் உள்ளன. அவனது உடல், வலிமையும் அழகும் நிறைந்ததாயிருந்தது. தன் முயற்சியினாலேயே "மகாசத்திரபன்" என்ற பட்டத்தை அவன் பெற்றான். வரிச்சுமை, கட்டாய உழைப்பு அல்லது வலுக்கட்டாயக்கடன் வசூலித்தல் ஆகியவற்றால் அவன் மக்களை துன்புறுத்தவில்லை. கல்வெட்டின் இப்பகுதி, வரலாற்றுச் சிறப்பை மிகுதியாகப்பெற்றிராத போதிலும், ஆட்சி அமைப்பு முறையிலும் இலக்கியத்துறையிலும் அக்காலத்தினரின் நோக்கங்களைக்காட்டா நிற்கும். மேலும், அயல் நாட்டினர் எத்துணை விரைவில் இந்தியர் ஆயினரென்பதையும் இது உணர்த்துகிறது.

## இக்கல்வெட்டுக்குறிப்பின் வரலாற்றுச் சிறப்பு.

உருத்திரதாமன் பேரரசின் பரப்பு, யௌதேயரும், இருமுறை சாதகர்ணியும் அவனால் தோற்படிக்கப்பட்டமை, சுதர்சன ஏரியைச் சீர்செய்வதிலேற்பட்ட செலவுகளை விரும்பாத அமைச்சர்கள் எதிர்ப்பு, அமாத்திய சுவிசகன் என்பான், ("கத்தியவாரின் தலைவன்") ஏரியைச் சீர்செய்தல், ஆகியவற்றைப்பற்றிக் குறிப்பிடும் பகுதிகள் மிகவும் சிறப்புவாய்ந்தவை. ஆணையாளர்கள், அறிவுரை கூறுவோர் என்ற இருவகை அமைச்சர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். மிகுந்த செலவில் ஏரியைச்சீர்செய்ய அமைச்சர்கள் உடன்படாதிருந்த காலத்தில் உருத்திரதாமன் மக்களின் துயரை நீக்குவதற்காக, தனக்கு உரியதான செல்வத்தை ஏரிக்காக செலவிட்டானும்.

### சாதவாகனருடன் போர்.

சாதகர்ணி என்பானை உருத்திரதாமன் இருமுறை தோற்கடித்தும், அவனை அழிக்கவில்லை. இதற்குக்காரணம், அவர்கள் இருவருக்குமுள்ள "உறவு" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சாதகர்ணி என்பான் யார்? இக்கேள்விக்கு விடை சாதவாகனரின் கால ஆராய்ச்சியைப் பொறுத்ததாகும். இதைப்பற்றி அறிஞரிடை கருத்து ஒற்றுமை காணப்படவில்லை. ஆதலால் கௌதமிபுத்திரசாதகர்ணி முதல் யஜ்னசாதகர்ணி வரை உள்ள பல பெயர்கள் தோற்கடிக்கப்பட்ட சாதகர்ணியுடன் ஒற்றுமைப் படுத்தப்படுகின்றன. இந்நூலில் பின்பற்றப்பட்டுள்ள கால வரலாற்றின்படி கி. பி. 130-ல் கௌதமிபுத்திரன் ஆட்சி முடிவடைந்துவிட்டது. அவன் பின்போந்த வசிஷ்டிபுத்திர புலுமாயி அக்காலந்தொட்டு சுமார் கி. பி. 158-வரை ஆட்சி புரிந்தான். ஆகையால், இப்பின்னவனே உருத்திரதாமனால் இருமுறைகள் தோற்கடிக்கப்பட்டிருக்க வேண்டும். இவன், மகாசத்திரபனின் மருமகன் என்ற கருத்து "நெருங்கிய உறவு" என்ற குறிப்பினால் மறுக்கப்படும். கனேரி குகைக்கல்வெட்டு, வசிஷ்டிபுத்திர சாதகர்ணியின் மனைவி உருத்திரதாம மகாசத்திரபனின் மகள் என்று குறிப்பிடுகிறது. ஆகையால் மேற்குறிப்பிட்ட மருமகன், புலுமாயியின் உடன்பிறந்தானாக இருக்கலாம்.

## பேரரசின் பரப்பு.

மாளவம், கத்தியவார், மார்வார், கட்சு, சிந்து, வடக்கு கொங்கணம் முதலிய அ ர சி ய ல் பிரிவுகள் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருப்பதினின்று உருத்திரதாமனின் பேரரசின் பரப்பு தெளிவாகிறது. இவைகளில் முதலிரண்டும் இறுதியானதும், கௌதமிபுத்திர சாதகர்ணிக்கு உரியதாயிருந்தன. நாசிக்கும் (Nasik) மேலுந் தெற்கிலிருந்த சாதவாகனநாட்டுப் பகுதிகளும், தோ ற் க டி க் க ப் ப ட் ட சாதகர்ணியிடம் இருந்தபடியால் அவன் உருத்திரதாமனால் பெருந்தன்மையுடன் நடத்தப்பட்டன னென்பது வலியுறுத்தப்படுகிறது.

## முதலாம் உருத்திரதாமனின் பின் வந்தோர்.

சஷ்தன வமிசத்தவரில் இருபது இளவரசர்கள் ஆட்சி புரிந்தனர். கல்வெட்டுக்களும், காசுகளும், குலவழி, கால வரலாறு ஆகியனபற்றிய முழு விளக்கங்களை அறிவிக்கின்றன. முதலாம் உருத்திரதாமனின் பி ன் வ ந் த பதினெண்மர், "சத்திரபர்" அல்லது மகாசத்திரபர் என்ற பட்டத்தைப்பெற்றிருந்தனர். கி. பி. 236-க்கும் 238-க்குமிடைப்பட்ட காலத்தில் ஈஸ்வரதத்த ஆபிரன் என்பானால் அரசாட்சி முறையின்றி கைப்பற்றப்பட்டது. 295-முதல் 348-வரை மகாசத்திரபர் யாரும் தோன்றவில்லை. சுமார் கி. பி. 250-ல் நாடு பிளவாக்கப்பட்டு, அக்குடியினரின் நாணயமுறை சீர்குலைந்தது. கி. பி. நான்காம் நூற்றாண்டின் முற்பாதியில், பாரசீகத்தின் சஸ்ஸானிய மன்னர்கள், தமது இந்தியப்படையெழுச்சிகளின் மூலம், மே ற் கு சத்திரபரின் பெருமை மறையச்செய்தனர். சஸ்ஸானியரின் இந்தியத் தொடர்பு மங்கியவுடன் மீண்டும் சுமார் கி. பி. 348-ல் "மகாசத்திரபர்" பட்டத்துடன் மேற்கு சத்திரப மன்னர்கள் தலையெடுக்கலாயினர். ஆனால் சமுத்திர குப்தனின் ஆதிக்கம் வளர்ந்ததால், அவர்கள் நிலை தடைப்பட்டது. இறுதி இளவரசனான மூ ன் றா ம் உருத்திரசிம்மன் 388-ல் அரியணையேறினான். அவன் பெண்டிரைக் கொலை செய்வோன் என்று பா ண ன் கூறுகிறான். பெண் வேடம் பூண்டு வந்த இரண்டாம் சந்திரகுப்தனால் அவன் கொல்லப்

பட்டதாகவும் குறிப்பிடப்படுகிறது. இரண்டாம் சந்திரகுப்தனின் உடன்பிறந்தோன் (இராமகுப்தன்) மனைவி துருவதேவியைத் தன்னிடம் அனுப்புமாறு சித்தியா மன்னன் விரும்பியதாகவும், சந்திரகுப்தன் பெண் வேடம் பூண்டு, சித்தியா மன்னனிடம் சென்று அவனுக்குத் தக்க தண்டனை அளித்ததாகவும், விசாகதத்தனின் தேவி சந்திரகுப்தம் கூறுகிறது. பின்னர், துருவதேவி, கைம்பெண்ணுனவுடன் சந்திரகுப்தன் அவளைத்தனது அரசியாக்கிக்கொண்டானும். தன் உடன் பிறந்தானை சந்திரகுப்தனே கொன்றதாகவும் ஒரு மரபுரை உண்டு. சுமார் கி. பி. 395-ல் குப்தர் மேற்கு இந்தியாவைத் தம்முடன் இணைத்துக்கொண்டனர்.

## பகுதி-7.

### சாதவாகனர்.

#### காலஆராய்ச்சி.

புராணங்கள் ஆந்திர மன்னர்களின் பெயர் வரிசையையும் அவர்தம் ஆட்சியின் அளவையும் அறிவிக்கின்றன. சிறிய மாறுபாடுகளை விலக்கிவிட்டு, சுமார் முப்பது மன்னர்கள் ஏறத்தாழ 450-ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததாக, மச்ச புராணத்திலிருந்து அறிகிறோம். முரண்பாடுகளை நீக்கி நோக்கின், வாயுபுராணம், சுமார் 19-இளவரசர்கள் 300-ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததாகக்கூறும். மச்சபுராணம், மன்னர் அனைவரையும் சேர்த்துக் கூறுகையில் மற்றயது ஆந்திரக் குலவழியின் சிறப்பான அரசர்களைமட்டும் குறிப்பிடுவதே இப்பெரிய வேறுபாட்டுக்குக் காரணமென்று சில அறிஞர் கருதுவர். 450-க்கும் 300-க்குமுள்ள வேறுபாடான 150-ஆண்டுகளும், சுங்கரும், கண்ணுவரும் ஆட்சிபுரிந்த மொத்த ஆண்டுகளுக்கு ஏறத்தாழ நேராகும் (112+45=157). சுங்கர், கண்ணுவர், ஆந்திரர் ஆகியோர் ஒரே காலத்தவரானபடியால், 450-ல் 150-ஐக் கழித்து எஞ்சிய 300-ஆண்டுகளில் ஆந்திர ஆதிபத்தியம் நிலவியதாகக் கருதலாம். கி. மு. 188-முதல் கணக்கிட்டால், 300 ஆண்டுகளின் காலம் (300−188=) கி. பி. 112-ல் முடிவடைகிறது. கி. மு. 188-க்கு முன்னரே ஆந்திரர் ஆட்சி

புரியத் தொடங்கியிருப்பின், கி. பி. 112 க்குமுன்பே அவர்க ளாட்சி முடிவுற்றிருக்கவேண்டும். கௌதமிபுத்திரன் (23-வது மன்னன்) காலத்திலிருந்து நூறு ஆண்டுகளுக்குமேலாக ஆந்திர ராட்சி நிலவியிருந்ததாக அறியப்படுவதால், அம்மன்னனின் காலம் சுமார், (112—100)=12 ஆகும். இத்துணை முற்பட்ட காலத்தில் அவனுண்டதாகக் கருதுவது இயலாததாகும். ஆகவே, ஆந்திரர் 300-ஆண்டுகளே ஆட்சி நடத்தினரென்பது ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. ஆனால் முரண்பாடான இக் கருத்தை ஏற்றுக்கொள்ளும் சில அறிஞர்கள், சுங்கர் ஆட்சி யின் முடிவும், ஆந்திரர் ஆட்சியின் தொடக்கமும் ஒரே காலத்தவை என்பர். முதல் ஆந்திரன், சுங்கரையும், கண்ணுவ ரையும் அழித்ததாகப் புராணங்கள் குறிப்பிடுவதை ஆதாரமா கக்கொண்டு, பிந்திய இருவருமே ஒரே காலத்தவர் என்று இவ்வறிஞர் கூறுவர். இவர் கணக்குப்படி ஆந்திரரின் காலம் (கி. மு. 188—112) கி. மு. 76-முதல் (300—87) = கி. பி. 224-வரை ஆகும். ஆனால் கி. மு. முதல் நூற்றாண்டில் ஆந்திர ஆட்சி தொடங்குவதாகக் கருதுவது ஏற்புடையதன்று. ஏனெனின், எழுத்து வடிவு ஆராய்ச்சிப்படி, ஆதிசாதவாகன ரின் நாசிக், நானுகாட் கல்வெட்டுக்கள் கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திற்கு உரியதாகும். ஆகையால், ஆந்திரர், ஆட்சிக்காலம் சுமார் நானூற்றைம்பது ஆண்டுகள் என்று கருதலாம்.

### சாதவாகன ஆட்சியின் தொடக்கம்.

கௌதமிபுத்திரனும், நகபானனும் ஒரேகாலத்தவரென்ற கருத்தை ஆதாரமாகக்கொண்டு, சாதவாகன ஆட்சித்தொடக் கத்தைப்பற்றிய கால ஆராய்ச்சி முடிவு செய்யப்படவேண்டிய தாகும். கௌதமிபுத்திரனின் தாய், கௌதமிபலஸ்ரீயின் நாசிக் கல்வெட்டு, அவன் ககரத குலத்தை அழித்து, சாதவாகனரின் புகழைமீண்டும் நிலைபெறச் செய்தானென்று குறிப்பிடுகிறது. நகபானனின் ஜொகல்தெம்பி (பம்பாய்—நாசிக் மாவட்டம்) காசுகள், கௌதமிபுத்திரனால் மீண்டும் வெளியிடப்பெற்றன. ஆதலால், பின்னவன் முன்னவனைத் தோற்கடித்தான். இவ் வெற்றி, கௌதமிபுத்திரனுடைய பதினெட்டாவது ஆண்டு

ஆட்சிக்காலத்தில் ஏற்பட்டதாக, அவனுடைய நாசிக், கார்லி கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இதுகாறும் அறியப்பட்ட வரை நகபானனின் இறுதி ஆண்டு கி. பி. 124-என்று முன்னர் கூறப்பட்டது. ஆதலால் இவனைத்தோற்கடித்தவனின் ஆட்சித்தொடக்கம் (124—18=கி. பி. 106) என்று கொள்ளலாம். கல்வெட்டுச்சான்றுகளின்படி அவன் 24 ஆண்டுகள் ஆட்சிபுரிந்திருந்தால் அவனது இறுதி ஆண்டு (106+24) கி. பி. 130-ஆகும். நகபானனும், கௌதமிபுத்திரனும் ஒரே காலத்தவரல்லரென்ற கருத்துக்குப் பல மறுப்புகள் கூறப்படலாம். கௌதமிபுத்திரன், கி. பி. 78-ல் சக ஆண்டைத் தோற்றுவித்திருக்கக்கூடுமென்ற கருத்தை நாம் மறுக்கிறோம். முதல் மன்னனான சிமுகனுக்கும், 23-வது மன்னனான கௌதமிபுத்திரனுக்குமிடைப்பட்ட காலம் 341-ஆண்டுகள் எனவும், இருபத்திமூன்றுவது மன்னனுக்கும், முப்பதாவது மன்னனுக்கும் (புலுமாயி) இடைப்பட்ட காலப்பகுதி சுமார் 111-ஆண்டுகளெனவும் மச்ச புராணம் குறிப்பிடும். இப்புராணம் அறிவிக்கும் ஆட்சி அளவும் (சிறிதளவு, கல்வெட்டுச் சான்றுகளால் திருத்தப் பெற்றுள்ளது) அவ்வடிப்படையில் கணக்கிடப்படும் கால வரலாறும் பின்வருமாறு அமையும்:—

| எண் வரிசை | மன்னன் பெயர் | ஆட்சி அளவு | காலம் |
|---|---|---|---|
| 1. | சிமுகன் (சிசுகன்) | 23 | கி. மு. 235—212 |
| 2. | கிருஷ்ணன் | 10 | ,, 212—202 |
| 3. | சாதகர்ணி | 10 | ,, 202—192 |
| 4. | பூர்நோத்சங்கன் | 18 | ,, 192—174 |
| 5. | ஸ்கந்தஸ்தம்பி | 18 | ,, 174—156 |
| 6. | சாதகர்ணி | 56 | ,, 156—100 |
| 7. | லம்போதரன் | 18 | ,, 100— 82 |
| 8. | ஆபிலகன் | 12 | ,, 82— 70 |
| 9. | மேகஸ்வாதி | 18 | ,, 70— 52 |
| 10. | ஸ்வாதி | 18 | ,, 52— 34 |
| 11. | ஸ்கந்தஸ்வாதி | 7 | ,, 34— 27 |
| 12. | மிருகேந்திரஸ்வாதிகர்ணன் | 3 | ,, 27— 24 |
| 13. | குண்டலஸ்வாதிகர்ணன் | 8 | ,, 24— 16 |

| எண் வரிசை | மன்னன் பெயர் | ஆட்சி அளவு | காலம் |
|---|---|---|---|
| 14. | ஸ்வாதிகர்ணன் | 1 | கி.மு. 16 — 15 |
| 15. | புலுமாயி | 36 | ,, 15-கி.பி. 21 |
| 16. | அரிஷ்டகர்ணன் | 25 | கி.பி. 21- ,, 46 |
| 17. | ஹலன் | 5 | ,, 46— 51 |
| 18. | மந்தாலகன் | 5 | ,, 51— 56 |
| 19. | புரிகசேனன் | 21 | ,, 56— 77 |
| 20. | சுந்தரசாதகர்ணி | 1 | ,, 77— 78 |
| 21. | சகோரசாதகர்ணி | ½ | ,, 78— |
| 22. | சிவஸ்வாதி | 28 | ,, 78—106 |
| 23. | கௌதமிபுத்திரன் | 21(24) | ,, 106—130 |
| 24. | புலுமாயி | 28 | ,, 130—158 |
| 25. | சிவஸ்ரீபுலுமாயி | 7 | ,, 158—165 |
| 26. | சிவஸ்கந்தசாதகர்ணி | 3 | ,, 165—168 |
| 27. | யக்ஞஸ்ரீசாதகர்ணி | 29 | ,, 168—197 |
| 28. | விஜயன் | 6 | ,, 197—203 |
| 29. | சண்டஸ்ரீசாதகர்ணி | 10 | ,, 203—213 |
| 30. | புலுமாயி | 7 | ,, 213—220 |

புராணத்தில் காணப்பெறும் கௌதமிபுத்திரனின் ஆட்சி அளவுடன், அவனுடைய கல்வெட்டுக்களின் சான்றைக் கொண்டு மூன்று ஆண்டுகள் கூட்டப்பெற்றன. இம்மரபின் தொடக்க ஆண்டு (கி. மு. 235) அசோகனின் இறுதிக் காலத்தைக்குறிக்கும். சிலர், அம்மன்னனின் இறுதி ஆண்டான கி. மு. 232 முதல் சாதவாகன ஆட்சியைக் கணக்கிடுவர். இக்குலத்தின் மூன்ருவது மன்னனை, கலிங்கவேந்தன் காரவேலனின் காலத்தவனுகக் கொள்ளாமல் ஐந்தாவது மன்னனையே அவ்வாறு கருதவேண்டும். அதிகும்பா கல் வெட்டில் குறிப்பிடப்பெற்றிருக்கும் மன்னன் ஒரு சாதகர்ணி அல்லது ஒரு சாதவாகன அரசன் என்று பொதுவாகக் கருதப்படலாம். மேலே குறிப்பிடப்பட்டுள்ள கால வரலாறு தெளிவான வேறு சான்றுகளைக்கொண்டு திருத்தங்கள் செய்து கொள்ள இடந்தரும்.

## முதற்பேரரசு.

சதகர்ணம் (நூறுகாதுகள்) சாதவாகனம் (சத என்ற சின்னத்தைக் கொண்டது) என்பன குலப்பெயர்களாகலாம். அசோகனின் கல்வெட்டுக்களில் காணப்பெறும் சத்தியபுத்திரர் இக்கூட்டத்தினரே என்று சிலர் கருதுவர். சாதவாகனர் பிற்காலத்தில் ஆந்திரதேசத்தைக் கைப்பற்றியதால், ஆந்திரர் என்ற பெயர் அவர்களுக்குக் கிடைத்திருக்கக்கூடும். இவர்கள் தோன்றிய இடம், வடஇந்தியா என்று சிலர் கூறியபோதிலும், பல்லாரி மாவட்டம் என்றே தோன்றுகிறது. சாதவாகனர், பிராமணர் என்னும் அவர்தம் கூற்று, சிலரால் ஏற்றுக் கொள்ளப்பட்டும், சிலரால் மறுக்கப்பட்டும், சிலரால் ஐயுறப் பட்டும் வருகிறது. இவர்கள் கிழ்க்கடலோரத்திலிருந்து மேற்கு நோக்கிப் பரவினரென்ற கருத்து இப்பொழுது பெரும் பான்மையில் சிறப்பளிக்கப்படவில்லை. முதல் அரசனை சிமுகன், சுங்கரையோ, கண்ணுவரையோ முறியடித்திருக்க இயலாது. அசோகன் இறந்ததற்குச்சற்று முன்னே, பின்னே இவன் மோரியப்பேரரசின் ஆதிபத்தியத்தினின்று விடுதலை பெற்றிருக்கவேண்டும். இவன் 23-ஆண்டுகள் ஆட்சிபுரிந்த தாகக் கூறப்பட்டிருப்பினும் இவனது அருஞ்செயல்கள் அறியப் பட்டில. அடுத்த இருவர் ஆட்சிக்காலங்களில் ஏற்பட்ட நாட்டின் பெருக்கத்திற்கு ஓரளவு இவனும் காரணமாயிருந் திருக்கவேண்டும். இவன் உடன்பிறந்தானை கிருஷ்ணன் பின்னர் அரசனானன். கிருஷ்ணனும் அவனுடைய உடன் பிறந்தவன் மகனை சாதகர்ணியும் ஒவ்வொருவரும் பத்து ஆண்டுகள் ஆட்சிபுரிந்தனர். சிமுகனின் பணியைத்தொடர்ந்து நிறைவேற்றி இவர்கள் ஒரு பேரரசைத் தோற்றுவித்தனர். அவ்வரசு, கொங்கணம் உட்பட, நாசிக் வரையுள்ள கோதா வரிச்சமவெளியில் பரவியிருந்தது. நானகாட் (பூனுவின் அண்மையிலுள்ளது) கல்வெட்டு, சிமுகன், கிருஷ்ணன், சாதகர்ணி, அரசி நாகனிகை, அவள் தந்தை முதலியோரின் உருவச்சிலைகளைக் குறிப்பிடுகிறது. சாதவாகனர் மகாராட்டிர நாட்டைக்கைப்பற்றிய செய்தி சாதகர்ணி, நாகனிகை என்ற மகாராட்டிரப் பெண்ணை மணந்துகொண்டதால் வலியுறுத்தப் பெற்றது. சாதகர்ணி, அவனது இறைமாட்சியை விளக்கும்

இரு அசுவமேதங்கள் செய்ததாகக் கூறப்படுகிறது. கோதாவரி ஆற்றங்கரையில் பைதான் (Paithan) (ஔரங்கபாத்துக்குத் தெற்கில்) என்ற இடமே அவனது தலைநகர். காளிதாசனின் மாளவிகாக்னிமித்திரத்தினின்று அறியப்படும் சாதவாகன—சுங்கப் போர்களுக்கு, சாதகர்ணியின் (மூன்றாவது மன்னன்) பின்வந்தோர் காரணமாக இருந்திருக்கவேண்டும். அப்போர்களில் சாதவாகனரின் தோல்வி, (ஆறுவதுமன்னன்) சாதகர்ணியின் காலத்தில் மாளவம், கைப்பற்றப்பட்டமையால் ஈடு செய்யப்பெற்றது. அவனுக்குப் பின்போந்தார், கண்ணுவரையும் எஞ்சியிருந்த சுங்கர் ஆட்சியையும் அழித்து, பாடலிபுத்திரத்தைக் கைப்பற்றி சிறிதுகாலம் அதனைத்தம்மடிப்படுத்தியிருக்கவேண்டும். இவ்வருஞ் செயலைப்பற்றிய வரலாறு தெளிவாக அறியப்படவில்லை, ஆயினும், மாளவத்தைக்கைப்பற்றுவதற்காக கிரேக்கர், சுங்கர், ஆந்திரர் ஆகியோரிடை ஏற்பட்ட போட்டியில், இறுதியாயுள்ளவரே, முடிவில் வெற்றி பெற்றிருக்கவேண்டும் என்பது தெளிவு. பதின்மூன்றாவது மன்னன், வாத்சியானனின் காம சூத்திரத்தில் காணப்படும் குண்டல சாதகர்ணியாக இருக்கலாம். இவன் காதல் விளையாட்டின் விளைவாக, கவனமின்றித் தன் மனைவியைத்தலையிலடித்து இறக்குமாறு செய்ததாக, அந்நூல் கூறும். பதினேழாம் அரசன் ஹலன் என்பான் பிராகிருதமொழியில் 700-செய்யுட்களடங்கிய சப்தசதகம், என்ற காதல் நூலை இயற்றியதாகக் கருதப்படுகிறது. சகர், மாளவத்தையும், மகாராட்டிரத்தையும் கைப்பற்றியகாலை, சாதவாகனர் தமது முன்னோருக்குரிய பழைய நிலப்பகுதிக்குப் பின்வாங்கிச் செல்ல நேர்ந்தது. நீண்டகால இடைவெளிக்குப்பின் அவர்கள் பெருமை, கௌதமிபுத்திர சாதகர்ணியால் மீண்டும் நிலை நாட்டப்பெற்றது.

## இரண்டாவது பேரரசு.

கௌதமிபுத்திர சாதகர்ணி சாதவாகனருள் மிகவும் சிறந்தவனாவன். இவனது தாய் கௌதமிபலஸ்ரீ என்பாளின் நாசிக் கல்வெட்டு, புகழ் வாய்ந்த இவன் அருஞ்செயல்களை விளக்கும். இவளது பேரன் புலுமாயியின் 19-வது ஆண்டு ஆட்சியில் (கி. பி. 149) இஃது வெளியிடப்பெற்றது. இப்

புகழுரையில் சலிப்பைத்தருகிற வழக்காறுன பகுதிகளை விலக்கி விட்டு, குறிப்பிடத்தக்க செய்திகள் பின்வருமாறு:— அவள் தன்னை ஒரு மகாராசனின் தாய் என்றும், ஒரு மகாராசனின் பாட்டியென்றும் குறிப்பிடுகிருள். கௌதமிபுத்திரன், "சகர், யவனர், பஹ்லவர் ஆகியோரை அழித்தவன்; ககரதகுலத்தை வேரறுத்தவன்; சாதவாகன குடும்பத்தின் புகழை மீண்டும் நிலைநாட்டியவன்; சிறப்பான மேல் நிலைக்கு அக்குடும்பத்தை உயர்த்தியவன்; க்ஷத்திரியரின் பெருமையையும் இறுமாப்பை யும் நசுக்கிய இணையற்ற பிராமணன்" என்று பலவாருகச் சிறப்பிக்கப்படுகிருன். பேரரசின் பரப்பும் இக்குறிப்பில் அறிவிக்கப்படுகிறது. மகாராட்டிரம், வடகொங்கணம், பேரார், கூர்ச்சரம், கத்தியவார், மாளவம் முதலியவை அதனுள் ளடங்கின. ஆந்திரதேசம் குறிப்பிடப்படாதது நோக்கத்தக்கது. இவ்வாறு நகபானன்மீது இவன்கொண்ட வெற்றி மறை முகமாக விளக்கப்படுகிறது. உஷவதத்தனுக்கு உரிய நிலப் பகுதியை, இவன் நன்கொடையாக வழங்கியதாக இவனது கல்வெட்டுக்களில் ஒன்று குறிப்பிடுகிறது. புலுமாயி, இரு முறை முதலாம் உருத்திரதாமனுல் தோற்கடிக்கப்பட்டதை நாம் முன்பு கண்டோம். ஆனுல், அவன், பின்னவனின் மருமகன் என்று கருதப்படுவதற்கில்லை. ஏனெனின் கிரிநார் கல்வெட்டு, மகாக்ஷத்திரபனின் நெருங்கிய உறவினனின் தோல்வியையே குறிப்பிடுகிறது. ஆகவே புலுமாயி, மாளவம், கத்தியவார், வடகொங்கணம் முதலியனவற்றை இழந்தனன். ஆனுல் அவன் நாட்டைக் கிழக்கில் பரவச் செய்தான். கோதாவரிக்கும், கிருஷ்ணுவுக்கும் இடைப்பட்ட கடலோரப் பகுதி அவன்கீழிருந்த தென்பதை அவனுடைய காசுகள் அறிவிக்கும். அவன் கல்வெட்டுச் சான்றின்படி அவனது ஆட்சிக்காலம் 24-ஆண்டுகள் என்று பெறப்பட்ட போதிலும், புராணம் அவனது ஆட்சிக்காலமாக அறிவிக்கும் 28-ஆண்டுகளையே நாம் ஏற்றுக்கொள்வது நலம். யக்ஞஸ்ரீ சாதகர்ணி (27) என்பான் பெருமை வாய்ந்த கடைசி அரசன். கல்வெட்டுக்கள் இவனது இருபத்தி ஏழாவது ஆண்டு ஆட்சியைக் குறிப்பிடுவதால், புராணத்தின்படியுள்ள இவனது ஆட்சி அளவு (29-ஆண்டுகள்) வலியுறுத்தப்படும். இவனது

கல்வெட்டுக்குறிப்புகள், மகாராட்டிரத்தில் மட்டுமின்றி, வடக்கு கொங்கணத்திலும், கி ரு ஷ் ண மாவட்டத்திலும், இவனது காசுகள் மேற்கூறிய பகுதிகளிலும், கூர்ச்சரம், கத்தியவார் முதலிய இடங்களிலும் கிடைத்துள்ளன. இவனது நாவாய்க் காசுகள், இவனது கடல் வலிமையை உணர்த்துவனவாக லாம். இவன், மு த ல ா ம் உருத்திரதாமனால் கைப்பற்றப் பட்டிருந்த நாடுகளிற் சிலவற்றை மேற்கு சத்திரபரிடமிருந்து திரும்பப்பெற்றனனென்பது தெளிவு. இவன் ஆந்திரதேசத் தில் ஆதிக்கம் செலுத்தினனென்பதிலும் ஐயமில்லை. இறுதி யான மூன்று மன்னர்களும் (28-முதல் 30-வரை) அரசியல் சிறப்பு எதுவுமில்லாதவர். அவர்களது சுமார் 25-ஆண்டுகள் ஆட்சியில், அவர்களது ஆற்றல் வாய்ந்த மானியக்காரரால், பேரரசு, பங்கிட்டுக் கொள்ளப்பட்டது. மகாராட்டிரத்தில், ஆபிரர், திரிகூடகர் ஆகியோரும், ஆந்திரநாட்டில், இட்சுவாகு குலத்தினர், பிரிகத்பலாயனர், சாலங்காயனர் ஆகியோரும், சாதவாகனரின் ஆதி அகத்தில் பல்லவரும் தத்தம் ஆட்சியை நிறுவலாயினர்.

## பகுதி 8.

### இட்சுவாகு குலத்தினர் *(கி. பி. சுமார் 250—300)*

#### மூன்று அரசர்கள்.

ஜக்கயப்பேட்டையிலும் (கிருஷ்ண மாவட்டம்) நாகார்ச்சுனி கொண்டாவிலும் (குண்டூர் மாவட்டம்) காணப்பெற்ற அவர் தம் கல்வெட்டுக்களால் இ ட் சு வா கு குலத்தினரைப்பற்றி நாம் அறியமுடிகின்றது. இக்குல ம ன் ன ரி ன் பெயர்களை யுடைய அயோத்தி அரசர்களுடன் இவர்கள் இணைக்கப்பட்ட வரா என்பதை நாமறியோம். இவர்கள், சாதவாகனரின் மானியக்காரராயிருந்த நிலை சுமார் கி. பி. 250-ல் மாறிவிட்டது. முதல் மன்னனான சாந்தமூலன், தனது உரிமையான அரசியல் நிலையின் அறிகுறியாக வே ள் வி க ள் புரிந்தான். அவன் கந்தனை வழிபடுவோன். இவனது ம க ன் வீரபுருடதத்தன் பின்னர் அரசனானான். இவன் மனைவிமார் ஐவருள் உருத்திர தாரை என்பாள் மேலைச்சத்திரப கு ல த் தி ன் சஷ்தனன்

வழியிற்றோன்றியவளாகக் காணப்படுகிறாள். இவன் மகள், வனவாசி அரசனை மணந்தனள். அவன் குறைந்தது இருபது ஆண்டுகளாவது ஆட்சிபுரிந்திருக்க வேண்டுமென்று கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. இவனுக்குப் பின்னர் இவனது மகனான இரண்டாம் சாந்தமூலன் 11-ஆண்டுகள் அரசு புரிந்தான். மூன்று அரசர்களைக்கொண்ட இட்சுவாகுகுலம் 50-ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததாகக் கருதப்படலாம். கி. பி. நான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில், பிரிகத்பலாயனரும், பல்லவரும் இவர்களை அடக்கி உயர்வு எய்தினர்.

### புத்தசமயம் செழிப்படைதல்.

முதலாம் சாந்தமூலன் பிராமண சமயத்தவனாயிருந்த போதிலும் அவன் மகனும் பேரனும் பௌத்தர்கள். அவர்களாதரவால் நாகார்ச்சுனிகொண்டா, பௌத்தமயம் செழித்தோங்கிய நகராக விளங்கியது. வீரபுருடதத்தனின் கல்வெட்டுக்கள், புத்தர் வணக்கத்துடன் தொடங்குகின்றன. நிர்வாணம் என்ற பேற்றை அடையும் நோக்குடன், அரச குடும்பத்தினராலும், பிறராலும், தூபிகளும், மடங்களும், தூண்களும் நிறுவப்பெற்றன. ஈழத்திலிருந்தும் மற்ற நாடுகளினின்றும் வந்த ஆண், பெண் துறவிகளுக்குத் தங்குவதற்கான வசதிகள் செய்யப்பட்டிருந்தன. இட்சுவாகு ஆட்சியில் பௌத்த சமயத்தின் சீர்மைக்கு, நாகார்ச்சுனிகொண்டா அமைந்த பகுதியின் வாணிகச்சிறப்பும், அயல்நாட்டு வாணிகத்தில் ஈடுபட்டிருந்த வணிகரின் மிகுந்த செல்வமும், அரசர்கள் ஆதரவும் காரணங்களாகும். ஆனால் இட்சுவாகு குலத்தினருக்குப்பின், பழைய மதத்தைப்பின்பற்றிய வமிசத்தினர் தோன்றியதால் அந்நிலைமை நீண்டகாலம் நீடிக்கவில்லை.

## பகுதி 9.

### சோழ—சேர—பாண்டியரின் தலைமை நிலை.

புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய ஆதித் தமிழ் நூல்கள் சங்க இலக்கியம் எனப்பெறும். இவை

மதுரையின் மூன்ருவது சங்கத்துடன் இணைக்கப்பட்டிருப்பது மரபு. இவை தோன்றிய காலம் தமிழ் இலக்கியத்தின் "அகஸ்தஸ் காலமாகும்" இவற்றின் காலத்தை வரையறுத்துக் கூறுவது ஆதித்தமிழர் வரலாற்றின் சிக்கலான செய்தியாகும். இதைப்பற்றிய மூன்று சிறந்த கருத்துக்கள் நோக்கற்பாலன. அவையாவன: (1) கி. பி. ஏழு, எட்டாம் நூற்ருண்டுகள், (2) கி. பி. 5-ம் நூற்ருண்டு, (3) கிறித்தவ ஆண்டின் முதல் மூன்று நூற்ருண்டுகள். பரிபாடலிலும், சிலப்பதிகாரத்திலும் காணப்பெறும் சில குறிப்புகளைக்கொண்டு, முதல் கருத்து வெளியிடப்பட்டது. ஆனல் பல்லவர்கள் வலிமையுற்றிருந்த அக்காலத்தில் சோழ, சேர, பாண்டியர் சிறப்படையவில்லை. சங்க இலக்கியம், பல்லவர்களைப்பற்றி எதுவும் குறிப்பிடாமல் அம்மூன்று கூட்டத்தினரைப்பற்றியே சிறப்பிக்கின்றது. மேலும் தமிழ் இந்தியாவில் ஏழு, எட்டாம் நூற்ருண்டுகளில் சைவமும், வைணவமும் ஓங்கி வளர்ந்துவந்தன. புத்த, சமண மதங்களுக்கு, இணவிணக்கம், (சகிப்புத்தன்மை) காட்டப்படவில்லை. ஆனல் சங்ககாலத்திலோ சமயத்துறையில் ஆழ்ந்த அமைதி நிலவியது. விரும்பத்தகாத பகைமை காணப்படவில்லை. இலக்கியத்துறையில் பௌத்தர்களும், சமணர்களும், பிராமண மதத்தைப்பின்பற்றுவோருடன் ஒத்துழைத்தனர். ஆகையால் முதல் கோட்பாடு ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. இரண்டாவது கருத்துக்குரிய சான்றுகளில், சமுத்திரகுப்தனின் தூண் கல் வெட்டுக் குறிப்பு ஒன்றை, அவன் படையெழுச்சி கேரள நாட்டிலும் நிகழ்ந்தது என்ற வகையில் தவறுதலாகப்பொருள் விளக்கம் கண்டது ஒன்ருகும். அடுத்தபடியாக, அக்கல் வெட்டிலுள்ள மந்தராசன் என்ற பெயர், சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மாந்தரஞ்சேரல் என்பதுடன் தவறுதலாக இணைக்கப்பட்டதாகும். மேலும், வம்பமோரியர் என்ற சொல் புதிய மோரியர் அல்லது குப்தர்களைக் குறிப்பிடுவதாகக் கருதப்பட்டது. இஃதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. தவிர, தமிழ், பௌத்தக் காப்பியமான மணிமேகலையில் உள்ள "குச்சரகுடிகை" என்பதை கூர்ச்சரக்கட்டடம் என்று பொருள் கொண்டு, சங்க இலக்கியம் கி. பி. 5-ம் நூற்ருண்டில் தோன்றியதென்பதற்கு இதனை ஆதாரமாகக் கூறுவர். ஆனல்

பாறையில் வெட்டப்பட்ட குகை என்பதைத்தவிர வேறு பொருள் அச்சொல்லிற்குக் கூறவேண்டியதில்லை. மூன்ருவது கோட்பாடு நன்கு ஆதரிக்கப்பெற்று மிகவும் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. சேரன், செங்குட்டுவனும், ஈழநாட்டு கயவாகு வும் ஒரே காலத்தவர்கள் என்பதே இக்கோட்பாட்டின் அடிப்படை. சேரன் செங்குட்டுவன் பத்தினிதேவியின் உருவச் சிலையை நாட்டியபொழுது, ஈழநாட்டு வேந்தன் வந்திருந்து அவ்விழாவை மேன்மைப்படுத்தியதாக சிலப்பதிகாரம் கூறும். மேற்கூறிய காலஒற்றுமை, ஈழநாட்டு இலக்கிய, கலை, மரபு களால் வலியுறுத்தப்பெறும். மகாவம்சத்தைச் சான்ருகக் கொண்டு, கயவாகு (முப்பத்தி ஒன்பதாவது ஈழவேந்தன்) கி. பி. 173-முதல் 195-வரை (அல்லது 177—199) ஆட்சி புரிந்ததாகக் கருதலாகும். மற்ருெரு கயவாகு (126-வது மன்னன்) கி. பி. 12-ம் நூற்ருண்டின் முதற்பாதியில் வாழ்ந் தான். ஆகவே செங்குட்டுவன் காலத்தவன், கி.பி. இரண்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த முதலாம் கயவாகுவாக இருத்தல் வேண்டும். சங்ககாலத்திய சேரவேந்தருள், கால வரையறை வரலாற்றின்படி, செங்குட்டுவன், இடைப்பகுதியில் வாழ்ந்தவனுகும். ஆதலால் கி. பி. முதல் மூன்று நூற்ருண் டுகள் தமிழ் வரலாற்றின் சங்ககாலமாகக் கருதப்படலாம்.

கி. பி. முதல் இருநூற்ருண்டுகளின் கிரேக்க, இலத்தீன் ஆசிரியர்கள் தரும் சில குறிப்புக்களும், தென்னிந்தியாவில் காணப்பெற்ற ஆதிகாலத்திய உரோமப்பேரரசுக் காசுகளும், இம்முடிவை வலியுறுத்துகின்றன.‡

## கரிகாலசோழன்.

கருகிய காலைப்பெற்றிருந்த இம்மன்னனைப்பற்றிய கதைகள் பலவுள. அவை, சோழர் குலத்து மன்னருள் தலைசிறந்த வனுக இவன் விளங்கியவன் என்றும் சங்க காலத்தில் மிகவும் சிறப்புப் பொருந்தியவனென்றும் தெளிவாக அறிவிக்கின்றன. இவன் காலத்திய சேர, பாண்டிய மன்னர்களை, அவர்களுக்கு

‡ S. Krishnaswami Aiyangar. The Beginnings of South Indian History (1918), Ch. IV; K. G. Sesha Iyer, Cera Kings of the Sangam period (1937), Chapter VII.

உதவியளித்த பதினொன்று வேளிருடன் வெண்ணிப்போரில் (தஞ்சாவூர் அண்மையில்—கோவில் வெண்ணி) முறியடித்து வெற்றிபெற்றது கரிகாலனின் முதல் அருஞ்செயலாகும். இவனது பிற வெற்றிகளைக் கவிகள் புகழ்ந்துள்ளனர். ஆனால் இவன் நாடு, காவிரி ஆற்றுக்கழிமுகத்தைக்கடந்து பரவியதாகத் தெரியவில்லை. இவனது தலைநகர் உறையூர் (திருச்சிராப்பள்ளி அருகில்). புகார் அல்லது காவிரிப்பட்டினம், சிறந்த துறைமுகமாகவும் சில காலங்களில் அரசன் தங்குமிடமாகவுமிருந்தது. இவன் பிராமண சமயத்தைப் பின்பற்றினன். மக்களின் ஆழ்ந்த புலம்பலுக்கிடையே இவன் இறந்தான். இமயத்தின் அடிவாரத்தில் கரிகாலன் படையெடுத்ததாகக் கூறும் கதைக்கு வரலாற்று ஆதாரம் இல்லை.§ இவன் இறந்தபின், தெய்வச் செயலாய் புகார் நகரம் அழிவுற்றது. அரசகுடும்பத்தின் உறையூர், புகார் ஆகிய இரு கிளைகளுக்குமிடையே, அரசுரிமைக்கலகங்கள் மூண்டன. கதைகளில் பெரும் வீரனைப் புகழப்பெற்ற செங்கணன், கரிகாலனின் பின்போந்தோரில் சிறப்பானவன். சேரரை இவன் வென்றதாகக் கூறப்படுகிறது. இவன் தனது சிறந்த கடவுளான சிவபெருமானுக்கு சுமார் எழுபது கோயில்களை நிறுவியதாகப் புகழப்படுகிறன்.

## சேரன் செங்குட்டுவன்.

கரிகாலனுக்குப்பின் சோழநாட்டில் விளைந்த உள்நாட்டுக் கலகங்களின் விளைவாக, தமிழ் நாடுகளின் தலைமைப்பதவி, சேரர்களுள் மிகச்சிறந்தவனை செங்குட்டுவனிடம் மாறியது. இவன் உடன் பிறந்தோனல் இயற்றப்பெற்ற சிலப்பதிகாரத்தில் புகழ்ந்து பாராட்டப்படும் தலைவன் இச்செங்குட்டுவனே. வட இந்தியாவில் இவன் அருஞ் செயல்கள் புரிந்ததாகக் கூறப்பட்டிருப்பதற்கு வரலாற்றுச் சான்றுகளில்லை. ஆனல் இவன் பல குறுநில மன்னர்களை அடக்கிய படைவீரன் என்பது உண்மை. பல கடல் வெற்றிகளையும் இவன் அடைந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. கடற் கொள்ளையை ஒழித்து, பெருந்துறைமுகமான முசிரி அல்லது கிராங்கனூரின் காவ

§ K A. Nilakanta Sastri Studies in Cola History and Administration (1932) II.

லுக்கு மிகுந்த முயற்சி எடுத்துக்கொண்டதாகவும் காணப் படுகிறது. சோழரின் அரசுரிமைப்போரில் இவன் தலையிட்டு பயனடைந்தான். பாண்டியரும் புகழடையாது இவனால் அடக்கப்பெற்றனர். இலக்கியம், மரபானமதம், மாறுபாடான சமயக்கொள்கைகள் யாவற்றையும் ஆதரித்துக்கொண்டு ஐம்பது ஆண்டுகளுக்குமேல் இவன் ஆட்சிபுரிந்ததாகக் கூறப் படுகிறது. கற்புக்கடவுள் கண்ணகிக்கு இவன் கோயில் நிறுவியபொழுது, முதலாம் கயவாகு உட்பட பல அரசர்கள் ஒன்று கூடினர். அரசுரிமை தந்தையிடமிருந்து மகன் பெறு வதற்குப் பதிலாக, மாமனிடமிருந்து மருமகனுக்குச் செல்லும் முறை அக்கால சேரரிடமிருந்தது என்று கருதுவது தவருகும்.

தமிழும் மலையாளமும் நாட்டின் மொழிகளாயிருந்தன. வஞ்சி அல்லது திருவஞ்சிக்களம், சேரரின் தலைநகராயிருநதது. இஃது கிராங்கனூரின் சுற்றுப்புறத்தில் உள்ளது. சிலர் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த கருருடன் அவ்வூரை இணைப்பர். வஞ்சி, கருவூர் என்றும் அழைக்கப்பெற்றது. தாலமி (கி. பி. 150), கேரளநாட்டின் தலைநகர் கரூரா என்று குறிப்பிடுகிருன். ஆனல் பிளினியும் பெரிப்ளூசின் ஆசிரியரும் (கி. பி. முதல்நூற்ருண்டு) முசிரி அல்லது கிராங்கனூர் சேரன் தலைநகர் என்பர். தாலமி குறிப்பிடும் கரூரா, கிராங்கனூருக் கும் இரிஞ்னலகூடா (கொச்சி நாடு) வுக்கும் இடையே உள்ள கருவப்பட்டினத்துடன் இணைக்கப்படலாம். தமிழ் நாட்டு மூவேந்தரும், திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த கரூரைப்பெறும் பொருட்டு போரிட்டனரென்பது உண்மை. சிலகாலம், அது சேரர் வசமிருந்தது. ஆனல் அது அவர்கள் தலைநகராயில்லை.‡ சேர அரசகுடும்பத்தை சேர்ந்த இரு கிளைகள் வஞ்சியிலும், தொண்டியிலும் காணப்பட்டன. சிலர் மற்ருெரு கிளையும் இருந்ததென்பர். மாந்தரஞ்சேரல், சங்ககாலத்தின் பிற்காலத் திய சேரமன்னன். இவன் செங்குட்டுவனின் மகனல்லன். இவன் தொண்டியில் வாழ்ந்தவரின் பிரிவினரைச் சேர்ந்த பெரும் வீரன். தலையாலங்கானத்துப் பாண்டியனல் இவன் முறியடிக்கப்பட்டான்.

‡ **Sesha Aiyar, op. cit. Chapter VI; Krishnaswami Aiyangar, Seran Vanji (1940) pp. 86 & 104—8.**

### பாண்டியன் நெடுஞ்செழியன்.

செங்குட்டுவன், சோழன் செங்கணன் இருவர் காலங்களுக்கு இடையே, மாந்தரஞ்சேரலுக்கு உரிய காலத்தில், நெடுஞ்செழியன் வாழ்ந்தான். சங்ககாலத்திய பாண்டியருள் இவனே மிக்க திறமையும், சிறப்பும் வாய்ந்தவன். சேர, சோழ மன்னர்களையும், ஐந்து குறுநில மன்னர்களையும் (வேளிர்) தலையாலங்கானத்தில் (தலையாலங்காடு-தஞ்சாவூர் மாவட்டம்) எதிர்த்து வெற்றிகொண்ட பெருமை இப்பாண்டியனுக்கு உரியது. இவன் வேறு வெற்றிகளை அடைந்திருப்பினும் தலையாலங்கானத்துப் பாண்டியன் என்றே தமிழ் இலக்கியத்தில் சிறப்பிக்கப்படுகிறான். இவன் பிராமண சமயத்தைப்பின்பற்றி, ஓர் வேள்வியும் செய்தான். புலவர்கள் இவனால் பெருந்தன்மையுடன் ஆதரிக்கப்பெற்றனர். மூன்றாவது தமிழ்ச்சங்கத்தின் புகழைப் பெருக்க இவன் செய்த தொண்டுகள் போற்றற்குரியன. அரசியலிலும், இலக்கியத் துறையிலும் மதுரை தலைநகராயிருந்தது. கொற்கை, பாண்டிய நாட்டின் சிறப்பான துறைமுகம். நெடுஞ்செழியனால் ஏற்படுத்தப்பட்ட பாண்டியர் நிலை, பல்லவரின் எழுச்சிவரை சிதறாமல் நிலைத்திருந்தது.

## பகுதி 10

### ஆட்சிமுறை.

### அயல்நாட்டுத் தொடர்பின் பயன்.

நாம் நோக்கும் ஐந்து நூற்றாண்டுகளின் காலப்பகுதியில் (கி. மு. 2-ம் நூற்றாண்டு முதல் கி. பி. 3-ம் நூற்றாண்டுவரை) ஆட்சிமுறையில் புதிய கருத்துக்கள் புகுத்தப்பட்டிருக்கும் தன்மை புலப்படுகிறது. வடக்கு, மேற்கு இந்தியாவின் பெரும்பகுதிகள் அயலாரால் கைப்பற்றப்பட்டிருந்ததே இதற்குக் காரணமாகும். இக்காலப்பகுதி மிகச்சிறப்பாக, இந்தியரல்லாத குலத்தினரின் ஆட்சிக்காலமாகும். ஆனால் தென்னிந்தியா பெரும்பாலாக உள்நாட்டுக்குரிய ஆட்சியின்கீழிருந்தது. மகாராட்டிரத்திலும், மாளவத்திலுமிருந்த சகர் இராச்சி

யங்களுடன் கொண்டிருந்த தொடர்பால் சாதவாகனர், சிறிதளவு பாதிக்கப்பெற்றனர். உரிமையுடனிருந்த தமிழ் நாடுகள் அத்தகைய நிலையை எய்தவில்லை. ஆனால் அயலா ராட்சி ஏற்பட்டிருந்த பகுதிகளிலும், ஆட்சி முறை, சிறப்பாக இந்தியக் கருத்துக்களின்படியே அமைக்கப்பட்டிருந்தது. கிரேக்கர், சகர், பஹ்லவர் முதலியோர் எத்துணை விரைவில் இந்தியராக்கப்பெற்றனர் என்பதை முன்பு கண்டோம். அர்த்தசாத்திரம் குறிப்பிடும் ஆட்சி முறைக் கருத்துக்களுக்கு. அடிப்படையான சிறப்பு வழங்கப்பட்டிருந்ததென்பதை, முதலாம் உருத்திரதாமனின் கிரிநார் கல்வெட்டு அறிவிக்கின்றது அதே சமயத்தில், நாம் குறிப்பிட்டுவரும் காலப்பகுதியில், குப்தர் காலத்தை முன்னறிவிக்கும் வகையில், ஆட்சி அமைப்பு வளர்ச்சியடைந்ததையும் காணலாம். மேற்கு இந்தியாவிலும் இராசபுதனத்திலுமிருந்த குடியரசுகள், அயலாரின் கீழும் இந்திய மரபினரின் கீழும் துயருற்றன. அவை அவர்களுடன் தொடர்ந்து போரிட்டும் வந்தன. ஆனால் அடுத்த காலப் பகுதியில் குடியரசு நிலையங்கள் மறையலாயின. தன்னாட்சி உரிமையுடன் கூடிய நகரங்களைப் பெருக்கும் கிரேக்கரின் செயலுக்கு அதிக வாய்ப்பில்லாமலிருந்தது. இனப்பகையும் மரபினரின் வலுக்கட்டாயத் தாக்குதல்களும் நிறைந்த அக் காலத்தில் அம்முறை வெற்றி பெறுவது இயலாததே.

## வடஇந்தியாவில் முடியாட்சி.

அசோகனைப்போலன்றி, இக்காலப்பகுதியின் அரசர்கள், "இராசாதிராசன்"; (ஈரானியச்சொல்) "தருமமகாராசன்", "சக்கரவர்த்தி" என்பது போன்ற சிறப்பான பேரரசுப்பட்டங்களைச்சூடியிருந்தனர். கனிஷ்கன், தன்னை "தேவபுத்திரன்" (சீனர் பட்டம்) கெய்சர் (உரோமரது) என்றும் சிறப்பித்துக் கொள்கிறான். அரசிகளின் பட்டங்கள் சிறிதளவு மாறுதலடைந்தன. அசோகனின் மனைவிமார் "தேவிகள்" என அழைக்கப்பட்டிருக்கையில் இக்காலப்பகுதியில் மகாதேவிகள் என்னும் பட்டம் வழக்கிலிருந்தது. அரசர்களுக்கு உருவச் சிலைகளும், கோயில்களும் நிறுவும் முறை காணப்பெற்றது.

ஈண்டும் உரோம முறையின் சாயலை (influence) க்காண்கிறோம். அரசனும் அவனது உறவினருள் ஒருவனும் கூட்டு ஆட்சி அமைத்துக்கொள்ளும் முறை இங்கு மங்கும், சிறப்பாக, கிரேக்கர், சகர், பஹ்லவர் ஆகியோரிடை நிலவியது. பட்டத்துக்குரிய "யுவராசா" என்பான் சிறிது சிறிதாக சிறப்பும் உயர்வும் எய்தி வந்தான். க்ஷத்திரபர், மகாக்ஷத்திரபர் முறை முன்னர் குறிப்பிடப்பட்டது. கிரேக்கப்பட்டப் பெயர்களைக் கொண்ட பலபெரும் அலுவலாளர்கள் இருந்தனர். சாதவாகன ராட்சியில் உள்நாட்டுத் தலைவர்கள் இராணுவப்பயிற்சிபெற்றோராயுமிருந்தனர். அவர்கள் மன்னர்களுடன் கொண்டிருந்த நெருங்கிய தொடர்பு, (சில காலங்களில் மணவினை உறவும் நிலவியது) அவர்தம் அதிகார வளர்ச்சிக்கு உதவியது. காலப்போக்கில் பேரரசின் வீழ்ச்சிக்கு இவர்கள் செயல்களும் காரணமாயின. மாவட்டம் "இராட்டிரம்" அல்லது அகரம் அல்லது தேசம் என்று அழைக்கப்பட்டது. இதன் பணித்துறைச்சார்பான தலைவன், "இராட்டிரபதி, அல்லது அமாத்தியன், அல்லது தேசாதிகிருத் என்று முறையே பெயர் பெற்றிருந்தான். "கிராமமும், நிகாமமும்" (ஊர் & நகர்) ஆட்சி முறைப்பிரிவின் அடிப்பகுதிகளாம்.

## தமிழர் அரசியல்.

சங்க இலக்கியம் அரசியலைப்பற்றி அறிவிக்கின்றது. மிகுதியாக உண்மையினின்று அது பிறழ்ந்துள்ளதாகக் கருதுவதற்கில்லை. ஆனல் திருவள்ளுவரின் குறள், உயர்ந்த குறிக்கோளைக்கொண்ட கோனுட்சியை கற்பனை விளக்கத்துடன் சிறப்பிக்கின்றது. வழிவழியாக வரும் கோனுட்சிமுறை சில காலங்களில் அரசுரிமைக் கலகங்களால் தடையுற்றது. வேந்தனுக்கு அறிவுறுத்தும் அமைச்சுக் குழுவும், பொதுமக்கட் கருத்துக்களும், அரசன் அல்லவை செய்யத்துணியாது அவனுக்கு அறிவு புகட்டப்படும் வழக்கமும், அவனது மிகுதியான அதிகாரங்களைக் கட்டுப்படுத்தின. ஆட்சியை எதிர்த்து மக்கள் புரட்சிசெய்ய இயலுந்தன்மை சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படவில்லை. கொடுங்கோன்மையின் விளைவாக செழிப்பின்மையும் வறுமையும் ஏற்படுமென்றே கருதப்பட்டதாகத்தெரிகிறது.

# இந்தியா கி. மு. 200 முதல் கி. பி. 300 வரை

----சாதவாகனப் பேரரசின் தோராயமான எல்லை

× போர்க்களம்

சில ஆசிரியர்களால் கற்பனை செய்யப்பட்டுள்ள, பிரதிநிதிகளைக் கொண்ட நிலையங்கள், அரசர்களின் பகட்டான சிறப்புக் கொண்டாட்டங்களைக் குறிக்கும் அடையாளங்களாகவே கொள்ளப்படவேண்டும். ஆனால், முறை வழங்குதலிலும் பொதுவான ஆட்சி முறையிலும், மன்னனின் "அவை" அவனுக்கு அறிவுரை கூறிவந்தது. ஊர்களில் உள்நாட்டுப் பேரவைகள் ஊக்கமுடன் வேலை செய்து வந்தன. குறள், மன்னனின் வரம்பற்ற அதிகாரத்தின் தூய்மையற்றதும் அழிவுறக்கூடியதுமான தன்மையை வற்புறுத்தியபோதிலும், அரசன் எல்லாம் வல்லவன் என்ற கோட்பாட்டை ஆதரித்து, மழை பொழிவதற்கும் அவன் காரணமானவன் என்று கூறும். இந்நூல், அரசனது ஒற்றர்கள் அவனுடைய கண்களுக்கு இணையானவர்கள் என்று கூறி மற்றய மக்களிடமிருந்து அவர்களை வேறுபடுத்துகிறது. அர்த்த சாத்திரத்திற்கும் வடமொழி நூல்கள் சிலவற்றிற்கும் திருக்குறள் கடப்பாடு உடையதாக இருப்பினும், இதன் உயர்ந்த நெறி, அர்த்த சாத்திரத்தின் தன்மைக்கு முற்றிலும் மாறுபட்டதாகவும், அறநூலுக்கு ஒற்றுமைப்பட்டதாகவும் உளது. அரசனின் உறுப்புகள் ஏழு (சப்தாங்கம்) என்ற கோட்பாடும், மக்களின் நோக்கம் மூன்று கூறுகளையுடையது (திரிவர்க்கம்) என்ற வடமொழி நூலாசிரியர்கள் கருத்தும் குறளில் குறிப்பிடப்படுகின்றன. ஒழுக்க முறையை அடிப்படையாகக் கொண்டே அதிகார உரிமை நிலைபெற வேண்டுமென இது வற்புறுத்தும். மன்னனுக்கும் மன்பதைக்குமிடையே பொதுநலத்தைப்பற்றி கருத்து ஒற்றுமை இன்றியமையாதது என்று திருக்குறள் அறிவிக்கிறது. அர்த்த சாத்திரத்தைப்போலன்றி இஃது கட்டாயக் கடன்களை அரசன் வாங்குவது கொள்ளையடிப்பதுபோல் என்று கூறி அம்முறையை மறுக்கிறது.

## பகுதி 11.

### சமய நிலை.

#### பிராமண சமயம்.

இக்காலப்பகுதியில் வேள்வி முறையுடன் கூடிய பிராமண மதம் சிறப்பான நிலையிலிருந்தது. புஷ்யமித்திரனின் சமயத்

தொடர்பான ஊக்கம், நீண்டகால விளைவுகளுக்குக் காரணமா யிருந்ததெனத் தோன்றுகிறது. தென்னிந்தியாவில் சாதவாக னரும், தமிழ் அரசர்களும் பல காலங்களில் வேதமுறைப்படி வேள்விகளைச் செய்து பழைய மதம் புகமெய்துமாறு செய்தனர். ஆனால் இவர்கள் புத்த சமயத்திடமும், சமண சமயத்திடமும் இரக்கமற்ற வகையில் நடந்துகொள்ளவில்லை. சைவ, வைண வருடன் பிராமண மதத்தினர் செய்துகொண்ட உடன்பாட்டின் விளைவாகவும் பிராமணமதம் வலிமையுற்றது. வைணவசமயம் கிரேக்கரை மிகவும் கவர்ந்தது என்பதற்குச் சான்றாக உள்ள பெஸ்நகர் தூணைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பெற்றது. சுமார் கி. மு. 150-க்கு உரியதும் உதயபுரியின் (இராசபுதனம்) அண்மையில் கிடைக்கப்பெற்றதுமான ஒரு கல்வெட்டு வாசு தேவனின் கோவில் ஒன்றைக் குறிப்பிடுகிறது. இரண்டாம் காட்பிசிசும், வாசுதேவனும் சைவ சமயத்தை ஆதரித்தனர். நகபானன், உஷவதத்தன் முதலிய பல அயல் நாட்டு அரசர்கள், தமது குறுநில மன்னரின் மதங்கள் வளர உதவி செய்தபோதிலும் சிறப்பாக பௌத்த மதத்தையே விரும்பினர். உஷவதத்தன், பிராமணர்களுக்கும் பௌத்தர்களுக்கும் மிகுதி யாகச்செய்த அறங்கள், நாசிக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் பட்டுள்ளன. முதலாம் உருத்திரதாமனும் அவன் பின்போந் தோரும் முழுதும் இந்தியர்களாகி, சாதவாகனருடனும், இட்சு வாகு குலத்தினருடனும் மணவினை உறவு செய்துகொண்டனர். கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் ஆர்மீனியாவில் கண்ணன் வழிபாட்டுமுறை நிலவியதாகக்கூறும் சிரியா நாட்டு மரபுரை ஒன்றுண்டு.

## புத்த சமயம்.

கிழக்கிந்தியாவில் புத்த சமயம் நிலைகுலைந்ததெனினும், மெனாண்டரையும், கனிஷ்கனையும் தம்மதத்திற்குக் கொண்டு வருவதில் பௌத்தர்கள் வெற்றிகண்டனர். இம்மதம் விரிவாகப்பரவுவதற்கு மகாயானத்தின் வளர்ச்சி துணைபுரிந்தது. கனிஷ்கனால் கூட்டப்பெற்ற இறுதியான நான்காவது மாநாடு, மகாயானக்கொள்கையை சட்டமுறைப்படி ஏற்றுக்கொண்டது. காலப்போக்கில் நடு ஆசியாவிலும், சீனாவிலும் மகாயானமுறை,

பரவியது. சாதவாகனரும், அவர்களைவிட மிகுதியாக இட்சுவாகு குலத்தினரும் புத்த சமயத்தை ஆதரித்தனர். கி. பி. முதல் மூன்று நூற்றாண்டுகளில் இச்சமயம் தமிழ்நாடு முழுவதிலும் செழிப்பான நிலையிலிருந்தது.

### சமணம்.

புத்த மதத்தைப்போலவே சமணமும் இந்தியாவின் இடைப்பகுதியில் சிறப்பு குன்றியது. ஆனால் கலிங்கத்தின் காரவேலன் இம்மதத்தை மிகவும் ஆதரித்து, "சமணத்தின் அசோகன்" என்றழைக்கப்படக்கூடும் அளவில் ஓரளவு தொண்டாற்றினான். இஃது, மதுராவிலும், உச்சயினியிலும் உறுதியாக நிறுவப்பட்டிருந்தது. சுமார் கி. பி. 79-ல் சுவேதம் பரர், திகம்பரர் என்ற இரு பிரிவுகள் சமணத்தில் தோன்றி நிலைபெற்றன. பெண்துறவிகள், முதற் பிரிவில் மட்டுமே காணப்பெற்றனர். தமிழ் நாட்டில் சங்ககாலத்தில் சமணம் சிறப்பெய்தியிருந்தது. ஆனால் பிராமண சமயத்திற்கு அடுத்த நிலையைத்தான் அஃது பெறமுடிந்தது. கிறித்தவ ஆண்டின் ஆதிப்பகுதியில் யூதரும், கிறித்தவரும் மலையாள நாட்டில் புகுந்தனர்.

## பகுதி-12

### பொருளாதார நிலை.

### தொழில் முறை.

தொழிற் சங்கமுறை இக்காலப்பகுதியில் மேலும் அதிக முன்னேற்றமடைந்தது. நெசவாளர், குயவர், செக்காடுவோர், தந்தவேலை செய்வோர், கன்னார், மூங்கில்வேலை செய்வோர், தண்ணீரின் ஆற்றலால் வேலை செய்கிற இயந்திரங்களைச் செய்வோர் முதலியோரின் சங்கங்களைப்பற்றி கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. உஷவதத்தன், 3000 (ககபணம்) பணங்களை நிலையாக, இரண்டு நெசவாளர் சங்கங்களில் சேமித்து வைத்து, 12-சதவீதமும், 9-சதவீதமும் அதற்குக் கிடைத்த வட்டித்தொகையை பௌத்தத் துறவிகளின் பொருட்டு செலவிட்டதாக அவனுடைய நாசிக் கல்வெட்டுக் குறிப்பு

அறிவிக்கிறது. துறவிகளின் மருத்துவ உதவிக்காக, மற்ற சங்கங்களிலும் பணம் நிலையாகச் சேமித்து வைக்கப்பட்டதாகவும் அதே இடத்திலுள்ள மற்றொரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. சங்கங்கள் இவ்வாறு பொருளகத்தின் (Bank) அலுவலைச்செய்து வந்தமை அவற்றின் போற்றத்தக்க முன்னேற்றத்தைக் காட்டாநிற்கும். இவற்றின் பெயராலும், இவற்றை மேற்பார்வை செய்தோரின் பெயராலும் அறங்கள் செய்யப்பட்டன என்ற குறிப்புகளும் உள. எளிதில் இயங்குந் தொழிலின் தன்மையைக்காட்டும் சான்று மணிமேகலையில் உளது. புகார்நகரமாளிகை, மகத வினைஞராலும், மராத்தியக் கம்மராலும், மாளவக் கொல்லராலும், யவனத்தச்சராலும், தமிழரின் ஒத்துழைப்புடன் இயற்றப்பட்டதாம். தமிழ் நாட்டின் சிறப்பான கைத்தொழில் பருத்தி நெசவாகும். இந்நாட்டு நெசவுப் பொருள்களை மேற்கு நாட்டினர் பெரிதும் விரும்பிப்போற்றினர். இந்தியர் தயாரித்த மெல்லிய ஆடைகள் "நெசவு செய்யப்பட்ட காற்றின் கூடுகள்" என்று பெட்ரோனியஸ்ஸாலும் (Petronius), "பாம்புகளின் சட்டைகள்" என்று தமிழ்ப்புலவர்களாலும் சிறப்பிக்கப்படுகின்றன. அயல் நாடுகளுக்கு இந்தியா ஏற்றுமதிசெய்த மிகுதியான பொருள்களிலிருந்து, இந்நாட்டின் மற்றய பொருளாதார அலுவல்கள் தெளிவாகும்.

## கடல் துறைமுகங்கள்.

கடல் துறைமுகங்களைப்பற்றியும் வாணிகத்திற் சிறந்த மற்ற இடங்களைப்பற்றியும், பெரிப்ளூஸ் என்ற நூலிலும் (கி. பி. 150) தாலமியின் நிலவர்ணனை நூலிலும் நன்கு சிறப்பிக்கப்படும். பரிகஸா (ப்ரோச்) பார்பரிகன் (பகர்திபூர்) முசிரி, நெல்கிண்ரு (கோட்டயம்), கொற்கை, தொண்டி, குமரி (கன்யாகுமரி), மசாலியா (மசூலிப்பட்டினம்), பொடூகே (புதுச்சேரி) முதலிய பல இடங்கள் அவற்றில் குறிப்பிடப் பட்டுள்ளன.

## ஏற்றுமதியும் இறக்குமதியும்.

இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டவற்றை 1. மக்கள்; 2. விலங்குகளும் விலங்குப்பொருள்களும்; 3. தாவரப்பொருள்கள்; 4. கனிப்பொருள்கள் என்று நான்கு

வகையாகப் பிரிக்கலாம்.§ 1. சில அடிமைப் பெண்கள், அலிகள், யானைப்பாகர், சமையற்காரர், விலைமகளிர், 2. சிங்கங்கள், சிறுத்தைகள், குரங்குகள், புலிகள், நாய்கள், காண்டாமிருகங்கள், யானைகள், கிளிகள், மயில்கள், பெரிய மலைப்பாம்புகள், விலங்குத் தோல்கள், மென்மயிர், நெய், ஒருவகை வெள்ளாட்டுக்கம்பளி (காச்மீரத்திலிருந்தும், இமயத்திலிருந்தும்), கத்தூரி, காண்டாமிருகத்தின் கொம்புகள், தந்தம் (மிகச் சிறந்தவகை, ஓரிஸ்ஸாவிலிருந்து), ஆமை ஒடு, முத்து, (சோழ, பாண்டிய நாடுகளிலிருந்து) சங்கு, பட்டாடைகள் (இந்தியப்பட்டும், சீனப்பட்டும்) முதலியன. இவைகளில் முத்துகளுக்கும், தந்தத்திற்கும், கிளிகளுக்கும் மிகுந்த தேவை இருந்தது. 3. மிளகு (மலையாளம் திருவாங்கூரிலிருந்து) சிறப்பாக கருமிளகு, வெள்ளை மிளகு, வால் மிளகு முதலியன. மிளகை, கிரேக்கர் மிகவும் விரும்பிய காரணத்தால் அது, வடமொழியில் "யவனப்பிரியா" எனப்பெயர் பெற்றது. இஞ்சி, ஏலக்காய் (மலையாளத்திலிருந்தும், திருவாங்கூரிலிருந்தும்); இலவங்கப் பட்டை (இமயத்திலிருந்தும், மலையாளத்திலிருந்தும்) இமயத்திலிருந்து ஒருவகை மணத்தைலம், பூமாலைகள், மலையாளமெழுகு கரு நீலச்சாயம், எள், கரும்புச் சர்க்கரை, மெல்லிய ஆடை வகைகள் (கூர்ச்சரம், சோழநாடு, மசூலிப்பட்டினம், டாக்கா முதலிய இடங்களிலிருந்து) பருத்தி, கருங்காலிமரம், தேக்கு (திருவாங்கூர், மலையாளம், கன்னடநாடு, கூர்ச்சரம் முதலியவற்றிலிருந்து) நூக்கமரம், சந்தனமரம் (மைசூர், கோயம்புத்தூர், சேலம் ஆகிய இடங்களிலிருந்து) கற்றாழைமரம், தேங்காய், மலையாள - வாழைப்பழங்கள், முலாம்பழங்கள், அரிசி முதலியன. 4. வைரம், பலவகைப் படிகக்கற்கள், நீல மணிக்கல், சிவப்புக்கல், கல்நார், இரும்பு, எஃகு முதலியன. இந்தியாவுக்கு இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களாவன :- அடிமைகள் (பாடக்கூடிய அழகிய கிரேக்க மங்கைகள் உட்பட) பவழம், நாரால்செய்யப்பட்ட ஆடை, கொடி முந்திரித்தேறல், ஈயம், செம்பு, தகரம், மலர்க்குவளைகள், விளக்குகள், கண்ணாடி முதலியன.

---

§ **E. H. Warmington. The commerce between the Roman Empire and India (1928). Part II.**

## இந்திய உரோம வாணிகம்.

உரோமப் பேரரசன் அகஸ்தஸ் காலத்தில், இந்திய உரோம வாணிகம் தொடங்கியது. கி. மு. 25-க்கும் 11-க்கு மிடைப்பட்ட காலத்தில் வடமேற்கு இந்தியாவிலிருந்தும், மேற்கு இந்தியாவிலிருந்தும், சேர, பாண்டிய நாடுகளிலிருந்தும் தூதுக்குழுக்கள் அவ்வரசனால் வரவேற்கப்பட்டன. முதலில் மேற்குக்கரை வழியாக, மேற்கு நாடுகள் மலையாள நாட்டுடன் வாணிகம் செய்தன. சுமார் கி. பி. 50-ல் மேனாட்டுக்கப்ப லோட்டிகள் மலையாள நாட்டுடன் நேர்முகமாக வாணிகம் செய்வது, முன்பைவிட விரைவாகவும் எளிதாகவுமுள்ளது என்று அறியலாயினர். "ஹிப்பாலஸ்" என்பான் இம்முறை யைக் கண்டுபிடித்தானென்பது பழைய மரபுரை. உரோமுக் கும் இந்நாட்டுக்குமுள்ள தொலைவைக்கடக்க நான்கு மாதங்கள் சென்றபோதிலும் வாணிகம் விரைவாக முன்னேறியது. பல உரோமானிய மக்கள், இந்திய வர்த்தக நகரங்களில் நிலை யாகத் தங்கலாயினர், கிராங்கனூரில் அகஸ்தஸ் கோவில் ஒன்றும் நிறுவப்பட்டது. கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகள் முழுவதும் வாணிகம் மிகவும் செழிப்புற்றோங்கியது. உரோம ரின் தங்க, வெள்ளிக் காசுகள், கோயம்புத்தூர் மாவட்டம், திருவாங்கூர், புதுக்கோட்டை ஆகிய இடங்களில் மிகுதியாக வும், இந்தியாவின் மற்றய பகுதிகளில் சிறிதளவும், காணப் பெற்றுள்ளன. ஆண்டு ஒன்றுக்கு 55000000 செஸ்டர்கள் (சுமார் 6,00,000-பவுன்கள்) அளவுக்கு, இந்திய பெரும் போகநுகர்ச்சிப் பொருள்களை உரோமுக்கு அனுப்பியதால் ஏராளமான தங்கத்தைப் பெற்றதென்று பிளினி குறிப்பிடுகிறார். இந்தியப் பொருள்கள் இந்தியாவில் உள்ள அவற்றிற்குரிய விலையைவிடப் பன்மடங்கு மிகுதியாக மேல்நாடுகளில் விற்கப் பட்டதாம். உரோமானியர், குறிப்பாக மகளிர், முத்துக்கள், தந்தம், மெல்லிய ஆடைகள், மிளகு முதலியவற்றைப் பயன் படுத்திய முறையைக் குற்றஞ்சாட்டி, பிளினி, பெட்ரோனியஸ், செனீகா முதலிய ஆசிரியர்கள் இடிமுழக்கஞ் செய்கின்றனர். கயஸ் அரசி லோலியாபௌலினா என்பாள், ஒரு சிறப்பற்ற திருமண விழாவின்பொழுது, நானூறுலட்சம் "செஸ்டர்கள்" பெறுமான முத்துக்களையும், உயர்ந்தநிறக் கற்களையும் அணிந்

திருந்தாளாம். நீரோவின் செருப்புகள் முத்துக்களால் அழகு செய்யப்பட்டிருந்ததாம். அக்கால பெரும்போக வாழ்க்கையைக் கண்டித்த நன்னெறியாளனை செனீகாவும், தந்தத்தினுலாகிய கால்களைக்கொண்ட 500 மேசைகள் வைத்திருத்தான். இந்தியப்பட்டாடைகளையே உடுத்திய மக்களும், இந்தியமணத் தைலத்தில் குளித்தவர்களும், கிளிகளைக்கொன்று உண்டவர் களும், தாம் வளர்த்த விலங்குகளுக்கு அவற்றை உணவாகக் கொடுத்தோரும் உரோமப் பேரரசில் காணப்பெற்றனர். உரோம வாணிகமுறை வெற்றியடைந்ததற்கு பேரரசு அமைப்பும், வணிகரின் நேர்மையும் காரணங்களாகும். ஆயி னும் இத்தகைய வாணிகத்தினுல் விளைந்த பொருளாதாரச் சீர்கேடு உரோமப்பேரரசின் சிதைவுக்கு ஒரு காரணமாகியது.

## இந்தியாவின் வாணிகச்சிறப்பு

உரோமுடன் இந்தியா கொண்டிருந்த வாணிகத்தொடர் பின் விளைவாக இந்நாட்டில் செல்வமும், செழிப்பும் ஓங்கின. அயல்நாட்டு வாணிக முறையில், இது ஒரு பகுதியேயாகும். தொலைவிலுள்ள கிழக்கு நாட்டுப் பொருள்கள் பல இந்தியா வழியாக உரோமுக்கு அனுப்பப்பெற்றன. ஆதலால், இந்தியா வின் ஏற்றுமதிப் பொருள்களைக் கருதுமிடத்து, உள்நாட்டுப் பொருள்களையும், வேற்று நாட்டினவற்றையும் வேறுபடுத்தி நோக்குதல்வேண்டும். ஸ்பெயின் முதல், சீனு, மலேயாசியா வரை நிலவிய வாணிக உலகில், இந்தியா நடுநாயகமாகி விளங்கியது. அரேபியா, பாரசீகம், நடு ஆசியா, சீனு, மலேயா ஆர்கிபிலகோ முதலிய நாடுகளுடன் இந்தியா நெருங்கிய தொடர்பு பூண்டிருந்தது. இந்நாட்டின் வாணிக உறவு, தென் கிழக்கு ஆசியாவில் குடியேற்ற முயற்சி ஏற்படுவதற்கு அடிப்படையாக இருந்தது.

# பகுதி-13

## இனவாழ்க்கை.

### அயலார் இந்தியராகுதல்.

வட இந்தியாவிலும், மேற்கு இந்தியாவிலும், ஆட்சி ஏற்படுத்தியிருந்த அயல்நாட்டுப் படையெடுப்பாளர் விரைவில்

இந்தியராக்கப் பெற்றனரென்பது முன்னர் கூறப்பட்டது. அவர்களை இந்திய இனத்துடன் இணைத்துக்கொள்ளும் அளவுக்கு, சாதிமுறை நீண்டு சுருங்கும் தன்மைபெற்றிருந்த தென்பது இதனின்று அறியப்படும். அன்பு (பக்தி) வழிபாட்டு முறை, சாதிக்கட்டுப்பாடுகளை மீறக்கூடியதாக இருந்ததென்ப தற்குச்சான்றாக உள்ள பெஸ்நகர் கல்வெட்டு மறக்கற்பால தன்று. அயலாரை, இன அமைப்பில் ஈர்த்துக்கொண்டபின் பகவத்கீதை அறிவிக்கும் நான்கு "வர்ணங்கள்" வற்புறுத்தப் பட்டதைக் காண்கிறோம். கௌதமிபுத்திர சாதகர்ணிபோன்ற அரசர்கள் சாதிகளின் தூய்மையைக் காக்கும் தமது முடிவை வெளியிட்டனர். அயலார், இந்தியராக்கப்பட்ட போதிலும் அவர்களால் தமது பண்டைய இனப்பழக்கங்களைக் கைவிட இயலவில்லை. சித்தியரின் "சதி" என்ற பழக்கம், நாகரிக மற்ற படையெடுப்பாளரால் ஆதரிக்கப்பட்டிருக்கவேண்டும்.

ஓவியங்களிலும், சிற்பங்களிலும், கலைஞர்கள், மங்கைய ரின் மார்பகம் வெளியில் தோன்றுமாறு செய்தது, கலைத் திறனை உயர்த்துவதற்கேயாம். போதுமான ஆடை அணியப் படவில்லை என்ற கோட்பாட்டுக்குச் சான்றாக இதனைக் கொள்ளலாகாது.

## வாத்சியாயனன்.

புராண ஆசிரியர்கள், வெளிநாட்டினர் படையெடுப்பின் விளைவாக இந்தியர் ஒழுக்கமுறையில் கேடுகள் விளைந்ததாகக் குறிப்பிட்டிருப்பதற்குத் தக்க ஆதாரங்கள் உள. காமசூத்தி ரத்தின் ஆசிரியனான வாத்சியாயனன், மக்கள் ஒழுக்கமுறையி னின்று வழுவாது, அறத்தைப்போற்றி உயர்ந்த குறிக்கோளான வீட்டைப் பெறுமாறு வற்புறுத்துகிறான். அவன் கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்கக்கூடும் என்று ஊகிக்கப் படுகிறது. வாத்சியாயனன், இந்நாட்டின் பல பழக்க வழக் கங்களை நன்கு குறிப்பிட்டுள்ளான். கங்கைக்கும், யமுனைக் கும் இடைப்பட்ட பகுதியில் மக்கள் தூய்மையான பண்புகளைக் கொண்டிருந்தனரென்றும், கிழக்கு இந்தியாவில் அதைவிட மிகுதியான தூய்மைப் பண்புகள் காணப்பெற்றனவெனவும்

கூறுகிறன். சாகேதம், மதுரா பஞ்சாப் ஆகிய பகுதிகளில் மக்கட்பண்புகள் கண்டிக்கப்படத்தக்கதா யிருந்தனவாம். பாக்திரியாவில், மங்கையரிடை நற் பழக்கங்கள் காணப்பட்ட போதிலும், அங்கு ஒரு பெண் பல கணவரை மணந்து கொள்ளும் முறை பின்பற்றப்பட்டு ஆடவரின் சிறப்பு குறைக்கப்பட்டிருந்ததாம். அந்நாட்டின் பக்கலிலிருந்த பகுதிகளிலும் அம்முறை காணப்பட்டதாகக் கூறப்படுகிறது. சிந்து, கத்தியவார், கூர்ச்சரம், வடகொங்கணம், விதர்ப்பம், முதலிய நாடுகளில் மன்னர்களின் உவளகங்களில் ஒழுங்கின்மை நிலவியதாம். மாளவம், மகாராட்டிரம், ஆந்திரநாடு, தென்னிந்தியா முதலிய பகுதிகளின் மங்கையர் பண்புகள் வாத்சியாயனுல் சிறப்பிக்கப்படுகின்றன. மணம்புரிந்துகொள்ள வேண்டிய காலம், புரிந்துகொள்வோர் பின்பற்ற வேண்டிய விதிகள் முதலிய பலசெய்திகள் விரிவாக, அவனுல் விளக்கப்படுகின்றன. நாகரிகமும் சிறந்த பண்புகளும் கொண்ட நகரவாசியின் வாழ்க்கையை அவ்வாசிரியன் நன்கு வருணித்துள்ளான்.

## பகுதி 14

### மக்கள்பண்பாடு.

### எழுதும் முறையும் மொழியும்.

கரூஷ்தி, கிரேக்க எழுத்து வடிவங்கள் வடமேற்கு இந்தியாவில் காணப்பட்டபோதிலும், பிராமி சிறப்பான நிலைக்கு வளர்ந்து வந்தது. மேலைச்சத்திரபரும் சாதவாகனரும், தம் கல்வெட்டுக்களில் பிராமி எழுத்துக்களைப் பயன்படுத்தினர். கி. மு. இரண்டாம் நூற்றுண்டிலிருந்து, வடமொழி சிறிது சிறிதாக முன்னேறி வந்தது. முதலாம் உருத்திரதாமனின் கல்வெட்டில் அதன் சிறப்பான நிலையைக் காண்கிறோம். கி. மு. மூன்று, இரண்டாம் நூற்றுண்டுகளில், பாண்டிய நாட்டின் குகைக்கல்வெட்டுக்களில் பிராமி எழுத்துக்கள் பயன் படுத்தப்பெற்றன. கிறித்தவ ஆண்டின் ஆதி நூற்றுண்டுகளில் வட்டெழுத்து தோன்றலாயிற்று.

## இலக்கியம்.

கி. மு. இரண்டு அல்லது முதலாம் நூற்றுண்டில் பாஸன் என்ற நாடகாசிரியன் வாழ்ந்திருக்கலாமென்று கருதப்படுகிறது. சிலர், அவன் கி. மு. ஐந்தாம் நூற்றுண்டில் இருந்ததாகவும், சிலர், அசுவகோஷனுக்குப் பின்னரே அவன் காலம் எனவும் கூறுவர். 1912-ல் திருவாங்கூரில் கண்டுபிடிக்கப்பட்ட நாடகங்கள் அவனுடையதாகக் கருதப்படுகின்றன. மகாபாரதம் இராமாயணம் ஆகிய காப்பியங்களிலிருந்து அவன் தனது நாடகங்களுக்குச் செய்திகளை எடுத்தனன். அவன் நாடகங்களில், சிறப்பாக "ஸ்வப்பன வாசவதத்தை" குறிப்பிடத் தக்கது. பதஞ்சலி என்ற இலக்கண அறிஞன், பாணினி, காத்யாயனன் என்ற இருவரின் நூல்களை ஆராய்ந்து குற்றங் கண்டுபிடித்தனன். அவன் எழுதிய "மகாபாஷ்யம்" போற்றுதலுக்குரியது. இக்காலப்பகுதியின் முடிவில் மகாபாரதமும், இராமாயணமும் முடிவான உருவை அடைந்தன. கி. மு. 200-வரை உள்ள காலப்பகுதியில் தோன்றிய மனு எழுதிய அறநூலின் புகழ் இந்தியாவிலும், தென்கிழக்கு ஆசியாவின் இந்தியக் குடியேற்றங்களிலும் பரவியது. ஸ்மிருதி ஆசிரியரான யாக்ஞ்ய வல்கியர், கி. பி. மூன்ரும் நூற்றுண்டில் வாழ்ந்திருக்கலாம் என்று காணப்படுகிறது. அதே நூற்றுண்டில் வாத்சியாயனனும் வாழ்ந்ததாகக் கருதப்படுகிறது. பரதனின் நாட்டியநூல் இரண்டு அல்லது மூன்ரும் நூற்றுண்டில் தோன்றியதாகும். பதஞ்சலி, கௌதமர், கணுதர், ஆகியோரால் முறையே எழுதப்பெற்ற, யோக, நியாய, வைசேஷிக சூத்திரங்கள், நாம் குறிப்பிட்டுவரும் காலப்பகுதியில் தோன்றியவை. சரகன் என்ற மருத்துவ அறிஞன், கனிஷ்க மன்னனின் ஆதரவைப்பெற்றனன். அவன் எழுதிய "சம்ஹிதை" என்ற மருத்துவ நூல், மிகவும் சிறப்புவாய்ந்த ஒன்ருகும். அவன், மருத்துவ அறிஞனயிருந்ததுடன், பலநூல்களை நன்கு கற்றுணர்ந்திருந்தான். பிற்காலத்தில் பாரசீகத்திலும், அரேபியாவிலும் சரகனின் நூல் விரும்பிப்போற்றப்பட்டது. சுஸ்ருதன் என்ற மற்றெரு மருத்துவ வல்லுநன் எழுதிய "இரண வைத்தியநூல்" அரேபியா, கம்போடியா முதலிய நாடுகளிலும்

போற்றப்பட்டது. சரகனும், சுஸ்ருதனும் வெளி நாட்டினரிட மிருந்து தமது கருத்துக்களைக் கற்றுக்கொள்ளவில்லை என்பது தெளிவு. "கார்கி சம்ஹிதை" என்ற குறிநூல் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தது. அதிலுள்ள "யுகபுராணம்", வரலாற்றுக்கு ஓரளவு பயன்படும்.

## புத்தசமய நூல்கள்.

ஈனயான புத்தசமயச் சட்டநூல்கள் பெரும்பான்மையில், கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் முடிவு பெற்றன. "மிலிந்த பன்ஹ" என்றநூல், மெனாண்டருக்கும், நாகசேனன் என்ற பௌத்தனுக்குமிடையே நிகழ்ந்த உரையாடலை விளக்கும். மகாயான நூல்களில் வடமொழி சிறப்பான நிலையிலுள்ளது. "சத்தர்மபுண்டரீகம்" என்றநூல் மகாயானக்கொள்கைகளைச் சிறப்பிக்கும். கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த அசுவகோஷன் மிகவும் பெருமை வாய்ந்த ஒரு ஆசிரியனாவன். "புத்த சரிதம்" என்ற "மகாகாவியம்" அவனால் இயற்றப் பட்டது. "சாரிபுத்திர பிரகரணம்" என்ற நாடகமும் வேறு சிலவும் அவனால் எழுதப்பெற்றன. இலக்கியத்துறையில், கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இணையற்ற புகழ்பெற்ற அசுவ கோஷன், அவனுடைய இலக்கிய நடையில், மில்ட்டன், கெதே, (Goethe) காண்ட், வால்ட்டேர் முதலிய மேனாட்டு அறிஞரை நினைவூட்டுகின்றானென்று கூறப்படுகிறது. அசுவ கோஷனின் நடை, காளிதாசனாலும் சிறிதளவு பின்பற்றப்பட் டது. நாகார்ச்சுனன் என்ற தென்னிந்திய அந்தணன், புத்த சமயத்தைப் பின்பற்றி மகாயான முறையைத் தோற்றுவித் தனன். அவன் இயற்றிய, "மாத்தியமிக சூத்திரங்களும்", "சூன்யவாதம்" என்ற நூலும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. அவன் கற்பித்த செய்திகளை, சங்கரர் முதலிய வேதாந்திகளும் சிறிதளவு ஏற்றுக்கொண்டனர். கி. பி. இரண்டாம் நூற்றாண் டில், செய்திகளை எடுத்துரைக்கும் திறமையிலும், மெய் விளக்கத் துறையிலும் நாகார்ச்சுனன், தலையாய பெருமை பெற்றிருந்தனன். நாம் குறிப்பிட்டுவரும் காலப்பகுதியில் வட மொழி நூல்களைத்தவிர, சில பிராகிருத நூல்களும் வெளி

## காசுகள்.

அலெக்சாந்தரின் படையெழுச்சி இந்தியக்காசு முறையில் சிறப்பான மாறுதல் எதையும் புகுத்தவில்லை. கி. மு. இரண்டாம் நூற்றூண்டுவரை, இந்தியாவில் உள்நாட்டு முறையில் காசுகள் பொறிக்கப்பட்டு பெருகிவந்தன.

கிரேக்கரின் ஆட்சிகாரணமாக இத்திய கிரேக்கக்காசுகள் வெளியிடப்பட்டன. அவை, இந்திய-கிரேக்கக்கலைப் பண்புகள் ஒற்றுமைப்பட்டதை விளக்காநிற்கும். மேனுட்டு முறையைப் பின்பற்றியதின் விளைவாக இந்தியப்பண்புகள் சிறிதும் குறைவு பெறவில்லை. இந்திய கிரேக்கக்காசுகளில் இருமொழி எழுத்துக்கள், காணப்பட்டன. அம்முறையை, சகரும் பஹ்லவரும் பின்பற்றினர். நகபானனும் சஷ்தனனும் கிரேக்கக் காசு முறையைப் பின்பற்றினர். குஷானியர் காசுகளில் உரோம நாணயமுறைச்சாயல் புலப்படுகிறது.

ஆந்திரரின் காசுகள், கிருஷ்ணு, கோதாவரி சமவெளி, வட கொங்கணம், மத்திய மண்டலம், மாளவம் முதலிய பகுதிகளில் காணப்பெற்றுள்ளன. அவற்றில் மிகப்பழமையானவை கி. மு. 150-க்கு உரியதாகும். பிராமி எழுத்துக்களும், கோயில், வில், யானை முதலிய உருவங்களும் அவற்றில் காணப்படுகின்றன.

தமிழ் நாட்டில் அடையாளங்களிடப்பட்ட பொற்காசுகள் வழங்கப்பட்டுவந்தன. மேலும் கிறித்தவ ஆண்டின் ஆதி நூற்றூண்டுகளில் உரோமரின் தங்கநாணயமுறை வழக்கிலிருந்தது. ஆந்திரரின் முறையைப் பின்பற்றிய, சில நாவாய்க் காசுகளும், கி. பி. மூன்ரும் நூற்ருண்டில் தமிழ் நாட்டில் வெளியிடப்பட்டன.

முடிவாக, கி. மு. 200 முதல் கி. பி. முந்நூறு வரை உள்ள காலப்பகுதியில் இந்தியக் காசுமுறை, அயல்நாட்டு முறையின் சாயலைப்பெற்று விளங்கியது. ஆனுல் சிறிது சிறிதாக, அயல் நாட்டுக் கலை, இந்திய முறையில் மாற்றப் பட்டது.

## அதிகாரம் 6

## குப்தர்காலம் (300—600)

## முதலாம் சந்திரகுப்தன் (320—சுமார் 330)

### ஸ்ரீ குப்தனும் கடோத்கசனும்.

மகாராசா ஸ்ரீகுப்தனும் கடோத்கச குப்தனும், மகாராசாதிராச முதலாம் சந்திரகுப்தனுக்கு முன்போந்தோரென, சமுத்திர குப்தனின் அலகாபாத் தூண் கல்வெட்டும், பிற குப்தர் கல்வெட்டுக்களும் அறிவிக்கின்றன. இதனலறியப்படும், சந்திரகுப்தனுக்கும் அவன் முன்பிருந்தோருக்குமுள்ள அரசியல் மதிப்புநிலை வேறுபாட்டுக்குத் தக்கசான்றுகளுள. அவர்களை (ஸ்ரீகுப்தனையும் கடோத்கசனையும்) மகதத்தின் குறுநில மன்னர்களாகக் கொள்ளலாம். கி. பி. 671 க்கும் 695 க்குமிடையில் இந்தியாவில் புண்ணியச் செலவு செய்து வந்த இட்சிங் என்ற சீனன், மகாராசா ஸ்ரீகுப்தன் "500 ஆண்டுகள் முன்னர்" ஒரு கோயில் கட்டுவித்ததாகக் குறிப்பிடுவன். இக்குறிப்பு, அறியப்பட்ட அளவில் முதல் குப்தனை, சுமார் கி. பி. 195-ம் ஆண்டுக் குரியதாக்கும். முதலாம் சந்திரகுப்தன் 320-ல் பட்டமெய்தியபடியால், இரண்டு அரசர்களுக்கு ஒரு நூற்றாண்டுக்குமேல் அளிப்பது ஏற்புடையதன்று என்பது வெளிப்படை. ஆதலால். ஸ்ரீகுப்தன், மூன்றும் நூற்றாண்டின் இறுதிப்பகுதியிலும், கடோத்கசன், நான்காம் நூற்றாண்டின், முதலிருபது ஆண்டுகளிலும் ஆட்சிபுரிந்தனரென்று கருதலாம். இட்சிங்கின் குறிப்பு, அவன் காலத்திலிருந்து (ஏழாம் நூற்றாண்டு) பின்புறமாகக் கணக்கிடும் வகையில் ஐந்தாம் நூற்றாண்டு (அதாவது மூன்றும் நூற்றாண்டு) என்று பரந்த முறையில் பொருள்விளக்கம் கொள்ளப்படலாம்.

### முதலாம் சந்திரகுப்தன்.

முதலாம் சந்திரகுப்தனின் "மகாராசாதிராசன்" என்ற பட்டத்திலிருந்து அவனது அரசியல்நிலை, அவன் தந்தை,

பாட்டன் ஆகியோரின் நிலையிலிருந்து வேறுபட்டதென அறி கிறோம். இவனே, முதல் குப்தப்பேரரசனுனபடியால், 319-320-ல் தொடங்கும் குப்த ஆண்டைத் தோற்றுவித்தவனும் இவனுக இருக்கவேண்டும். அவ்வாண்டு கி. பி. 200-ல் தொடங்கியதாக முடிவுசெய்ய அண்மையில் நடைபெற்ற முயற்சி பாராட்டத்தக்கதன்று.* சந்திரகுப்தன் லிச்சாவி இளவரசியை மணம்புரிந்து கொண்டது, அவன்பின் வந்தோரால் மிகுந்த பெருமையுடனும் விருப்பத்துடனும் போற்றப் பட்டிருக்கிறது. குப்தரின் எழுச்சிக்கு இத்திருமண உறவு உதவியாயிருந்தது என்ற கருத்து இதனுல் நன்கு வலியுறுத் தப்படும். இவனது கல்வெட்டுக்களும் காசுகளும் நமக்குக் கிடைத்தில. (ஆனுல் சிலர் சில காசுகள் இவனுக்குரிய தென்பர்) ஆதலால் பிறருடைய குறிப்புகளைக்கொண்டே இவன் நிலையை நாம் உய்த்துணர வேண்டியதாகிறது. ஆகவே, இவன் அருஞ்செயல்களைப்பற்றி நாம் அறிய முடியவில்லை. புராணங் களின்படி, மகதம், அலகாபாத், அயோத்தி யாவும் குப்தர் பேரரசில் அடங்கியிருந்தன. பொதுவாக இச்சிறப்பு முத லாம் சந்திரகுப்தனின் பேரரசைக் குறிக்குமென்று கருதப் படுகிறது. ஆனுல், சிலர் இவனுக்கு முன்பிருந்தோர் பேர ரசையே புராணங்கள் சிறப்பிப்பதாகக் கருதுவர். லிச்சாவி யர்—குப்தர் மணவினை உறவின் விளைவுகளைப் பலவிதமாக, அறிஞர்கள் விதந்து கூறுவர். இவ்வாறு முதலாம் சந்திர குப்தனின் செயல்களைப்பற்றி தெளிவு ஏற்படவில்லை.

## கௌமுதி மகோத்சவம்.

அண்மையில் முதல் குப்த பேரரசனின் வாழ்க்கையைப் பற்றி மேலும் அறிவதற்கான முயற்சிகள் நடைபெற்றுள்ளன. கௌமுதி மகோத்சவம் என்னும் வடமொழி நாடகம் தரும் செய்திகளைக்கொண்டு அவன் வரலாற்றை பேரறிஞர் செயஸ் வால், திரும்ப இயற்றியுள்ளார். இந்நாடகம் ஒரு மங்கையால் இயற்றப்பெற்றதென கருதப்படுகிறது.§ இதன்படி சந்தசேனன்

* R. N. Dandekar, A History of the Guptas, (1941) pp. 12—16.

§ K. P. Jayaswal, History of India (1933), pp. 113—18.

# குப்தர் பேரரசு




---- குப்தர் பேரரசின் தோராயமான எல்லை

II கற்றூண்

என்பான் முறையற்ற வகையில் மகத நாட்டின் பட்டத்தைக் கைப்பற்றி, லிச்சாவியரின் உதவிபெற்று வீரத்துடன் ஆட்சி புரிந்தான். மக்களின் புரட்சியின் விளைவாக அவன் துரத்தப் பட்டு, அவனது குலம் அழிக்கப்பட்டது. சமுத்திரகுப்தன் தனது போர்களினால், பாடலிபுத்திரத்தில், தன் குலத்தை மீண்டும் நிலைநிறுத்தியதாக அறிஞர் செயஸ்வால் கூறுவர். இந்நாடகத்தின் "சந்தசேனன்" முதலாம் சந்திரகுப்தனின் மாற்றுப்பெயர் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டே இதன் வரலாற்றுச் சிறப்பு அமையும். இவ்வடிப்படை ஒற்றுமைக்குப் போதுமான தெளிந்த சான்றுகளில்லை.‡

## மேகரௌலி கல்வெட்டு.

டெல்லிக்கு அண்மையில் மேகரௌலி என்ற இடத்தில் அதன் ஆசிரியரின் மறைவுக்குப்பின் வெளியிடப்பட்ட ஒரு இரும்புத்தூண் கல்வெட்டு உளது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள "சந்திரன்" என்ற பெயர், முதலாம் சந்திரகுப்தனைக் குறிப்ப தாகக்கருதி, அம்மன்னனின் அரசியல் வாழ்க்கையை விளக்க முயற்சி செய்யப்பட்டது. சந்திரன், வங்காளத்தில் வெற்றி பெற்றபின் "சிந்து நதியின் ஏழு முகத்துவாரங்களையும் (வாய்கள்) கடந்து, பாலிகரைத் தோற்கடித்து, தனது படை வலிமையாலும் தொடர்ந்த முயற்சிகளாலும் நில உலகின் தனித்த ஆட்சி உரிமையைப் பெற்றான்" என்று அக்கல் வெட்டு அறிவிக்கிறது. இக்குறிப்பில் காணப்பெறும் செயல்கள் இரண்டாம் சந்திரகுப்தன், மேலைச்சத்திரபரைத் தோற்கடித்த துடன் ஒற்றுமைப்படுத்தமுடியும். மேலும் இரண்டாம் சந்திர குப்தனின் காசுகள் சிலவற்றில், சந்திரன் என்ற சுருக்கமான இவன் பெயர் காணப்பெறும். கல்வெட்டுச் செய்தியை நோக்குமிடத்து, இப்பெயர் (சந்திரன்) சிறிய மன்னன் யாரை யும் குறிப்பிடவில்லை என்பது புலப்படும். ஆகவே முதலாம் அல்லது இரண்டாம் சந்திரகுப்தனையே அது குறிப்பிட வேண்டும். முதலாம் சந்திரகுப்தனே குறிப்பிடப்படுகிற தென்று முடிவு செய்ய மிகுதியான, தெளிவான சான்றுகள் தேவைப்படுகின்றன. அவை கிடைக்குமாயின் இம்மன்னன்

‡ K. P. Jayaswal; History of India (1933), pp. 113—18.

(முதலாம் சந்திரகுப்தன்) குப்தரின் பிலிப்* என்றும், இவன் மகன் குப்தரின் அலெக்சாந்தர்* எனவும் கருதப்படலாம்.† அண்மையில் சந்திரன், என்பது சந்திரகுப்தமோரியனைக் குறிப்பதாகவும் ஒரு கருத்து தோன்றியுளது. ஆகவே இக்கல் வெட்டு தெளிவர்க விளங்காத ஒரு குறிப்பாகும்.‡

## பகுதி 2

### சமுத்திரகுப்தன்.—(சுமார் 330—380)

### பட்டமேற்றல்.

முதலாம் சந்திரகுப்தனுக்குப்பின் பட்டமேற்றவன் அவன் முதல் மகனை க ச் ச ன் என்று சில அறிஞர்கள் கூறுவர். இவன் காசுகள் காணப்பெற்றுள்ளன என்றும், கருதப்படுகிறது. சமுத்திரகுப்தனின் அலகாபாத் தூண் கல்வெட்டு அம்மன்னனை அவன் தந்தை, மரபுரிமையாளனுகத் தேர்ந்தெடுத்ததாகக் குறிப்பிடுவதைக்கொண்டு, அதன் விளைவாக தேர்ந்தெடுக்கப் படாத உரிமையாளர் வெறுப்புற்றனர் என்றும் அக்கல்வெட்டு ஒரு அரசுரிமைப்போர் நிகழ்ந்ததாகக் குறிப்பிடுவதாகவும் மேற் கூறிய அறிஞர்கள் பொருள் கொண்டனர். ஆனல் சட்ட முறையான மரபு வழியில் கச்சன் பெயர் காணப்படவில்லை. மேலும் சமுத்திரகுப்தனின் காசுகளும், கச்சன் காசுகளும், உருவத்திலும், அமைப்பிலும், எ டை யி லு ம் ஒற்றுமையாக உள்ளன. கச்சன் கா சு க ளா க க் கருதப்படுவனவற்றில் பொறிக்கப்பெற்றுள்ள எழுத்துக்களாவன "எல்லா மன்னர் களையும் வேரறுத்தவன்" "உலகை வென்று, தனது சிறந்த செயல்களால் வானுலகையும் வென்றவன்" இதே சொற்கள் சமுத்திரகுப்தனைப்பற்றிய ம ற் ற ய குறிப்புகளில் உள்ளன. ஆகையால், சமுத்திரகுப்தனே கச்சன் என்றும் குறிப்பிடப் படுகிறுன் என்று எண்ண இடமிருக்கிறது. கச்சன் என்பது சமுத்திரகுப்தனின் பா ட் ட னி ன் பெயரான கடோத்கசன் என்பதின் சு ரு க் க மா க இருக்கலாமென்றும் ஊகிக்கலாம். இவன் பட்டமெய்திய ஆண்டு 330 என்பது ஊகம் செய்து கொள்ளப்பட்டதே.

---

* புகழ்வாய்ந்த பண்டைய கிரேக்கப் பேரரசர்.

† S. Krishnaswami Aiyangar, Studies in Gupta History (1927) p. 35

‡ New Indian Antiquary I, pp. 188—89.

## தூண் கல்வெட்டு.

இந்நீண்ட கல்வெட்டில் காலம் குறிப்பிடப்படவில்லை. இஃது வடமொழியிலுள்ளது. காவிய வடிவத்தில் எழுதப் பட்டிருக்கிறது. முதலில் கௌசாம்பியில் இது இருந்திருக் கலாம். இப்பொழுது அலகாபாத்தில் உள்ளது. இதன் 33 வரி களும் ஒரே சொற்றொடராகும். ஒரு அழகிய செய்யுளும் இதில் அடங்கியுள்ளது. இச்செய்யுளை இயற்றியவன், "மகாதண்ட நாயகனை (படைத்தலைவன்) அரிசேனன் என்பான். சமுத் திரகுப்தனின் புகழ் இந்திரன் நாட்டுக்குச் சென்றதாக உள்ள குறிப்பைக்கொண்டு, இக்கல்வெட்டு அவன் மறைந்தபின் தோன்றியதாக ஒரு காலத்தில் கருதப்பட்டது. சமுத்திரகுப்த னின் அசுவமேத வேள்வியைப்பற்றி அதில் குறிப்பிடப்படாத தால், அவனுடைய வாழ்நாளிலேயே அது தோன்றியிருக்க வேண்டுமென்று தெளிவாக உணர்த்தப்படுகிறது. இதில் காணும் நிகழ்ச்சிகளின் வரிசை காலமுறையாக இல்லை. இதிலுள்ள சில மக்கள் பெயர்களும், இடத்தின் பெயர்களும் நன்கு உணரப்படாத போதிலும், இதன் பொருளடக்கம் பெரும்பாலும் தெளிவாய் உள்ளது. வழக்காற்றுச் சொற்றொ டர்ப்போக்கை நீக்கிவிட்டு நோக்கின், இக்கல்வெட்டு முற்றிலும் வரலாற்றுண்மை நிறைந்ததாக இருக்கிறது. குப்தர்பேரரசின் உண்மையான தாபகனின் செயல்களும் புகழும் இக்கல் வெட்டு ஒன்றையே அடிப்படையாகக்கொண்டு அறியப்படு கின்றன.

## சமுத்திரகுப்தனின் திறமை.

தூண் கல்வெட்டின் முதற்பகுதி, சமுத்திரகுப்தன், அரசனாகவும், கவியாகவுமிருந்த சிறப்பை விளக்குகிறது. இவன் திறமையை வியந்த இவன் தந்தை இவனையே அரசை ஏற்குமாறு தேர்ந்தெடுத்தான். இதனால் அரசமன்றத் தினர் மகிழ்வும், அவன் உடன் பிறந்தோர் திகைப்பும் எய்தினர். இக்கருத்தை வெளிப்படுத்தும் ஒரு செய்யுள் அக்காட்சியை நம் கண்முன் தோற்றுவிப்பதுபோல வியக்கத்தக்க வகையில் அமைந்துள்ளது. பிறகு, அச்சுதனையும், நாகசேனனையும்

குப்தமன்னன் வேரறுத்த செய்தி சிறப்பிக்கப்படுகிறது. மேலும் கோட்டர் (Kota) குடும்பத்தைச் சேர்ந்த ஒருவனைக் கைப்பற்றியதும், பாடலிபுத்திரத்தில் கவலையின்றி அமர்ந்ததும் விளக்கப்படுகின்றன. அரசுரிமைக்கலகம் நிலவியது என்ற கோட்பாட்டிற்கு மேற்கூறிய குறிப்புக்கள் போதுமான சான்றுகளாகா. பின்னர், மன்னனின் அறிவாற்றல், நல்லொழுக்கம், போர்விருப்பம் ஆகிய பண்புகள் விளக்கப்படுகின்றன. அவனது கவித்திறமை, அறஞ் செய்வதில் அவனுக்கிருந்த விருப்பம், ஆழ்ந்த அறிவு முதலிய யாவையும் கல்வெட்டினின்று உணரலாம்.

## அவனது தென்னிந்தியப் படையெழுச்சி.

கல்வெட்டின் அடுத்தபகுதி மிகவும் சிறப்புவாய்ந்ததாகும். அதில் சமுத்திரகுப்தனின் வெற்றிகளையும், அவற்றால் பேரரசின் நிலைக்கு ஏற்பட்ட விளைவுகளையும் விளக்கியிருப்பதைக் காண்கிறோம். இவனால் கைப்பற்றப்பட்டு பின் விடுவிக்கப் பெற்ற நாடுகளும், அரசர்களும் பின்வருமாறு:—

கோசலத்தின் மகேந்திரன்; மகாகாந்தாரத்தின் வியாக்கிரராசன்; கேரளத்தின் மந்தராசன்; பிஷ்தாபுத்திரத்தின் மகேந்திரகிரி; கோட்டுராவின் சுவாமிதத்தன்; எரண்டபல்லாவின் தமணன்; காஞ்சியின் விட்ணுகோபன்; அவமுக்தத்தின் நீலராசன்; வேங்கிநாட்டு அஸ்திவர்மன்; பாலக்காவின் உக்கிரசேனன்; தேவராட்டிரத்தின் குபேரன்; குஷ்தலபுரத்தின் தனஞ்செயன்; மற்றும் "தட்சிணபதத்தின் பிற மன்னர்கள் பலரும்." ஈண்டு குறிப்பிடப்பட்டுள்ள இடங்கள் உண்மையில் எப்பகுதிகளைக் குறிக்கின்றன என்பது தெளிவாக அறியப்பட்டால்தான் சமுத்திரகுப்தனின் தென்னிந்தியப்படையெடுப்பின் அளவை திருத்தமாகக் கூறமுடியும். கேரளம், சேரநாட்டையும், கோட்டுரா, கொத்தூரையும் (கோயம்புத்தூர் மாவட்டம்), பாலக்கா, பாலக்காட்டையும், (தெற்கு மலையாள மாவட்டம்), குறிக்குமென்ற கருத்துடன், சமுத்திரகுப்தனின் படையெழுச்சி தென்னிந்தியா முழுவதும் பரவியதென்று ஒரு காலத்தில் எண்ணப்பட்டது. பேரறிஞர் ஹோயர்ன்லி,

**(Hoernle)** "தட்சிணபதத்தின் பிற மன்னர்கள் யாவரும்" என்ற குறிப்பைச் சான்ருகக் கொண்டு, குப்தர் பேரரசு, மோரியப் பேரரசைவிட அளவில் பெரியதென்று கூறினர். ஆனல் இப்பொழுது அத்தகைய விளக்கங்கள் ஏற்றுக்கொள்ளப்படவில்லே. கேரளத்துடன் கோலேர் ஏரியை (கோதாவரி மாவட்டம்) அல்லது குர்தாசாலே (ஒரிஸ்ஸா) யை ஒன்ருக்கிப் பொருள்கூறுவது பொருத்தமுடையதன்று. கோட்டுரா என்பது கோத்தூர் (கஞ்சம்-மாவட்டம்) எனக்கருதப்படுகிறது. பாலக்கா, என்பது பாக்கை (நெல்லூர் மாவட்டம்) என்று கூறப்படுகிறது. எரண்டபல்லா, எரண்டோல் (காண்டெஷ் மாவட்டம் - பம்பாய்) என்ற இடத்தையும், தேவராட்டிரம், மகாராட்டிரத்தையும் குறிக்குமென்ற கருத்துடன் சமுத்திர குப்தன், காசியிலிருந்து மேற்கு இந்தியா வழியாக தன்னுடு திரும்பினுனென்று முன்னர் கருதப்பட்டது. ஆனல் பேராசிரியர் ஜூவோ-துப்ரேல் என்பார், **(Jouveau - dubreuil)** எரண்ட பல்லா, கஞ்சம் மாவட்டதிலுள்ள எரண்ட பாலி என்ற இடத்தையும், தேவராட்டிரம் என்பது, விசாகப் பட்டினம் மாவட்டத்தைச்சேர்ந்த எல்லமாஞ்சிலி தாலுக்காவையும் குறிக்குமென்று விளக்குகிருர். சமுத்திரகுப்தன் படையெடுத்த நாடுகளில் மகாராட்டிரத்தை உட்படுத்துவதற்குச் சான்றில்லே என்பது அவ்வறிஞர் கருத்து. கோசலம், தெற்கு கோசலமாகும். அடுத்துள்ள காட்டுப்பகுதியே மகாகாந்தாரமாம். பிஷ்தாபுரம், கோதாவரி மாவட்டத்திலுள்ள பித்தாபுரம். வேங்கியும் காஞ்சியும் நன்கு அறியப்பட்ட இடங்களே. அவமுக்தமும் குஷ்தலபுரமும், ஆந்திரதேசத்தில் மேலே குறிப்பிடப்பட்ட இடங்களில் ஒன்றின் அண்மையிலிருக்கவேண்டும். ஆதலால் சமுத்திரகுப்தனின் படையெழுச்சிகள், கிழக்குக் கடலோரத்தில், காஞ்சிபுரம் வரை உள்ள இடங்களில்தான் நிகழ்ந்திருக்கவேண்டுமென்று கூறப்படுகிறது. ஆனல், சமுத்திரகுப்தன், கிழக்குக்கோதாவரி, மேற்குகோதாவரி, கிருஷ்ணு, நெல்லூர் மாவட்டங்கள் வழியாகச்சென்று, சதாரா, மந்தலா மாவட்டங்கள் வழியாகத் தன்னுடு திரும்பினுனென்பது ஆசிரியர் கருத்து.§

---

§ **R. Sathianathier—Studies in the Ancient History of Tondamandalam. pp. 13—22.**

## இணைக்கப்பட்ட பகுதிகளும், கூட்டுறவுகளும்.

வட இந்தியாவில் உருத்திரதேவன், மதிலன், நாகதத்தன், சந்திரவர்மன், கணபதிநாகன், நாகசேனன், அச்சுதன், நந்தி, பாலவர்மன் ஆகியோரையும் மற்றும் பல ஆரியாவர்த்த மன்னர்களையும், சமுத்திரகுப்தன் தான் அடியோடு அழித்த தாகக்கூறுகிறான். இவர்களில், அச்சுதனும், நாகசேனனும் இரு முறைகள் சமுத்திரகுப்தனுடன் போரிட்டதாகக் காணப் படுகிறது. மேலே குறிப்பிடப்பெற்ற தலைவர்கள், மேலைக் கங்கைச்சமவெளி, மத்திய இந்தியா, கிழக்கிந்தியா ஆகிய வற்றின் நாடுகளில் ஆட்சிபுரிந்தோராவர். வடகிழக்கு இந்தியா விலும், இமயத்தின் அடிவாரத்திலும், பஞ்சாப், இராசபுதனம், மாளவம், மேற்குஇந்தியா, மத்தியப்பிரதேசம் முதலிய பகுதி களிலும் மிகுதியாக சமுத்திரகுப்தனின் கூட்டாளிகள் இருந் தனர். சிறப்பாக அஸ்ஸாம், நேபாளம் மன்னர்களும், மலவர், அர்ச்சுனயனர், யௌதேயர், பிரார்ச்சுனர், ஆபிரர் முதலிய குடியரசினரும், அவனது நெருங்கிய நட்பினராயினர். குஷா னர், மேலைச்சத்திரபர், ஈழ நாட்டினர், "தீவுகளின் மற்ற மக்கள்" ஆகியோர் உட்பட்ட வேறோர் வகையான கூட்டாளிகளும் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண்கிறோம். ஈழ நாடும், தீவுகளும் குறிப்பிடப்பட்டிருப்பதால், சமுத்திரகுப்தனின் "திக்குவிசயத்தில்" அவனது நிலப்படையுடன், கடற்படையும் ஒத்துழைத்ததென்றும், வங்காளக்குடாக்கடலிலும் மலேய ஆர்கி பிலாகோவிலும் அவன் ஆற்றல் பரவியிருந்ததென்றும் சில அறிஞர்கள் கொண்ட யூகம், வலியுறுத்தப்படுகிறது. சீனச் சான்று ஒன்றினால், சமுத்திரகுப்தன் ஈழத்துடன் கொண்டிருந்த உறவு வலியுறுத்தப்படுகிறது. அச் சான்றாவது, ஈழநாட்டு மேகவர்ணன், புத்தகயாவில் ஒரு சிங்கள மடம் கட்டுவிப்ப தற்காக, சமுத்திரகுப்தனின் இணக்கத்தைக்கோரி ஒரு தூதுக் குழுவை அனுப்பிவைத்தானாம். அம்மன்னன் சுமார் 352 முதல் 379 வரை ஈழத்தில் ஆட்சிபுரிந்தவன் என்று அறியப் படுவதால், சமுத்திரகுப்தனின் காலத்தை அறியவும் இச் சான்று உதவுகிறது.

## சமுத்திரகுப்த கவி அரசன்.

கல்வெட்டின் இறுதியான (மூன்றும்) பகுதியில், சமுத்திர குப்தனின் கல்வியறிவு, இசைத்திறன், செய்யுள் இயற்றும் ஆற்றல் முதலிய பண்புகள், பாராட்டப்பட்டிருப்பதுடன் "கவியரசன்" என்ற அவனது பட்டமும் விளக்கப்படுகிறது. இம்மன்னன் இயற்றிய நூல்கள் கிடைத்தில வாயினும், கல்வெட்டில் மூன்று இடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் இவனது இலக்கியத்தொண்டை ஆதாரமற்றது என்று கருதுவது முறையன்று. இவனது காசுகள் எட்டு வகையினவாகும். அவற்றுள் மிகச்சிறந்தனவாகக் கருதப்படுபவை யாழ் வாசிப்போரின் உருவங்களைப் பெற்றவையாம். இவையும், மன்னனின் இசைத்திறனை வலியுறுத்தும். கவியரசன் என்ற சொல்லுக்குத் தனித்துறையான பொருள் தந்து, சமுத்திரகுப்தனை, ஒரு மகாகவியைவிட (பெரிய கவி) உயர்ந்தவனாகக் கருதவேண்டியது இன்றியமையாததன்று. சமுத்திரகுப்தன் தன்னை கல்வெட்டில் "விச்சாவியரின் மகள் வயிற்றுப்பிள்ளை" எனகூறிக் கொள்கிறான். கல்வெட்டுச் செய்யுளின் ஆசிரியரான அரிசேனன் மகாதண்டநாயகன் என்றும் "(பரம) பட்டரகனின் (சமுத்திரகுப்தன்) திருவடி அடிமை" என்றும் சிறப்பிக்கப் படுகிறான். வழக்கமாகக் கல்வெட்டுக்களிலுள்ள புகழுரையை ஒத்த சில, வரலாற்றுச்சிறப்பு வாய்ந்தன அல்ல. ஆயினும், அரிசேனன், முடியாட்சியைப் புகழ்ந்து கூறுவதும், மன்னனைக் கடவுளாகத்தொழுவதும் நோக்கத்தக்கது. அரசன் "மக்களின் பழக்க வழக்கங்களுடன் உடன்படுவதைப் பொறுத்தவரை அவர்களுள் ஒருவனே; ஆனால் உண்மையில் அவன், இவ்வுலகில் தங்கியுள்ள ஒரு கடவுள்" என்ற கருத்து குறிப்பிடத் தக்கது.

## இரகுவம்சத்தின் காலம்.

காளிதாசன், தனது காப்பியமான இரகு வம்சத்தில், இரகுவின் திக்குவிசயத்தைச் சிறப்பிக்கின்றான். இக்கற்பனைக்கு மூலமாக உள்ள வரலாற்றுச் செய்தியை ஆராய்ந்தறிய சில அறிஞர் முற்பட்டு வேறுபாடுகள் நிறைந்த முடிவுகளைத் தெரிவித்தனர். சிலர், வீரகாவியங்களையும், புராணங்களையுமே

அக்கவி பின்பற்றியதாகக் கூறுவர். இவ்வாராய்ச்சியில் சமுத்திரகுப்தனின் பெயரும் இணைக்கப்படுகிறது. அரிசேன னின் சொற்றொடர்கட்கும், காளிதானனுடையவற்றிற்கும் சில ஒற்றுமைப் பண்புகள் உள. இதனால் காளிதாசன், இரகு வின் வரலாற்றை வரைகையில் குப்தர்களின், (குறிப்பாக சமுத்திரகுப்தனின்) அருஞ்செயல்களை உள்ளத்தில் கொண் டிருந்தானென்று ஊகிக்க இடமுள்ளது. இக்கவி ஐந்தாம் நூற்றாண்டில் குப்தர் பேரரசில் வாழ்ந்திருக்கலாமென்று நம்பப் படுவதால் மேற்கூறிய கருத்து வலியுறுத்தப்படுகிறது.

## அசுவமேத வேள்வி.

சமுத்திரகுப்தனின் மற்றொரு கல்வெட்டு ஈரானிலுள்ள தாகும். அதன் காலமும் குறிப்பிடப்படவில்லை. மன்னன் தனது வெற்றிகரமான போர்களை முடித்து, அவனுடைய உயர்நிலையைக் காட்டும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அசுவமேத வேள்விகளைச் செய்தபின் அக்கல்வெட்டு தோற்றுவிக்கப்பட்டதாகக் காணப்படுகிறது. அசுவமேத அடையாளத்தைப் பெற்ற காசுகள் அவனால் வெளியிடப் பட்டன. "அசுவமேதத்தைப் புதுப்பித்தவன்" என்ற எழுத் துக்கள் அவற்றில் பொறிக்கப்பட்டுள்ளன. மேலும், குதிரை யின் உருவமும் "பராக்கிரமன்" என்ற சொல்லையுடைய ஒரு முத்திரையும், லக்னௌவில் கல்லால் இயற்றப்பெற்ற ஒரு குதிரைச் சிலையும் காணப்பட்டுள்ளன. சமுத்திகுப்தனுக்குப் பின்வந்தோரின் குறிப்புக்களில் இவன் "நீண்டகாலமாக மறைந்திருந்த அசுவமேதத்தைப் புதுப்பித்தவன்" என்று சிறப் பிக்கப்படுகிறான். புஷ்யமித்திரனுக்குப் பிறகு, தென்னிந்திய அரசர்கள் மிகுந்த அளவில் அசுவமேத வேள்விகளைப்புரிந்தன ரெனினும் வட இந்தியாவைப் பொறுத்தவரை, குப்தரின் மேற்கூறிய குறிப்பு சான்றற்றது என்று கருதுவதற்கில்லை. சிலர், தென்னிந்தியத் தலைவர்களின் பழக்கத்தையே சமுத்திர குப்தன் பின்பற்றியதாகக் கருதுவர். இவனுக்குப்பின் பட்ட மேற்றவன் காலத்தில் முதலாவதாக அறியப்பட்டுள்ள ஆண்டு 380 ஆனபடியால், சமுத்திரகுப்தன் இவ்வாண்டிலே இறந் திருக்கலாமென்று கருதலாம்.

### குப்தர் வரலாற்றில் சமுந்திரகுப்தனுக்குரிய சிறப்பு.

குப்தர் பேரரசை உண்மையில் நிறுவியவன் சமுத்திர குப்தனே ஆவான். இஃது வட இந்தியாவில் மட்டுமே பரவி, மோரியப் பேரரசைவிட பரப்பில் குறைந்ததாக இருந்த தெனினும், பேரரசின் நாடுகள் குறிப்பிடுவதைவிட மிகுதி யாகவே, சமுத்திரகுப்தனின் மாட்சியும் செல்வாக்கும் பரவி யிருந்தன. இவன் மதக்கோட்பாடுகளின் ஒற்றுமையை விரும் பிய ஒரு சிறந்த வைணவனுவன். வசுபந்து என்ற பெருமை சால் பௌத்தன் இம்மன்னனுல் ஆதரிக்கப்பெற்றுன். பௌத்த சமயத்தின் செய்திகளில் அரசன் ஆர்வம் காட்டியதாகக் காணப்படுகிறது. குப்தர் குலத்தினர், கலைப்பண்புகள் முன்னேற்றத்திற்குச் செய்த தொண்டுகளில் இவனுக்கும் ஒரு பங்கு உண்டு. குப்தர் நிறுவிய கலைக்கட்டடத்திற்கு அடிகோலியவன் இவனே.

## பகுதி 3.

### இரண்டாம் சந்திரகுப்தன். (சுமார் 380—415)

### இராமகுப்தன்.

சில இலக்கியச் சான்றுகளைக் கொண்டு சமுத்திரகுப்த னுக்குப்பின் இராமகுப்தன் பட்டமேற்றுன் என்று கருதப்படு கிறது. ஆனல் இராமகுப்தனின் பெயர் சட்டமுறைப்படியான மரபு முறையிலும், காசுகளிலும் காணப்படவில்லை. ஆதலால் இரண்டாம் சந்திரகுப்தனே, தன் தந்தையால் தேர்ந்தெடுக்கப் பட்டு சமுத்திரகுப்தனுக்குப்பின் பட்டமேற்றுன் என்று கருதலாம்.†

### சந்திரகுப்தன் மேற்கு இந்தியாவை வெல்லுதல்.

குப்த ஆண்டு 61-க்கு உரிய (அதாவது 319+61= கி. பி. 380) மதுரா கல்வெட்டும், குப்த ஆண்டு 93-க்கு உரிய (=கி. பி. 412) சாஞ்சி கல்வெட்டும், சந்திரகுப்தனின் ஆட்சிக்காலத்தை வரையறுக்க உதவியபோதிலும் அவன்

† R. G. Basak. The History of North-Eastern India (1934) pp. III—IV.

வாழ்க்கை தெளிவற்றதாகவே உளது. காலம் குறிப்பிடப் படாத உதயகிரி (மாளவம்) குகைக்கல்வெட்டு, பேரரசன், உலகம் முழுவதையும் கைப்பற்றும் நோக்கத்துடன் அங்கு சென்றதாகக் குறிப்பிடுகிறது. சந்திரகுப்தன், மேற்கு இந்தியா வைக் கைப்பற்றுவதற்கு முன்னர் தன்மகள் பிரபாவதியை, வாகாடக மன்னன் இரண்டாம் உருத்திரசேனனுக்கு மணம் செய்து கொடுத்தான். மூன்றும் உருத்திரசிம்மனின் கீழிருந்த மேலைச்சத்திரபரின் நாட்டை, சந்திரகுப்தன் அழித்த வரலாற்று விளக்கங்கள் அறியப்பட்டில. ஆனால், அவன் கல்வெட்டுக்கள், காசுகள், பிற்கால மரபுரைகள், கி. பி. 388-க்குப் பிறகு சத்திரபரின் காசுகள் காணப்படாமை முதலியன குப்தர் வெற்றிக்குச் சான்றுகளாக உள்ளன. அவ்வெற்றி சுமார் 395-ம் ஆண்டில் ஏற்பட்டிருக்கலாமென்று ஊகம் செய்யப் படுகிறது; சிலர் 409-என்று கருதுவர். இரண்டாம் சந்திர குப்தன், மேற்கு இந்தியாவைக் கைப்பற்றிய பின்னர் ஒரு குதிரை வேள்விபுரிந்ததாக நம்பப்படுகிறது. காசிக்கு அண்மை யில் கல்லாலாகிய ஒரு குதிரைச்சிலை "சந்திரகு" என்னும் எழுத்துக்களுடன் காணப்படுகிறது. விக்கிரமாதித்தன் என்ற பட்டம், அச்சமயம் அவனால் சூட்டிக்கொள்ளப்பட்டிருக்கக் கூடும். சகரை (மேலைச்சத்திரபர்) அழித்தவனும் உச்சயினி யின் பேரரசனும் மரபுரையில் உள்ள விக்கிரமாதித்தனும் இவனே என்று கருதப்படுகிறது. மேற்கு இந்தியா, குப்தர் பேரரசுடன் இணைக்கப்பட்டதின் விளைவாக, அராபிக்கடல் வரை இப்பேரரசு விரிவுற்றது. உரோமப்பேரரசுடன் கடல் வழியாக வாணிகத்தொடர்பு ஏற்படலாயிற்று. உச்சயினியின் வாணிகச்சிறப்பு பெருகியது. சிறந்த கடற்றுறைமுகமான புரோச், குப்தர் பேரரசைச்சேர்ந்ததா என்பது உறுதியாக அறியப்படவில்லை. இவ்வரசு இமயத்திலிருந்து நர்மதை, மகாநதி வரையிலும், ஊக்ளியின் முகத்துவாரத்திலிருந்து, யமுனை, சம்பல் ஆறுகள்வரையிலும் பரவியிருந்தது.

## தலைநகரம்.

சமுத்திருகுப்தன் ஆட்சியிலிருந்ததுபோலவே, பாடலிபுத் திரம், குப்தர் பேரரசின் தலைநகராயிருந்தபோதிலும் உண்மை

யில், உச்சயினியே பேரரசனின் தங்குமிடமாகச் சிறப்புற்று விளங்கியது. சந்திரகுப்தனின் கல்வெட்டுக்களில் பெரும்பாலானவை மாளவத்தில் காணப்படுகின்றன. பாகியான் இவ்வரசனைப்பற்றிக் குறிப்பிடாமைக்குக் காரணம் இதனின்று ஊகிக்கப்படலாம். மரபுரையில் விக்கிரமாதித்தன், உச்சயினி, பாடலிபுத்திரம் இரண்டுக்கும் உரியவனாகப் பேசப்படுகிறான்; தவிர அயோத்தியும் பேரரசுத்தலைநகராகக் குறிப்பிடப்படுகிறது. கதம்பரின் கல்வெட்டுக்கள், அவர்கள் குப்தருடன் மணவினை உறவு பூண்டிருந்ததை வற்புறுத்துகின்றன. விக்கிரமாதித்தன் காளிதாசன்மூலம் குந்தளத்துடன் அரசியல் தொடர்பான உறவு கொண்டிருந்தானென்று வடமொழி இலக்கியம் குறிப்பிடும். சந்திரகுப்தனின் பல்வேறு காசுகள் அவன் ஆற்றலை விளக்கும் பல்வேறு பட்டங்களை அறிவிக்கின்றன. முப்பது ஆண்டுகள் ஆட்சிபுரிந்தபின் இவ்வரசன், கி. பி. 412-க்கும் 415-க்கும் இடைப்பட்டகாலத்தில் இறந்திருக்கவேண்டும்.

### பாகியான்.

பௌத்தர்களின் புண்ணிய நாடான இந்தியாவுக்கு புண்ணியப்பயணம் செய்யும் சீனர் பலர் வந்தனர். அவர்களுள் மிகவும் சிறப்பு வாய்ந்தோர் பாகியான், யுவான்சுவாங், இட்சிங் ஆகிய மூவர். இட்சிங் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவில் சுற்றிவந்த அறுபது சீன யாத்திரிகர்களைப்பற்றி எழுதியுள்ளான். பாகியான், ஷங்கன் (சீனப்பேரரசின் தலைநகர் Changan) என்ற இடத்திலிருந்து புறப்பட்டு நிலவழியாக (பெரும்பாலும் கால்நடையாக) வட இந்தியாவுக்கு வந்து, பின்னர் கடல் வழியாக ஈழம், சாவகம், கியோஷௌ (சீனா) ஆகிய இடங்களுக்குச் சென்றான். கடவுட்பற்றும், வீரச்செயல்களும் விளக்கப்படும் வரலாற்றில் இவனது செலவு சிறப்பு வாய்ந்ததாகும். இவன் வாழ்க்கையில் பதினைந்து ஆண்டுகள் (399—414) பிரயாணத்தில் செலவிடப்பட்டன. பாகியான் ஒன்பது ஆண்டுகள் இந்தியாவில் சுற்றிவந்தான். இதில் ஆறு ஆண்டுகள் குப்தர் பேரரசில் அவன் தங்கியிருந்தகாலமாகும். மத்திய சீனாவிலிருந்து புறப்பட்ட இவன், கோபி பாலைவனத்தைக்கடந்து கோட்டான், காஷ்கர், ஊதியானா, காந்தாரம்,

ஆப்கானித்தானம், பஞ்சாப் வழியாக மதுராவை அடைந்தனன். அவன் வந்த வழியில் உள்ள இடங்களில் புத்த சமயம் செழிப்புற்றோங்கியிருந்தது. பாகியான் கங்கை வெளியின் நிலையை வருணித்துள்ளான். இப்பகுதி, பிராமணரின் மத்திய நாடு என்று சிறப்பிக்கப்படுகிறது. பேரரசின் அரசியலும் நன்கு விளக்கப்படுகிறது. கன்னோசி, அயோத்தி, சிரவஸ்தி கபிலவாஸ்து, குசிநகரம், வைசாலி முதலிய இடங்களுக்குச் சென்ற பின்னர், இச்சீனன் பாடலிபுத்திரம் போயினன். அசோகனின் கற்கட்டடங்களும், மகதநாட்டு மருத்துவச்சாலை களும் இவனால் குறிப்பிடப்படுகின்றன. பின், இராசகிருகம், புத்தகயா, காசி முதலிய இடங்கட்குச்சென்றான். தக்கணத் தின் சாலைகளில் காவலின்மையாலும், மலைகளாலும் தடைப் படுத்தப்பட்ட பாகியான், பாடலிபுத்திரம் திரும்பினான். அங்கு தங்கிய மூன்று ஆண்டுகளில், வடமொழியைக்கற்று, புத்த சமய நூல்களை எழுதிக்கொண்டான். வினயபிடகமும் எழுதிக் கொள்ளப்பெற்றது. இதுவே அவன் இந்தியாவுக்கு வந்ததின் குறிக்கோள். பின்னர் தன் பயணத்தைத்தொடர்ந்து தாம்லுக் என்ற கடற்றுறைமுகத்தில் இரண்டு ஆண்டுகள் தங்கி அதன் பின், புத்தரின் உருவச்சிலைகள், சமயநூல்கள், முதலிய வற்றுடன் ஈழத்திற்குப் புறப்பட்டான்.

## வரலாற்றுச்சிறப்பு.

பாகியானின் பயணவரலாற்றுக் குறிப்புகளில் இயற்கைக்கு மீறிய செயல்களும், பேய்கள், புத்தரின் நினைவுச்சின்னங்கள் துறவிகள் முதலிய பல செய்திகளும் காணப்படுகின்றன.

புத்தர் பிறந்து, பின் துறந்து, தம் சமயத்தைக்கற்பித்த இந்நாட்டைக்கண்டுகளிக்க வந்த இச்சீனன், பௌத்த சமயப் பற்றுடன் யாவற்றையும் நோக்கினான். நேர்முகமாக, அரசிய லிலும், ஆட்சிமுறையிலும் அவன் நாட்டம் கொள்ளவில்லை. சில செய்திகள் அவனால் மிகைப்படுத்தப்பட்டும் சில உண் மைக்கு மாறாகவும் கூறப்பட்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாக பிறரைத் துன்புறுத்தாமை என்ற கொள்கை அளவுக்கு மீறிய வகையில் நிலைபெற்றிருந்ததாகவும் மக்கள், குடி, உணவு ஆகியவற்றில் மிகுந்த தூய்மையுடனிருந்ததாகவும் சோழிகள்,

பண்டமாற்றுக்கருவியாகப் பயன்படுத்தப் பட்டதாகவும் கூறியிருப்பவை குறிப்பிடத்தக்கன. ஆயினும், கபிலவாஸ்துவும், குசிநகரமும் (பௌத்தரின் புண்ணிய இடங்கள்) அழிவுற்றிருந்ததாகவும், மத்தியதேசம் பிராமணரின் பகுதியாகவும் பாகியான் குறிப்பிடுவதும் நோக்கற்பாலது. வடமேற்கு இந்தியாவிலும் அதற்கப்பாலும் அவன் மதம் உயர்நிலையிலிருந்தபோதிலும், கங்கைச்சமவெளில் அதன் நிலை பிராமண சமயத்திற்குப் பிற்பட்டதாகவே இருந்தது. அனைவற்றிற்கும் மேலாக குப்தர்கால அரசியலைப்பற்றி பாகியான் கூறியிருப்பது மிகவும் போற்றற்குரியது. ஏனெனின், மற்ற சான்றுகள் அதனை நன்கு அறிய நமக்குப் பயன்படவில்லை.

## பகுதி-4.

### முதலாம் குமாரகுப்தனும், (சுமார் 415—455)
### கந்தகுப்தனும் ( ,, 455—467)

#### முதலாம் குமாரகுப்தன்.

ஐந்தாம் நூற்றாண்டின் முற்பாதியில் குப்தர் பேரரசில் தடையற்ற அமைதி காணப்பட்டது. பேரரசுக்குப் பெருமையும் செழிப்புமளித்த இரண்டாம் சந்திரகுப்தனின் செயல்கள், அவன்பின் வந்தோனுக்கு உதவியாயிருந்தன. குமாரகுப்தன் தான் பெற்ற நாட்டைச் சிதறாது காப்பாற்றினான். அவன் பேரரசு முழுவதையும் அறிவுத்திறமையுடனும், உறுதியுடனும் ஆட்சிபுரிந்தானென்பது, அவனது அளவற்ற காசுகளாலும், கல்வெட்டுக்களாலும் உணர்த்தப்படுகிறது. அவன் ஒரு குதிரை வேள்விபுரிந்து, தக்க காசுகளையும் வெளியிட்டான். மகேந்திராதித்தன் என்று தன்னை அவன் குறிப்பிடுகிறான். அவன் வைணவப்பற்று கொண்டோனாயிருந்தபோதிலும் கந்தன் வழிபாட்டையும் போற்றினான். மயில் உருவம் கொண்ட அவன் காசுகளும், கந்தன் என்ற அவன் மகன் பெயரும் அதை வலியுறுத்தும். கலைப்பண்பு வரலாற்றில் குமாரகுப்தன் காலம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். காளிதாசனின் காலம் அதுவே. நாலந்தா பல்கலைக்கழகத்திற்கும் அடிகோலப்பெற்றது. பட்டு நெசவுசெய்யும் ஒரு கூட்டத்தினர் அவன் நாட்டில்

புகுந்து மிக்க உயர்வு எய்தினர். ஆனல் அவனுட்சியின் இறுதிப்பகுதியில், நர்மதைப்பகுதியில் வாழ்ந்த புஷ்யமித்திரர் என்ற வலிமை மிக்க கூட்டத்தினர் குப்தருக்கு அடிபணிய மறுத்ததால் குழப்பமேற்பட்டது. இளவரசன் கந்தன் அவர்களை மிகுந்த முயற்சியுடன் வென்று குப்தர் பெருமையை நிலைநாட்டினன்.

### ஸ்கந்தகுப்தன்.

குமாரகுப்தனின் பிள்ளைகளுக்குள் உட்பகை தோன்றி ஒரு அரசுரிமைபோர் ஏற்பட்டதென்ற கோட்பாட்டிற்குத்தக்க சான்றில்லை. ஆகவே கந்தகுப்தனே அவன் தந்தைக்குப்பின் பட்டமேற்றான். குப்தர்வழியிற்றோன்றிய இறுதியான உயர்ந்த அரசன் இவனே. இவன் மிகுந்த வீரத்துடன் ஹூணர்களை எதிர்த்து வெற்றிபெற்று சுமார் கி. பி. 458-ல் இந்தியாவுக்கு நிகழ இருந்த பெருந்தீமையை அக்காலத்திற்குத்தடை செய்தான். காசிக்கு அருகில் பிதாரி (Bhitari) என்ற இடத்தில் இம்மன்னன் ஒரு தூணை நிறுவி, அதன்மேல் விட்ணுவின் சிலையைவைத்து, தனது இரு பெரும் வெற்றிகளைக் கொண்டாடினன். புஷ்யமித்திரரையும், ஹூணரையும் அவன் தோற்கடித்த வரலாறு அத்தூணில் பொறிக்கப்பெற்றது. அவன் காலத்தில் நடப்பு நாணயத்தின் மதிப்புக் குறைவுற்றதற்கு ஹூணப்போர்களினல் ஏற்பட்ட மிகுந்த செலவுகள் காரணமாகலாம். 455-ல் சுதர்சனம் ஏரி உடைபட்டதாகவும் அடுத்த ஆண்டில் சக்கிரபாலிதனல் அது சீர்செய்யப்பட்டதாகவும், மன்னனின் கிர்னர் கல்வெட்டு குறிப்பிடுகிறது. சமயத்துறையில் கந்தன், தன் குடும்பத்தினருக்கு இயல்பான அறிவாற்றலுடனும் பொறையுடனும் நடந்து கொண்டான்.

## பகுதி 5.

### குப்தர் பேரரசின் வீழ்ச்சி

### கந்தகுப்தனின் பின்போந்தோர்.

அடுத்த பத்து ஆண்டுகளில் (சுமார் — 467 — 477) புரகுப்தன், நாசிம்மகுப்தன், இரண்டாம் குமாரகுப்தன் ஆகிய

மூவர் பேரரசை ஆட்சிபுரிந்தனர். அக்காலப்பகுதியில் கத்திய வாரும், மேற்கு மாளவமும் பேரரசிடமிருந்து பிரிந்தன. சுமார் கி. பி. 477 முதல் 496 வரை புதகுப்தன், வங்காளம் முதல் கிழக்கு மாளவம் வரை உள்ள பகுதியை ஆண்டான். இவன் பின்போந்தோர், ததகடகுப்தனும் பாலாத்தியனுமாவர். தோரமானன் என்ற ஹூணர் தலைவன், குப்தரை எதிர்த்து தன்னுட்சியை, சுமார் கி. பி. 500-ல் மாளவத்தில் நிலைநாட்டினுன். இரண்டு ஆண்டுகள் பின்னர் அவன் மகன் மிகிரகுலன் தலைவனுனுன். சுமார் 510-ல் பாலதித்யனுல் அவன் தோற்கடிக்கப்பட்டான். ஆனுல் குப்த அரசன், தன் தாயின் வேண்டுகோளின்படி அவனைச் சிறையினின்று விடுத்தனன், என்று யுவான் சுவாங் கூறுவன். 533-ம் ஆண்டில் மாளவத்தின் யசோதர்மன் முடிவாக, ஹூணரை முறியடித்தான். பாலாதித்யன், பானுகுப்தன் என்ற இருபெயர்களும் ஒருவரையே குறிப்பிடுவதாகக் கருதப்படுகிறது. அவ்வாறிருப்பின், அவன் சுமார் கி. பி. 545 வரை ஆட்சிபுரிந்திருக்க வேண்டும். யசோதர்மனின் எழுச்சியும் மௌகாரியரின் முன்னேற்றமும், குப்தர் குலச்சிறப்பைக் குன்றச்செய்தன. ஆயினும் குப்தர் கிழக்கிந்தியாவில் சுருங்கிய நாட்டை மேலும் சிறிதுகாலம் ஆண்டு வந்தனர். ஏழாம் நூற்ருண்டில் ஹர்ஷன் இறந்த பிறகு, மகதநாட்டு குப்தர் குலத்தைச்சேர்ந்த ஆதித்ய சேனன் மீண்டும் குப்தர் பேரரசை நிலைநாட்டினன். அக்குலம் சிறப்புவாய்ந்த முந்திய குப்த குலத்துடன் இணைந்ததாக இருக்கவேண்டுமென ஊகிக்கப்படுகிறது.

### வீழ்ச்சியின் காரணங்கள்.

பெருமைசால் குப்த மன்னர் காலத்திலேயே, புஷ்யமித்திரர், ஹூணர் முதலியோரின் பகைமையினுல் பேரரசின் வலிமை பழுதுற்றது. கந்தகுப்தனின் ஆற்றல், அரசைக் காத்ததெனினும், தீமை, நிலையாகத் தவிர்க்கப்படவில்லை. மிகிரகுலனும் அவன் தந்தையும் புரிந்த கொடுஞ்செயல்களால் விளைந்த சிக்கல்கள் நிறைந்த நிலையை மாற்றுவதற்கான ஆற்றல் பின்வந்த குப்த அரசர்களிடம் காணப்படவில்லை. மேற்கு முனையில் மிகுந்த கருத்தைச் செலுத்திய

இரண்டாம் சந்திர குப்தனின் முன்னேக்கும் அறிவும் பிற் காலத்தினரால் உணரப்படவில்லை. சில அரசர் பாடலிபுத்திரத் திலேயே, செடியினம்போல் செயலற்று வாழ்ந்தனர். இறுதி யான மூன்று அரசர்கள் பௌத்தசமயத்தைப் பின்பற்றியது பேரரசின் வீழ்ச்சிக்கு ஒரு காரணம் என்று சில அறிஞர் கருதுவர். மூத்தமகன் அரசுரிமையை அடையும் முறையை குப்த மன்னர் சில காலங்களில் மாற்றி வந்தனர். நுண்ண றிவும், ஆற்றலும் வாய்ந்த மன்னர் காலத்திலன்றி மற்ற காலங்களில் இம்மாறுதல் தீமை விளைவிப்பதாகும். அரசர் பல மங்கையரை மணந்து கொள்ளும் வழக்கம் நிலவிய காலத்தில், அரசுரிமை பெறும்முறை மாறுதலுக்குட்படுத்தப் படின் அரண்மனைச் சூழ்ச்சிகளும் போர்களும் பெருக்கமடை வது இயல்பு. மேலும் ஆற்றலற்ற மன்னரின்கீழ் அத்தகைய நெருக்கடிகள் மிகுந்த தீமை பயப்பதாகும். இரண்டாம் சந் திரகுப்தனால் ஒழுங்குபடுத்தப்பட்ட, குப்தர் — வாகாடகர் உறவு நீடிக்காமல், ஹூணர் பேரரசைத்தாக்கிய காலத்தில் வாகாடகரின் பகைமை குப்தருக்கு ஏற்பட்டது. இறுதியாக, வழிவழியாக பதவிவகித்துவந்த அதிகாரிகளும், மானியக்கா ரரும், பேரரசு கடுந்துயருக்குட்பட்டிருந்த காலத்தில், தம் நிலையை உயர்த்திக்கொள்ள முற்பட்டனர் — எடுத்துக்காட் டாக, கத்தியவார், மாளவம், கன்னேசி, வங்காளம்.

## பகுதி-6

### ஆட்சி முறை.

### கல்வெட்டுச் செய்திகள்.

வேந்தன், அரசுரிமையாளனைத் தேர்தெடுக்கும் முறை, அரிசேனனின் கல்வெட்டில் மன்னனை வழிபடும் முறை, சில அதிகாரிகள், வழி வழியாக பதவி உரிமைபெறும் வழக்கம் ஆகியன முன்னர் குறிப்பிடப்பெற்றன. அக்கால ஆட்சிமுறை அமைப்பில் சமூகத்தொடர்பான பதவியிலுள்ள ஒருவன் இராணுவப்பதவியும் பெற இயலும். அரிசேனன், அமைதி, போர் தொடர்பான அமைச்சனாகவும், தானைத் தலைவனாகவு மிருந்தான் என்பது நோக்கத்தகும். அலகாபாத்தூண் கல்

வெட்டில் ஒரு அமைச்சர் குழுவைப்பற்றி தெளிவற்றவகையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மாகாணங்கள் எல்லாம் புக்திகள், தேசங்கள் என்றும், மாவட்டங்கள் யாவும் விஷயங்கள், பிர தேசங்கள் என்றும் அழைக்கப்பெற்றன. மாகாண அதிபதி கள், உபாரிகர், கோப்திரிகள் என்றும் மாவட்ட அதிகாரிகள் விஷயபதிகள் என்றும் அழைக்கப்பெற்றனர். நகர ஸ்ரேஷ்தி கள் (நகரக்கழகத்தலைவர்) என்பதுபோன்ற வேறுபல அதிகா ரிகளும் இருந்தனர். மாவட்டம் தனித்தனி தலைவனைக் கொண்ட ஊர்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. சிலசெய்திகளில் மோரிய ஆட்சி முறையிலிருந்த மிகுந்த சிறப்பு, குப்தர் ஆட்சி முறையில் காணப்படவில்லை.

## பாகியான்.

பல தெளிவற்ற கல்வெட்டுச் செய்திகளை பாகியானின் குறிப்புகள் சிறப்பித்து விளக்குகின்றன. "பதிவுசெய்தல் போன்ற அதிகாரிகளின் கட்டுப்பாடுகளின்றி மக்கள் மகிழ்ச் சியுடனும் முன்னேற்றத்துடனுமிருந்தனர். எவர் வேந்தனின் சொந்த நிலத்தைப் பயிரிடுகின்றனரோ அவர்மட்டுமே தம் வருவாயின் ஒரு பகுதியை அவனுக்குக் கொடுக்கின்றனர். போவதற்கு விரும்பியோர் போகலாம். தங்குவதற்கு விரும்பியோர் தங்கலாம். அரசன், ஆட்சி முறையில் உடல் சார்ந்த தண்டனைகளைப் பயன்படுத்துவதில்லை. குற்றவாளிகள் அவர்கள் குற்றங்களின் தன்மைக்குத்தக்கவாறு காசுத்தண் டம் விதிக்கப்பெற்றனர். இரண்டாம்முறை அரசனுக்குப் பகையாய் கலகம் விளைத்தானுக்கு, வலது கையை வாங்கலே தண்டனை. அரசனின் மெய்க்காப்பாளர் நிலையான ஊதியத் தைப் பெற்றிருந்தனர்"‡ என்று பாகியான் கூறுகிறான். இதனின்று அமைதியான செங்கோலாட்சி நிலவிய தென்றும் தனிப்பட்டோரின் வாழ்க்கையில், அரசியலார் தலையிட்டு துன்புறுத்தவில்லை எனவும் அறியலாகும். அரசி யல் வருவாயைப் பொறுத்தவரை வேந்தனின் நிலத்தைப் பயிரிடுவோரன்றி மற்றவர் அரசனுக்குக் கடமை செலுத்த வேண்டியதில்லை என்று இக்குறிப்பிலிருந்து பெறப்படுகிறது.

‡ H. A. Giles. The travels of Fa-hsien 1923 pp. 20—21

குற்றச்சட்டம், நுழைவுச் சீட்டுக்கட்டுப்பாடு இன்மை ஆகிய வற்றைப் பொறுத்தவரை, மோரிய ஆட்சி முறை வேறுவகை யாயிருந்தது. குப்தராட்சியில் பயணம் செய்வோருக்கு இடையூறு விளையாவண்ணம் சாலைகள் நன்கு காக்கப்பெற்றன. பாகியான் 'இடையூறின்றி கங்கைச் சமவெளி முழுவதும் சுற்றிவந்தது நோக்கத்தகும்.

## பகுதி-7

### சமயம்.

### இந்து மதம்.

வேதச்சடங்குமுறையுடன் கூடிய பழைய மதமும், சைவ, வைணவ சமயங்களும் ஓங்கி வளர்ந்தன. கல்வெட்டுக்களும், குப்தர் காசுகளும், அக்கால இலக்கியமும், பாகியானின் சில குறிப்புகளும் இதனைத் தெளிவாக அறிவிக்கின்றன. குப்த ரில் பெரும்பான்மையினர் இந்து சமயத்தை - சிறப்பாக வைணவப்பிரிவைப் - பின்பற்றினர். ஆனால் அவர் தம் அமைச் சர்களும் மற்ற அதிகாரிகளும் பல்வேறு சமயத்தினராய் இருந்தனர். ஆறும் நூற்றாண்டின் சிறந்த மரபினர் யாவரும் அப்பெருந்தன்மைக் கொள்கையைப் பின்பற்றினர். ஆனால் சிவவழிபாடுடைய மிகிரகுலன், பௌத்தர்களைத் துன்புறுத்தி னான். உருவ வழிபாடு, சமய விழாக்கள் கொண்டாடுதல், புராணங்கள் போன்ற இலக்கியங்கள் இயற்றப்பெற்றமை முதலியன இந்து சமயத்தின் வெற்றிக்கு உதவின.

### புத்தசமயம்

நடு ஆசியாவிலும் வடமேற்கு இந்தியாவிலும் புத்த சமயத் தின் நிலையை, பாகியான் சிறப்பிப்பதிலிருந்து அதன் உயர்வு நன்கு அறியப்படுகிறது. கங்கைச் சமவெளியில் அதன் நிலை அச்சீனனுக்கு பொதுவாக மகிழ்ச்சியை அளித்தபோதிலும், பௌத்தரின் புண்ணிய இடங்களிற் சிறப்பான சில அழிவுற் றிருந்ததாகத் தெரிவிக்கின்றான். அவன் கபிலவாஸ்துவைப்

பற்றிக் குறிப்பிடுவதாவது "அரசனோ மக்களோ காணப் படவில்லை — — — கபிலவாஸ்து நாடு மக்கள் தொகையில் குறைந்ததாகவும், செழிப்பற்றதாயும் வருவார் போவார் இன்றியும் இருக்கிறது. சாலைகளில் வெள்ளை யானைகளும் சிங்கங்களும் இருப்பதால், அங்கேசெல்லும் வழிப்போக்கர் காவலுடன் போகவேண்டும். இந்நகரில் (குசிநகரம்) கூட மக்கள் குறைவாகவும் பல் இடங்களில் பரவியுமுள்ளனர். மதகுருமார் காணப்படுகின்றனர்." கயாநகரையும், பாகியான் அழிபாடுற்றதாகக் கூறுகிறான். ஆயினும் பெரும்பாலும் புத்த சமயம் வீழ்ச்சியுற்றதாக அவன் உணரவில்லை.

ஒரு சில பௌத்த ஆசிரியர்கள், பெருமைசால் குப்தரால் ஆதரிக்கப்பெற்றனர். பல மடங்களின் அழிபாடுகளும், சார் நாத் பொருட்காட்சி சாலையிலுள்ள அழகிய பௌத்தச் சிற் பங்களும், பாகியான் வட இந்தியாவில் தனது சமயத்தின் நிலையைப்பற்றிக்கொண்டிருந்த கருத்தை வலியுறுத்தும். இந்து சமயத்தின் முன்னேற்றம், புத்தமதத்தின் சிறப்பைக் குறைத்த தென்பதில் ஐயமில்லை. ஆனால் வடமேற்கு இந்தியாவில் புத்தசமயத்தின் நடுநாயகமாக விளங்கிய மடங்களை அழித்து அம்மதத்தைச் சீர்குலையச்செய்தது ஹூணரின் படையெழுச்சி களே.

## சமணம்.

இந்து, பௌத்த மதங்களின் வளர்ச்சி, சமணத்தை ஓங்கவிடாது செய்தது. எனினும், இந்து, பௌத்தமதங்க ளிடைக் காணப்பெற்ற மிகுந்த பகைமை உணர்ச்சி, இந்து, சமண மதங்களிடை காணப்படவில்லை. 454-ம் ஆண்டில் வாலாபியில் சமண மாநாடு நடைபெற்று சுவேதாம்பரரின் சமயச்சட்டங்கள் எழுதப்பெற்றன. மாநாடு நிகழ்ந்த இடத்தை நோக்குங்கால், மேற்கு இந்தியாவில் மட்டுமே அம்மதம் நிலவியிருந்ததென்பது பெறப்படுகிறது. சமணம் இரண்டுபிரிவு களானபோதிலும் தென்னிந்தியாவிலும் செழிப்புற்றிருந்தது. ஈண்டு ஏழாம் நூற்றாண்டிற்றான் அதன் வீழ்ச்சி தொடங்கியது.

## பகுதி 8

### பொருளாதாரநிலை.

### இலவச மருத்துவசாலைகள்.

பாகியான் குறிப்புகளில் குப்தர் பேரரசின் பொருளாதார நிலையைப்பற்றிய சொற்றிறமிக்க விரிவுரையைக் காணலாம். பொதுமக்கள் துயரைக்களையும் பொருட்டு தனிமனிதர் பல நிலையங்களை ஏற்படுத்தி இருந்ததும் விளக்கப்படுகிறது. "ஈண்டு (மகத நாட்டில்) மிகப்பெரிய நகரங்களும் பெரிய ஊர்களும் உள்ளன. மக்கள் செல்வர்களாகவும் வளமாகவும் வாழ்கின்றனர். அறஞ்செய்வதில் ஒருவர் மற்றவருடன் போட்டியிடுகின்றனர். — — — — — முதியோரும் உயர் குடிப்பிறந்தோரும் தமது முலதனத்தைக்கொண்டு, இலவச மருத்துவ நிலையங்கள் நிறுவியுள்ளனர். ஏழைகளும், உதவி யற்றநோயாளரும் பெற்றோரையிழந்த குழந்தைகளும், மனை வியை இழந்தோரும் முடவர்களும் அங்கு செல்கின்றனர். அவர்கள் நன்கு கவனம் செலுத்தப் பெறுகின்றனர், ஒரு மருத்துவர் அவர்களை கவனிக்கிறர். தேவைகளுக்குத் தக்க வாறு உணவும் மருந்தும் அளிக்கப்படுகின்றன. அவர்கள் வாழ்க்கை, நலம் பொருந்தியதாக உள்ளது. நோய் நீங்கப் பெற்றபின்னர் அவர்கள் திரும்பச் செல்கின்றனர்." குப்தரின் காசுகளைப்பற்றி குறிப்பிடாது, மக்கள் சோழியையே நாணயமாகக் கையாளுவதாக பாகியான் கூறுவதில் முழு உண்மை இல்லை. பேரரசின் பொதுவான செழிப்புக்கு, கிழக்கு மேற்கு நாடுகளுடன் நடைபெற்றுவந்த பரந்த வாணி கமும் உள்நாட்டுக்கைத்தொழில் முன்னேற்றமும் காரணங் களாகும். அக்கால இலக்கியத்தாலும், சிறிதளவு கல்வெட் டுக்களாலும் இவ்வுண்மை புலப்படுத்தப்படுகிறது.

### பட்டுநெசவாளர் சங்கம்.

வத்சபட்டி இயற்றிய முதலாம் குமார குப்தனின் மந் தேசர் கல்வெட்டினின்று பின்வரும்செய்தி கிடைக்கப்பெறு கிறது. "உலகிலேயே மிகவும் ஆற்றல்வாய்ந்த பட்டு நெசவாளர் தமது குழந்தைகளுடனும் உறவினருடனும் நாட்டு மன்னரின்

நற்பண்புகளால் கவரப்பட்டு; பயணத்தின் இடுக்கண்களையும் பொருட்படுத்தாது, லாட்டா (Lata) விலிருந்து இந்த தசபுர நகருக்குக் கூட்டமாக வந்தனர். அரசர்களால் தமது பிள்ளைகளைப்போல் போற்றப்பட்ட இவர்கள் மகிழ்ச்சியுடன் இந்நகரில் தங்கினர். அவர்களிற்சிலர், வில்வித்தையிலும் மற்றையோர், நூற்றுக்கணக்கான சிறந்த அருங்கலைகளிலும் தேர்ச்சிபெறலாயினர்.

## பகுதி 9

### இனவாழ்க்கை.
### சாதிமுறை.

இந்நாட்டில் நிலையாகத் தங்கிய அயல் நாட்டினர், இந்தியராகும் வகையில் இன அமைப்பு சீர்திருத்தப்பட்டிருந்தது பற்றி முன்னர் குறிப்பிடப்பெற்றது. ஆனால் சிறிதுகாலம் பின்னர், சாதிமுறை மிகவும் உறுதியாக்கப்பெற்றது. பிராமணர் இன அமைப்பில் தடையற்ற உயர்நிலையை எய்தினர். பிராமணருக்கு அறம்செய்வதால் ஆகும்புகழ் மிகுதியாக வற்புறுத்தப்பெற்றது. சாதிமுறைச் சட்டங்களை மீறியவர், அக்குற்றங்கட்குத் தக்கவாறு நரகில் துயருறுவர் என்ற கருத்து வலிமையுற்றது. தீண்டாவகுப்பினரைத் தவிர்த்து மற்றவரிடம் காணப்பட்ட "கொல்லாமை" கொள்கை, பாகியானின் கருத்தைக் கவர்ந்ததாக அறியப்படுகிறது. அவன் இச்செய்தியை மிகைப்படுத்தியே கூறியுள்ளான். "நாடுமுழுவதிலும் ஒருவரும் உயிருள்ள எதையும் கொல்லுவதில்லை; கள்குடிப்பதில்லை; வெங்காயத்தையோ உள்ளிப்பூண்டையோ உண்பதில்லை; ஆனால் சண்டாளர், பிறமக்களினின்று அப்புறப்படுத்தப்படுகின்றனர். வெறுப்பைத் தரத்தக்க நேர்மையற்ற மக்கள் சண்டாளராகக் கருதப்பட்டனர். அவர்கள் மற்றமக்களோடு வாழ்வதில்லை. ஊருக்குள்ளேயோ, சந்தைக்குள்ளேயோ நுழையும்பொழுது அவர்கள் ஒருதண்டால் ஓசையை உண்டு பண்ணுகின்றனர். அவ்வோசையைக்கேட்டு உயர்குடியினர் அவர் வழியினின்றும் விலகிக்கொள்வர். இந்நாட்டில் மக்கள் கோழியையோ பன்றியையோ வளர்ப்பதில்லை. புலால் விற்போரும் மது காச்சுவோரும் நாட்டில் இல்லை ... ... ... ... ... சண்டாளர் மட்டுமே வேட்டையாடுவர்; மீன்விற்று உண்பர்."

### பெண்டிர் நிலை.

"சூத்திரர்" என்ற வகுப்பினரின் நிலைக்கு மங்கையர், குறைவு படுத்தப்படும் காலம் முற்றுப்பெற்றது. அடிப்படை யான சமய நூல்களைக் கற்கத் தகுதியற்றோரை அறிவூட்டுவ தற்கே புராணங்கள் அமையப்பெற்றதாகக் கருதப்பட்டது. பெண்டிரின்நிலை ஒழுங்கு செய்யப்பட்டது. அவர்கள், ஆடவ ரால் காக்கப்படுதற்கும் கருணையுடன் நடத்தப்படுதற்கும் உரியோரானபோதிலும், பின்னவருக்கு அடிபணியவேண்டியது இன்றியமையாததாகியது. முந்திய பகுதியில் ஆரியச்சட்டங் களை அறிவித்த மனு, சிலகாலங்களில் மனைவியை அடித்தலை ஆதரிப்பது நோக்கத்தக்கது.

## பகுதி 10

### கலைப்பண்பு.
### "பொற்காலம்"

குப்தர் காலம் ஒரு "பொற்கால"மாகவும் பண்டைய கிரீசின் பெரிக்ளீஸ் காலத்துடன் ஒத்ததாகவும் கருதப்படுகி றது. சில அறிஞர் "கலையின் மறுபிறப்பு" அல்லது மறு மலர்ச்சி என்று குப்தர்காலத்தைப் புகழ்வர். அக்காலத்தில் அறிவுக்கிளர்ச்சி ஏற்பட்டிருந்தது உண்மையாயினும் "மறு பிறப்பு" என்றசொல் பொருத்தமாக இல்லை. அயலாராட்சி ஏற்பட்டிருந்த முற்பகுதியில் இந்தியர் பண்பு புனைவுத்திற னற்றதாக இருக்கவில்லை. அயல் நாட்டு அரசர் இந்தியக் கலைப்பண்புக்குப் பகையாயிராது அதனைவிரைவில் உணர்ந்து முன்னேறச்செய்தனர். ஆதலால் குப்தர்காலத்தில் கலையின் மறு பிறப்பு ஏற்பட்டதாகக் கூறுவதைவிட அஃது கலை மலர்ச்சி நிலவிய காலம் என்று கருதுவது தகும். சமயத்துறையிலும், கலைத்துறையிலும் புத்துணர்ச்சி வளர்ந்து அதன் "பிரபாவம்" குப்தர் பேரரசுக்குப் புறம்பான இந்திய நாடுகளிலும் கடல் கடந்த இந்தியக் குடியேற்ற நாடுகளிலும் பரவியது. முந்திய பகுதிகளில், அரசியல், வாணிகம், கலை ஆகிய துறைகளில் சிறப்புகள் காணப்பட்டதெனினும், இலக்கியம், அறிவியல்

நூல் வளர்ச்சியில் குப்தர்காலத்தை ஒத்த உயர்வு ஏற்பட வில்லை. ஆகவே குப்தர்காலம் பலதுறைகளில் முன்னேற் றத்தைக்கண்டது. பேரரசின் வீழ்ச்சி கலைப்பண்பு முன் னேற்றத்தைத் தடைசெய்யவில்லை.

## மொழியும் எழுத்து வடிவும்.

குப்தர்காலத்தில் வடமொழி உயர்ந்தநிலையை எய்தியது. அதுவே, மகாயானப்பிரிவினரின் மொழியுமாயிற்று. பிராமி எழுத்திலிருந்து நாகர எழுத்து தோன்றியது. சிங்களபௌத் தர் பாலி எழுத்துக்களைப் பயன்படுத்தினர். மற்றய ஈன யானிகளும் சமணரும் பிராகிருத எழுத்துக்களை, சமயத்துறை யில் பயன்படுத்தினர். அரிய இலக்கியங்கள் தோன்றிய காரணத்தால், அக்காலப்பகுதி "இலக்கிய உணர்ச்சி பெருகிய காலம்" என்று அறிஞர்களால் சிறப்பிக்கப்படுகிறது.

## இலக்கியம்.

### காளிதாசன்.

காளிதாசனின் பெருமையை சிறந்த மேனாட்டு அறிஞன் கெத்தேயும்† நன்கு உணர்ந்தனன். காளிதாசனுடைய மிகச் சிறந்த நாடகமான "சாகுந்தலம்", "உலகின் நூறு சிறந்த நூல்களில்" ஒன்றாகும். காளிதாசன் ஒன்றுக்கும் உதவாத மூடனாக இருந்து பின், காளிதேவியினருளால், அறிவாற்றல் பெற்றதாக உள்ள மரபுரைக்கு, அக்கவி தன்னை அடக்கத்துடன் "அறிவிலி" என்று கூறிக்கொள்வது ஒருக்கால் காரணமா யிருக்கலாம். இவன் இயற்றியுள்ள நூல்கள் இவனது பரந்த அறிவை நன்கு உணர்த்தும். விக்கிரமாதித்தனின் ஆதரவில் இப்புலவன் இருந்ததாகக் கருதப்படினும் "மணிகள்" எனப்பட்ட வேறு எட்டு புலவர்களின் காலத்தில் இவன் வாழ்ந்தானென்ற கதை ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. இவன் செல்வர்களைப்போற்றும் தன்மைவாய்ந்த ஒரு சிவபக்தன். வேதாந்த அறிவு இவனிடம் காணப்பெற்றது. உச்சயினி நகருடன் இவன் இணைக்கப்பட்டிருந்தானென்பது தெளிவு.

---

† Goethe — ஜெர்மன் கவி (1749—1832)

இக்கவியின் நாடகங்களாவன:- சாகுந்தலம், மாளவிகாக்னி மித்திரம், விக்கிரமஊர்வசி என்பனவாகும். இரகு வம்சம், குமாரசம்பவம் என்ற இரு காப்பியங்கள் இவனால் இயற்றப் பெற்றன. மேகதூதா, ரிதுசம்ஹாரம் என்ற இரு சிறந்த கவிதைகளுக்கும் இவனே ஆசிரியன். இவற்றைத் தவிர, வேறுபல நூல்களையும் இவன் இயற்றியதாக சான்றின்றிக் கூறப்படுகிறது. வடமொழி இலக்கியத்தில் இவன் மிகப் பெரிய கவியாகவும், நாடக ஆசிரியனாகவும் விளங்கினான். ஐந்தாம் நூற்றாண்டின் முற்பாதியில் இவன் வாழ்ந்ததாகக் கருதப்படுகிறது. 472-'3-க்கு உரிய வத்சபட்டி கல்வெட்டில் இவன் "பிரபாவம்" தெளிவாகப்புலப்படுகிறது.

## விசாகதத்தனும் சூத்திரகனும்

விசாகதத்தன் எழுதிய முத்திராராட்சசம் என்ற நாடகம் ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கு உரியது. ஆனால் சிலர் அது ஆறும் நூற்றாண்டில் அல்லது அதற்குப்பின்னர் தோன் றியதாகக் கூறுவர். கௌடில்யன் என்பான் அந்நாடகத் தலைவன். அதில் தலைவிக்கு இடமளிக்கப்படவில்லை. இயல் பாக உள்ள காதல் பகுதிக்குப்பதிலாக அரசனிடத்தன்பு சிறப்பளிக்கப்படுகிறது. நாடகம் முழுவதிலும் அரசியலுக்கே உயர்நிலை கொடுக்கப்பட்டுள்ளது. கௌடில்யன் தனது பகை வனை இராட்சசனால் கொடியவன் (துராத்மா) என்று முதலில் கருதப்படுகிறான். முடிவில் அவனுடைய (கௌடில்யன்) அரசியல் சூழ்ச்சியின் வியக்கத்தக்க வெற்றியின் காரணமாக பின்னவனால், "மகாத்மா" (உயர்ந்தவன்) என்று கருதப்படு கிறான். விசாகதத்தன் 'இந்தியாவின்' கோர்நேல் (Corneille) என்று அழைக்கப்படுகிறான். இவனது மற்றொரு நாடகமான தேவிசந்திரகுப்தம், வேறு ஒரு ஆசிரியரால் மேற்கோள் காட்டப்பட்ட பகுதிகளினின்றே அறியப்படுகிறது.

மிருச்சகடிகம் என்ற நாடகத்தின் ஆசிரியரான சூத்திர கனைப்பற்றிக் கொள்ளப்பட்டிருந்த சிறப்பு, பாசனின் "சாரு தத்தன்" அறியப்பட்டபின் குன்றியது. ஆனால் சிலர், பிந்திய நூல் முன்னையதைப் பின்பற்றி எழுதப்பட்டிருக்கலாமென்பர்.

சாருதத்தன் என்னும் நாடகம், வசந்தசேனு என்ற ஒரு ஆடலீணங்கைக் காதலித்த சாருதத்தன் என்னும் அந்தணனின் கதையாகும். அவன் தனது அளவு கடந்த பெருந்தன்மையினுல் வறுமை நிலேக்குக்கொண்டுவரப்பட்ட பின்னும் வசந்தசேனுவினுல் காதலிக்கப்படுகிருன். இது அக்கால இனவாழ்க்கையை நன்கு விளக்கும் மிகச்சிறந்த ஒரு நாடகமாகும்.

## பாரவி, தண்டி, சுபந்து.

ஆரும் நூற்ருண்டில் பாரவி எழுதிய 'கிருதார்ச்சுனியம்' என்ற காவியம் அர்ச்சுனனுக்கும் சிவனுக்கும் நிகழ்ந்தபோரை விளக்குவதாகும். காளிதாசனேப்போலவே இவனும் இயற்கை வனப்பைச் சித்தரிப்பதில் சிறந்தவன் என்பதை இக்காவியம் காட்டும். தண்டியும் சுபந்துவும் சிலரால் ஏழாம் நூற்ருண்டுக்கு உரியோராகக் கருதப்படினும், ஆரும் நூற்ருண்டில் வாழ்ந்தவர்களே ஆவர். காவியதர்சம், தசகுமார சரிதம் என்ற இரண்டு காவியங்கள் தண்டியால் இயற்றப்பெற்றவை. சுபந்துவின் வாசவதத்தை, சிலேடைச்சிறப்புகள் நிறைந்த புதுமைக்கதையாகும். ஒரு இளவரசனும் இளவரசியும் கனவில் ஒருவரையொருவர் காதலிப்பதும், இருகிளிகள்மூலம் அவர்கள் சந்திப்பதும், மாயக்குதிரையின்மீது அவர்கள் பறப்பதும், இளவரசி ஒரு கல்லாவதும் பின்னர்தன் சுயஉருவை அடைதலும் அந்நூலில் விளக்கப்படுகின்றன. இது எளிதில் படித்து உணரக்கூடியதன்று.

## பஞ்சதந்திரமும் அமரகோசமும்.

பஞ்சதந்திரம், சிறுவர்களுக்கு அறிவுரைபுகட்டும் பலகதைகளேக் கொண்டது. பேரறிஞர் 'எட்கர்ட்டன்' ஆராய்ச்சிகளின் பயனுக, இந்நூல் முதலில் இளவரசர்களுக்கு அரசியலேப்புகட்டும் முறையில் அமைந்திருந்தது என்று அறியப்படுகிறது. கி.பி. 300-க்கும் 500-க்கும் இடைப்பட்ட காலத்தில் இது தோன்றியதாகக் கருதப்படுகிறது. பௌத்தர் இதனைத் தோற்று

வித்தனரென்ற கோட்பாடு ஏற்புடையதன்று. கி.பி.1000-க்குப் பின் தோன்றிய இதோபதேசம் என்றநூல், பஞ்சதந்திரத்தை மூலமாகக் கொண்டதாகும். பஞ்சதந்திரம் பல இந்திய, அயல்நாட்டு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுளது. "கிறித்தவவேதநூலான 'பைபிளை'த்தவிர்த்து வேறு எந்த நூலும் உறுதியாக சமயத்தொடர்பற்ற எந்த நூலும் — அத்துணை மொழிகளில் பொழிபெயர்க்கப்பட்டதில்லை.† உலகின் நீதிக் கதை இலக்கியத்தில் இதன் 'பிரபாவம்' போற்றற்குரியது. பொக்காஸியோவும் சாஸரும் இதற்குக் கடப்பாடுடையோராவர். "இந்திய கற்பனைக்கதைகள், கிழக்கிலிருந்து மேற்கே பரவியவரலாறு, அக்கதைகளைவிட அதிகமாக வியப்புக்குரியதாகவும் அறிவுறுத்துவதாகவுமுள்ளது."‡

பௌத்த அமரசிம்மனின் அமரகோசம் என்ற நிகண்டு ஒரே பொருளையுடைய பல சிறப்புப்பெயர்களையும் பொதுப் பெயர்களையும் கொண்ட தொகுதியாகும்.

## அறநூல்களும் புராணங்களும்.

மனு, யாக்ஞவல்கியர் ஆகியோரின் அறநூல்கள் (தர்ம சாத்திரங்கள்) முந்தியபகுதிக்கு உரியன; நாரதர், பிரகஸ்பதி ஆகியோரின் தனி நூல்கள் மனுவின் நூலைப்போல அமைந்திருப்பினும், சட்டத்தொடர்பான செய்தியில் முந்தியன மிகவும் முன்னேற்றமடைந்துள்ளன. இதுபோன்ற நூல்கள் மிகுதியான அளவில், P. V. கேன் என்ற அறிஞரின் தருமசாத்திர வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன. தொடக்கத்தில் மரபுவரலாருக இருந்த புராணங்கள், பலகாலங்களில் திருத்தியும் பெருக்கியும் அமைக்கப்பெற்று, இறுதியில் குப்தர் காலத்தில், அவற்றின் இன்றைய உருவை அடைந்தன. முடிவில் அவை பிரமன், விட்ணு, சிவன் ஆகியோரை புகழும் சமயத்தொடர்பான நூல்களாக மாற்றப்பட்டன. குறுகிய உள்வகுப்புப்பற்று அவற்றில் புகுத்தப்பெற்றது. உப புராணங்களைத் தவிர்த்து பதினெட்டு புராணங்கள் உள்ளன. பாமரமக்களுக்கு கல்வி

† Macdonell. A. A. India's Past 1927 p. 123.
‡ " " " "

கற்பிக்கவும் சமயத்தொடர்பான அறவுரை கூறவும், இவை உதவிபுரிந்தபோதிலும் இவற்றின் வரம்பற்ற செய்திகளும், மூட நம்பிக்கைகளும், சமநிலையானநோக்கம் அல்லது அறிவு வளர்ச்சிக்கு ஏற்றதாக இல்லை. இவற்றில் மக்களால் மிகவும் விரும்பிப் போற்றப்படுவது பாகவத புராணம். இது விட்ணுவின் அவதாரமாகக் கருதப்படும், கிருட்டினனிடம் அன்பு கொள்வதை அடிப்படையாகக் கொண்டதாகும். ஆனால் இராமானுசர் விட்ணு புராணத்தை, ஆகம நிலைக்கு உயர்த்தினர். வாயு, மச்ச (சிவனுக்குரியன) விட்ணு புராணங்கள் குப்தர் காலத்தில் முடிவான உருவை எய்தின. முறையே இவை 350, 400, 500 ஆகிய ஆண்டுகளுக்கு உரியன. பொருளடக்கத்தைப் பொறுத்து மிகவும் பழமையானதாகக் கருதப்படும் மார்க்கண்டேய புராணம் ( பிரமனுக்குரியது ) இந்திரனையும் பிரமனையும் உயர்வாகக் குறிப்பிடுகிறது.

## மெய்விளக்க நூல்கள்.

### இந்து தத்துவம்.

மீமாம்சக சபரர், நாம் குறிப்பிட்டுவரும் காலத்துக்கு உரியவர். சைமினியின் பூர்வமீமாம்ச சூத்திரங்களுக்கு, மிகப் பழமையாக உள்ள விரிவுரை (பாஷ்யம்) இவரால் இயற்றப்பட்டதாகும். இவர் நூல் பிற்காலத்தில் வேறுபாடான வகையில் பொருள் கொள்ளப்பட்டு, இரண்டு மீமாம்சப்பிரிவுகள் வளர்ந்தன. சாங்கிய சூத்திரங்கள், பதினைந்தாம் நூற்றுண்டுக்கு உரியனவாகக் கருதப்பட்டபோதிலும், ஈச்வர கிருஷ்ணனின் சாங்கிய காரிகை, நான்காம் நூற்றுண்டில் தோன்றியதாகும். வாத்சியாயனனின் (காம சூத்திரத்தின் ஆசிரியரன்று) நியாயபாஷ்யம், 350-ம் ஆண்டுக்கு உரியது. உத்தியோதகரனல் அதற்கு விரிவுரை எழுதப்பெற்றது. வியாசரின் யோக பாஷ்யம் 500-ம் ஆண்டுக்கு உரியது.

### புத்த தத்துவம்.

புத்தகோஷன், மகாநாமன் ஆகியோரின் நூல்களைத் தவிர்த்து, அக்காலப்பகுதிக்கு உரிய மற்ற பௌத்த நூல்கள்

யாவும் வடமொழியில் எழுதப்பெற்றன. ஐந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த புத்தகோஷனும், மகாவம்சம் என்ற புகழ்பெற்ற ஈழநாட்டு வரலாறு எழுதிய மகாநாமனும் (6-ம் நூற்றுண்டு) பாலிமொழியில் எழுதினர். புத்தகோஷன் மகத நாட்டினன். ஈழநாட்டில் புத்த சமய த்தத்துவத்தைக் கற்றறிந்தான். திரிபிடகத்திற்கு விரிவுரையும், விசுத்திமக்கா என்ற மெய்விளக்க நூலேயும் எழுதிப்புகழ்பெற்றுன். சமுத்திரகுப்தனுடன் இணைக்கப்பெற்ற வசுபந்துவைப்பற்றி முன்னர் கூறப்பட்டது. அவன் உடன் பிறந்தோனை அசங்கன் புத்தசமயத்தைச்சார்ந்த யோகசார இயக்கத்தைத் தோற்றுவித்தவனுவன். பிளேட்டோ (Plato) அரிஸ்டாட்டில் ஆகியோரின் மெய்விளக்க இயக்கங்களுக்கு ஒப்பான புகழ் அவ்வியக்கத்துக்கு உண்டென்று கருதப்படுகிறது. வசுபந்துவின் அபிதர்மகோசம் என்ற நூல் புலங்கடந்த நுண்பொருள் ஆராய்ச்சி, உளநூல், அறநூல், முதலிய பலவற்றைப்பற்றிக் குறிப்பிடுகிறது. மகாயான சூத்திரங்களுக்கும் இவன் விரிவுரை எழுதினன். இவன் மாணவனுன திங்நாகன் ஓர் சிறந்த வாய்வியல் (தருக்கநூல்) அறிஞன். யோகசார்ரப் பிரிவினரைச்சேர்ந்த ஓர் சொற்போர் வல்லுநனுக இவன் விளங்கினுன். பவபூதி இயற்றிய உத்தர ராமசரிதத்தைச் சில செய்திகளில் முன்னறிவிக்கும் குண்டமாலே என்ற வடமொழி நாடகத்தை இயற்றியவன் இவனே என்று சில அறிஞர் கருதுவர். அக்காலப்பகுதிக்கு உரிய பௌத்த ஆசிரியர் சிறந்த மெய்விளக்க ஆற்றல் பெற்றிருந்தனர். அவர் தம் அறிவாற்றல் வியக்கத்தக்கது.

## இயல்நூல். (SCIENCE)

### வாகபட்டனும் ஆரியபட்டனும்.

மருத்துவத்தைப்பற்றிய பௌத்த வடமொழி கையெழுத்துப்பிரதிகள், சீன துருக்கித் தானத்திலிருந்து பெறப்பட்டுள்ளன. அவை நான்காவது அல்லது ஐந்தாவது நூற்றுண்டுக்குரியதாகக் கருதப்படுகிறது. புத்தசமயத்தைச்சேர்ந்த விருத்தவாகபட்டன் என்ற மருத்துவ அறிஞன், ஆரும் நூற்றுண்டினன். என்று சிலரால் கருதப்படுகிறது. இவனுடைய அட்டாங்க சங்கிரகம் ( மருத்துவத்தின் எட்டு பிரிவுகளின்

சுருக்கம் ) என்ற மருத்துவ நூலின் பொருளடக்கத்தை, இட்சிங் குறிப்பிடுகிறுன். சரகன், சுஸ்ருதன் முதலியோருக்கு தான் கடப்பாடுடையோன் என்று வாகப்பட்டன் அறிவிக்கிருன்.

வானசாத்திர முறைகளான ஐந்து சித்தாந்தங்கள் (முதலாவது மட்டும் இப்பொழுது உள்ளது) நான்காம் நூற்ருண்டில் இயற்றப்பட்டிருக்கலாம். கணக்கியலேயும் வானநூலேயும் பற்றிய ஆரியபட்டியத்தை 499-ல் எழுதிய ஆரியபட்டன், தனது நூலில் ஐந்து சித்தாந்தங்களில் ஒன்ருகிய சூரிய சித்தாந்தத்தைப் பின்பற்றிஞன். நில உலகம் அதன் நடு அச்சின்மீது ஒவ்வொரு நாளும் சுழல்வதையும் ஞாயிறு, திங்கள் மறைவுகளுக்கு விஞ்ஞான முறையில் விளக்கத்தையும், வட்டத்தின் குறுக்களவுக்கும், வட்டத்தின் சுற்றளவுக்கும் உள்ள உண்மையானவிகிதத்தையும் இந்நூல் குறிப்பிடுகிறது.

## வராகமிகிரன்.

வராகமிகிரன் ஆரும் நூற்ருண்டில் வாழ்ந்தவன். 505-ம் ஆண்டில், ஐந்து வானநூல் முறைகளே விளக்கும் பஞ்ச சித்தாந்திகை என்ற நூலே இவன் எழுதினன். குறிநூலேப் பொருத்தவரை (Astrology) இவனுக்கு முன்பிருந்த யாவரினும் இவன் மிக உயர்வானவன். அக்கலேயில் முதல் இடத்தை இவன் பெற்றிருந்தான். வடமொழி இலக்கியத்தில் ஒரு சிறந்த நூலான பிருகத்சம்கிதை இவனுல் இயற்றப் பெற்றது. இது 106-அதிகாரங்களேயுடையது. இஃது வான நூல், குறிநூல், நிலநூல், வெப்பதட்பம், விலங்குகள், மங்கையர், மணவினே, உவளகம், அறிகுறிகள் முதலிய பல செய்திகளேப்பற்றிக் கூறும் அறிவுக் களஞ்சியமாக உள்ளது. பெண் குலத்தினரை வெறுப்போரை எதிர்த்து, பெண்டிரின் சிறப்பை, இக்கால முறையில் இந்நூல் விளக்கும். வேத காலத்திலிருந்து இயற்கையான குறிநூல் வளர்ந்து வந்த போதிலும், ஒருவன் பிறக்குங்காலத்தில் உள்ள கோள்நிலே

யைக்கொண்டு, அவனது எதிர் காலத்தை முன்னதாக அறிவிக்கும் கலை, சிறப்பாக அயல் நாட்டினரிடமிருந்தே இந்தியர் பெற்றனர். வராகமிகிரன் எழுதிய பிருகத்சாதகம் என்ற குறிநூல் அக்கலையில் மரபுப்படி அமைந்துள்ள ஒரு நூலாகும். இலகு சாதகம் என்ற நூல் அதனுடைய சுருக்கம்.

## அருங்கலைகள்.

### சிற்பம்.

ஹூணர், முகம்மதியர், படையெழுச்சிகள் பெரும்பான்மையான இந்தியக் கட்டடங்களை அழித்தன. ஜான்சியின் அண்மையில் தியோகர் (Deogarh) கோயிலில், துறவி ஆடையுடன் அமைந்த சிவனின் உருவம் உள்ளது. (அலகாபாத் அண்மையில் கார்வா கோவிலின் சிற்பங்கள், காந்தாரா கலைக்கூடச் சாயலைப்பெறுமல் பார்கத், சாஞ்சி மரபையே ஒத்துள்ளன. சாரநாத்தில் புதைபொருள் ஆராய்ச்சியின் விளைவாகக் கிடைக்கப்பெற்ற அமர்ந்த வடிவமான புத்தர்சிலை குப்த சிற்ப நடையில் அமையப்பெற்றதாகும்.) மதுராவில் நிற்கின்ற நிலையிலுள்ள புத்தர் சிலையில், ஒரு சிறிது கிரேக்கப் பண்பு புலப்படும். பகல்பூர் அருகாமையில் சுல்தான்கஞ்ச் என்ற இடத்தில் காணப்பெற்ற செம்பாலாகிய பெரும் புத்தர் சிலையும் (உயரம் 7½-அடியும் எடை ஏறக்குறைய 1-கண்டி (Ton) யும் உள்ளது) சந்திரனின் டில்லி இருப்புத்தூணும் (23-அடி 8-அங்குல உயரம். 16-அடி 4-அங்குலம் அடிப் பாகத்தின் குறுக்களவு 12·05 அங்குலங்கள் உயரத்தின் குறுக்களவு உள்ளது.) அக்காலத்தின் வியக்கத்தக்க உலோகத்தொழில் முன்னேற்றத்தைக் காட்டாநிற்கும். பலநூற்றாண்டுகள் அத்தூண், திறந்தவெளியில் இருந்தும் துருப்பிடிக்காமலுள்ளது. கந்தகுப்தனின், ஒருகல்லாலாகிய பிதாரி (Bhitari) தூணும், வேறு பல தூண்களும் குறிப்பிடத்தக்கன. குப்த சிற்பம் தனிப்பட்ட பெருமையும் எழிலும் வாய்ந்ததாம். "உயிர்ச்சக்தியும், தூய்மையும்" அதில் புலப்படும். பேரறிஞர் ஸ்மித், உள்ளிட்ட சில கலை வல்லுநர் குப்தர் சிலையை "மிகச்சிறந்த இந்தியக்கலை" என்பர்.§

---

§ Smith, Fine Art.

## ஓவியக்கலை.

நாம் கூறிவரும் காலத்திய ஓவியங்கள், பாக், அஜந்தா, சிகிரியா ஆகிய இடங்களிலுள்ளன. முதல் இடம் மட்டுமே குப்தப் பேரரசுக்கு உட்பட்டது. வாகாடகர் நாட்டைச்சேர்ந்த இரண்டாவது இடம், குப்தரின் அரசியல் கலைப்பண்பு முறைகளால் நலமடைந்தது. இறுதியாக உள்ள ஈழநாட்டு நகரம் அஜந்தாவின் கலைஆட்சிக்கு உட்பட்டது. (அஜந்தா ஓவியங்கள் பெரும்பான்மையில் புத்த இலக்கியத்தில் காணப்பெறும் புத்தர் வாழ்க்கையை விளக்கும். 16, 17-ம் குகைகள் சுமார் கி. பி. 500-க்கு உரியன. 19-ம் குகையில் உயர்ந்த சிற்பங்களும், பல பௌத்த ஓவியங்களும் உள்ளன. ஓவியங்கள் யாவும், இந்தியரின் சிறப்பான அருஞ்செயல்களைக் காட்டாநிற்கும். உள்ளுணர்ச்சி ததும்பவும், இயற்கைக்கு மாறுபடாமலும் உயர்வான முறையில் அவை அமையப்பெற்றுள்ளன. பாக் (குவாலியர்பகுதி) குகைகளிலும் சிறப்புமிக்க பல வகையான ஓவியங்கள் உள. அஜந்தாவுடன் இவ்விடமும் ஒப்பிடத்தகும். சிகிரியாவில் மங்கையர், பௌத்தர் கோயிலுக்கு மலர்களுடன் செல்லும் காட்சி வரையப்பட்டுள்ளது. இவை ஐந்தாம் நூற்றாண்டுக்கு உரியன. ஆனால் இவை அஜந்தா ஓவிங்களைப்போல் அத்துணை சிறப்பு வாய்ந்தவையல்ல.

## காசுமுறை.

சமுத்திரகுப்தன் எட்டு வகையான பொற்காசுகளை வெளியிட்டான். அவற்றின் உருவங்களும், வேலைத்திறனும் போற்றற்குரியன. காசுகளில் உள்ள எழுத்துக்கள் மன்னனின் ஆற்றலைச் சிறப்பிக்கும். இரண்டாம் சந்திரகுப்தன், தன் தந்தையின் ஒருசில பொற்காசுகளின் முறையைப் பின்பற்றினான். ஒரு இணையற்ற காசில் மன்னன் சிங்கத்துடன் போரிடுவதாகக் காணப்படுகிறது. புதிய வடிவங்கள்கொண்ட காசுகளும் அவனால் வெளியிடப்பட்டன. மேற்கு இந்தியாவைக் கைப்பற்றிய பின்னர் வெள்ளிக்காசுகள், உள்நாட்டுத் தேவைக்காக வெளியிடப்பெற்றன. ஒன்பது வகையான

செப்புக்காசுகளை இரண்டாம் சந்திரகுப்தன் வெளியிட்டான் அவற்றில் பெரும்பான்மையானவற்றில் கருடன் உருவம் காணப்படுகிறது. முதலாம் குமாரகுப்தன், முன்னையோரின் சில வடிவங்களைப் பின்பற்றியதுடன், மயிலுடன்கூடிய முருகன் உருவம் கொண்ட காசுகளையும் வெளியிட்டான். கந்தகுப்த னின் பொற்காசுகள் அரிதாக உள்ளன. அவன் கருடன், நந்தி, பலிமேடை ஆகிய உருவங்களுடன் கூடிய புதிய காசுகளையும் வெளியிட்டான்.

## அயல் நாட்டுச்சாயல் (Foreign Influence)

அயல்நாட்டுத் தொடர்பால் இந்தியக் காசுமுறை மாறுத லுக்குட்படுத்தப்பட்டிருப்பது சில இயல்புகளில் புலப்படுகிறது. சமுத்திரா — சந்திரா என்பதுபோன்ற குறுகிய பெயர்கள் செங்குத்தான முறையில் பொறிக்கப் பெற்றிருப்பதைக் காண் கிறோம். இம்முறை சீனாவிலிருந்து பெறப்பட்டு, பிற்காலக் குஷானர்காசுகளில் காணப்படும். "ஆனபோதிலும் பலவகை யான உருவங்களையும், இந்தியாவில் முதன் முதலாக பண்டைய வடமொழி எழுத்துக்களையும் பெற்று விளங்கிய அழகிய குப்தப்பொற்காசுகள், நாம் பெற்றுள்ள இவ்வகை யான இந்தியக்கலையின் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.‡ குப்தரின் பொற்காசு முறைகள் சசாங்கனாலும், அவர்தம் வெள்ளிக்காசுகள் மௌகாரியர், தோரமானன் ஆகியோரா லும், (ஒருவேளை) ஹர்ஷனாலும், செப்புக்காசுகள்முறை தோரமானன், மிகிரகுலன் முதலியோராலும் பின்பற்றப்பட்டன.

## கலைப்பண்பு முன்னேற்றத்திற்குரிய காரணங்கள்.

குப்தராட்சிக்கு முற்பட்டகாலப் பகுதிகளில் காணப் பெற்ற இந்தியரின் அருஞ்செயல் முயற்சிகள் குறைபாடில்லா வகையில் முடிவுற்றதின் விளைவாக, குப்தர்காலம், அறிவாற் றல், அருங்கலைகள் ஆகிய துறைகளில் தனிச்சிறப்புடன் விளங்கியது. குழப்பம் நிறைந்த இடைவெளிக்குப்பிறகு, எதிர்பாராவகையில் குப்தர்காலத்தில் கலைவளர்ச்சி ஏற்பட்ட தாகக் கருதுவதைவிட மேற்கூறியவாறு கூறுதல் நலமாகும்.

‡ Brown. C. J, The coins of India 1922. P. 40—41

தனித்திறமைவாய்ந்த பெரியோரின் தோற்றத்தைப்போலவே, பொற்காலங்களின் தோற்றத்திற்குரிய காரணங்கள் எளிதில் சட்டமுறையில் வரையறுக்கப்படக்கூடியன அல்ல. ஆயினும், அதற்கு உதவும் சில குறிப்புகள் நோக்கத்தக்கன. குப்தர் பேரரசில் காணப்பெற்ற அமைதியும் வளமான ஆதாரங்களும், அம்மன்னர்களை கலைமுன்னேற்றத்திற்கு உதவிபுரியச் செய்திருக்கவேண்டும். அவர்களிற்சிலர் பலதிறப்பட்ட ஆற்றல்மிக்கோராயிருந்தன ரென்பதையும் நாமறிவோம். கல்வியையும் நுண்ணிய கலையையும் ஆதரிக்க அவர்கள் பின்வாங்கவில்லை. சமுத்திரகுப்தனிடம் சிறப்புக்குரிய வீரமும் புலமையும் கலந்திருந்தன என்பதையும் நாம் கண்டோம். மரபுரையிலுள்ள விக்கிரமாதித்தனுகக் கருதப்படும் இரண்டாம் சந்திரகுப்தன் கல்வியை மிகவும் ஆதரித்தவனுக இருத்தல் வேண்டும். ஆனல் "நவமணிகள்" எனப்பெற்ற புலவர்கள் அவன் காலத்தவரென்ற கூற்றுக்கு ஆதாரமில்லை. இரண்டாம் சந்திரகுப்தனின் காசு ஒன்றில் "ரூபகிருத்" என்ற அவன் பட்டத்தைக் காண்கிறேம். அச்சொல்லுக்கு நாடகாசிரியன் அல்லது ஓவியக்காரன் என்பது பொருள். கல்வி, கலையை ஆதரித்ததுடன் குப்தர்கள், புத்த சமயத்திடம் கருணைபூண்டிருந்தனர். ஆதலால் பௌத்தச் சிற்பங்களும், ஓவியங்களும் முன்னேற்றமுற்றன. இந்து சமயத்தின் மீட்சி, கலை முன்னேற்றதிற்கு மற்ருேர் காரணமாகும். அயல்நாட்டுத் தொடர்பு சிறப்பான காரணமாயில்லாத போதிலும் சில வகைகளில், முன்னேற்றத்திற்கு வாய்ப்பு அளித்தது.

## பகுதி 11

### இந்தியாவில் அயல்நாட்டுப் பண்புகளை மேற்கொள்ளல். ஹெலனியர் — நாடகம்.

முன்னர் கிரேக்கரின் இந்திய வருகையைப்பற்றிக் குறிப்பிடுகையில் இந்தியாவில் அயல்நாட்டுப் பண்புகளை மேற்கொள்ளலைப்பற்றி ஓரளவு கூறப்பெற்றது. இனி இப்பகுதியில் ஹெலனியரின் பணிகள், ஈரானியத்தொடர்பின் பயன்கள், இந்திய கிறித்தவ சமயத்தொடர்பு ஆகியனபற்றி ஆராய்வாம்.

ஹெல்லெனியப் பண்புகளை இந்தியா ஏற்றுக்கொள்ளவில்லை என்ற கோட்பாடு, காசுமுறை, வானநூல், கோள்நூல், அருங் கலைகள் ஆகிய செய்திகளைப் பொறுத்தவரை பொருந்தாத தாகும். வராகமிகிரனால் விளக்கப்பெற்ற கோள்நூல்முறை முழுவதிலும், மேனாட்டாரின் சாயலைக்காணலாம். கிரேக்கர், மிலேச்சரென்று இழிவாகக் கூறப்பட்டபோதிலும், முற்பட்ட காலத்துக்குரிய "கர்கிசம்கிதை" வான சாத்திரத்திலும், கோள் நூலிலும், அவர்கள் இருடிகளைப்போன்ற பெருமை வாய்ந்த வரென்று புகழ்ந்துபேசுகிறது. கி. மு. இரண்டாம் நூற்றுண்டில் கிரேக்கர் படையெழுச்சிக்கு முன்னர், இந்தியாவில் நாடக இலக் கியம் இல்லை. இதை ஆதாரமாகக் கொண்டு, வடமொழி நாடகம், கிரேக்கருக்குக் கடப்பாடுடையதென்று ஊகம் செய் யப்படுகிறது. ஆனால் "நாடகம்" என்ற சொல்லும் இதனை ஒத்த சொற்களும், பிராகிருதச்சொல்லான "நாட்" என்பதினின் றும் வடமொழிச்சொல்லான "நிருத்" என்பதினின்றும் பெறப் பட்டதால் வடமொழி நாடகத்தின் தோற்றத்தை வீரகாவிய இலக்கியத்துடன் தொடர்புபடுத்தி நன்கு விளக்கக்கூடும். அடுத்தபடியாக, துன்பியல் நாடகக்கலைப்பண்பு வடமொழிஇலக் கியத்தில் இடம்பெறவில்லை. அப்பண்பு கிரேக்க நாடகக்கலை யின் மிகச்சிறப்பான ஒன்று என்பதை நோக்குதல் வேண்டும்.

## மருத்துவமும் கணக்கும்.

பண்டைய இந்தியா மருத்துவத்துறையில், பிறநாடுகளுக்கு வழிகாட்டியதேயன்றி, அவற்றைப் பின்பற்றவில்லை. அலெக் சாந்திரிய கணக்கு முறைக்கு இந்தியா கடப்பாடுடைய தென்பதற்குத் தக்க சான்றில்லை. இலக்கங்கள் எண்ணும் இந்தியமுறையைப் பிறநாட்டவர் பின்பற்றினர். கிரேக்கரை விட இந்தியர், குறிக்கணக்கியலில் (Algebra) மிகவும்சிறப்பான நிலை எய்தியிருந்தனர். பண்டைய இந்தியக் கணக்கு முறை மிகவும் சிறப்புற்றிருந்த காலப்பகுதியில் (கி. பி. 400—500.) அலெக்சாந்திரியாவுடன் இந்நாடு வாணிக உறவு கொண்டி ருந்ததால், அலெக்சாந்திரிய அறிஞர்களையே, இந்தியக்கணக்கு அறிஞர் பின்பற்றினர் என்று ஒரு சிலர் கூறுவர். ஆனால், கணக்குத்துறையில், பண்டைய இந்தியர் தனித்த பெருமை

யுடனும் இயற்கை அறிவுத்திறனுடனும் விளங்கினரென்பதே பெரும்பான்மையான அறிஞர்களின் கருத்தாகும்.

## குறைந்த அளவில் கிரேக்கப் பண்புகள் மேற்கொள்ளப்பட்டமை.

மோரியர் காலம் முதல் குப்தர் காலம் வரை, இந்திய-கிரேக்க உறவு தொடர்ந்து வந்தபோதிலும், அஃது பெரும்பான்மையில் வாணிகத்தைப் பொறுத்ததாகும். மேலும், கி.மு. இரண்டாம், முதலாம் நூற்றுண்டுகளில், வடமேற்கு இந்தியாவில், கிரேக்கராட்சி நிலவியது. இவ்வாறு நீண்டகாலத் தொடர்பு இருந்ததென்பதையும், பண்டைய இந்தியரும், கிரேக்கரும், பண்டைய உலகில் மிகச்சிறந்த அறிவாளர்களென்பதையும் நோக்குமிடத்து, இந்நாட்டில், ஹெல்லெனிய கலைப்பண்பு மிகுதியான அளவில் இடம்பெறவில்லை என்பது வியப்புக்குரியதே. உண்மை யாதெனின், நன்மையான எதையும் பிறரிடமிருந்து கற்றுக்கொள்ள, இந்தியர் பின்வாங்கவில்லை. அவ்வாறு பெற்றவற்றை, தம்முடைய பண்புகளுடன் இரண்டறக்கலந்து போற்றலாயினர். ஆகவே, சில செய்திகளில், இந்தியர் எத்துணை அளவு பிறருக்குக் கடப்பாடுடையவர் என்பதை விளக்குவது எளிதற்ற செயலாக உள்ளது. கிரேக்கத்தொடர்பினுல், இந்தியக்காசு முறை பெரும் மாறுதலையும் வானநூற்பயிற்சி மிகுந்த வளர்ச்சியையும், கலைகள், முன்னேற்றத்தையும் அடைந்தனவென்பதில் யாதும் ஐயமில்லை.

## ஈரானியர் — கிறித்தவர்.

மகாயான சமயத்தில் ஈரானியச்சாயலைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பெற்றது. சூரியவழிபாடு, இந்தியாவில் வேதங்களை ஒத்த பழமையைப்பெற்றிருந்தபோதிலும் கிறித்தவ ஆண்டின் ஆதி நூற்றுண்டுகளில், ஈரானிய முறையில் அவ்வழிபாடு ஈண்டு புகுத்தப்பெற்றது. ஹர்ஷன், தனது தந்தை, பாட்டன்மார்களை "பரமாதித்திய பக்தர்கள்" என்று சிறப்பிக்கின்றுன். சூரியதேவனின் உருவச்சிலைகள், தனிக்கோயில்களில் வழிபடப்பெற்றன. அன்பு (பக்தி) அல்லது கடவுட்பற்று என்ற

கோட்பாடு, கிறித்தவ சமயத்தின் பயனுய் ஈண்டு தோன்றிய தென ஒரு சிலர் கூறுவர். ஆனுல் கி. மு. ஏழு அல்லது ஆறும் நூற்றுண்டுக்கே அதன் தோற்றம் உரியதாகும் என எண்ண இடமுண்டு. ஏசுநாதர், கண்ணபிரான், ஆகிய இருவரைப்பற்றிய பழைய கதைகளில் ஒற்றுமைப்பண்புகள் இருப்பது, எடுத்துக்காட்டப்படுகிறது. ஆனுல், கண்ணபிரா ஜனப்பற்றிய கதை பிற்காலத்தது என்பதைக்கொண்டு, 'அன்பு' (பக்தி) முறை, இந்தியாவில் தோன்றியதன்று எனக் கூறலாகாது. கடவுளிடம் அன்பு, நம்பிக்கையின்மூலம் வீடு பெறுதல் முதலிய கிறித்தவக் கொள்கைகள், ஏசுநாதர் பிறப் பதன் முன்னரே இந்நாட்டில் வளர்ச்சியடைந்திருந்தன. சமயத்தலைவர் (ஏசுநாதர்) உலகினரின் ஈடேற்றத்திற்காக உயிர் துறந்தார் என்ற கிறித்தவ சமயத்தின் அடிப்படைக் கொள்கை, பண்டைய இந்திய இலக்கியத்தில் காணப்பட வில்லை என்பது நோக்கற்பாலது. மேலும் நாம் குறிப்பிட்டு வரும் காலப்பகுதியில், கிறித்தவ சமயம் ஒருசில இடங்களில் மட்டுமே (வடமேற்கு இந்தியா, மலையாளக்கரை, மைலாப்பூர், சென்னை) காணப்பெற்றதால், இந்நாட்டின் சமயம் முழுவதும் அதனுல் மாறுதலடைந்தது என்பது பொருந்தாது. கொள்கை களிலும், பழக்கங்களிலும் காணப்பெறும் இந்திய—கிறித்தவ ஒற்றுமைப் பண்புகளுக்கு அவற்றின் இந்திய வரலாறுகளைக் கொண்டே விளக்கம் கூறமுடியும்.

## பகுதி 12

### மேல்நாடுகளில் இந்தியப் பண்புகளை மேற்கொள்ளல்.

கி. மு. ஆறும் நூற்றுண்டிலிருந்து, எவ்வாற்றுனும், இந்தியா மேற்கு நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு கொண் டிருந்ததென்பதை நாமறிவோம். அசோகன் மதப்பரப்புக் குழுஉக்களை, மேற்கு ஆசியா, ஆப்ரிக்கா, ஐரோப்பா ஆகிய நாடுகளுக்கு அனுப்பிய செய்தியும் முன்னர் கூறப்பெற்றது. கிறித்தவ ஆண்டின் ஆதி நூற்றுண்டுகளில், இந்தியாவுக்கும் உரோமுக்கு மிடையே நிலவிய வாணிக உறவு, குப்தர் காலத்திலும் தொடர்ந்து வந்தது. இதன் விளைவாக, இந்திய ரின் கருத்துக்கள் மேற்கில் பரவின. சுமார் கி. மு. 500-ல்

வாழ்ந்த பிதாகரஸ் என்னும் கிரேக்கர், சங்கங்கள் அமைத்து அவற்றின் உறுப்பினர் ஒற்றுமையாகவும், தன்னடக்கத்துடனும் இருக்குமாறு வற்புறுத்தினர். ஹெலனிய கருத்துக்களை ஏற்றுக்கொள்ளாமல், அவர் கூடுவிட்டுக்கூடு பாய்தல் முதலிய பல இந்தியரின் கொள்கைகளை நம்பினர். சோக்கிரதரின் (Socrates) மாணவனும், அரிஸ்டாட்டிலின் ஆசிரியருமான, ப்ளேட்டோ (கி. மு. 429—347) என்ற சிறந்த மெய்விளக்க நூலறிஞன், சில பண்புகளில் ஹெலனிய நாகரிகத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. மேலும், கூடுவிட்டுக் கூடுபாயும் கொள்கையில் நம்பிக்கைகொண்டிருந்தான். இந்திய மெய் விளக்க நூலறிஞர், உயிரின் அழியாத் தன்மையைப்பற்றி, ப்ளேட்டோவைப்போல் அறவுரை நிகழ்த்தினரென்று மெகச் தனீசு குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

புத்தசமய நூல்களுக்கும், கிறித்தவமத நூல்களுக்குமுள்ள ஒற்றுமைப் பண்புகள், சில அறிஞர்களால், மிகைப்படுத்தப் பெற்றிருப்பினும், புத்தசமய இலக்கியம், கிறித்தவ ஆசிரிய ரால் அறியப்பட்டிருந்ததென்பதைக் காட்டும் சான்றுகள் உள. எடுத்துக்காட்டாக, குழந்தைகளின் பிற்காலச் சிறப்புக்களை முன்னறிவித்தல், புத்தரும் கிறித்துவும், அவாவூட்டப்பெற்ற நிகழ்ச்சிகள், நீர்மேல் அவர்கள் நடத்தல், சிறிதளவு உண வைக்கொண்டு அவ்விருவரும் பலருக்கு உணவளித்தல், அவர்கள் பிறந்த காலங்களில் ஏற்பட்ட வியப்புக்குரிய நிகழ்ச்சிகள் முதலிய ஒற்றுமைப்பண்புகள் நோக்கத்தக்கன. துறவிகளின் மடாலய வாழ்க்கை முறையில், இருசமயங்களிலும் பல ஒற்றுமையான பழக்கங்கள் இருப்பதும் குறிப்பிடத்தக்கது. மதகுரு மணம்புரிந்து கொள்ளலாகாது என்ற கொள்கையும், குற்றத்தை ஒப்புக் கொள்ளல், நினைவடையாளங்களுக்கு உயர்வு அளித்தல் ஆகிய கருத்துகளும், மிகுதியாக, ஆதி இந்திய புத்தசமயத்தவரிடம் காணப்பட்டன. கிறித்தவ சமயத் திற்கு இவை புதியனவாகும். ஆகவே, கி. பி. மூன்று, நான்காம் நூற்றாண்டுகளில் கிறித்தவ சமயத்தினர், புத்த சமயத்தவரிடமிருந்து அவைகளை அறிந்திருக்கவேண்டும். இனி முடிவாக, கணக்கு, மருத்துவம், இலக்கியம், மெய்விளக்கம்

ஆகிய பகுதிகளிலும் பண்டைய இந்தியாவுக்கு மற்றநாடுகள் மிகவும் கடப்பாடுடையன. இவற்றைப்பற்றி ஆங்காங்கு குறிப்பிடப்பட்டுள்ளன.

## பகுதி 13

### இந்தியாவில் ஹூணர்.

#### தோரமானன்.

நடுஆசியாவிலிருந்து புதிய காடுகளேயும் பசும்புற்றரைகளேயும் தேடி அலேந்த நாடோடிகளான ஹூணரின் ஒரு பிரிவினர் 375-முதல் அவர்தம் தலேவன் அட்டிலா, (453-ல்) இறக்கும்வரை ஐரோப்பாவில் அழிபாடுகளே விளேவித்தனர். வெள்ளே ஹூணர் எனப்பட்ட மற்ருேர் பிரிவினர் ஆக்சஸ் ஆற்றுச் சமவெளியில் தங்கி பிரோஸ் (Firoz) (459—484) என்ற தலேவனின்கீழ் எதிர்த்து வந்த சஸ்ஸானியரை 484-ல் தோற்கடித்து வெற்றிபெற்றனர். அத்தலேவன் அப்போரில் உயிரிழந்தான். பாரசீகத்தை அவர்கள் வென்றுகொண்டிருக்கையில் இந்தியாவும் அவரால் படையெடுக்கப்பெற்றது. கந்தகுப்தன் ஆட்சிக்காலத்திலும், அவன் இறந்த பின்னும் ஹூணரின் நிலேயைப்பற்றி முன்னர்கூறப்பெற்றது. அவர்கள் தொடக்கத்தில் தோல்வியுற்றபோதிலும் சுமார் 500-ல் தோரமானனின்கீழ் வெற்றியடைந்தனர். அத்தலேவன் மாளவத்தைக்கைப்பற்றி "மகாராசாதிராசன்" என்று பட்டம் சூட்டிக்கொண்டனன். பாரசீகம் 484-ல் முடிவாக ஹூணரின் படையெழுச்சியைத் தடுத்து வெற்றிபெற இயலாமற்போனதும், அதனுல் இந்தியாவில் படையெடுத்தவரின் எண்ணிக்கை மிகுந்ததும், கொடுமையும் வலிமையும் நிறைந்த அவர் தம் செயல்களும், ஏறக்குறைய 467-ல் கந்தகுப்தன் இறந்த பிறகு குப்தப்பேரரசின் ஆற்றலற்ற நிலேயும், ஹூணரின் வெற்றிக்குக் காரணங்களாகும்.

#### மிகிரகுலன்.

502-ல் மிகிரகுலன் தன் தந்தையின் பட்டத்தைப்பெற்று, சாகலா என்ற இடத்திலிருந்துகொண்டு அவனது இந்திய

நாட்டுப்பகுதிகளை ஆட்சிபுரியலானான். இந்தியாவுக்குப்புறத்தில் இருந்த ஹூணரின் ஆசியப்பேரரசு பாரசீகத்திலிருந்து கோட்டான் வரை பரவியிருந்தது. அவ்விரண்டு நாடுகளும் அதற்கு உட்பட்டனவேயாகும். 519-ல் சாங்-யூன் (Song-Yun) என்பானைத் தம் தலைநகருக்கு அனுப்புமாறு, சீனப் பேரரசனைத்தூண்டி வெற்றிகொள்ளும் அளவுக்கு, ஹூணர் வலிமையுற்றிருந்தனர். மிகிரகுலன் ஹூணர் பேரரசில் ஒரு மானியக்காரனாக இருந்தானெனத் தெரிகிறது. இவன் சீனத் தூதுவனை, 520-ல் தனது நாட்டின் ஒருபகுதியான காந்தாரத்திற்கு வரவழைத்தான். 510, 533 ஆகிய இருஆண்டுகளிலும் இருமுறை இவன், மாளவத்தில் தோற்கடிக்கப்பட்டிருக்கக்கூடும். இவனது இரண்டாவது தோல்வியின் விளைவாக, சாகலாவில் இவன் தம்பி, மிகிரகுலனின் அரசை உரிமையின்றிக் கைப்பற்றினான். இதனால் மிகிரகுலன், காச்மீரத்தில் தங்கினான். விரைவில் தனக்கு காவல் அளித்த காச்மீரத் தலைவனை முறியடித்து அரசுரிமையைக் கைப்பற்றி காந்தாரத்தில் படையெடுத்தான். அங்குள்ள மக்களைக்கொலை புரிந்து, பௌத்தர்களைத் துன்புறுத்தி அவர்தம் நினைவுச் சின்னங்களை அழித்தான். 542-ல் அவன் இறந்திருக்கலாம். ஒரு கப்பலோட்டும் கிறித்துவத் துறவியான காஸ்மஸ் இண்டிகோபுளுஸ்டெஸ் (Cosmas Indicopleustes) 547-ல் எழுதிய ''கிறித்தவ நிலத்திணை விவரம்'' (Christian Topography) என்ற நூலில், மிகிரகுலன் இந்தியாவின் தலைவன் என்றும் அவன் கொடுஞ் செயலுடையவனென்றும், அவன் மிகப் பெரும் படையுடையவனென்றும் குறிப்பிடப்பெற்றிருக்கிறது. ஆனால் இக்குறிப்புக்குரியகாலம் அறியப்படவில்லை. ''இந்தியாவின் அட்டிலா'' என்று சிறப்பிக்கப்பட்ட மிகிரகுலன் மக்கள் வடிவில் வந்த ஒரு பேய் ஆவன். குப்தர், பாரசீகர், குஷானர் முதலியவரின் காசு முறையை அவன் பின்பற்றிக் காசுகள் வெளியிட்டான். ஆனால் அவற்றில் நாகர எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றன. அவற்றில் காணப்படும் அவன் தலை உருவம் அவனது விலங்கை ஒத்த முரட்டுத்தன்மையைக்காட்டும். குன்றுகளின் உச்சியிலிருந்து யானைகளைக்கீழே தள்ளிக்கொலை செய்வது அவனுடைய பொழுது போக்காக

இருந்ததாக ஒரு காச்மீரக்கதை கூறுகிறது. யுவான்சுவாங்கும் அவனது கொடுந்தன்மையைக் குறிப்பிட்டுள்ளான்.

### ஹூணரின் தோல்விக்குக் காரணங்கள்.

ஹூணப் படையெடுப்பாளரின் அழிபாட்டுச்செயல்களும மிகிரகுலனின் பொறுக்கத் தகாத கொடுங்கோன்மையுமே ஹூணர் முடிவாக இந்தியாவில் தோல்வியுற்றதற்குச் சிறப் பான காரணங்களாகும். பாரசீகத்தில், 503-க்கும் 513-க்கும் இடைப்பட்ட காலத்தில் ஹூணர் ஆட்சி தோற்கடிக்கப்பட்டது. 565-ல், சஸ்ஸானியமரபினருள் மிகவும் புகழ்வாய்ந்தவனாக விளங்கிய நோஷிர்வான் என்பான், துருக்கியரின் உதவியுடன் ஆக்சஸ்சமவெளியில் ஹூணரின் நாட்டில் படையெடுத்து அவர்தம் அரசனைக்கொன்றான். அவர்கள் நாடு அவனாலும் அவனது துணைவனாலும் பங்கிட்டுக்கொள்ளப்பட்டது. ஆத லால் மறுபடியும் மிலேச்சர் இந்தியாவில் படையெடுக்க இயலவில்லை. பாலாதித்யகுப்தன், மாளவத்தின் யசோதர்மன் கன்னோசியின் மௌகாரியர், தானேச்வரத்தின் புஷ்யபூதிகள் முதலிய யாவரும் ஹூணருக்குப் பகையான முறைகளைப் பின்பற்றி ஒழுகினர். மேலும், அக்கொடிய கூட்டத்தினர் (ஹூணர்) இந்தியநாகரிகத்துடன் தொடர்புகொண்டதின் விளை வாக கொடுந்தன்மை நீங்கப்பெற்று விரைவில் இந்தியராயினர்.

### ஹூணர் படையெழுச்சியின் விளைவுகள்.

ஹூணர், குப்தர் பேரரசையும், வடமேற்கு இந்தியாவில் புத்தசமயத்தையும் அழிவுறச்செய்தனர். அவர்தம் கொடுங் கோன்மையால் விளைந்த எதிர்ப்பு அவர்களாட்சியையே முடி வுறச்செய்தது. முடிவில் அவர்கள் இந்திய மக்களுடன் கலந்து ஒன்றுபட்டு, பல இராசபுத்திர குலங்கள் தோன்றுவ தற்கு வாய்ப்பு ஏற்படலாயிற்று.

## பகுதி 14

### மாளவத்தின் யசோதர்மன்.

மந்தேசர் (குவாலியர் நாடு) தூண் கல்வெட்டும், யசோ தர்மன், விட்ணுவர்த்தனன் ஆகியோரின் கல்வெட்டுக்களும்

(அதே இடத்தில் உள்ளது—கி. பி. 533-க்கு உரியது) யசோதர்மனைப்பற்றி அறிய உதவுகின்றன. மேற்குறிப்பிட்ட ஒரே ஆண்டுதான் அவனைப்பற்றிய வரலாற்றில் அறியப்படுகிறது. 25-முதல் 50-ஆண்டுகள் அவன் ஆட்சிபுரிந்திருக்கலாமெனவும் கருதப்படுகிறது. தூண் கல்வெட்டு, யசோதர்மனை "சாம்ராட்" அல்லது உலகப்பேரரசனெனச் சிறப்பிக்கின்றது. அவன் தன் குடும்பத்தினரின் நாடு குறைந்த அளவுள்ளதாயிருந்ததைக் கண்டு வருத்தமுற்று, பிரும்மபுத்திரா முதல் மகேந்திர மலையின் அடிவாரம் வரையிலும், இமயத்திலிருந்து மேற்குக்கடல் வரையிலும் உள்ள பகுதியை வென்று, குப்தர், ஹூணர் ஆகியோரின் நாடுகளைவிடப் பெரியதாகத்தன் பேரரசு விரிவடையுமாறு செய்தானென்று அக் கல்வெட்டு அறிவிக்கின்றது. மேலும் இமயப்பகுதியின் தலைவனான மிகிரகுலன், - சிவன் ஒரு கடவுளையே தனக்கு உயர்ந்தவனாக ஏற்றுக்கொண்டவன்-யசோதர்மனுக்கு அடிபணியுமாறு செய்யப்பட்டானென்று அது குறிப்பிடுகிறது. யசோதர்மனது தன்மையைப்பற்றி கல்வெட்டு மிகவும் புகழ்ச்சியாகக்கூறும். நற்பழக்கங்களின் உறைவிடமாகவும், மக்களினத்தின் நன்மைக்காக உழைத்தவனாகவும், நல்வழிக்கு இடையூறாக இருந்த கொடுங்கோலாளர்களிடமிருந்து உலகைக் காத்தவனாகவும் புகழத்தக்க மரபைச்சேர்ந்த நன்னெறியாளன் எனவும், மனு, பரதன் ஆகியோருடன் ஒப்பிடத்தக்க பெருமை பெற்றோனாகவும் அவன், அக் கல்வெட்டில் சிறப்பிக்கப்பட்டுள்ளான். இரண்டாவது கல்வெட்டு யசோதர்மனை "ஜனேந்திரன்" என்றும் "நராதிபதி" (மக்களின் தலைவன்) என்றும் குறிப்பிடுகிறது. விட்ணுவர்த்தனன், அவன் குலத்தை முன்னேறச் செய்தவனென்றும், கிழக்கிலும் வடக்கிலும் பல அரசர்களை முறியடித்தனனெனவும், "இராசாதிராசன்", "பரமேச்வரன்" என்ற பட்டங்களைப்பெற்றவனென்றும், அதில் பேசப்படுகிறான். தருமதோடன் என்ற அவன் அமைச்சன், சாதிக்கலப்பு முறையை எதிர்த்தவன் என்று அறியப்படுகிறது.

### யசோதர்மனின் சிறப்பு.

பேரரசுபற்றி யசோதர்மன் கூறிக்கொள்ளும் உரிமைகள் பொய்யானவை என்று கருதுவதற்கில்லை. ஹூணர்தலைவனை

இவன் தோற்கடித்ததாகக் கூறப்படுவதை சிலர் ஏற்றுக் கொள்ளாதபோதிலும், அக்காலத்திய மற்றொரு கல்வெட்டு அதனை உறுதிப்படுத்துகிறது. பேரறிஞர் ஹோர்ன்லே (Hoernle), மரபுரையிலுள்ள உச்சயினி விக்கிரமாதித்தன் இந்த யசோதர்மனே என்றும், காளிதாசனை ஆதரித்தவனும் இவனே என்றும் கூறுவது பெரும்பான்மையோரால் மறுக்கப் படுகிறது. செயஸ்வால், புராணங்களில் பேசப்படும் கல்கியும் யசோதர்மனே என்பர். கல்கி விட்ணுயசஸ் என்பான், வாயு புராணத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறான். அவன் ஹூணரை யும் அறத்திற்குப் பகையாயுள்ளோரையும் அழித்து, மிகுந்த வெற்றிகள் பெற்று 25-ஆண்டுகள் செங்கோலோச்சினனென்று அறியப்படுகிறது. ஆகையால், அரசியல், சமயம், இனம் ஆகிய துறைகளைப்பற்றிய இந்திய வரலாற்றில் யசோதர்மனின் தனிச் சிறப்பை குறைத்துக் கூறுவது எளிதாக இல்லை. பேரரசு வர லாற்றில் குப்தர்காலத்திற்கும் ஹர்ஷன் காலத்திற்கும் இடையே உள்ள காலப்பகுதியை இவன் சிறப்புறச்செய்கிறான்.

## பகுதி 15.

### கன்னோசியின் மௌக்காரியர்.

#### ஈசானவர்மனும் சர்வவர்மனும்.

மௌக்காரியர் குலத்தின் முதல்வன் அரிவர்மன். அவன்பின்போந்த ஆதித்தியவர்மன் மகதத்தின் குப்தகுல முதல்வனான கிருட்டினகுப்தனின் மகளை மணந்துகொண்டான். மூன்றாவது வேந்தனான ஈச்வரவர்மனுக்குப் பிறகு, ஈசான வர்மன் பட்டமேற்றான். இவன், ஆந்திரரையும் (விட்ணு குண்டினர்) சூலிகரையும் (சாளுக்கியர்) கௌடரையும் (வங்கா ளியர்) வென்றதாகக் கூறிக்கொள்கிறான். மகாராசாதிராசன் என்ற பட்டத்தையும் இவன் சூடியிருந்தான். ஹூணரையும் அவன் தோற்கடித்தான். ஆனால் முடிவில், மகதத்தின் நான்காவது குப்த அரசனான குமாரகுப்தனால் வெல்லப்பட் டான். ஏறக்குறைய கி. பி. 554-ல் அவன் வாழ்ந்திருக்க வேண்டும். அவன் பின் வந்த அவன் மகன் சர்வவர்மன் தாமோதரகுப்தனையும் (மகதத்தின் ஐந்தாவது குப்தன்)

ஹூணரையும் தோற்கடித்தான். பிற்காலத்திய கல்வெட்டொன்று (612) (சட்லெஜ் ஆற்றங்கரையில் காணப்பட்டது) அம்மன்னன் ஒரு உள்நாட்டுக்கோவிலுக்கு நிலமளித்ததையும் ஹூணரைத் தோற்கடித்ததையும் குறிப்பிடும். மௌக்காரிய குலத்தினருள் இவனே மிகவும் சிறந்தவன். இவனுட்சி வங்காளத்திலிருந்து, சட்லெஜ், விந்தியமலை வரையில் பரவியிருந்தது.

## அவந்திவர்மனும் கிரகவர்மனும்.

பின்பட்டமேற்ற அவந்திவர்மன், முத்திராராட்சசத்தின் முடிவான வாழ்த்துப்பாவில் குறிப்பிடப் பெற்றுள்ளவனே, என்று சிலர் கூறுவர். ஆனல் அதன் ஆசிரியர் விசாகதத்தன் ஐந்தாம் நூற்றுண்டினன் என்ற சிறந்த கருத்தை நோக்குதல் வேண்டும். அவந்திவர்மன் அவனுக்கு முன்பு ஆட்சிபுரிந்தவனுடன் எத்தகைய உறவு கொண்டவனென்பது அறியப்படவில்லை. இவன் பின் இவன் மகன் கிரகவர்மன் அரசனுனன். சுமார் 602-ல் தானேசுவரத்தின் பிரபாகரவர்த்தனனின் மகள் இராச்சியஸ்ரீயை இவன் மணம் செய்துகொண்டான். ஆனல் அவன் தந்தை இறந்தபின், தேவகுப்தனும் வங்காளத்தின் சசாங்கனும் இணைந்துகொண்டு கிரகவர்மனைத்தாக்கிக் கொன்றனர். இராச்சியஸ்ரீ சிறைப்படுத்தப்பெற்றுள். அவள் உடன் பிறந்தோரான இராச்சிய வர்த்தனனும், ஹர்ஷவர்த்தனனும் அச்செயலுக்காகப் பழிதீர்த்துக் கொண்டனர். கிரகவர்மனின் நாட்டை ஹர்ஷவர்த்தனன் பெற்றுன்.

## மௌக்காரியரின் தொண்டுகள்.

மௌக்காரியரின் முறையான கால வரலாறு மிகவும் தெளிவற்றதாக உள்ளது.† மௌக்காரியர் இந்து மதத்தைப் போற்றி வளர்த்தனர். வேள்விகள்புரிந்தனர். வேத இலக்கியங்கள் ஆதரிக்கப்பெற்றன. குப்தரின், மயில் உருவங் கொண்ட வெள்ளிக்காசுகளும், குப்த ஆண்டும், மௌக்காரி

† T. G. Aravamuthan, The Kaveri, the Maukharis and the Sangam Age. (1925) p. 105.

யரால் பின்பற்றப்பட்டன. ஹூணரால் இடையூறுகள் ஏற்படாவண்ணம் இவர்கள் தடுத்துவந்தனர். தானேசுவரத்தின் புஷ்யபூதி மரபினர் எழுச்சிக்கு இவர்கள் உதவினர்.

## பகுதி 16.

### பேராரின் வாகாடகர்.

### முதலாம் பிரவரசேனனும், முதலாம் பிருதிவி சேனனும்.

இரண்டு நூற்றுண்டுகள் பேராரில் ஆட்சி செலுத்திய வாகாடகர், சிற்சில சமயங்களில் பல திக்குகளிலும் பரவி வந்தனர். குலத்தின் பெயர் அதன் தோற்றத்தைப்பற்றி அறிய உதவவில்லை. இம்மரபினர் சிலரின் பெயர்களும் அதனை அறிவிக்காததன்றி, தோற்றத்தைப் பற்றி தவருன கருத்துக்களை உணர்த்தத்தக்கனவாயும் உள்ளன. இவர்கள், குப்தபேரரசர்கள் காலத்திலே வாழ்ந்தோராவர். வாகாடகர் வரலாறு, கல்வெட்டுக்களைக்கொண்டு சிறிதளவு புராணங்களின் உதவியுடன் அறியப்படுகிறது. கி. பி. நான்காம் நூற்றுண்டில் இவர்கள் ஆட்சி நிலையற்றதாயிருந்தது. அடுத்த நூற்றுண்டில் அஃது வலிமையுற்றது. விந்தியசக்தி என்பானே இக்குல முதல்வன். அரசியல் பட்டங்கள் யாதும் இவனுக்கு இல்லாதபோதிலும், அஜந்தாகுகைக் கல்வெட்டில், இவன் புகழப்படுகிறுன். புராணத்திலுள்ள விநதியசக்தியும் இவனே என்று கருதப்படுகிறது. முதலாம் பிரவரசேனன் (300-330; இஃதும் பின்வரும் ஆட்சிக்காலக் குறிப்புகளும் ஊகத்தை அடிப்படையாகக்கொண்டன) நான்கு அச்வமேதங்கள் உட்பட பல வேள்விகள்புரிந்ததாகவும் சாம்ராட் என்ற பட்டம் பெற்றிருந்ததாகவும், இரண்டாம் பிரவரசேனனின் சம்மாக் (பேரார்—எலிச்பூர் அருகில்) செப்பேடு அறிவிக்கின்றது. புராணத்திலுள்ள பிரவிரன் (விந்தியசக்தியின் மகன்) இவனே என்றும் கருதப்படுகிறது. ஆகையால் விந்தியசக்தியும் முதலாம் பிரவரசேனனும் முயன்று, வாகாடகப் பேரரசை நிறுவினர் என்று கருதலாகும். பின்பட்டமேற்ற பிரவரசேனனின் பேரனை முதலாம் உருத்திரசேனன் (330—340) 'சாம்ராட்' என்ற பட்டத்தை விடுத்தனன். பிரவிரனுக்குப்பின் வாகாடக

குலம் முடிவுற்றதாகப் புரணங்கள் கூறும். இவ்வெதிர்பாரா மாறுதலுக்குக்காரணம் அறியப்படவில்லை. முதலாம் பிருதிவி சேனன் (340 – 390) அக்குலத்தின் பெருமையை மீட்டு, குந்தளத்தை (மேற்குத் தக்காணமும், வடக்கு மைசூரும்) வென்றான். செப்பேட்டுக் குறிப்புகளிலிருந்து இவன் நாடு விரிவுற்றிருந்ததென அறியப்படுகிறது. இதுகாறும் கூறப்பட்ட வாகாடகர், சிவனை வழிபட்டவர்கள்.

### இரண்டாம் உருத்திரசேனன். (390—395)

முதலாம் பிருதிவிசேனனின் மகனான இரண்டாம் உருத் திரசேனன் வைணவன். புகழ்பெற்ற இரண்டாம் சந்திரகுப் தனின் மகளை (பிரபாவதி) இவன் மணந்தான். உருத்திர சேனன் இறக்குங்காலை அவன் பிள்ளை இளம்பருவத்தின னாயிருந்தமையால், அவன் பெயரால் பிரபாவதி ஆட்சிபுரிந் தாள். சந்திரகுப்தன் வாகாடகருடன் மணவினை உறவு கொண்டது அவனுடைய மேற்கிந்தியப் படையெடுப்புக்கு உதவியாயிருக்கும்பொருட்டெனலாம்.

### இரண்டாவது பிரவரசேனனும் (395—420)
### இரண்டாவது பிருதிவிசேனனும் (420—445)

இரண்டாம் உருத்திரசேனன், தானே நேரில் ஆட்சி புரியத்தொடங்கியகாலம் அறியப்படவில்லை. அவனுக்குப்பின் இரண்டாம் பிரவரசேனன் பட்டமெய்தினன். இவன் தலைநக ரான பிரவரபுரத்திலிருந்து வெளியிடப்பட்ட (பதினெட்டா வது ஆண்டு ஆட்சியில்) சம்மாக் செப்பேடு, மரபுவழியைக் குறிப்பிடுவதுடன், இவன் மகேச்வரனை மிகவும் அன்புடன் வழிபடுவோன் என்று காட்டாநிற்கும். இவன் வாகாடகரின் மகாராசன் என்றும் இவனது தாயின் தந்தை "மகாராசாதி ராசதேவகுப்தன் (இரண்டாம் சந்திரகுப்தன்) என்றும் அதில் குறிப்பிடப்பட்டிருப்பது நோக்கற்பாலது. அக்குப்த பேரரச னின் செல்வாக்கு வாகாடக நாட்டில் பரவியிருந்தமை இதனால் வெளிப்படும். அண்மையில் நடைபெற்ற இலக்கிய ஆராய்ச்சி களின் விளைவாக, இரண்டாம் பிரவரசேனனும் அவனது

பாட்டனும் காளிதாசனுடன் நெருங்கிய தொடர்பு பூண்டிருந் தனரென்பதும் "சேதுபந்தம்" என்ற பிராகிருதப் பாடல், முன்னவனால் இயற்றப்பட்டதென்பதும் அறியக்கிடக்கின்றன. இரண்டாம் பிரவரசேனனின் பெயரன்களான இரண்டாம் பிருதிவிசேனன் (420—445) தேவசேனன் (445—465) இருவரும் குப்தருடன் நட்பு உறவுகொண்ட அவர்கள் பாட்ட னின் கொள்கையை விடுத்தனர் என்று காணப்படுகிறது. முன்னவன் புஷ்யமித்திரருடன் ஒத்துழைத்து, அவர்களுடன் கந்தகுப்தனால் முறியடிக்கப்பட்டிருக்கலாமென்று ஊகிக்கப்படு கிறது. ஆனால் ஈண்டு பின்பற்றப்பட்டிருக்கும் காலவரலாற் றின்படி, அத்தோல்வி இரண்டாம் பிருதிவிசேனன் காலத்தில் நிகழ்ந்திருக்க முடியாது. வாகாடகர், குப்தர் பேரரசுடன் பகைமை பூண்டிருந்த காரணத்தால் புஷ்யமித்திரர், மிகுதியான இடையூறுகளை அப்பேரசுக்கு அளித்திருக்கக்கூடும். இதைப் பற்றி உறுதியாகக் கூறுவதற்கில்லை.

## அரிசேனன்.

தேவசேனனின் மகனான அரிசேனன் (465—500) வாகாடக குலத்தின் சிறப்பான மன்னர்களுள் இறுதியானவன். இவனது இறுதி ஆண்டு அறியப்படவில்லை. உண்மையில், இரண்டாம் உருத்திரசேனனும், இரண்டாம் பிரவரசேனனும் இரண்டாம் சந்திரகுப்தன் காலத்தவரென்ற செய்தியைத் தவிர்த்து மற்றபடி வாகாடக மன்னர்களின் முறையான கால வரலாறு தெளிவற்றதே. அரிசேனன், இரண்டாம் முறையாக குந்தளத்தையும், மாளவம், தென்கோசலம், கலிங்கம், திரி கூடம், (வடக்கு கொங்கணம்) தென் கூர்ச்சரம், ஆந்திரம் முதலிய நாடுகளையும் வென்றதாகக் கூறப்படுகிறது. திரெய் கூடகர்களின் குறிப்புகள், திரிகூடம் வெல்லப்பட்ட செய்தியை வலியுறுத்தும். அறியப்பட்ட அளவில் திரெய்கூடகரைப்பற்றிய இறுதியான ஆண்டு 494 ஆகும். ஹூணர் படையெழுச்சி களின் விளைவாக குப்தர் பேரரசில் ஏற்பட்டிருந்த இடுக்கண் களைப்பயன்படுத்திக்கொண்டு, அரிசேனன் தக்கணத்தில், விந்தியமலைக்கு வடக்கிலுள்ள சில பகுதிகள் உட்பட்ட ஓர் பேரரசை நிறுவியிருக்கவேண்டும். இவன் பின் வந்தோரைப்

பற்றி யாதும் அறியப்படவில்லை. வாகாடகர் ஆட்சி, ஆறும் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சாளுக்கியரால் கைப்பற்றப் பட்டிருக்கவேண்டும்.

### இக்குலத்தின் சிறப்பு.

குப்தர் காலத்திய கலைப்பண்பு முன்னேற்றம், அவர்தம் பேரரசைக்கடந்தும் பரவியிருந்ததென்பது முன்னர் கூறப்பட் டது. சில அஜந்தாகுகைகளும், ஓவியங்களும், வாகாடருக்குக் கடப்பாடுடையன. அங்கு அவர்களுடைய கல்வெட்டுக்களில் ஒன்று காணப்பெறும். குகைகள் அவர் நாட்டின் எல்லைக்கு உட்பட்டனவாகும். இறுதியான இரு வாகாடக அரசர், அத்திபோஜன், வராகதேவன் என்ற இரு அமைச்சர் (மலை யாள அந்தணர்கள்) மூலம், அஜந்தா கலை முன்னேற்றத்தில் ஊக்கங்கொண்டு தொண்டாற்றினர். இரண்டாம் பிரவர சேனனின் செய்யுள் இயற்றும் ஆற்றல், சாதவாகனரின் மரபை நமக்கு நினைவூட்டும். அவன் இரண்டாம் சந்திரகுப்தன் காளிதாசன் ஆகியோருடன் கொண்ட தொடர்பு, இலக்கிய வரலாற்றில் அவனைச் சிறப்புறச் செய்கிறது. வடமொழியி லுள்ள வாகாடகர் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் அவர்கள் வடமொழியையும், குப்தர் கலைப்பண்பையும் ஆதரித்தன ரென்பதற்குச் சான்றுகளாகும்.

## பகுதி 17

### வனவாசியின் கதம்பர்

#### தோற்றமும் காலவரலாறும்:

குந்தளம் எனப்பட்ட கன்னட நாட்டில் சாதவாகனருக் குப்பின் வந்தோர் சூட்டுகுலானந்தர் ஆவர். இவர்கள் சாத வாகனர் என்றே தம்மைக் கூறிக்கொண்டனர். அவர்களிட மிருந்து அந்நாட்டை பல்லவர் சிறிதுகாலம் கைப்பற்றி இருந் தனர். காகுத்தவர்மனது (430 — 450. ஐந்தாவது கதம்ப மன்னன்) தாளகுண்டா (ஷிமோகா மாவட்டம்-மைசூர்) தூண் கல்வெட்டைக்கொண்டு கதம்பரின் வரலாற்றுத்தோற்றம் அறியப் படுகிறது. இவர் தம் குலவழி நன்கு அறியப்பட்டபோதிலும்

இவர்கால வரலாற்றை அறிய ஒரேகாலத்தவரான பிற்காலக் கதம்பர், மேலைக்கங்கர், மேலைச்சாளுக்கியர் ஆகியோரைக் கொண்டு ஆராய வேண்டியதாகிறது. தூண் கல்வெட்டின் குறிப்பைக்கொண்டு கதம்பகுல முதல்வனை மயூரசர்மன், சமுத்திரகுப்தனின் காலத்தவன் என்று ஊகிக்கப்படுகிறது. காகுத்தவர்மனது மற்றொரு கல்வெட்டு எண்பதாவது ஆண்டுக்கு உரியது. இஃது கதம்ப ஆண்டைக் குறிப்பதாகக் கருதப்படுகிறது. பண்டைய கதம்பகுலத்தில் 13-அரசர்கள் காணப்பெற்றனர். 345-முதல் 610-வரை உள்ள காலப் பகுதி அவர்களுக்குரியதாகலாம்.†

## தாளகுண்டா தூண் கல்வெட்டு.

இல்கல்வெட்டு, காகுத்தவர்மன் இறந்த பிறகு அவன் மகன் சாந்திவர்மனால் அமைக்கப்பெற்றது. இந்நீண்ட குறிப்பு கதம்பர் வரலாற்றில் மிகுந்த சிறப்பு வாய்ந்தது. இதன் பொருளடக்கம் பின்வருமாறு :—

கதம்பர் அந்தணராவர்,; மதக்கல்வியும், வேள்விகளும் அவர்களால் மிகவும் போற்றப்பட்டன,; அவர்கள் இல்லத்தின் அண்மையில் கடம்பமரம் வளர்க்கப்பட்டதால் அப்பெயர் பெற்றனர். ''மயூரசர்மன், வேதங்களைக் கற்பதற்கு காஞ்சி சென்றான். ஆனால் பல்லவர் படையைச் சேர்ந்த குதிரைச் சேவகன் ஒருவனோடு பகைத்ததின் பயனாய் அவன் தருப்பைப் பிடித்த கையால் வாளைப்பிடித்து உலகை அடிமைப்படுத்தலாயினன். பின்னர் பல்லவரால் அவனை வெல்லமுடியாது போகவே, அவர் வனவாசி நாட்டை அவனுக்கு அளித்து முடிசூட்டினர்.'' இதனால் சமுத்திரகுப்தனின் படையெழுச்சியால் தென்னிந்தியாவில் விளைந்த அரசியல் குழப்பத்தை தன்னலத்திற்குப் பயன்படுத்திக்கொண்டு, மயூரவர்மன் வனவாசியின் உரிமையான மன்னன் ஆயினன் என்று அறியப்படுகிறது. (வனவாசி என்ற தலைநகர், துங்கபத்திரையின் கிளையான வரத ஆற்றங்கரையில் உள்ளது. நாடு-ஷிமோகா

† G. M. Moraes, The Kadambakula (1931), Vide genealogical table before p. 15.

யாவட்டம்). அவன்பின் வந்தோரின் பெயர்களையும் அக்கல் வெட்டு அறிவிக்கின்றது. வழக்கமான முறையில் அவர்கள் புகழப்படுகின்றனர். கங்கவர்மன் (370—395) பகீரதன் (395—420) இவனது இருபிள்ளைகளான இரகு (420-430) காகுத்தவர்மன் (430—450). காகுத்தன் தன் பெண்களை குப்த இளவரசர்களுக்கும், பிறருக்கும் (வாகாடகர்) மணம் செய்து கொடுத்தானென்று கல்வெட்டில் காணப்படுகிறது. வைசியராகக் கருதப்படும் குப்தர்களும், அந்தணரான கதம்ப ரும் மணவினை உறவுகொண்டது நோக்கத்தக்கது. தாளகுண்டா சிவன் கோவிலுக்காக இவன் நீர்த்தேக்கம் அமைத்ததாகவும், சாதகர்ணியும் பிறரும் அங்கு சென்றதாகவும் அறியக்கிடக் கின்றன.

## குலவரலாறு.

மயூரசர்மனும், காகுத்தவர்மனும் கதம்பர் வரலாற்றில் மிகவும் சிறப்புபொருந்தியோராவர். முன்னவன் ஒரு அசுவ மேத வேள்வி செய்து முடித்தான். கங்கவர்மன், வாகாடக முதலாம் பிருதிவிசேனனால் தோற்கடிக்கப்பட்டிருக்க வேண்டு மெனத்தெரிகிறது. இரண்டாம் சந்திரகுப்தனால் காளிதாசன் தலைமையில் குந்தளத்திற்கு அனுப்பப்பட்ட தூதுக்குழுவை வரவேற்றவன் பகீரதனாக இருக்கலாம். சாந்திவர்மன் (450—475) இறந்தபின் கதம்பநாடு பிளவுபட்டது. குலத் தில் இருபிரிவுகள் தோன்றின. மிருகேசவர்மன் (475—490) கங்கரையும், பல்லவரையும் வென்றதாகக் கூறப்படுகிறது. சமண சமயம் அவனால் ஆதரிக்கப்பெற்றது. இரவிவர்மன் (497—537) தன் அரசுரிமைக்காகப் போரிடவேண்டியதா யிற்று. இவன் நீண்டகாலம் போற்றற்குரிய வகையில் ஆட்சி புரிந்தான். அரிவர்மனின் (537—547) ஆற்றலின்மையின் விளைவாக, அரச குடும்பப் பிரிவினர் இருவரிடை பகைமை மிகுந்தது. மேலும், அரிவர்மனின் மானியக்காரனை சாளுக்கிய முதலாம் புலிகேசி கலகம்செய்து தனது குலத்தின் ஆட்சியை வாதாபியில் தோற்றுவித்தான். அரிவர்மனுடன் முதற்பிரிவின ரின் ஆட்சி முடிவுற்றது. இளைய பிரிவினரைச்சேர்ந்த இரண் டாம் கிருட்டினவர்மன் (547—565) தனது உடன்பிறந்தாளை ஒரு கங்க இளவரசனை மணம்புரிந்துகொள்ளச் செய்து தனது

நிலையை வலிமையுறச்செய்து கொண்டான். அசவர்மன் (565—606) சாளுக்கியருக்குக் கீழ்ப்படிந்திருந்தனன். போகி வர்மன் (606 - 640) தனது குலத்தை மீண்டும் உயர்த்த முயன்று தோல்வியுற்றான். பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் கதம்பர்குலம் மீண்டும் தலையெடுத்தது. ஹாங்கலிலும் (தார் வார்மாவட்டம்) கோவாவிலும், பிற்காலக் கதம்பர் ஆட்சி புரிந்தனர். பதினான்காம் நூற்றாண்டில் விசயநகரத்தின் எழுச்சி யால் பிற்காலக் கதம்பரும் கவிழ்ந்தனர்.

## பகுதி 18

### மகதநாட்டு குப்தர், ஆந்திரநாட்டு பிரிகத்பலாயனர் ஆனந்தர், சாலங்காயனர், விட்ணுகுண்டினர் முதலியோர்

### மகதநாட்டு குப்தர்.

மகதநாட்டு குப்தகுலத்தவரின் கால வரலாற்றை அறிய, ஆதித்தியசேனனின் அப்ஸாத் (கயா அருகில்) கல்வெட்டு உதவும். இவர்களுக்கும் குப்த பேரரசர்களின் குலத்துக்கு மிருந்த தொடர்பு தெளிவாகத் தெரியவில்லை. இக்குல முதல்வன் கிருட்டினகுப்தன். இக்குலத்தின் நான்காவது மன்ன னை குமாரகுப்தன், 554-ல் ஆட்சிபுரிந்த ஈசானவர்ம மௌகாரியனின் காலத்தவனாகும். தாமோதர குப்தன் என்பானை, சர்வவர்மன் மௌக்காரி தோற்கடித்தனன். மகாசேனகுப்தன், பிரபாகரவர்த்தனனுடன் நட்பு உடன்பாடு செய்துகொண்டது குறிப்பிடத்தக்கது. தேவகுப்தன் என்ற அரசன் சசாங்கனுடன் சேர்ந்து கிரகவர்மன் மௌக்காரியைத் தாக்கினன். ஆனால் ஹர்ஷவர்த்தனனின் வெற்றிகள், குப்த குலத்தவரைக் கீழ்ப்படியச்செய்தன.

### பிரிகத்பலாயனரும், ஆனந்தரும்.

பிரிகத்பலாயனகுல மன்னருள் நான்காம் நூற்றாண்டின் முற்பகுதிக்குரிய செயவர்மன் என்பான் மட்டுமே அறியப்படு கிறான். அவன் சிவ வழிபாட்டையுடையோன். நான்காம் நூற்றாண்டுக்குரிய அத்திவர்மன், தாமோதரவர்மன் என்ற

ஆனந்தகுல அரசர்களின் கல்வெட்டுக்கள் குண்டூர் மாவட்டத்தில் கிடைக்கப்பெற்றுள்ளன. முன்னவன் சிவனையும், பின்னவன் புத்தரையும் வழிபட்டனர். ஐந்தாம் நூற்றுண்டில் சாலங்காயனரால் அக்குலம் வீழ்ச்சியுற்றிருக்கவேண்டும்.

### சாலங்காயனர்.

வேங்கிநாட்டு சாலங்காயனரின் ஆட்சிக்காலம் 4, 5-ம் நூற்றுண்டுகள் எனலாம். இக்குல முதல்வன் தேவவர்மன். பின்போந்த அத்திவர்மன், சமுத்திரகுப்தனுல் தோற்கடிக்கப்பட்டான். இறுதி மன்னனுன கந்தவர்மன் சிவனைவழிபட்டான்.

### விட்ணுகுண்டினர்.

இக்குலத்தின் காலவரலாறு தெளிவற்றது.† முதலிரண்டு மன்னர்களான, விக்கிரமகேந்திரனும், கோவிந்தவர்மனும் வினுகொண்டம் என்ற பகுதியில் (குண்டூர் மாவட்டம்) தமது ஆட்சியை நிறுவினர். இக்குலத்தின் மிகச்சிறந்த மன்னன் முதலாம் மாதவவர்மன். விட்ணுகுண்டினர், கி. பி. 5, 6-ம் நூற்றுண்டுகளில் ஆட்சிபுரிந்திருக்கக்கூடும். சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசி, 611-ல் அவர்களை முறியடித்தான்.

## பகுதி 19

### தலைக்காட்டின் மேலைக்கங்கர்.

#### மாதவனும், அரிவர்மனும்.

கங்கர்கள் மேலைக்கங்கர், என்றும் கீழைக்கங்கர் என்றும் இரு வகையினராவர். சிறப்பான மேலைக்கங்கர், மைசூர் நாட்டை கி. பி. நான்காம் நூற்றுண்டு முதல் பதினேரும் நூற்றுண்டு வரை ஆட்சிபுரிந்தனர். மற்றெரு குலத்தினர் ஒரிஸ்ஸாவில் காணப்பட்டனர். கங்கவாடி என்றழைக்கப்பட்ட மேலைக்கங்கர்நாடு பழைய மைசூர் நாட்டில் பெரும்பகுதியாகும். பிற்காலத்திய கல்வெட்டுக்களில் இவ்வாட்சி தோன்றிய

† B. V. Krishna Rao, Early Dynasties of Andhradesa, 1942, p. 41

காரணங்கள் விளக்கப்பட்டிருப்பது, வரலாற்றுக்குப் பயன் படவில்லை. கங்கர், தாம் இட்சுவாகு குடும்பத்தைச்சேர்ந்தவ ராகக் கூறுவர். இக்குலத்தில் 25-அரசர்கள் தோன்றினர். பெரும்பான்மையோர் சமணராவர். கொங்காணிவர்மன் என் பானல், நான்காம் நூற்றாண்டின் பிற்பாதியில் இக்குலம் நிறுவப் பட்டது. முதலாம் மாதவன் என்றும் இவன் அழைக்கப் பட்டான். கோலார், நாட்டின் தலைநகராயிற்று. இவன் உடன் பிறந்தானின் மகனை இரண்டாம் மாதவன் (400—435) பின்பட்டம்பெற்றான். அரசியல் நூல்களையும், உபநிடதங்களை யும் இவன் நன்கு கற்றதுடன் ஆடல் மகளிரைப்பற்றி தத்தகன் எழுதிய சூத்திரத்திற்கு விரிவுரை எழுதியதாகவும் கூறப்படு கிறது. மூன்றும் மன்னன் அரிவர்மன் (435—460) தலைக் காட்டைத் தன் தலைநகராக மாற்றிக்கொண்டான். (காவிரி ஆற்றங்கரை—சிவசமுத்திரத்திற்கு அருகில்) இவன் பல்லவர் களுக்குக் கீழ்ப்படிந்திருந்ததாகக் காணப்படுகிறது. சொற் போரில், ஒரு பௌத்தனை வென்ற ஒரு பிராமணனுக்கு ஒரு ஊர் இவனால் வழங்கப்பட்டது. அடுத்து மன்னனை விட்ணு கோபன், துறவியைப்போல வாழ்ந்தான். சமண சமயத்தை விடுத்து விட்டுணுவை இவன் வணங்கினான். மிகுந்த அறி வாற்றல் பெற்றவனாக விளங்கிய இவனுக்குப்பின் இவன் பெயரனை மூன்றும் மாதவன் (460—500) அரசனானான். ஒருகதம்பகுல இளவரசியை மணந்துகொண்டு இவன் சிவனை வழிபட்டனன். பின்னர் அவிநீதன் என்பான் இளமையிலேயே அரியணையிலமர்ந்தான். (500—540) இவனுக்குக் கல்வி பயிற்றுவித்தவன் விசயகீர்த்தி என்ற ஒரு சமணன். • அரசன் சமணனாயிருந்தபோதிலும், சிவனை வழிபட்டு, பிராமணரையும் ஆதரித்தான்.

## துர்விநீதன்.

அவிநீதனுக்குப் பின்வந்த துர்விநீதன் (540—600) "சப்தாவதாரம்" என்ற நூலை எழுதியவனும், இலக்கண வல்லுநனுமான பூஜ்யபாதன் என்ற சமணனின் மாணவனாவன். பாரவி, இவன் அவைக்களப் புலவராக சிறிதுகாலம் இருந் ததாக அறியக்கிடக்கிறது. இப்புலவர் எழுதிய கிருதார்ச்சுனி

யத்தின் பதினைந்தாம் பிரிவுக்கு துர்விநீதன் விரிவுரை எழுதி னன். ஆனால் இவ்விரிவுரை பொய்யாக இவன் பெயரில் அமைக்கப்பட்டதென்று சில அறிஞர் கருதுவர். "சப்தாவதாரம்" என்ற வடமொழி இலக்கண நூல் இயற்றியதும் (இவன் ஆசிரியருடைய நூலைப்போன்றதாக இருக்கக்கூடும்) வடமொழியில் பிருகத்கதை மொழிபெயர்ப்பும், இம்மன்னனின் செயல்களென்பர் மேலும் கன்னட மொழியிலும் சிறந்த அறிவாளியாக இவன் கருதப்படுகிருன். வைணவ சமயம் ஆதரிக்கப்பெற்றது. இறுதியாக, துர்விநீதன் ஓர் வெற்றி வீரனுகவுமிருந்து, பல்லவர்களைத்தோற்கடித்து தனது நாட்டைக் கிழக்கிலும், தெற்கிலும் பரவச்செய்தான். இவ்வாறு கங்கரின் கல்வெட்டுச் செய்திகள், கி. பி. ஆரும் நூற்ருண்டு வரை' அவர்கள் அரசியல், சமயம், கலைப்பண்பு முதலிய துறைகளில் தென்னிந்திய வரலாற்றில் செய்துள்ள தொண்டுகளை அறிய உதவுகின்றன. ஆனால் ஸ்ரீபருஷன் ஆட்சிக்காலம் வரையுள்ள கங்கரின் கால வரலாறு ஊகிக்கப்பட்டதே ஆகும்.§

## பகுதி 20

### காஞ்சியின் பல்லவர்.

### தோற்றம்.

தென்னிந்தியாவின் பல்லவர் என்ற சொல்லும், பார்த்தியரைக்குறிக்கும் பஹ்லவர் என்ற சொல்லும் ஒருவாறு ஒன்று பட்டிருத்தலைக்கொண்டு, பல்லவர், இந்தியாவில் படையெடுத்த பஹ்லவர் அல்லது பார்த்தியரே, என்று சில அறிஞர் கருதுவர். சிந்துவெளியில் தங்கிய அக்கூட்டத்தினர், மேற்கு இந்தியா சென்று, பின் சாதவாகனர் வீழ்ச்சிக்காலத்தில் காஞ்சிப் பகுதியில் தங்கினர் என்பது அவர்கள் கருத்து. ஆனால் தமிழ்நாட்டில் அவர்கள் புகுந்ததைப்பற்றி ஏற்றுக்கொள்ளத் தக்க விளக்கம் தருவது எளிதானதன்று. இராசசேகரன் என்ற வடமொழிப் புலவன், பஹ்லவர், பல்லவர் ஆகிய இருவரையும் முறையே சிந்து ஆற்றுக்கு அப்பாலும், தென் னிந்தியாவிலும் வாழ்ந்தவர்கள் என்று பிரித்துப்பேசுகின்றனன்.

§ M. V. Krishna Rao, The Gangas of Talkad (1936) Chapter I.

மேலும், பல்லவர் குறிப்புக்களும், மற்ற தென்னிந்தியக் குறிப்புக்களும், பஹ்லவரைப்பற்றி யாதும் பேசவில்லை. அயல்நாட்டினர், அசுவமேத வேள்விபுரியும் அளவுக்கு அத்துணை விரைவில் இந்தியராக்கப் பெற்றனர் என்பதும் பொருந்தாததாகும். சகர் முதலிய மற்ற அயல் நாட்டவர், அவ்வாறு செய்யவில்லை. பல்லவர், தோற்றத்தில் தமிழ் நாட்டவர் என்ற கருத்தும் பொருந்தாததாகும். ஏனெனின் அவர்தம் ஆதிக்குறிப்புகள், பிராகிருத மொழியிலுள்ளன அவர்கள் வடமொழியை ஆதரித்த அளவு, தமிழ் இலக்கியத்தை ஆதரிக்கவில்லை. சங்க காலத்திய தமிழ் மன்னரின் கொள்கைகளிலிருந்து பல்லவர் வேறுபடுகின்றனர். காஞ்சியையும், தொண்ட மண்டலத்தையும் எவ்வாறு பல்லவர் பெற்றனர் என்பது, தெளிவாக விளக்கப்படக்கூடியதாக இல்லாதபோதிலும் பதவி அலுவல் முறையில், சாதவாகனருடன் அவர்கள் இணைக்கப்பட்டிருந்தனரென்பது மறுக்க முடியாததாகும். தொடக்கத்தில் அவர்கள், சாதவாகனப் பேரரசின் தென்கிழக்குப்பகுதியில், குறுநிலத்தலைவர்களாகவும், அலுவலாளர்களாவும் இருந்தனர். அப்பேரரசின் வீழ்ச்சியின் பயனைப் இவர்கள் உரிமைபெற்று, தமதாட்சியைத் தெற்கில் பரவச்செய்தனர். ஆகையால் பல்லவர், ஆந்திரத்தில் மானியக்காரராயிருந்து, கி பி. மூன்றும் நூற்றுண்டின் முடிவில், சிறப்பு அடைந்து காஞ்சிப்பகுதியைக் கைப்பற்றினர் எனலாம். இவர்தம் தோற்றத்தைப் பற்றிய ஏற்றுக்கொள்ளாத கோட்பாடுகளில், வாகாடகருடன் இவர்கள் தொடர்புபெற்றவர் என்பதும் ஒன்று. இவர்கள், சோழர்-சிங்களர் இணைப்பால் தோன்றியவர்கள் என்றும் ஒரு கோட்பாடு உண்டு.‡ ஆனால் இந் நூலாசிரியர், பல்லவர், தொண்ட மண்டலத்திற்கே உரியவர் என்றும், அசோகனின் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பெற்றுள்ள, பலடர் அல்லது புலிந்தர் என்போர் இவரே என்றும் சாதவாகனர் வீழ்ச்சியின் பயனைப் இவர்கள் சிறப்புற்றனரென்றும் கருதுகிருர்.

---

‡ R. Gopalan. History of the Pallavas of Kanchi (1928) pp. 15-26.; B. V. Krishna Rao. Early Dynasties of Andhradesa 1942. pp. 140—145.

## சிவக்கந்தவர்மன்.

கி. பி. நான்காம் நூற்றுண்டு முதல் ஆரும் நூற்றுண்டு வரை உள்ள பல்லவர் வரலாறு, அதேகாலத்திய சோழர், பாண்டியர் வரலாறுகளைப்போல், அத்துணை தெளிவற்றதாக இல்லை. ஆனுல் அவர்தம் குலவழியும் காலமுறை வரலாறும் உறுதியற்றதாக உள்ளன. பல்லவரிடை மூன்று பிரிவுகள் காணப்பட்டன. சிவக்கந்தவர்மன், விசயக்கந்தவர்மன் இருவரும் முதற்பிரிவைச் சேர்ந்தவர். நான்காம் நூற்றுண்டின் முற்பாதியில் அவர்கள் வாழ்ந்தோராகலாம். சிவக்கந்தனின் முன்னோரான பப்பா மூன்றும் நூற்றுண்டின் முடிவில் வாழ்ந்திருக்கக்கூடும். ஆனுல் காஞ்சியின் பல்லவ குலத்தைத் தோற்றுவித்தவன் இவனு அல்லது இவனுக்கு முன்பிருந்த வேருெருவனு என்பது அறியப்படவில்லை. பிராகிருதத்தில் எழுதப்பட்ட சிவக்கந்தவர்மனின் இரு செப்பேடுகள், மைதவோலுவிலும் (குண்டூர் மாவட்டம்) இரகதகல்லியிலும் (பெல்லாரி மாவட்டம்) கிடைத்துள. சிவக்கந்தவர்மனைப்பற்றி அறிய இவை உதவும். அவற்றினின்று இம்மன்னன் பல்லவரில் மிகச்சிறந்தவனென்று அறியப்படுகிறது. அவன் கீழ் காஞ்சி நாடு கிருஷ்ணு முதல் தென்பெண்ணை வரையிலும், பெல்லாரி மாவட்டத்தைத் தன்னுள்ளடக்கிப் பரவியிருந்தது. தர்மமகா ராசன் என்ற பட்டத்தை அவன் சூடியிருந்தான். அசுவமேதம் முதலிய வேள்விகள் அவனுல் புரியப்பெற்றன. கி. மு. இரண்டாம் நூற்றுண்டு முதல் கி. பி. மூன்றும் நூற்றுண்டு வரை, ஒழுங்கு செய்யப்பட்டிருந்த மோரிய ஆட்சிமுறையை ஒப்ப, சிவக்கந்தவர்மனின் அரசியல் நன்கு அமையப் பெற்றிருந்ததென்று, செப்பேடுகள் அறிவிக்கின்றன. இவன்பின் வந்த விசயக்கந்தவர்மனைப்பற்றி, சாருதேவியின் (விசயக்கந்தவர்மனின் மனைவி) பிராகிருதச் செப்பேடு ஒன்றுல் அறியப்படுகிறது. இவன் மகன் புத்தாங்குரன் (Buddhyankura) பின்பு பட்டமேற்றுன்.

## விட்ணுகோபன்.

இதுகாறும் கூறப்பெற்றோரின் சாசனங்கள் பிராகிருதத்திலும், பின்வரும் அரசர்களின் ஏடுகள் வடமொழியிலும்

உள்ளன. பின்வருவோரின் காலம் 350-முதல் 550-வரை ஆகும். புத்தாங்குரனுக்குப்பின் வந்தோருள் விட்ணுகோபன் குறிப்பிடத்தக்கவன். சமுத்திரகுப்தனின் தென்னாட்டுப்படை யெழுச்சியின்பொழுது இவன் வெல்லப்பட்டான். தென்னாட்டில் கலகம் ஏற்பட்டது. அதனால் பல்லவரின் குலவழி சிக்கலுடையதாகவும், தெளிவற்றதாகவும் காணப்படுகிறது. பதினாறு அரசர்களுக்குமேல் ஆட்சிபுரிந்ததாக செப்பேடுகளி லிருந்து அறியப்படும். ஆனால் அச்செப்பேடுகள், காஞ்சியி லிருந்து வெளியிடப்படவில்லை. பல்லவர், காஞ்சியை இழந்து நெல்லூர்பகுதிக்குச் சென்றதாக சில அறிஞர்கள் ஊகிக்கின்ற னர். காஞ்சி, கரிகாலசோழனால் கைப்பற்றப்பட்டிருக்கக்கூடு மென்ற கருத்தும் உண்டு. ஆனால் நாம் பின்பற்றியுள்ள சங்ககால வரலாறு இதனை ஏற்றுக்கொள்ளவில்லை. இத தகைய அரசியல் குழப்பத்திற்கு, தமிழ்நாடு அவ்வமயம் களப்பிரர் என்போரின் படையெழுச்சிக்குட்பட்டது காரண மாகும். பல்லவர் குலவழி அக்காலத்தில் தெளிவற்றதா யிருப்பினும், பின்வரும் தலைவர்கள் ஆட்சிபுரிந்திருக்கலாமென்று கருதலாம் :— முதலாம் சிம்மவிட்ணு, முதலாம் கந்தவர்மன், வீரகுர்ச்சன், இரண்டாம் கந்தவர்மன் முதலாம் குமாரவிட்ணு, புத்தவர்மன், இரண்டாம் குமாரவிட்ணு இரண்டாம் சிம்ம வர்மன், விட்ணுகோபன், மூன்றும் கந்தவர்மன். இப்பெயர் களைக்கொண்டு, சைவ, வைணவ, புத்த சமயங்கள் பின் பற்றப்பட்டு வந்தன என்பது அறியலாகும்.

## சிம்மவிட்ணு. *(ஏறக்குறைய 575—600)*

சிம்மவர்மனின் மகனான சிம்மவிட்ணு மூன்றாவது பல்லவ குலத்தைச் சேர்ந்தவனாவன். இப்பிரிவினரின் கல்வெட்டுக்கள் கிடைத்துள. ஆனால் பிராகிருதச் செப்பேடுகள், வடமொழிச் செப்பேடுகள், கல்வெட்டுக்கள் என்ற பாகுபாட்டைக்கொண்டு பல்லவகுலத்தை மூன்றாகப்பிரிக்க வேண்டியது இன்றியமை யாததன்று. மூன்று பிரிவினரின் "கோத்திரம்" ஒன்றுதான். இவர்கள் பெயர்களிலும், வேற்றுமைப்பண்பு புலப்படவில்லை. மேலும் இராசசிம்மனின் வயலூர் தூண் கல்வெட்டு, குல வேறுபாட்டைக் குறிப்பிடாது, பல்லவ அரசர்களின் பெயர்களை

தொகுத்துக்கூறும். சிம்மவிட்ணுவின் குலத்தினராகக் கருதப் படுவோர், முந்திய குலத்தினரைத் தமது மூதாதையர் என்று குறிப்பிட்டிருப்பதும் நோக்கத்தக்கது. சிம்மவிட்ணுவே, பல்லவப் பேரரசிற்கு அடிகோலியவனுவன். இவனுக்குப்பின் குலவழி யும், கால வரலாறும் தெளிவாக அறியப்படுகிறது. இவன்நாடு சென்னை முதல் காவிரி வரை பரவியிருந்தது. சோழ நாட், டையும் இம்மன்னன் கைப்பற்றினான். சோழர், பாண்டியர், களப்பிரர் முதலியோரைத் தான் தோற்கடித்ததாக இவன் கூறுகிறான். அவனிசிம்மன் என்ற பட்டம் இவனால் சூட்டிக் கொள்ளப்பட்டது. பாரவி, காஞ்சிக்குச்சென்றதாகக் கூறப் படுகிறது. சிம்மவிட்ணு ஓர் வைணவன். மகாபலிபுரம் குகையில், இவனையும் இவன் மனைவியையும் குறிக்கும் அரைகுறை முனைப்போவியங்கள் உள்ளன. அரசியல், துறையிலும், கலைத்துறையிலும் பல்லவரின் முன்னேற்றத்தை இவன் தொடங்கினான்.

## களப்பிரர்.

சிம்ம விட்ணுவுக்கு முற்பட்ட இரு நூற்றாண்டுகளில் பல்லவருக்கு நேர்ந்த இடையூறுகளைப்பற்றி முன்னர் படித் தோம். கி. பி. நான்கு முதல் ஆறும் நூற்றாண்டு வரையில். பல்லவரும், நான்கு முதல், ஒன்பதாம் நூற்றாண்டுவரை சோழரும் வலிமையற்று மறைவுற்றிருந்தனர். நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டில், சமுத்திர குப்தனின் தென்னிந்தியப் படையெழுச்சிக்குப் பின்னர், பல்லவர், சோழர், பாண்டியர், ஆகியோர், ஒரு பொதுவான பகைவர் கூட்டத்தினரால் அடிப்படுத்தப்படலாயினர். பாண்டியரும் பல்லவரும், சோழ ருக்கு முன்னதாக, விடுதலைபெற்றனர். இனி அப்பகைவரைப் பற்றி ஆராயுமிடத்து, கல்வெட்டுக்கள் மூலம், களப்பிரர் என்பார் தமிழ் நாட்டில், அரசியல் குழப்பத்திற்குக் காரண மாயிருந்ததாக அறியப்படுகிறது. ஆனால் அவர்கள் யார் என்று அறுதியிட்டுக்கூற முடியவில்லை. இதைப்பற்றி பல கருத்துக்கள் உள. ஆனால், தொண்டமண்டலத்தின் வடக்கு எல்லையில் காணப்பெற்ற களவர் என்ற கூட்டத்தினரே களப்பிரர் என்பவராகலாம். அவர்தம் தலைவனை புல்லி

என்பானைப்பற்றி சங்க நூல்கள் கூறும். தொண்ட மண்ட லத்தைப் பல்லவர் கைப்பற்றியதின் விளைவாக அவர்கள் தெற்கு நோக்கிப் பரவியிருக்கவேண்டும். சோழ, பாண்டிய மன்னர்களையும் அவர்களே முறியடித்திருக்கவேண்டும். இறுதியில், பல்லவரும் பாண்டியரும் களப்பிரரை அடக்கினர்.

### அதிகாரம் 7

## பகுதி 1

## கி. பி. 600 முதல் 900 வரை

### ஹர்ஷவர்த்தனன் (கி. பி. 606—648)

### அடிப்படைச்சான்றுகள்.

குப்தர்கள் வரலாறு பெரும்பாலும், கல்வெட்டுக்கள், காசுகள் முதலிய பண்டைப்பொருள் ஆராய்ச்சியைக்கொண்டு அறியப்படுவதாலும், இலக்கியச்சான்றுகள் மிகுதியாக இல்லாமையாலும், அவ்வரலாறு எழுதுவோருக்குப் பலதடைகள் ஏற்படுகின்றன. ஹர்ஷனுடைய வரலாற்றை நன்கு அறிவதற்கு இரு பெரும் இலக்கியச்சான்றுகள் உள. ஹர்ஷனையும் அவன் காலத்தவரையும் பற்றிய கல்வெட்டுக்கள் முதலியன மிகுதியாகப் பயனளிக்கவில்லை. ஹர்ஷனின் காசுகள் இல்லை என்று சிலர்கூறுவர். இருப்பினும் அவற்றால் நமக்கு போற்றற்குரிய உதவி கிடைக்கவில்லை. திபெத்திய, சீன, ஆதாரங்கள், ஹர்ஷனின் இறுதிக்காலத்தையே சிறப்பாக விளக்கும். ஆதலால் வரலாற்றறிஞன், ஹர்ஷனின் வரலாற்றை அறிய பெரும்பாலும், பாணன் எழுதிய ஹர்ஷ சரிதம், யுவான் சுவாங் என்ற சீனப்பேரறிஞனின் பிரயாணக்குறிப்புகள், யூவைலி ( Hwui-li ) என்னும் அவர் நண்பர் அவரைப்பற்றி ( யுவான் சுவாங்கை ) எழுதியுள்ள வாழ்க்கை வரலாறு, ஆகிய இலக்கியச்சான்றுகளை நம்ப வேண்டியவனாகிறான்.

### பாணன் *(பாணபட்டன்)*

பாணனின் ஹர்ஷ சரிதம், வரலாற்றுக்குப் பயனளிக்கக்கூடியதன்று என்ற கருத்து நிலவிய காலம் மாறிவிட்டது.

இந்நூல், ஹர்ஷனை வியக்கும் ஒருவரால், இயற்றப்பட்டதாக வும் அரைகுறையானதாகவும் இருந்தபோதிலும், பாணன், ஹர்ஷனை நன்கு உணர்ந்திருந்தானென்பதையும், அவனைப் போலவே அறிவாற்றல் நிறைந்தவனென்பதையும் நோக்குதல் வேண்டும். மக்களையும், பொருள்களையும் கூர்ந்து ஆராயும் திறமை அவனுக்கு உண்டு. ஆதலால் அவன்நூலில், இன வாழ்க்கையைப்பற்றியும், பல்வேறு இடங்களைப்பற்றியும் கூர்மையாக விளக்கியிருப்பதைக் காணலாம். இந் நூல் தோன்றிய காலத்தின் உண்மையான நிலையை அறிய இஃது துணையாகும். அவனுடைய சிலேடைக் குறிப்புகள் சிலவற் றிலும் வரலாற்றுச் செய்தியைக்காண்கிறோம். பாணன், அவன் காலத்துக்குரிய பொதுவானதும், சிறப்பு வாய்ந்ததும் ஆன செய்தியை அக்காலத்திற்கு உரிய முறையில் கூற முற்பட் டிருத்தலால், உண்மையை மிகுதியாக மறைத்திருக்கமுடியாது புகழ்ச்சியாகவும், மிகைப்படுத்தியும் கூறியபோதிலும் உண்மை யில்லாததை அவன் கூறவில்லை. உண்மையில் இவ்வகையில் யுவான்சுவாங்கிடமிருந்து அவன் வேறுபடவில்லை. அவன்நூல் வரலாற்றுக்கு மிகுந்த துணையாக உள்ளது என்பது பொது வாக அறியப்படுகிறது.

**ஹர்ஷசரிதம்**—அதன் பொருளடக்கம் :—

ஹர்ஷசரிதம், ஹர்ஷனைப்பற்றிய எட்டு அதிகாரங்கள் கொண்ட முற்றுப்பெறாத ஒரு வரலாறாகும். ஆசிரியனின் குடும்பத்தைப்பற்றி முதல் அதிகாரம் குறிப்பிடும். பாணனுக்கு முன்பு இருந்த வாசவதத்தை, பிருகத்கதை ஆகிய நூல்களையும் சாதவாகனன், பிரவரசேனன், பாசன், காளிதாசன் முதலிய பல ஆசிரியர்களையும், குறிப்பிடுவதால் இதன் முன்னுரைச் செய்யுட்கள். கால முறையான இலக்கிய வரலாற்றை அறிய துணைபுரிகின்றன. ஹர்ஷனைப்பற்றி பாணன் தரும் முன்னுரை இரண்டாம் அதிகாரத்தில் காணப்படுகிறது. மூன்றும் அதிகா ரத்தில் தானேசுவரம் வருணிக்கப்படுகிறது. ஹர்ஷன் தோன்றிய புஷ்பபூதி (புஷ்யபூதி) குலம், பிரபாகரவர்த்தனனைப் பற்றிய விளக்கம், அவன்மனைவி யசோமதியைப்பற்றிய குறிப்பு, இராச்சிய வர்த்தனன், ஹர்ஷன், இராச்சியஸ்ரீ ஆகியோரின்

பிறப்பு, அவர்கள் துணைவனும் மாமனுமான பந்தியைப்பற்றிய குறிப்பு, இராச்சியஸ்ரீயின் திருமணம் முதலியன அடுத்த அதிகாரத்தில் குறிப்பிடப்படுகின்றன. தன் கணவன் இறப்பதற்குச் சிறிது முன்பு யசோமதி தன்னை மாய்த்துக்கொண்டதும், ஹர்ஷனின் ஆற்றொணாத்துயரமும் ஐந்தாம் அதிகாரத்தில் குறிப்பிடப்படுகின்றன. அரசன் இறந்ததால் இராச்சியவர்த்தனனுக்கு ஏற்பட்ட நிலை, அவ்வமயம் ஹூணர்களுடன் போரிடுவதற்காகச் சென்றிருந்த அவன் தலைநகருக்குத்திரும்பியது, தன் தந்தையின் அரியணையை ஏற்கமறுத்து ஹர்ஷனை அரசாளுமாறு செய்தது, கிரகவர்மன் மௌக்காரி இறந்தது, மாளவ மன்னனால் இராச்சியஸ்ரீ சிறைப்படுத்தப்பெற்றது, அவனை எதிர்த்து இராச்சியவர்த்தனன் படையெடுத்தல் (தண்டிப்பதன் பொருட்டு) அவன் அதில் எளிதில் வெற்றியடைதல், கௌட மன்னனால் (சசாங்கன்) அவன் கொலை செய்யப்படுதல்; தானைத் தலைவன் சிம்மநாதன், ஹர்ஷனை துயரை விடுத்து, செயல்புரியுமாறு வேண்டுதல், கௌட மன்னனைப்போன்ற அற்பர்களை இவ்வுலகிலில்லாவாறு ஒழித்து விடுவதாக ஹர்ஷன் முடிவுசெய்தல், யானைப்படைத்தலைவனை கந்தகுப்தன், வரலாற்றில் கவனிப்புக்குறைவால் அழிவு ஏற்பட்ட நிகழ்ச்சிகளை (சிறப்பாக பிருகத்ரத மோரியன், காகவர்ணன் (சிசுநாகன்), இறுதியான சுங்கமன்னன், மேற்கு சத்திரபரில் இறுதியானவன், ஆகியோரின் இறப்பு) கணக்கிடுதல் முதலியன ஆறும் அதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளன. ஹர்ஷனின் படையெழுச்சி, அஸ்ஸாமிய மன்னன் பாஸ்கரவர்மன் அரசியல் தூதனை அனுப்புதல், இராச்சியஸ்ரீ, சிறையிலிருந்து தப்பி சிலருடன் விந்தியமலைப் பகுதிக்கு ஓடிய செய்தியை பந்தி (Bhandi) ஹர்ஷனுக்கு அறிவித்தல்; கௌடமன்னனை எதிர்த்து பந்தி படையெடுக்குமாறு ஹர்ஷன் ஆணையிடுதல், உடன் பிறந்தாளைத்தேடி ஹர்ஷன் புறப்படுதல் ஆகியனபற்றி ஏழாம் அதிகாரத்தில் கூறப்படுகின்றன. திவாகரமித்திரர் என்ற புத்தசமய அறிஞரின் தலைமையின்கீழ் விந்தியமலைக்காட்டில் பல்வேறு சமய, தத்துவக்கோட்பாட்டினர் ஒற்றுமையுடன் வாழ்ந்து வந்த வியப்பு, தற்கொலை செய்து கொள்ளுந்தருவாயிலிருந்த இராச்சியஸ்ரீயின் வருந்தத்தக்கநிலை,

ஹர்ஷன் அவளைக்காப்பாற்றுதல், தனது உடன்பிறந்தானும், மைத்துனனும் கொலையுண்ணக் காரணமாயிருந்தோரைப் பழிதீர்த்தபின்னர், இராச்சியஸ்ரீயுடன், புத்த துறவியாக மாறி விடுவதென்று, ஹ ர் ஷ ன் முடிவுசெய்தல், கங்கை ஆற்றங் கரையிலிருந்த தன் பாசறைக்கு, உ ட ன் பிறந்தாளுடனும், திவாகரமித்திரருடனும் ஹர்ஷன் செல்லுதல் ஆகியனவற்றை எட்டாம் அதிகாரம் வியக்கத்தக்க வகையில் சிறப்பிக்கின்றது.

## இதன்வரலாற்றுச்சிறப்பு.

சுருங்கிய செய்தித்திரட்டினின்று, ஹர்ஷசரிதத்தின் உண்மைச்சிறப்பை உணர்வது எளிதன்று. "அறிஞர் ஸ்காட் எழுதியுள்ள குவெண்டின் டர்வர்ட் (Quentin Durward) வேவர்லி (Waverley) நவீனங்கள், எ த் து ணை அளவு உண்மை நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டுளதோ அத்துணை அளவு இந்நூலும் உண்மை அடிப்படையில் அமைகிறது." இதன் அடிப்படையும், சிறப்பான நிகழ்ச்சிக் குறிப்புகளும் வரலாற்றுத் தொடர்புடையன. பொருளை விளக்கும் முறையில் கற்பனைகளின் கலப்பைக்காண்கிறோம். "அரண்மனை, பாசறை (கூடாரம்), அமைதியான ஊர்கள் ...மிக்க அமைதி நிறைந்த மடாலயங்கள் ஒதுக்கிடங்கள் முதலியன அந்தணர்களுடையதாயினும் சரி, பௌத்தர்களுடையதாயினும் சரி ஒருமைப்பட்ட வியப்புக்குரிய முறையில் விளக்கப்படுகின்றன. ஒவ்வொரு அங்கத்திலும் பாணனின் நூல், சீன யாத்திரிகரின் (யுவான் சுவாங்) குறிப்புக்களை விளக்கு வதாகவும், அவற்றை அறியத் துணை புரிவதாகவும் உளது. இந்நூல் வடமொழிக்கலை நிரம்பப் பெற்றதாகவு மிருக்கின்றது.†

## யுவான் சுவாங். வாழ்க்கையும் குணமும்:-

புத்த சமயச்சட்ட வல்லுநனை யுவான் சுவாங் கி. பி. 600-ல் பிறந்தான். அவன் இளமைப்பருவத்திலேயே அவ

† Cowell & Thomas. The Harsha Charita of Bana (1897) Preface pp. VII, XI & XIV.

னுடைய பிற்காலப் பெருமையை உணர்த்தும் அறிகுறிகள் புலப்பட்டன. களியாட்டத்தை நாடும் மக்களை அவன் வெறுத்தான். தன் காலத்தை கல்விகற்பதிலேயே செலவிட்டான். தனது இருபதாவது ஆண்டில் புத்தத்துறவி ஆயினன். புத்த சமய நூல்களின், சீன மொழிபெயர்ப்புகள் அவனுக்கு நிறைவான மகிழ்ச்சியைத் தரவில்லையாதலால், புத்தரின் பிறந்த நாடான தூய இந்தியாவுடன் உறவுகொள்ள விரும்பினன். கி. பி. 629-ல், அரசியலாரின் வெளிநாட்டுப்போக்கு வரவுத்தடை விதிகளைமீறி, யாருமறியாமல் சியான் பகுதியை விட்டு இந்தியாவுக்குப் புறப்பட்டான். நீண்ட வழிச்செலவிற்குப்பின்னர், 645-ம் ஆண்டில் தன் நாடான சீனவுக்குத் திரும்பினன். அவன் காச்மீரத்தில் 631—32-ம் ஆண்டிலும், கன்னேசியில் 636-ம் ஆண்டிலும், 637-ல் நாலந்தாவிலும், 639-ல் ஆந்திரதேசத்திலும், காஞ்சியில் 640-ம் ஆண்டிலும், 641-ல் மகாராட்டிரத்திலும், 641—42-ல் மீண்டும் நாலந்தாவிலும், ஹர்ஷனுடன் ஐக்கியமாகாணத்தில் 643-ம் ஆண்டிலும் இருந்துவிட்டு, 644-ல் இந்தியாவை விட்டகன்றன். சீனப் பேரரசன் அவன் குற்றத்தைப் பொருட்படுத்தாது, அவனுடன் நெருங்கிய நட்பு பூண்டு, அரசியல் தொண்டில் ஈடுபடுமாறு அழைத்தான். ஆனல் யுவான் சுவாங், நன்றியுடன் அவ்வழைப்பை மறுத்துவிட்டு ஒரு மடத்திற்குச் சென்று தான் இந்தியாவிலிருந்து சேகரித்து வந்த நூல்களை, சீனத்தில் மொழிபெயர்க்கலானன். அவன் 664-ல் இறக்கும் வரை, கணப்பொழுதேனும் வீணக்கவில்லை. அவனுடைய கல்வியறிவு வியப்புக்குரியது. அளவற்ற மத அன்பு அவனிடமிருந்தது. உண்மையில் அவன் ஓர் சான்றோனே. அவன் இறந்தபின் அவன் நாட்டினர் அவனை வணங்கினர். மிகுந்த நற்பண்புகளைக் கொண்டிருந்தானெனினும், புத்த சமய அதிசயச் செய்திகளை அவன் எளிதில் நம்பிவிட்டான். அவனுடைய வாழ்க்கையில் புத்த சமயச்செய்திகளில் மட்டுமே சிறப்பான கருத்தைச் செலுத்தினன். ஆதலால் மக்களையும், பொருள்களையும் ஆராய்ந்து உணர அவன் தவறிவிட்டான். ஆனல் இவை யாவும் அவனுடைய குணப்பண்பின் குறைபாடுகளே என்று கருதப்படலாம்.

## அவனுடைய வழிச்செலவுக் குறிப்புக்களின் சிறப்பு.

பாகியானைப்போலல்லாது யுவான்சுவாங் இந்தியாவெங்கும் சுற்றிவிட்டு தான்வந்த நிலவழியாகவே நாடு திரும்பினன். ஹர்ஷனுடைய பேரரசில் அவன் எட்டு ஆண்டுகள் தங்கினன். அவனுக்குக் கிடைத்த வாய்ப்புகளை மிகவும் சிறப்பான வகையில் யுவான்சுவாங் பயன்படுத்திக்கொண்டான். இதே அளவில் பயனடைய பாகியானல் இயலவில்லை. யுவான், தான் கண்டவற்றையும், கேட்டவற்றையும் பற்றித்தரும் குறிப்பு ஹர்ஷனையும், அவனது அரசியலையும் விளக்குவதைத் தவிர, ஏழாம் நூற்றாண்டின் முற்பாதியில் இந்தியாவின் நிலையை அறியவும் உதவுவதாகும். வரலாற்றறிஞன் அதற்குமிகவும் கடப்பாடுடையவனுகிறன். இந்திய வாழ்க்கையின் பல துறைகளைப்பற்றியும் யுவான் சுவாங் தரும் செய்திகளின் அளவைப் பொறுத்தவரை அவை, ஹர்ஷ சரிதத்தைவிட ஒப்பிடமுடியாத வகையில் உயர்வானதாகும். ஆனல் பல இடங்களில் விளக்கமற்றதாக இருக்கும் காரணத்தால், பாணனின் நூலில் காணப்பெறும் கூர்ந்தநோக்கும், விளக்குந்திறனும், யுவான் சுவாங்கின் குறிப்பில் காண்பதற்கில்லை. யாவற்றையும் எளிதில் நம்பும் அவன் தன்மையால், அவன் கதை சொல்லுவோரினல் ஏமாற்றப்பட்டான். ஆனல் தன் செவிகளுக்கு எட்டிய பரம்பரைச்செய்திகளை அவன் குறித்துவைத்ததுபற்றி நாம் மகிழ்ச்சியடைகிறோம். ஹர்ஷனின் புத்தமத அன்பே, யுவான் சுவாங் அவனிடம் போந்ததற்குக் காரணமாகும். ஆகையால் பாகியானைவிட இந்த யாத்திரிகன் நல்ல வாய்ப்பைப் பெற்றிருந்தான். பாணனைப் போலவே இவனும் பேரரசரை வானளாவப் புகழ்வான். "அவன் (ஹர்ஷன்) தன்மை, விண்ணையும் மண்ணையும் நடுங்கச்செய்தது. அவனுடைய முறைவழங்குந் தன்மையை கடவுளரும், மக்களும் வியந்தனர். அவன் புகழ் வெளிநாடுகள் எங்கும் பரவியது. அவன் செயல்களை விளக்குவதென்பது, சுதானனின் (புத்தசமய ஜாதகக்கதை ஒன்றின் தலைவன்) செயல்களை மீண்டும் குறிப்பிடுவதுபோலாகும். உணவையும், உறக்கத்தையும் மறந்து அவன் நற்செயல்களில் ஈடுபட்டு அவற்றில் கருத்தைச் செலுத்தினன்." அவன், ஹர்ஷனிடம்

60,000 யானைகளிருந்ததாகக் குறிப்பிடுவது ஐயப்பாட்டுக் குரியதாகும். பேரரசன் ஆட்சித் தொடக்கத்திலிருந்து ஆறு ஆண்டுகள் போர்களிலீடுபட்டபின், முப்பது ஆண்டுகள் "தடைப்படுத்தப்படாத அமைதி" யைப்பெற்று மகிழ்ந்திருந்தா னென்று அவன் குறிப்பிட்டுள்ளது மாற்றப்படவேண்டும். ஆனால் அவன் நமக்கு அளித்துள்ள நம்பத்தக்க செய்திச் செல்வத்தை நோக்குங்கால், இக் குறைபாடுகள் பொருட் படுத்தத்தக்கனவல்ல.)

## ஹர்ஷனின் வாழ்க்கையும் பேரரசும்.

### ஹர்ஷன் பட்டம்பெறுதல்.

பாணன் குறிப்பிட்டுள்ள, புஷ்யபூதி என்னும் கடவுட் பற்று வாய்ந்த சைவ சமயத்தவனே, தானேசுவரத்தின் ஹர்ஷன் குலத்தைத் தோற்றுவித்தவனுவன். அக்குலத்திற் ரேன்றிய பிரபாகரவர்த்தனன், (583—605) முதலாவதாக "மகாராசாதிராசன்" என்னும் பட்டத்தைச் சூடியிருந்தான். அவன் தந்தையும், பாட்டனும் "மகாராசாக்கள்" என்று மட்டுமே அழைக்கப்பெற்றனர். பாணன் அவனை, "ஹூணர் என்ற மானுக்கு சிம்மம் போன்றவன்; சிந்து நிலப்பகுதி மன்னனுக்கு சுடுகின்ற காய்ச்சல் போன்றவன்; கூர்ச்சரத்தின் உறக்கத்திற்கு இடையூறு விளைவிப்பவன்; யானையைப் போன்ற காந்தாரத்தின் தலைவனுக்கு, சீற்றமான தொத்து நோய் போன்ருேன்; ஒழுங்கின்மை நிறைந்த இலாட்டா (Latas) மக்களைச் சூறையாடுவோன்; மாளவத்தின் புகழை மறைத்த படர்கொடிக்குக் கோடரி போன்றவன்." என்று சிறப் பிக்கின்ருன். அவன் தாயார் மகாசேனகுப்தை என்பாளாவள். யசோமதி அவன் மனைவியாவள். கி. பி. 605-ல் அவன் இறந்தவுடன் அவன் மூத்த மகனுன இராச்சியவர்த்தனன் தன் 19-வது வயதில் பட்டம் பெற்ருன். இராச்சியஸ்ரீ (இராச்சியவர்த்தனனின் உடன்பிறந்தாள்) யின் கணவனுன கிரகவர்மன் மௌகாரியை கொலைசெய்ய, மாளவ அரசனும், வங்கத்தின் மன்னன் சசாங்கனும் இணைந்து திட்டமிட்டனர். இராச்சியவர்த்தனன், மாளவத்தில் படையெடுத்து அதன் மன்னனைத் தோற்கடித்தான். ஆனால் சசாங்கன், 606-ல்

நம்பிக்கைக்கேடான வகையில் இராச்சியவர்த்தனனைக்கொன்று விட்டான். ஹர்ஷனுக்கு அவ்வமயம் வயது 16. (பாணனின் குறிப்புப்படி ஹர்ஷன் 590-ல் பிறந்தான்.) கைம்பெண்ணான அவன் உடன்பிறந்தாளுக்கு அப்பொழுது வயது 13. யுவான்சுவாங், போதிசத்துவ அவலோகிதீஸ்வரரின் விருப்பத்திற்கு இணங்கியே பட்டமேற்க இசைந்தானென்றும், பாணன், அரசியல் புகழுக்கு உரியவளான கொற்றவையின் அருளின் படியே அவ்வாறு ஹர்ஷன் செய்தானெனவும் கூறுவர். ஆகவே, இரு ஆசிரியர்களும், முதலில் ஹர்ஷன் அரசியல் பொறுப்பை ஏற்க இணங்கவில்லை என்பதை ஏற்றுக்கொள்கின்றனர். ஹர்ஷனுக்கு புத்தசமயப்பற்று எப்பொழுது ஏற்பட்டதென்று நாம் அறியோம். பாணன், அவனுடைய படையெழுச்சிகளுக்குப்பின், என்று கூறுகிறான். C. V. வைத்தியா என்னுமறிஞர், ஹர்ஷன் தொடக்கத்தில், கிரகவர்மன் இறந்தபின், கன்னோசி நாட்டின் பட்டத்தையே ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை என்று கூறுவதும் பொருந்தும்.

## இராச்சியஸ்ரீயைப் பின்தொடரல்.

ஹர்ஷன், ஆட்சித் தொடக்கத்தில் நெருக்கடியான நிலையைச்சமாளிக்க வேண்டியதாயிருந்தது. தனது மைத்துனனையும், உடன் பிறந்தானையும் கொன்றோரைப் பழிதீர்த்துக் கொள்ள வேண்டியிருந்ததைத் தவிர, பகைவர்களால் சிறைப்படுத்தப்பட்டிருந்ததைப் பொறுது விந்தியமலைக் காட்டிற்கு ஓடிவிட்ட உடன்பிறந்தாளைத் தேடவேண்டிய பொறுப்பு ஹர்ஷனுக்கு ஏற்பட்டிருந்தது. தற்கொலை செய்து கொள்ளுந் தருவாயிலிருந்த இராச்சியஸ்ரீயை, ஹர்ஷன் கண்டுபிடித்து அவளுடைய முடிவை மாற்றிக்கொள்ளுமாறு செய்தான். பாணன் அவளுடைய கதையை அழகுபடுத்திக்கூறியபோதிலும் அதன் செய்திச்சுருக்கத்தைப்பற்றி ஐயுறுவதற்கில்லை. புத்த சமயத்தைச்சேர்ந்த அவ்வுடன்பிறந்தாளை மீட்ட பிறகு, ஹர்ஷன் பகைவர்களை அடக்க முற்பட்டான். 612-ம் ஆண்டில் அவனது படை வலிமையுற்று அவன் பேரரசின் நிலை சிறப்புற்றது. அவன் போர்விருப்பமுடையவன். பிற்காலத்தில்

அவனது உடமைகள் யாவற்றையும் அறவழியில் செலவிட்ட பொழுதும் அவனது படையை, எவ்வகையிலும் குறைபாடு அடையச்செய்யவில்லை. தொடர்ச்சியாக நிகழ்ந்த போர்கள் முற்றுப்பெற்றபின் அவனது முடிசூட்டு விழா நடைபெற்றது. கி. பி. 606-ல் அவன் பட்டமேற்றகாலத்திலிருந்து தொடங்கி ஒரு ஆண்டு (ஹர்ஷ ஆண்டு) ஏற்படுத்தப்பெற்றது.

## இரண்டாம் புலிகேசியுடன் போர்.

ஹர்ஷன் உயர்குணம் படைத்தவனுயிருந்தபோதிலும், சாளுக்கிய மன்னன் புலிகேசியால் தான் தோற்கடிக்கப்பட்டதைக் கூறவில்லை. தோல்விகளைக் குறிப்பிடுவது மரபன்று என்பதே இதற்குக் காரணமாகும். ஆகவே, கல்வெட்டுக்களில் சில சமயங்களில் முரண்பாடான வகையில் உரிமைகள் கொண்டாடப்பட்டுள்ளன. ஆனல் ஹர்ஷனைப் பொறுத்தவரை யுவான் சுவாங் தரும் குறிப்புக்கள் தக்க சான்ருகும். அவனுடைய வழிச்செலவுக் குறிப்பில் யுவான் சுவாங் பின்வருமாறு கூறுவன்:– ''சீலாதித்தியப் பேரரசன் (ஹர்ஷன்) அவ்வமயம், கிழக்கிலும் மேற்கிலும், படையெடுத்துக் கொண்டிருந்தான். அண்மையிலும் சேய்மையிலுமுள்ள நாடுகள் அவனுக்குக் கீழ்ப்படிந்துகொண்டிருந்தன. ஆனல் மகாராட்டிரம் அவனுக்கு அடிபணிய மறுத்தது.'' அந்த யாத்திரிகனின் வாழ்க்கை வரலாற்றை எழுதியோர் குறிப்பிடுவதாவது:— ''சீலாத்தித்திய மன்னன் தனது ஆற்றலையும் அவன் தளபதிகளின் வெற்றிகளையும் புகழ்ந்துகொண்டு, நம்பிக்கை மிகுதியாக நிறையப்பெற்றவனுய், அவன் படைகளின் தலைமை தாங்கி இவ்விளவரசனுடன் போரிடச்சென்ருன். அவன் (ஹர்ஷன்) பஞ்சாப், கன்னேசி, மிதிலை, வங்காளம், ஒரிஸ்ஸா ஆகிய 5 பகுதிகளினின்றும் படைகளைத் திரட்டியிருந்தபோதிலும், பல நாடுகளினின்று தளபதிகளைப் பெற்றிருந்த போதிலும், அவனை (புலிகேசியை) அடக்கி வெற்றிகொள்ள இயலாதவனுயிருந்தான்.'' புலிகேசியுடைய வெற்றியை, பல கல்வெட்டுக்கள் உறுதிசெய்கின்றன. அவன், உத்தரபதம் (வட இந்தியா) முழுவதுக்கும் தலைவனும் போர் விருப்பங்கொண்ட

வனுமான ஹர்ஷவர்த்தனனைத் தோற்கடித்து பரமேச்வரன் என்ற பட்டத்தைப் பெற்றதாக அவைகூறும். அவனுடைய ஐகோள் (Aihole) கல்வெட்டும் சிலேடையாக ஹர்ஷன் புலி கேசியால் தோற்கடிக்கப்பட்டதைக்கூறும். சீனச்சான்றுகளைக் கொண்டு அறிஞர் ஸ்மித், வட இந்திய, தென்னிந்தியப் பேரரசர்களுக்கிடையே நடந்த இப்போர், கி. பி. 620-ல் நடந்த தெனக்கூறுவர். அறிஞர் R. K. முகர்ஜி, 612-ம் ஆண்டு ஐதராபாத் கல்வெட்டு ஒன்று பரமேச்வரன் என்ற புலி கேசியுடைய பட்டத்தைக் குறிப்பிடுவதால், ஹர்ஷனுடன் நடந்தபோர் அவ்வாண்டிலாவது அதற்கு முன்னராவது நடைபெற்றிருக்க வேண்டுமென்பர்.§ 630-ல் போர் நிகழ்ந்த தாகக் கூறுவாருமுளர்.

### ஹர்ஷனின் இறுதிக்கலாம்.

வாலாபி அரசன் இரண்டாம் துருவசேனனை, ஹர்ஷன் தோற்கடித்துத் தன்னடிப்படுத்தினன். அவர், தன் மகளை ஹர்ஷனுக்கு மணம் செய்வித்தான். கி. பி. 641-ல் ஹர்ஷன் சீனாவுக்கு தூதுக்குழுவை அனுப்பிவைத்தான். அவன், காங் கோடத்தை (கஞ்சம் மாவட்டம்) எதிர்த்துப் படையெடுத்ததும், யுவான் சுவாங்கை ஆதரித்துப் போற்றியதும், சீனாவிலிருந்து ஒரு தூதுக்குழுவைப் பெற்றதும் 643-ம் ஆண்டிலாகும். 646-ல் இரண்டாவது சீன தூதுக்குழு அவனால் வரவேற் கப்படவில்லை. 647-ல் அவன் இறந்தவுடன் அமைச்சர், முறையின்றி அதிகாரத்தைக் கைப்பற்றியதால், உள் நாட்டுக் குழப்பமேற்பட்டது. சீனத் தூதுக்குழுவினர், திபெத், நேபா ளம் ஆகிய நாடுகளின் உதவிபெற்று முடிவில் முறைதவறி நடந்தோனைத் தண்டித்தனர்.

### பேரரசின் பரப்பு.

குப்தர் பேரரசைவிட ஹர்ஷனின் இராச்சியம் பரப்பில் பெரியதாகக் காணப்படுகிறது. பிரம்மபுத்திரா ஆற்றுக் கழி முகத்திலிருந்து கத்தியவார்வரை அது பரவியிருந்தது. கிழக்

§ R. K. Mookerji, Harsha (1926), p. 36

கில் ஓரிஸ்ஸாவின் ஒருபகுதியும் மேற்கில் கட்சு நிலப்பகுதியும் அதனுள்ளடங்கின. பஞ்சாபில் ஜலந்தர் வரையிலும் அது பரவியிருந்தது. பஞ்சாபின் பெரும்பகுதியும், சிந்துப் பகுதியும், இராசபுதனமும் அதனுள் அடங்கவில்லை. நேபாளம், பேரரசில் உட்பட்டிருக்கக்கூடும். ஆதலால் வட இந்தியாவில் மட்டுமே, (சிலபகுதிகள் நீங்கலாக) ஹர்ஷன் பேரரசு, பரவியிருந்தது. நேபாளம் அதனுள்ளடங்கி யிருந்தது பற்றிச்சில அறிஞர் ஐயுறுவர். ஆனால் ஹர்ஷனின் ஆண்டு அங்கு பயன்படுத்தப்பட்டமையால் அவன் ஆட்சியின் கீழ் அப்பகுதி கொண்டுவரப்பட்டதென்று முடிவு செய்யலாம். பேரரசின் தெற்கு எல்லை விந்தியமலையுடன், அமைந்ததற்கு புலிகேசியின் வெற்றியே காரணமாகும். ஆனால் ஷிமோகா மாவட்டத்தில் ( மைசூர் ) அண்மையில் கிடைத்துள்ள ஒரு கல்வெட்டு, ஆற்றல்வாய்த்த சீலாதித்தியன், பேரரசின் அரியணையை ஏற்றபொழுது அவன் தளபதி மகேந்திரனுடன் பொருது மாண்டான் என்று குறிப்பிடுகிறது. இதிற்காணும் இரு மன்னர்களும் முறையே ஹர்ஷனும் முதலாம் மகேந்திர வர்மபல்லவன் என்றும் சிலரால் கருதப்படுகிறது. இக்கருத்து நன்கு வலியுறுத்தப்படுமாயின், ஹர்ஷனுடைய பேரரசின் எல்லைகளைப்பற்றிய நமது கருத்து மாற்றப்படும். அஸ்ஸாமின் பாஸ்கரவர்மன் ஹர்ஷனின் நண்பனும் கூட்டாளியுமாவன். அவன் (பாஸ்கரவர்மன்) வடமேற்கு இந்திய மன்னர்களுடனும் சீனவுடனும் நேசஉறவு பூண்டிருந்தான். சசாங்கனின் வலுவில்தாக்கும் முறைகளை, ஹர்ஷன் அடக்கி, தன் உடன்பிறந்தானைக் கொன்ற பழியைத்தீர்த்துக் கொண்டானெனினும், அம்முறைகள் வரையறைக்குட்பட்டனவேயன்றி வேருடன் அழிக்கப்படவில்லை என்று தோன்றுகிறது. சசாங்கன், "மகாராசாதிராசன்" என்று அவனுடைய மானியக்காரனின் 619-ம் ஆண்டுக்குரிய ஒரு கல்வெட்டு கூறுகிறது. 637-ல் அவன் இறக்கும்வரை அவனுடைய சிறப்பை உணர்த்தும் சான்றாக அவனுடைய சில தங்கக்காசுகள் (சிவன், நந்தி உருவங்கள் பொறிக்கப்பெற்றவை) உள்ளன.

## ஹர்ஷனின் சமயம்.

புஷ்யபூதி சிவனை வழிபட்டான். பிரபாகரவர்த்தனனும் அவன் தந்தை ஆதித்தியவர்த்தனனும் ஞாயிற்றை வணங்கினர். இராச்சியவர்த்தனனும் இராச்சியஸ்ரீயும் புத்தசமயத்தினர். ஹர்ஷன் தனது "திக்குவிசயத்தை"த் தொடங்குமுன்னர், நீலலோகிதனை (சிவன்) வழிபட்டானென பாணன் கூறுகிறான். 628-ம் ஆண்டு பன்ஸ்கேரா செப்புப்பட்டயம் "பரமமகேச்வரன்" என்று அவனை சிறப்பிக்கிறது. அவன் மகேச்வரனின் வழிபாட்டு அன்பன் எனவும் மகேச்வரனைப் போலவே, படைக்கப்பெற்ற எல்லா உயிர்களிடமும் கருணையுள்ளவன் எனவும், 631-ம் ஆண்டு மாதுபன் குறிப்பிலிருந்து தெரியவரும். மேலும் அதில் பின்வருமாறு காணப்படுகிறது. "மின்னல் அல்லது நீர்க்குமிழியைப்போன்ற நிலையில்லா நற்பேற்றினால் புகழும் பொருளும் கிடைக்கின்றன. மனம், மொழி, மெய்களால் யாவரும் தமது கடமையைச் செய்தல்வேண்டும்; அதுவே, ஆன்மீக உயர்வு அடைவதற்கான இணையற்ற வழி" ஹர்ஷனின் சமயவாழ்க்கையில் ஒரு மாறிய கட்டத்தை, நாம் இதனின்று அறிக்கூடும். ஹர்ஷன் ஆட்சியின் முற்பகுதியில் புத்தசமயச்சார்பு அவனிடம் புலப்பட்டதை பாணன் நமக்கு அறிவிக்கிறான். யுவான் சுவாங் ஆட்சித்தொடக்கத்திலிருந்தே அவன் சீலாதித்தியன் என்ற பட்டத்துடன் கூடிய ஒரு புத்த சமயத்தினன் என்று கூறுகிறான். அவன் வாழ்க்கையின் பிற்பகுதியில் ஈனயான புத்தசமயத்தில் மிக்க ஆர்வம் கொண்டிருந்தானென்பதும், சீனயாத்திரிகனுடன் ஏற்பட்ட உறவுகாரணமாக மகாயானத்தைப் பின்பற்றலானான் என்பதும் தெளிவான செய்திகள். மேலுமவன், காச்மீர் மன்னனை, புத்தரின் ஒரு பற்சின்னத்தைத் தனக்கு அளிக்குமாறு வற்புறுத்திப்பெற்று அதனைப் போற்றினான்.

யுவான் சுவாங், ஹர்ஷனின் சமயக்கொள்கைகளை நன்கு சிறப்பிக்கிறான். "ஐந்து பகுதிகளிலும் (ஹர்ஷனின் பேரரசு) விலங்கு உணவு உட்கொள்ளுவது தடைசெய்யப்பெற்றது.

கொலைக்குற்றத்திற்கு மிகவும் கடுமையாகத் தண்டனை செய்யப்பெற்றது. அவனது நாடுகளில் வழிப்போக்கர் தங்குவதற்குரிய இடங்களும், புத்தசமயத்தினரின் புண்ணியத் தலங்களில் மடங்களும் நிறுவப்பெற்றிருந்தன. ஐந்தாண்டுகட்கு ஒருமுறை தவருது குருமார் யாவரையும் கூட்டுவித்து போருக்குவேண்டிய பொருள்களைத் தவிர, தன்னிடமிருந்த மற்றயாவற்றையும் அறவழியில் செலவிட்டான். புத்தத்துறவிகள் யாவரையும் ஆண்டுக்கு ஒருமுறை ஒன்றுகூட்டி ஒழுக்கமுறை விதிகளை அறியச்செய்தான். இருபத்தோரு நாட்களுக்கு அக்கூட்டங்கள் நீடிக்கும். தொழும் இடங்களின் தேவைகள் நன்கு நிறைவேற்றிக்கொடுக்கப்பெற்றன. மடங்களில் பொது மண்டபங்கள் அழகுற அலங்கரிக்கப்பட்டன. சமயத்துறவிகளை, கொள்கைகளைஆராய்ந்து தேர்வுபெறச்செய்து தகுதிக்குத்தக்கவாறு பரிசு அளித்தான். குறைகண்ட இடத்து அவர்களைத் தண்டித்தான். ஒழுங்காக சங்கவிதிகளைப் பின்பற்றி, கோட்பாட்டிலும் பயிற்சியிலும் சிறந்த அறிவாற்றல் வாய்ந்த பெரியோர்களை, ஹர்ஷன், அரியணையில் அமரச் செய்து, அவர்களிடமிருந்து சமயத்தொடர்பான கட்டளைகளைக் கேட்டுக்கொண்டான். மிகுந்த அறிவாற்றல் இன்றி, சமய விதிகளைமட்டும் ஒழுங்காக நிறைவேற்றி வந்தோரை வெறுமையில், மதிப்புணர்ச்சியுடன் சிறப்பித்தான். புத்தசங்கத்தின் விதிகளை மீறியோரையும் ஒழுங்கீனமான நடத்தையுடையவர்களையும் தன்னுட்டினின்று வெளியேற்றினன். நல்லொழுக்கம் நிறைந்தவர்களும் நற்செயல்களில் ஆர்வம்பொருந்தியவர்களுமான, அண்மையிலிருந்த இளவரசர்களையும் அரசியல் தலைவர்களையும், ஹர்ஷன், தனது சிறந்த நண்பர்கள் என்று கூறி தன்னுடைய பீடத்தில் அமரச்செய்வான். வேறுவகையான குணமுடையோரிடம் அவன் பேசுவதில்லை. மாரிக் காலப்பருவமான மூன்று மாதங்களிலும் அவன் வெளியில் எங்கும் செல்லுவதில்லை. ஒவ்வொருநாளும் அரண்மனை விடுதிகளில் 1000 பௌத்தத் துறவிகளுக்கும் 500 அந்தணர்களுக்கும் சிற்றுண்டிகள் வழங்கப்பெற்றன. அரசன், ஒரு நாளை மூன்று கூறுகளாக்கி, ஒரு பகுதியில் அரசியல் அலுவல்களையும் மற்ற இருபகுதிகளில் சமயத்தொடர்பான

காரியங்களையும் கவனித்தான்.‡ ஹர்ஷன், சமயங்களில் நல்லனவற்றைத் தொகுத்து அவற்றை மேற்கொண்டவன் என்று எண்ணுவது தவறாகும். ஹர்ஷனுடைய வாழ்க்கை, முடிவில்லாத போர் எழுச்சிகளை உடையதாயிருப்பினும், அசோகனுடைய வாழ்க்கையையே நினைவூட்டுந்தன்மை வாய்ந்ததாகும். அவனுடைய சமய ஆராச்சி ஆர்வம், தனித்த உரிமையான எண்ணமுடைய அக்பரின் அரிவாற்ற லுடன் ஒப்பிடப்படத்தக்கதன்று. அஃது அசோகனின் சமய ஆர்வத்தையே ஒக்கும். 639-ல் சிரியாநாட்டு கிறித்தவன் ஒருவன் ஹர்ஷனின் அவைக்குச் சென்றதாகக் கூறப்பட்டிருக் கிறது. ஆனால் சில அறிஞர்கள் இதை ஏற்றுக்கொள்ள மறுப்பர்.

## கன்னியாகுப்ச (கன்னோசி) மாநாடு.

ஹர்ஷன், 643-ல் கஞ்சத்தில் படையெடுத்துவிட்டுத் திரும்புகையில் வங்காளத்தில் யுவான்சுவாங்கைச் சந்தித்த பின், கன்னியாகுப்சத்தில் பல்வேறு மதத்தினரையும் கூட்டு வித்து, அவனை மேன்மைப்படுத்த முடிவு செய்தான். அம் மாநாட்டில் இருபது அரசர்களும், நாலந்தா பல்கலைக்கழகத் திலிருந்து 1000-அறிவாளிகளும், 3000-பௌத்தர்களும் (ஈனயானிகளும், மகாயானிகளும்) 3000-அந்தணர்களும் குழுமியிருந்தனர். மேன்மையான ஊர்வலம் நடைபெற்ற பின்னர் புத்தரின் சிலை தவிசிலமர்த்தப்பெற்றது. பின்னர், யுவான்சுவாங், சொற்போரைத் தொடங்கும் வகையில், மகாயான புத்த சமயமே சிறந்ததென, காரணங்களுடன் விளக்கிப்பின், தனது கூற்றை மறுத்து எவனொருவன் வேறு கருத்தை நிலைநாட்டுகிறானே அவனுக்குத் தன் தலையைக் கொடுக்கத் தயாராயிருப்பதாக அறைகூவினான். முதல் ஐந்து நாட்கள்வரை எதிர்ப்பார் ஒருவரும் வரவில்லை. யுவான் சுவாங்கைக் கொல்லுவதற்கான சூழ்ச்சி நடப்பதை அறிந்த ஹர்ஷன், அச்சீனனுக்குத் தீமை விளைவிப்போர் மிகவும்

‡ T. Watters, On Yuanchawang's Travels in India I (1904) p. 344.

கடுமையாகத் தண்டிக்கப்படுவர் என்ற ஆணையைப்பிறப்பித்தான். இருபத்திமூன்று நாட்கள் மாநாடு நடந்தது. முடிவில் ஹர்ஷனைக் கொல்லுவதற்கான முயற்சி நடந்து கலவரமேற்பட்டது. 500-அந்தணர் சூழ்ச்சித்திட்டத்தை ஒப்புக்கொண்டதால் நாடுகடத்தப்பெற்றனர். யுவான்சுவாங்கிற்கு, ஹர்ஷனும் அவன் கீழ்ப்பட்டோரும் மிகுதியாகப் பரிசுகளை வழங்கினர். ஆனால் அந்த யாத்திரிகன் நன்றியுடன் அவற்றை மறுத்துவிட்டான். அவன் யானையின்மீது ஊர்வலமாகக் கொணரப்பட்டு, மாகாயான புத்தசமயத்தின் வெற்றி நிலைநாட்டப்பெற்றதுடன் மாநாடு முடிவுற்றது.

## அலகாபாத் மாநாடு.

கங்கையும், யமுனையும் கூடுமிடத்தில் நடந்த (ஐந்து ஆண்டுகட்கு ஒரு முறை நிகழும்) ஆறுவது மாநாட்டுக்கு யுவான்சுவாங் அழைக்கப்பெற்றான். புத்தரும், ஞாயிற்றுக் கடவுளும், சிவனும், வழிபடப்பட்டு, 75-நாட்கள், பல்வேறு பகுதிகளினின்று வந்திருந்த சுமார் 5-லட்சம் மக்களுக்கு (பல்வேறு சமயத்தினர்) ப்பரிசுகளும், கொடைகளும் வழங்கப்பட்டன. முந்திய 5-ஆண்டுகளில் ஹர்ஷன் சேர்த்து வைத்திருந்த யாவும் கொடையாக அளிக்கப்பட்டன என்று கூறப்படுகிறது. இவ்வாறு வரையாது கொடுத்ததால், ஹர்ஷன் ஒரு வறியவன் நிலைக்குக்கொணரப்பட்டபோதிலும், தன் பொருள்கள் யாவும் நல்வழியில் செலவிடப்பட்டதென்ற மகிழ்ச்சியுடன் அவன் களித்திருந்தானும். இறுதியில் சீன யாத்திரிகன், ஹர்ஷனும், மற்ற சிற்றரசர்களும் வழங்கிய சில பரிசுகளுடனும் புத்தரின் அளவற்ற உருவங்கள் நினைவுச் சின்னங்கள், நூற்றுக்கணக்கான சுவடிகள் ஆகியவற்றுடனும் தன் நாடு திரும்பினான். கொள்ளைக்காரர்கள் இடை வழியில் வந்ததால் சில பொருள்களை அவன் இழக்க நேரிட்டது.

## அரசியலும், மக்கள் வாழ்க்கையும்.

### அரசனுக்குரிய செயல்கள்.

கல்வெட்டுக்கள் மூலம் அரசியலைப்பற்றி அறிய முடியுமாயினும், யுவான்சுவாங் அதனைப்பற்றித் தெளிவாகக் குறிப்

பிட்டிருப்பது நமக்கு மிகுந்த துணையாகவுளது. "அவன் (ஹர்ஷன்) அரசியலில் முறை தவருதவனும், தன் கடமைகளை நிறைவேற்றுவதில் சிறிய செய்திகளுக்கும் மிகுந்த கருத்து செலுத்துவனும் இருந்தான்...........தன் நாடு முழுவதும் மேற்பார்வை செய்வதற்காக அடிக்கடி பிரயாணம் செய்தான். ஆனல் எந்த இடத்திலும் நீண்டகாலம் தங்குவதில்லை......... அவன் விடாமுயற்சியுடனிருந்தான். நாட்பொழுது அவனுக்குப்போதுமானதாக இல்லை." ஆகவே ஹர்ஷன் போர்ச் செயலில் மட்டுமின்றி அரசியல் திறமையிலும் புகழ் வாய்ந்திருந்தான். அக்காலத்தில் சாலைகளில் போதுமான காவல் இல்லாததாலும், அரசியல் அலுவல்களின் பெருக்கத்தினலும், அத்தகைய சுற்றுப்பிரயாணங்கள் மிகவும் இன்றியமையாதனவாயிருந்தன.

## வருவாய்.

அரசியலாரிடம் ஹர்ஷன் காலத்தில் காணப்பெற்ற நல்லெண்ணங்களும் மக்களின் செழிப்பை வளர்ப்பதில் அவர்கள் கொண்டிருந்த ஆர்வமும், யுவான்சுவாங்கினல் மிகவும் போற்றப்படுகின்றன. "அரசியலார் பெருந்தன்மையுடனிருப்பதால், பணித்துறைச்சார்பான தேவைகள் அதிகமில்லை. குடும்பங்கள் பதிவுசெய்யப்படவில்லை. மக்கள் வலுக்கட்டாயமாக வேலை செய்யுமாறு துயருறுத்தப்படவில்லை. அரசனின் நிலங்களில் நான்கு பகுதிகள் உள. ஒருபகுதி, அரசியலுக்காகவும், வழிபாட்டுக்காகவும் செலவிடப்படுகிறது; இரண்டாவது, பொதுப் பணியாளருக்காக ஒதுக்கப்படுகிறது; மற்ருென்று அறிவாளிகளுக்குப் பரிசு அளிப்பதற்கு செலவிடப்படும்; இறுதியாக உள்ளது பல்வேறு சமயத்தினருக்குக் கொடையாக வழங்குவதற்குப் பயன்படுத்தப்படும். வரி, மக்களுக்கு சுமையற்றதாகவே உள்ளது.........ஒவ்வொருவரும் மரபாக உள்ள தொழிலைச்செய்துகொண்டு தந்தைவழி உடமையைக்கவனித்து வருகின்றனர். அரசன் நிலத்தில் குடியிருப்போர் விளைவில் ஆறிலொருபங்கு வரி செலுத்துகிருர்கள். வணிகர் பண்டமாற்றின் பொருட்டு இங்கும் அங்கும் போய் வருகிருர்கள்.

படகுத்துறைகளிலும், சுங்கச்சாலைகளிலும் சிறிதளவு வரிகளையே அவர்கள் செலுத்துகிறார்கள். அரசியல் துறையில் பணி செய்வோர், பணிக்குத்தக்கவாறு ஊதியம் பெறுகின்றனர்...''.

## குற்றங்களுக்கு முறை வழங்குதல்.

குற்றங்களுக்கு முறை வழங்கும் அமைப்பைப்பற்றி யுவான்சுவாங் குறிப்பிட்டிருப்பதிலிருந்து மோரியர் காலத்திய கடுமையான தண்டனைகள் ஏழாம் நூற்றாண்டிலும் தொடர்ந்தன என்று புலப்படுகிறது. கடவுட்சோதனை மூலமும் உண்மைக் குற்றவாளிகள் கண்டறியப்பட்டனர். ஐயப்பாடுள்ள ஒருவனை சாக்குப்பையில் கட்டி ஒரு பெருங் கல்லையும் அத்துடன் இணைத்து ஆற்றில் போட்டுவிடுவது வழக்கமாம். கல்மூழ்கி மூட்டை மிதந்தால் அவன் குற்றவாளி அன்று என உறுதி செய்யப்படும். நீர், தீ, எடை கண்டுபிடித்தல், நஞ்சு ஆகிய 4 வகையான கடவுட்சோதனைகளை யுவான் சுவாங் குறிப்பிடு கிறான். இவை மிகவும் பண்பாடற்றதாயும் அறிவின்மை உடையதாயுமுள்ளன. "ஆனால் அரசியல் முறையில் நேர்மை நிலவியதாலும், மக்கள் ஒற்றுமையுடன் நல்லுறவு பூண்டு வாழ்ந்ததாலும் குற்றவாளிகளின் எண்ணிக்கை குறைவாகவே உளது. சில காலங்களில் சட்டம் மீறப்படும்; பேரரசனுக்கு எதிராக சூழ்ச்சிகளும் செய்யப்படும். குற்றம் கண்டுபிடிக்கப் பட்டவுடன் குற்றவாளி வாழ்நாள்வரை சிறையிலடைக்கப் படுவன். உடலைச்சார்ந்த துன்பம் அவனுக்குக் கொடுக்கப் படவில்லை. மக்களினத்தின் உறுப்பினராக அவன் கருதப் படுவதில்லை. இனக்கட்டுப்பாட்டுக்கு மாறாக நன்னெறியினின்று வழுவுவோர், மூக்கு, அல்லது செவி, அல்லது கை அல்லது கால் துணிக்கப்பெறுவர்; அல்லது நாட்டினின்று வெளியேற்றப்படுவர். குற்றங்கள் தண்டம் விதிக்கப்படுவதன் மூலம் ஈடுசெய்யப்படக்கூடும்.

## படை அமைப்பு.

யுவான்சுவாங், காலாள், குதிரை, தேர், யானை ஆகியன அடங்கிய நால்வகைப்படையைக் குறிப்பிடுகிறான்.

யானைப்படைக்கு மிக்க சிறப்பு அளிக்கப்பட்டது. படைத் தலைவன் யானைமீது அமர்ந்து செல்வான். ஆனால் ஹர்ஷனின் படையை விளக்கமாகச் சிறப்பிக்கையில் தேர்களைப்பற்றி குறிப்பிடப்படவில்லை. பாணனும் அதனைப்பற்றிக் கூறவில்லை. ஆகவே ஹர்ஷன் மற்றய முப்படைகளையே நம்பியிருந்தான் எனத் தெரிகிறது. நாட்டுக்காவலர்கள் நன்கு தேர்ந் தெடுக்கப்பெற்ற வீரர்கள் என்று யுவான்சுவாங் கூறுகிறான். மேலும் அவன் கூறுவதாவது "படைத்தொழில் மரபு வழியாக அமைவதால் போர்ப்பயிற்சித் திறமை அவர்களிடம் மிகுதியாக உளது. அமைதியானகாலத்தில் பேரரசனின் இருப்பிடத்தை அவர்கள் காவல் புரிவர். போர்க்காலத்தில் அவர்கள் அஞ்சாத முன்னணிப்படையுடன் செல்லுவர். காலாட்படை மிகுதியாகச் செயலில்டுபடுவதில்லை. ஈட்டி, கேடயம், வில், அம்பு, கத்தி, கொடுவாள் முதலிய போர்க் கருவிகளுடன், நன்கு பயிற்சிபெற்றவர்களாக அவர்கள் இருக்கின்றனர்"

## பொதுப்பதிவு ஆவணங்கள். (PUBLIC RECORDS)

யுவான்சுவாங்கினால் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ள அரசியலில் ஒரு அரியபண்பு, பதிவுப் பத்திரங்களில் மிகுந்த கருத்து செலுத்தப்பட்டதாகும். நல்லனவும் தீயனவும் ஆவணங் களில் விளக்கமாக எழுதப்பட்டு காக்கப்பட்டன. அவ்வாறு இருப்பினும், 12-ம் நூற்றாண்டுக்கு முன்னர் உண்மையான இந்திய வரலாற்றறிஞன் யாரும் தோன்றாதது வியப்புக் குரியது.

## பொருளாதார நிலை.

யுவான் சுவாங், பாணன் இருவரும் சங்க அமைப்பைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர். அரசசபையின் பெருமித வாழ்க்கை, கலைகளிலும், தொழில்களிலும் காணப்பட்ட மேன்மையைப் புலப்படுத்துகிறது. தெருக்கள் அகன்றில்லா விடினும் நகர அமைப்புமுறையில் சிறந்த முன்னேற்றம் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மாடிவீடுகளும் மரத்தால்

இயன்ற பொருள்களும் பலதிறப்பட்டன. பாடலிபுத்திரம் வீழ்ச்சியுற்றிருந்ததெனினும் தானேச்வரம், மதுரா, கன்யாகுப்சம் அலகாபாத், அயோத்தி, காசி முதலிய பெரிய நகரங்கள் சிறப்புற்று விளங்கின. பொன், வெள்ளிக் காசுகளும் சோழிகளும், சிறியமுத்துக்களும் கொடுக்கல் வாங்கலில் இடையீட்டுப் பொருள்களாயிருந்தன. வரிக் குறைவினுல் உள்நாட்டு வாணிகம் ஆதரிக்கப்பட்டதாக யுவான் சுவாங் குறிப்பிடுவன். அக்காலப்பகுதியில் கடல்கடந்த குடியேற்ற முயற்சிகளும், கலேப்பண்புகளின் பெருக்கமும் காணப்பட்டன. தென்கிழக்கு ஆசியாவுடன் வாணிகத்தொடர்பு ஏற்பட்டிருந்தது.

## மக்கள் வாழ்க்கை.

யுவான் சுவாங், நான்கு சிறந்த சாதிப் பிரிவுகளே விளக்குகிறுன். வைசியர் வணிகர்களாகவும், சூத்திரர், உழவர்களாகவும் குறிப்பிடப்படுகின்றனர்.. அளவற்ற கலப்புச் சாதிகளேப்பற்றிச் சொல்ல அவன் முற்படவில்லே. தீண்டப்படாதோர், தனித்து ஒதுக்கிவைக்கப்பெற்றதும் அவனுல் கூறப்படுகிறது. “இறைச்சி விற்போர், மீனவர், கொலேயாளிகள், தோட்டிகள் நகரின் வெளிப்புறத்தில் வாழும்படி செய்யப்படுகின்றனர். அவர்கள் சிற்றூர்களுக்குச் செல்லும்போது இடதுபுறமாகப் பதுங்கிச் செல்வர்.” பல்வேறு சாதியினரிடை இனக்கலப்பு தடையற்றிருந்தது. பாணன் தனது வாழ்க்கையின் முற்பகுதியில் அவனுடைய கூட்டாளிகளாக இருந்த ஒரு குயவன், ஒரு தாசிப்பெண், ஒரு கைம்பெண் துறவி, கைகால் பிடிக்கும் ஒரு தொழிலாளி, பகடைக்காய் ஆடுபவன், பொற்கொல்லன், முரசு கொட்டுவோன் முதலியவர்களேப்பற்றிக் கூறுவதினின்றும் மேற்கூறிய நிலே தெளிவாகிறது. கைம்பெண்கள் மறுமணம் புரிந்துகொள்வதும் தந்தை அல்லது தாயின் வகையில் நெருங்கிய உறவுகொண்டோருக்குள் மணவினே நடப்பதும் தடை செய்யப்பட்டதாக யுவான்சுவாங் குறிப்பிடுவன். உடன்கட்டை ஏறும் வழக்கம் நிலவியது. ஆனல் பாணன் கைம்பெண்ணின் தலேமயிர் பின்னலேக் குறிப்பிடுவதால், அவள் தலேமயிர் மழிக்கப்படவில்லே என அறியக்கிடக்கிறது.

பாணன், தன் தந்தைக்கு ஒரு சூத்திரப் பெண்ணின் மூலம் பிறந்த இரு உடன் பிறந்தாரைக் குறிப்பிடுகிருன். யுவான் சுவாங், தையல்தொழில் இன்மையையும், செருப்பு கள் அரியதாக இருந்ததையும் குறிப்பிடுகிருன். மேலும் அந்தணர்களும் அரசமரபினரும் எளியவாழ்க்கையுடன் சிக்க னமாக இருந்தனரெனவும், அரசர்களும் செல்வர்களும் பெரு மிதமான ஆடை அணிகளுடன் விளங்கினரெனவும், பெரும் பான்மையில் மக்கள் நேர்மையாக நன்னெறியுடன் வாழ்ந்தன ரெனவும், மறுபிறவிகளில் அவர்கள் பாபங்களுக்குத் தண் டனைகிடைக்குமென அவர்கள் அஞ்சினரெனவும், குறிப்பிடு கிருன். இறந்தோரை, எரித்தும் அல்லது நீரில் இட்டும் காடுகளில் இட்டும் வந்தனர். கிழவர்களும் தீரா நோயைப் பெற்ருேரும் கங்கையில் மூழ்கி இறந்ததாகவும் கூறப்படுகிறது. தலைப்பாகையைத் தூக்கி வணக்கம் செலுத்தும் முறையைப் பற்றி பாணன் குறிப்பிடுகிருன். பாணனும் யுவான் சுவாங் கும் குறிப்பிடும் சில செய்திகள் ஓரளவு இன்றைய நிலைமை களை ஒத்துள்ளதால் அவர்கள் நூல்களின் சிறப்பு மிகுதியா கிறது.

## கலைப்பண்புகள்.

### இலக்கியத்துறையில் ஹர்ஷனின் ஆற்றல்.

ஹர்ஷன், இரத்தினுவளி, பிரியதர்சிகா, நாகானந்தம் என்னும் மூன்று வடமொழி நாடகங்கள் எழுதினுன். பிற்கால இலக்கியக் குறிப்புகளாலும் வேறுபல சான்றுகளாலும், இவற்றை எழுதியது ஹர்ஷன் என்பது ஐயப்பாடின்றி புல னுகும். யாப்பிலக்கண ஆசிரியர்களால் மேற்கோள் தரப்பட் டிருப்பினும் ஹர்ஷன் பெரிய நாடக ஆசிரியனல்லன். முத லிரண்டும் காதலைப்பற்றிய தாகையால் "இன்பியல் நாடகங் களாம் (Comedies). மூன்ருவது நாடகத்தில் வீரம், தன்னல மற்ற கொடை உணர்ச்சி, பௌத்த அறம், பெருந்தன்மை முதலியயாவும் பொலிகின்றன. ஜீமூதவாகனன், பாம்பு களின் பொருட்டு, தன்னையே கருடன் உணவாக உட் கொள்ளவேண்டி முன்வந்தான். இறுதியில் கருடன், தனது குற்றமான முறையை உணர்ந்து பாம்பை உண்ணுதுவிட்டது.

பாம்புகள் மகிழ்ச்சியடைந்தன. ஆதலால் இந்நாடகம் பாம்பு களின் மகிழ்ச்சி எனப் பெயர்பெறும். புத்த மதத்திலுல் மனம் மாறுபட்ட ஹர்ஷனையே அந்நாடகம் குறிப்பிடுவதாவும் எண்ணலாம்.

"பிறரால் விரும்பப்படாமலும் கேட்கப்படாமலும், தானே பிறரிடம் கருணைபூண்டு அவர்களுக்காகத் தனது உயிரை வழங்கத் தயாராக இருக்கும் ஒருவன், தனக்காக ஒரு நாட்டைக் கைப்பற்றவிரும்பி மக்களின் படுகொலைக்கு எவ்வாறு இணங்குவான்?" என்று நாடகத்தலைவன் கூறுவது நோக் கத்தகும். புத்தசமய நாடுகளில் இந்நாடகம் மிகவும் போற் றப்பட்டு உயர்நிலை எய்தியதில் வியப்பில்லை. ஹர்ஷனின் பன்ஸ்கேரா செப்புப்பட்டயத்தின் எழுத்தும் அவன் கையெழுத் தும் ஒத்திருத்கிறது. இதிலிருந்து அம்மன்னன் அழகாகக் கையெழுத்திடுவதில் சிறந்தவனென்பது புலனாகும். இப்பட் டயமும் மாதுபன் செப்பேடும், பௌத்தசமய உணர்ச்சியுடன் பாவலர்களுக்குரிய பண்புடன் அவனால் எழுதப்பட்ட செய்தி களை அறிவிக்கின்றன. மேலும் இரண்டு வடமொழி வணக் கப்பாடல்களும் (புத்தரைப்புகழ்வன) எட்டுபெரும் "சைத்தி யங்களும்" (Chaityas) அவனால் எழுதப்பட்டதாகக் கருதப் படுகிறது. ஒரு இலக்கண நூலுக்கும் அவன் ஆசிரியன் என்றும் கூறப்படுகிறது.

## ஹர்ஷன் கல்விப்புரவலன்.

அரச அவையிலிருந்த அறிஞர்களை ஹர்ஷன், செய்யுட் கள் எழுதச்செய்து அவற்றைத் தொகுத்து 'சாதகமாலை' என்றநூலை வெளியிட்டதாக இட்சிங் கூறுகிறான். சாதகமாலை, புத்தரின் பழம் பிறப்புக்களைப் பற்றிக்கூறும். ஹர்ஷனின் அவையில் பாணபட்டனே சிறந்த புலவனாவன். ஹர்ஷ சரிதத்தையன்றி, பாணன், காதம்பரி என்னும் புதுமைக் கதையையும் எழுதினான். சிலசெய்திகளில், சுபந்துவின் வாசவதத்தையைவிட இந்நூல் மேலானது. இதில் சிக்கலான அமைப்பில் சுழற்சியாகவரும் பலகதைகள் பொருத்தப் பெற் றுள்ளன. அவனுடைய செய்யுள் நடையும், நாடகம் எழுதும்

திறனும், சிலவற்றைச் சிறப்பிக்கும் ஆற்றலும் போற்றற்குரியன. பிரபாகர வர்த்தனன் இறந்த நிகழ்ச்சி அழகாக சிறப்பிக்கப் பட்டுள்ளது. பார்வதிபரிணயம், சண்டிசதகம் என்னும் நூல்களை எழுதியவன் இவனே என்றும் கருதப்படுகிறது. இவனுடைய மைத்துனனை (சிலர் மாமன் என்பர்) மயூரன் எழுதிய "அஷ்டகம்" (எட்டு செய்யுட்களையுடையது) காம சாத்திரத்தை அவன் ஆழ்ந்துபயின்றவன் என்பதைக்காட்டும். அச்செய்யுட்கள், தன்னைக் குறிப்பிடுவதாகக் கருதிய அவனுடைய மகள் அவனை வசைகூறவே, அவன் குட்டநோய் அடைந்து, பின், "சூரிய சதகம்" இயற்றி அந்நோயினின்று விடுபட்டானென்பது மரபுரை. அச்சதகத்தைப் படித்துக் குட்டநோயை விலக்கலாமென்று இந்நாட்டில் இன்னும் சில அன்பர்கள் நம்புகிறார்கள். மாதங்கதிவாகரன் என்பார் ஹர்ஷன் அவையை அணிசெய்த மற்றொரு புலவராவர். சிறந்த கவியும் தத்துவ வல்லுநருமான பர்த்ருஹரி ஏழாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருந்தபோதிலும், அவர் ஹர்ஷனுடன் தொடர்பு கொண்டனரா என்பது அறியப்படவில்லை.

## கானக இலைக்குடில்கள்.

பண்டைய இந்தியாவில் கானக இலைக்குடில்களில் அறிவாற்றலைப்பெருக்கும் செயல்கள் நிகழ்ந்து வந்ததைக் காண்கிறோம். பல்வேறு சமயத்தினரின் பிரதிநிதிகளும் பௌத்த அறிஞர் திவாகரமித்திரரின் தலைமையில், அமைதியுடனும் ஒற்றுமையுடனும் ஒரு இலைக்குடிலில் தமது கல்வியைப் பெருக்கி வந்தார்களென பாணன் விளக்குகிறன். "பல மாநிலங்களிலிருந்து பௌத்தர்களையும், புலன்களை வென்ற பேரன்பர்களையும், வெண்ணிற ஆடை அணிந்த சமணர்களையும், இரவலர்களையும் (வெள்ளை உடை உடுத்த அந்தணத் துறவிகள்) கண்ணபிரானை வழிபடுகின்றோரையும், பிரமச்சாரிகளையும் (மாணவர்கள்) துறவிகளையும் கபிலரைப் (சாங்கிய தத்துவத்தைத் தோற்றுவித்தவர்) பின்பற்றியோரையும், நாத்திகர்களையும் கணாதரைப் (வைசேஷிக தத்துவத்தைத் தோற்றுவித்தவர்) பின்பற்றுவோரையும், வேதாந்திகளையும், தருக்க நூல் வல்லோரையும் பூததத்துவ அறிஞர்களையும், அறநூல்

வல்லோரையும், புராண ஆசிரியர்களையும், சடங்குமுறை வழிபாட்டினரையும், இலக்கணநூல் வல்லுநரையும்.......... பிறரையும் ஹர்ஷன் அங்குகண்டான் என்று கூறப்படுகிறது. அவர்கள் தத்தம் கொள்கைகளைக் கடைப்பிடித்துக்கொண்டு நன்கு ஆராய்ந்து ஐயங்களை எழுப்பி, விவாதங்கள் புரிந்து கொண்டு, கசடறக்கற்றுவந்தனராம்.''§

## இந்திய அறிஞர்களின் சிறப்பு.

மத்திய நாட்டுமக்கள், ஒழுங்காகவும் தெளிவாகவும் பேசுவதாகவும் அவர்கள் சொற்களை ஒலிக்கும்முறை போற்றத் தக்கதாக இருப்பதாகவும் யுவான் சுவாங் குறிப்பிடுகிறான். சிறுவர்களுக்கு ஏழாம் ஆண்டு முதல் இலக்கணம், கைத் தொழிற்கலை, மருத்துவம், தருக்கம், மெய்விளக்கநூல் ஆகிய ஐந்தும் கற்பிக்கப்பட்டனவாம். மந்தமானவர்களையும் அறி வற்றவர்களையும் நன்கு கற்பித்து அறிவுக்கூர்மையடையச் செய்யும் ஆசிரியர்களின் விடாமுயற்சியை, யுவான் சுவாங் குறிப்பிடுகிறான்.

## நாலந்தா பல்கலைக் கழகம்.

யுவான் சுவாங் பல கல்வி நிலையங்களைப்பற்றி (சமயத் தையும் கல்வியையும் வளர்த்த மடங்கள்) கூறுகிறான். அவற்றுள் மிகவும் புகழ்பெற்றவை, வாலாபியிலிருந்த ஈன யான பல்கலைக் கழகமும் நாலந்தாவின் மகாயான கலைக்கழ கமும் (கயாவிலிருந்து 50-மைல்கள் தூரத்திலுள்ள இராச கிருகத்திற்கு அண்மையில்) ஆகும். பிந்தைய கல்வி நிலை யத்தைப்பற்றி பாஹியானும் பாணனும் குறிப்பிடாதபோதிலும் அதனைப்பற்றி நாம் நம்பத்தக்க செய்திகளை அறிந்துள்ளோம். யுவான் சுவாங்கும் இட்சிங்கும் தங்கள் இந்திய யாத்திரை களின்பொழுது அக்கழகத்திற்குச் சென்றதால் அதனை நன்கு விளக்குகின்றனர். யுவான் சுவாங் குறிப்பிடும் சக்ராதித்யன். முதலாம் குமாரகுப்த மகேந்திராதித்தியனாக கருதப்படுவதால், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் அக்கல்வி நிலையம் நிறுவப்பெற்றதாகலாம்.

---

§ Ibid pp. 160—161

## புரவலர்களும் பேராசிரியர்களும்.

முதலாம் குமாரகுப்தன், அவன் பின்வந்தோர், ஹர்ஷன், முதலியோரின் ஆதரவு அக்கழகத்திற்குக் கிடைத்தது. ஹர்ஷன் அங்கு ஓர் மடத்தைக்கட்டி பலவகைகளில் அக் கல்விநிலையத்திற்கு உதவியளித்தான். அதன் பேராசிரியரும், தலைவரும் "பண்டிதர்" என்றழைக்கப்பெற்றனர். திங்நாகர், ஸ்திரமதி, தர்மபாலர், சீலபத்திரர் முதலியோர் மிகவும் புகழ்பெற்ற பேராசிரியர்களாவர். காஞ்சி நகரத்தைச்சேர்ந்த தர்மபாலர், அக்கழகத்தின் துணைவேந்தராயினர். அவர், பௌத்தசமயத்தருக்கத்தையும் மறைபொருள் நுணுக்க ஆராய்ச்சியையும் பற்றிச்சிறப்பாக எழுதியுள்ளார். அவர் மகாயான புத்தசமயத்தை விளக்கிக்கூறி, வாத எதிர் வாதங்கள் புரிந்துவந்தார். பின்பு துணைவேந்தராக அமர்ந்த சீலபத்திரர் காலத்தில் யுவான் சுவாங், அக்கழகத்திற்குச் சென்றான்.

அக்கழகம் ஒரு பௌத்த நிலையமாக இருந்தபோதிலும், வேதங்கள் முதலிய பிறசமயப்பாடங்களும் அங்கு கற்பிக்கப் பெற்றன. சமயச் செய்திகளையும், மெய்விளக்க நூலையும் அன்றி, மருத்துவமும் அக்கழகப் பாடத்திட்டத்தில் இடம் பெற்றது. முதலில் நடத்தப்பெறும் நுழைவுத்தேர்வில் வெற்றி பெற்றோரையே, கழகத்தில் சேர்த்துக்கொள்வர். அத்தேர்வு மிகவும் கடினமாக இருந்ததால் நூற்றுக்கு முப்பது மாணவருக்குமேல் தேர்ச்சி பெறுவது இயலாததாயிருந்ததாம். யாவருக்கும் அங்கு கல்வி இலவசமாகக் கற்பிக்கப்பட்டது. அரசனால் நன்கொடையாக அளிக்கப்பட்ட 100 முதல் 200 ஊர்களிலிருந்து அப் பல்கலைக் கழகத்திற்கு வருவாய் கிடைத்தது. யுவான் சுவாங்கின் வாழ்க்கையை எழுதிய அறிஞன், 10000 மாணவர்கள் அங்கே கல்வி பயின்றதாகக் குறிப்பிடுகிறான். ஆனால் இட்சிங் 3000-க்குமேல் என்று கூறுகிறான். பல்கலைக் கழகத்தில் கல்வி கற்றுச்சென்ற மாணவருக்கு எங்கும் மிகுந்த மரியாதை அளிக்கப்பட்டதென்று யுவான்சுவாங் குறிப்பிலிருந்து அறியக்கிடக்கிறது. அங்கு எட்டுமண்டபங்களும் 300-அறைகளுமிருந்ததாக இட்சிங் கூறுவன். வடமொழிக் கல்வியின் முன்னேற்றத்துக்கு அக்கழகத்தின் உதவி மிகவும் போற்றற்

குரியது. நாலந்தாவிலிருந்து 1000-பிரதிநிதிகள், கன்னேசி மாநாட்டிற்குச் சென்றனரென்று முன்னர் குறிப்பிடப்பெற்றது. மேலும் அங்கிருந்து "பண்டிதர்" ஆசியாவின் பல பகுதி களுக்குச் சென்று அங்கிலயத்தின் புகழைப் பரப்பினர். "சமயமுன்னேற்றத்துக்கு புத்தமதம் செய்துள்ள தொண்டும் கல்வி முன்னேற்றத்துக்கு நாலந்தா ஆற்றிய தொண்டும் ஒப்பாகும்."‡

### கலை.

ஹர்ஷன் காலத்திய கலைச்சின்னங்கள், மிகக்குறை வாகவே உள்ளபோதிலும் அவை குப்தர் நடையைப் பின் பற்றி அமைக்கப்பட்டனவாகும். நாலந்தாவின் மடங்களையும், கோவில்களையும் எட்டடி உயரமுள்ள புத்தரின் செம்பு உருவச்சிலையையும், யுவான்சுவாங் சிறப்பிக்கின்ருன். நாலந்தா வின் கலைச்சிறப்புக்கு ஹர்ஷனும் சிறிதளவு உதவினன். அவன் காலத்தில் சீர்புரியில் (ரெய்ப்பூர் மாவட்டம்–மத்தியப் பிரதேசம்) எடுக்கப்பட்ட இலக்குமணன் கோவில் வியப்புக் குரிய சிறப்புகளைப் பெற்றதாகும்.

## பகுதி 2

### மகதநாட்டு குப்தர், கன்னேசி யசோவர்மன், மைத்ரகர், கூர்ச்சரர் முதலியோர்.

647-ல் ஹர்ஷன் இறந்தபின் வடஇந்தியாவில் ஆதித்திய சேனனின் பேரர்சு ஏற்பட்டது. அஃது ஏழாம் நூற்ருண்டின் முடிவுவரை நீடித்தது. அம்மன்னன் மகதநாட்டு குப்த குலத்தைச் சேர்ந்தவன். அவனது கல்வெட்டைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பட்டது.

கன்னேசியில், ஹர்ஷன் இறந்தபின், குழப்பம் மேலிட் டது. 730-முதல் 740-வரை (அல்லது 725—752) ஆட்சி புரிந்த யசோவர்மன் காலம் வரை கன்னேசியின் வரலாறு தெளிவற்றது. இவ்வரசன் பலவகையில் சிறப்புப்பெற்ருன்.

‡ H. D. Sankalia, The University of Nalanda (1934.) p. 85.

கல்வியையும், இலக்கியங்களையும் அவன் மிகவும் போற்றி ஆதரித்தனன். வாக்பதிராசன், பவபூதி என்ற கவிகள் அவனுடைய ஆதரவிலிருந்தனர். தவிர யசோவர்மனே ஒரு நாடக ஆசிரியன். அவன்பின்போந்த மன்னருள் ஒருவனுன இந்திராயுதனை சுமார் 810-ல் வங்காளத்தின் தர்மபாலன் வென்றனன். இறுதியில் கன்னேசி, கூர்ச்சரப் பிரதிகாரரின் தலைநகராயிற்று. அடுத்தபகுதியில் அவ்வரலாறு கூறப்படுகிறது.

## மைத்ரகர்.

இவர்கள் ஹூணருடன் இந்தியாவுக்கு வந்து, 5-ம் நூற்றுண்டின் இறுதியில், கத்தியவார், கூர்ச்சரப் பகுதியில் வாலாபியைத் தலைநகராய்க்கொண்ட ஓர் அரசை நிறுவினர். புகழ்வாய்ந்த முதல் அரசன் முதலாம் சீலாதித்யன் (605—611) என்பாஞகும். நான்காம் தாராசேனன் காலத்தில், பட்டி என்ற கவி பல காவியங்கள் எழுதினன். வாலாபியின் இறுதி மன்னன் ஏழாம் சீலாதித்யன் (766) என்பவன். சுமார் 770-ல் சிந்து நாட்டு அரேபியர், மைத்ரகரின் ஆட்சியை முடிவுறச்செய்தனர். மைத்ரகர், புத்தசமயச் சார்புடையோர். வாலாபி பல்கலைக்கழகம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும்.

## கூர்ச்சரர்.

ஆறும் நூற்றுண்டின் முடிவில் (580) முதலாம் தட்டன் என்பாஞல் புரோச் நகரில் கூர்ச்சரகுல ஆட்சி தோற்றுவிக்கப்பெற்றது. இவ்வரசு தெற்கு கூர்ச்சரத்திலிருந்து நர்மதை வரை பரவியது. இறுதியான அரசன் மூன்றும் செயபாதன், 736-வரை ஆட்சிபுரிந்தான். இராட்டிரகூடரின் எழுச்சி, கூர்ச்சரரின் வீழ்ச்சிக்குக் காரணமாகியது.

மற்றோர் கூர்ச்சரகுலம் (சாபோத்கதர்) அன்ஹில்வாதில் 746-ம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டு ஆட்சிபுரிந்து வந்தது. கூர்ச்சரபிரதிகாரரின் ஆட்சிக்கு அடங்கியே அதனுட்சி நிலவியது. 10-ம் நூற்றுண்டில் சோலங்கியரின் எழுச்சிக்குப்பின், அஃது மறைந்தது. சோலங்கியரின் ஆட்சி, 1297-ல் அலாவுதீன் படையெழுச்சி வரை, அன்ஹில்வாதில் நீடித்திருந்தது.

# பகுதி 3.

## கூர்ச்சர பிரதிகாரர்.

### இராசபுத்திரர் தோற்றம்.

கூர்ச்சரரின் தோற்றமும், பொதுவாக இராசபுத்திரரின் தோற்றமும் சிக்கல் நிறைந்ததும் தெளிவற்றதுமாகும். கூர்ச்சரர் போன்ற இராசபுத்திர குலத்தினரின் தோற்றத்தைப் பற்றிய இப்பொழுதுள்ள கோட்பாடு, இவர்கள், ஹூணரும் கி. பி. ஐந்து, ஆறும் நூற்றுண்டுகளில் இந்தியாவில் படையெடுத்த மற்ற மிலேச்சரும் இந்தியருடன் கலந்ததின் விளைவாக ஏற்பட்ட மரபு வழியில் தோன்றியவர்கள் என்பதாம். இவர்கள், சூரிய, சந்திர குலங்களுடன் இணைக்கப்பட்டு க்ஷத்திரியர் என்று இந்திய இலக்கியத்தில் பேசப்பட்டிருப்பினும், ஆதிகாலத்திய க்ஷத்திரியருக்கும் இவர்களுக்குமுள்ள உறவு ஐயப்பாட்டுக்குரியதாகும். ஒரு வேள்விக்குப்பின், தீயிலிருந்து தோன்றியவர் அக்கினிகுல இராசபுத்திரர் (சாகமானர், சாளுக்கியர், பிரதிகாரர், பரமாரர் முதலியோர்) என்று அவர்தம் தோற்றத்தைப்பற்றி, பனிரெண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த சந்த் என்ற இந்திக் கவி சிறப்பிக்கிறுன். இக்கதை, அயல்நாட்டினர், இராசபுத்திரராகவும் க்ஷத்திரியராகவும் ஆவதற்கு முன்னர் தூய்மையாக்கப்பெற்றனர் என்ற செய்தியை அறிவுறுத்துவதாக நம்பப்படுகிறது. ஆனல் இந்தியாவின் நாகரிகமற்ற சில கூட்டத்தினருடன் இணைந்த ஒரு சில இராசபுத்திர குலத்தினர், உள்நாட்டில் தோன்றியவராவர். மேலும், பிராமணரால் தோற்றுவிக்கப்பட்ட சில குலத்தினர், க்ஷத்திரியருடன் மணவினை உறவு பூண்டதாலும் அவர்களுக்கு உரிய அரசியற்றெழிலைப் புரிந்தமையாலும் க்ஷத்திரியராயினர். ஆதலால் இராசபுத்திரரின் இன ஒற்றுமையை நிலை நாட்டி அவர்களைப் பண்டைய க்ஷத்திரியருடன் இணைப்பது எளிதானதன்று. அத்தகைய இனத் தூய்மையை ஏற்றுக்கொள்ள, இந்திய மக்களின் கலப்புத் தன்மை தடையாக உள்ளது. ஆகவே ஒரே தொழிலில்

ஈடுபட்ட தொகுதியினராகவும் இனக்கலப்பு வாய்ந்தோராகவும் இராசபுத்திரர் விளங்கியதாகக் கருதப்படுகிறது. இக்கொள்கையின்படி சாகமானர் (சௌகனர்), பிரதிகாரர், பரமாரர், சாளுக்கியர் ஆகியோர் அயல்நாட்டு இராசபுத்திரராகவும் சந்தேலர், காகதவாலர், இராட்டிரகூடர், காலசூரியர் ஆகியோர் உள்நாட்டு இராசபுத்திரர் என்றும் இரு பிரிவினராக அமைவர்.

## கூர்ச்சரரின் தோற்றம்.

கூர்ச்சரர் (பிரதிகாரரும் அக்கினிகுல கூட்டத்தினரும்) நடுஆசிய நாடோடிகளென்றும், ஹூணருடனே, அல்லது சிறிது காலம் பின்னரோ இந்தியாவில் படையெடுத்தனரென்றும் உள்ள கருத்தை இவண் ஆராய்வாம். இன்று பஞ்சாபிலும் இராசபுதனத்திலுமுள்ள கூஜார், நாடோடி வாழ்க்கையை நினைவூட்டும் சில பண்புகளைப் பெற்றுள்ளனர். கூஜார், ஹூணர் இரு வகுப்பினரின் காசுகளில் குறிப்பிடத்தக்க ஒற்றுமைப்பண்புகளைக் காண்கிறோம். பிரபாகரவர்த்தனனின் வெற்றிகளைச் சிறப்பிக்கையில் பாணன், அவ்விரு குலத்தினரையும் ஒன்றாகப் பேசுகிறான். மேலும் ஆறும் நூற்றாண்டுக்கு முற்பட்ட இந்தியக் குறிப்புக்களில் கூர்ச்சரர் பேசப்படவில்லை. மணிமேகலை என்ற தமிழ் நூலில் குறிப்பிடப்படும் குச்சர என்ற சொல், வேறுவகையாகவும் பொருள் கொள்ளத்தக்கது. இக்கருத்துக்கள் ஒவ்வொன்றும் வலிமையற்றதாக இருப்பது நோக்கத்தக்கது. இக்கால கூஜரின் பண்புகளுக்கும், மிகப்பழைய அவர்கள் முன்னோருக்கும் இணைப்பு ஏற்படுத்துதல் எளிய முயற்சி அன்று. தவிர, நாணயச்சான்றைக் கொண்டு ஈண்டு இன ஒற்றுமை ஏற்படுத்தியிருப்பது ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. மேலும் ஹர்ஷ சரிதம், கூர்ச்சரத்துடன், சிந்துப்பகுதி, காந்தாரம், லாட்டா, மாளவம் ஆகிய பலவற்றையும், (பிரபாகரவர்த்தனனின் வெற்றிகளைச் சிறப்பிக்கையில்) குறிப்பிடுகிறபடியால், தோற்கடிக்கப்பட்ட பகைவர் யாவரும், கூர்ச்சரர் என்றோ அவருடன் நட்புகொண்டவர் என்றோ கருதுவது முறையன்று. இறுதியாக உள்ள சான்றும் புறக்கணிக்கப்படலாம். ஏனெனின், அப்பெயர் குறிப்பிடப்படாமைக்குக் காரணம் அயல்

நாட்டினரின் படையெழுச்சிகளால் மரபுரைப் பிறழ்ச்சி ஏற்பட்டிருக்கக்கூடும் எனலாம். ஆயினும், இச்செய்திகளைப்பற்றி உறுதியாக எதையும் கூறுவதற்கில்லை. இராசபுத்திரர் பெரும் பான்மையில், தோற்றத்தில் அயல் நாட்டினர் என்ற இப் பொழுதுள்ள கோட்பாட்டிற்கு சிறப்பான மறுப்பாவது, மக்களின் வரலாற்று ஆராய்ச்சியின்படி இந்தோ ஆரியருக்கும் இராசபுத்திரருக்கும் வேறுபாடு இல்லை என்பதாம். C. V. வைத்தியா என்பார் "இராசபுத்திர காலப்பகுதி" (750—1200)-யின் இராசபுத்திரர் வேதகால க்ஷத்திரியரின் மரபில் வந்தோர் என்று கூறும் கருத்து† ஆய்வுக்குரியது.

## போஜனும் அவன் முன்னோரும்.

கூர்ச்சர பிரதிகாரர் அரசு இராசபுதனத்தின் தெற்கில் தோன்றியது. குல முதல்வனை முதலாம் நாகபட்டன் 725 முதல் 740 வரை ஆட்சிபுரிந்திருக்கலாமென்பது யூகம். கல்வெட்டில் இவன் தோற்கடித்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ள 'மிலேச்சர்', சிந்து நாட்டின் அரேபியராக இருக்கலாம். யுவான்சுவாங், பின்மால் கூர்ச்சர அரசு என்று குறிப்பிட்டிருப்பதை ஆதாரமாகக்கொண்டு அவ்விடமே தலைநகராயிருந்திருக்கலாமென்று கருதப்படுகிறது. நான்காவது மன்னன் வத்சராசன் (775—800) வங்காள அரசனைத்தோற்கடித்து அவனது கொற்றக்குடைகள் இரண்டைக் கைப்பற்றிவந்தான். ஆனால் பின்னர், துருவராட்டிரகூடனாலும், முடிவில் வங்காள மன்னனாலும் முறியடிக்கப்பெற்றான். அவன் பின் வந்த இரண்டாம் நாகபட்டன் (800—834). மீண்டும் தன்குலப் பெருமையை நிலைநாட்டினான். இவன் யசோவர்மன் மரபை வேரறுத்து, கன்னியாகுப்ஜத்தை நாட்டின் தலைநகராக்கினான். இராட்டிரகூட அரசன் மூன்றாவது கோவிந்தன் இவனைத் தோற்கடித்த பின்னும் இவன், தலைநகரில் ஆட்சிபுரிந்தான். இவனுக்குப்பின் இராமபத்திரன் என்பான் ஆண்டான் (834—840).

---

† C. V. Vaidya. History of Mediaeval Hindu India. Vols. I—III 1921, 1924 & 1926.

பின்னர் அரசுகட்டிலேறிய மிகிரபோஜன் (சுமார் 840—890) தன்னுட்டைச் சீர்திருத்தி அமைத்து மிகுந்த புகழ் கொண்டான். இவன் முன்னோர்கள், பாலர், இராட்டிரகூடர் முதலியோரை எதிர்த்துத் தமது அரசைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. ஆனால் போஜனது ஆட்சியில் பிரதிகாரப் பேரரசு விரிவடைந்தது. இவனது போர்களைப்பற்றி விரிவாக அறியப்படாதபோதிலும், சட்லெஜ் ஆற்றுக்குக் கிழக்கிலுள்ள பஞ்சாப், உத்தரப்பிரதேசம், இராசபுதனம், குவாலியர்பகுதி, மாளவம், கூர்ச்சரம், கத்தியவார் முதலியன அவனுட்சிக்கு உட்பட்டிருந்தன. இறுதியான மூன்று பகுதிகள் அவன்பின் வந்தோனின் பேரரசில் அடங்கின என்பது உறுதியாக அறியப்படுகிறது. இவ்வாறு, கூர்ச்சரப் பிரதிகாரப்பேரரசை ஹர்ஷன் அல்லது குப்தர் பேரரசுடன் ஒப்பிடலாம். 50 ஆண்டுகளுக்குமேல் இவ்வுயர்நிலை நீடித்திருந்தது. போஜன் ஆட்சியைப்பற்றி நாமறிந்துள்ள குறைந்த செய்திகள், கல்வெட்டுக்களிலிருந்து கிடைக்கப் பெற்றவை. மிகுதியான போஜனின் வெள்ளிக் காசுகள் அவன் நீண்ட ஆட்சியையும் பரந்த பேரரசையும் அறிவிக்கும். ஆனால் ஹூணர் காசுகளைப்போல், அவற்றில் சஸ்ஸானியரின் செல்வாக்கு (Influence) காணப்பெறும். ஆதிவராகன் என்ற போஜனின் பட்டம் அவற்றில் பொறிக்கப்பட்டுள்ளது. பிரபாசம் அல்லது பேரொளி என்பது அவனது மற்றொரு பெயராகும். விட்ணுவையும், ஞாயிற்றையும் அவன் வழிபட்டான். போஜபுரம் என்ற இடத்தைத் தோற்றுவித்ததாகவும், இவன் கருதப்படுகிறுன். சூலைமான் என்ற அரேபிய யாத்திரிகன், 851-ல் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளான்:- "ஜர்ஸ் (கூர்ச்சரர்) மன்னன் பெரும் படையை வைத்திருக்கிறுன். திறமை வாய்ந்த அவனது குதிரைப் படையைப் போன்ற இராணுவம் வேறு இந்திய சிற்றரசன் யாரிடமுமில்லை......அவனுடைய செல்வமும், ஒட்டகங்களும், குதிரைகளும் மிகுதியானவை. இந்தியாவில் வேறெந்த நாட்டிலும் அத்தகைய களவச்சமின்மை கிடையாது."‡ காச்மீரத்தின் சங்கரவர்மன் உத்

‡ **H. H. Elliot and J. Dowson., The History of India as Told by its own historians I (1867) p. 4.**

பலன், போஜனின் அதிகாரத்தைக் குறைத்தானென்று கூறப் பட்டிருக்கிறது. இதன் உண்மை நன்கு அறியப்படவில்லை.

## முதலாம் மகேந்திரபாலன். (சுமார் 890—908)

மகேந்திரபாலன், தந்தையைப்போலவே ஆற்றல் வாய்ந் தவனென்பதில் ஐயமில்லை. போஜனின் பேரரசை உறுதியுடன் ஆட்சிபுரிந்ததுடன் சில புதிய நாடுகளையும் தன்னுடன் இணைத் துக்கொண்டான். கயாவில் கிடைக்கப்பெற்ற அவனது, எட்டு, ஒன்பதாவது ஆண்டு ஆட்சிக்காலத்திய கல்வெட்டுக்களும், இராசஷாகி மாவட்டத்தில் காணப்பெற்ற அவன் பதின் மூன்ருவது ஆண்டு ஆட்சிக்கல்வெட்டும், அவன் மகதத்தை யும், வடக்கு வங்காளத்தையும் கைப்பற்றியதை அறிவிக்கும். இவன், சிறந்த கவியும் நாடகாசிரியனுமான இராசசேகரனின் மாணவன். அக்கவி இவனுதரவைப்பெற்ருன். தக்கணத்தில் பிறந்த அக்கவி மகேந்திரபாலனிடம் பணியாற்றிவிட்டு கால சூரியர் அவைக்குச்சென்று, பின்னர் முதலாம் மகிபாலன் காலத்தில் கன்யாகுப்ஜம் திரும்பினன். இவன் வடமொழியி லன்றி, பிராகிருதத்திலும் வல்லவன். பாலராமாயணம், பால பாரதம் என்ற வீரகாவிய நாடகங்களும் ''கற்பூரமஞ்சரி'' என்ற (இந்திய இலக்கியத்திற் சிறந்த) உவகைக்கூத்தும் வேறு பல நாடகங்களும் இவனுல் எழுதப்பெற்றவை. அவன் நாடகங்களில், பழமொழிகளும், அக்காலப் பழக்க வழக்கங் களைப்பற்றிய குறிப்புக்களும் நிறைந்துள்ளன. இதனுல் அவை வரலாற்றுச்சிறப்பு வாய்ந்தவை. புவனகோசம் (நிலவர்ணனை நூல்) காவியமீமாம்சை, வித்தாசலபஞ்சிகம் என்ற நூல்களை யும் இக்கவி இயற்றியுள்ளான். பண்டைக்கால இந்திய இன வரலாற்றையும், நில அமைப்பையும் அறிய இராஜசேகரன் மிகுதியாக உதவுகிருன். மகேந்திரபாலனுக்குப்பின் இரண்டாம் போஜனும் (908—914) அதன்பின் முதலாம் மகிபாலனும் பட்டமேற்றனர். இறுதியாக உள்ளவன் காலத்தில் கூர்ச்சரப் பிரதிகாரப்பேரரசு வீழ்ச்சியடையத் தொடங்கியது.

## பகுதி 4.

### அரேபியரின் சிந்துநாட்டுப் படையெழுச்சி.

#### அரேபியர் படையெழுச்சிக்கு முன்னர் சிந்துநாட்டின் நிலை.

'ராய்' வமிசத்தைச் சேர்ந்த ஆறு மன்னர்கள், கி. பி. 485-முதல் 622-வரை சிந்துப் பகுதியை ஆட்சிபுரிந்தனர். இறுதி மன்னனை இரண்டாம் ராய்சாகிர் என்பானை அவனுடைய அந்தண அமைச்சன் சச் (Chach) கொன்று பட்டம் எய்தினன். இறந்த மன்னனின் மனைவியை சச் மணந்தான். 13-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுதப்பெற்ற பாரசீக வரலாற்று நூலான சச்-நாமா, அப்புதிய வமிசத்தைப்பற்றிக் கூறும். நாட்டில் ஏற்பட்ட கிளர்ச்சியை சச் அடக்கி திறமையுடன் தன்னதிகாரத்தைப் பெருக்கினான். சிந்து மட்டுமின்றி பஞ்சாபின் சில பகுதிகளும் பெலுசித்தானமும் அவன்கீழ் வந்தன. இவ்வாறு அலர் என்ற இடத்தைத் தலைநகராய்க் கொண்டு அவன் நாற்பது ஆண்டுகள் அரசுபுரிந்தான். (622—662). அவனுக்குப்பின் அவன் உடன் பிறந்தோன் சந்திரன் என்பான் ஏழாண்டுகள் நாடு காவல் செய்தான். பின்னர் அரசகுலத்தின்கண் தோன்றிய உட்பகையால் நாடு பிளவுற்றது. முப்பது ஆண்டுகளுக்கு (670—700) சச்சின் இரு பிள்ளைகளும் அலர், பிராமணாபாத் என்ற இரு இடங்களிலுமிருந்து, பிளவுற்ற நாட்டை ஆண்டனர். கி. பி. 700-ல் தாகர் என்ற அவர் தம்பி, நாட்டை ஒன்றுபடுத்தினான். சிந்துநாடு, அகன்றதாயும், வலிமையுடையதாகவுமிருந்த போதிலும், அரேபியரால் படையெடுக்கப்படும் வேளையில், சச்சின் புரட்சியினாலும், பின்னேற்பட்ட பிளவினாலும், அண்மையிலிருந்த நாடுகளுடன் ஏற்பட்ட போர்களினாலும் நலிவடைந்திருந்தது. முதலில் அரசியல் அதிகாரம் பெற்றிருந்த புத்தத்துறவிகள் பிராமண அரசியலை வெறுத்தனர். சுருங்கக்கூறின், முந்திய 'ராய்' அரசகுடும்பத்தின்பால் பற்றும் பிந்திய வமிசத்தினர்பால் வெறுப்பும் குடிகொண்டிருந்த காரணத்தால், அரேபியரின் படையெடுப்பை எதிர்க்க ஒற்றுமையான முயற்சி இல்லை.

## இஸ்லாமின் முன்னேற்றம்.

முகம்மதுநபி கி. பி. 570-ல் பிறந்தார். 622-ல் மெக்காவிலிருந்து மதீனாவுக்குச் சென்றது முதல் அவர் மதத்தினரால் பின்பற்றப்பட்டுவரும் ஹிஜ்ரி ஆண்டு தொடங்கும். 632-ல் அவர் இறப்பதற்குமுன் அரேபியாவின் சமயத்தலைவரானதுடன் அரசியற்றலைவருமானார். அவருக்குப்பிற்பட்ட நூறு ஆண்டுகளில் அவர்பின்வந்தோரான கலிபாக்களின்கீழ் இஸ்லாமின் முன்னேற்றம், வரலாற்றின் அருஞ் செயல்களில் ஒன்றாகும். 638-ல் சிரியாவும் எகிப்தும் வெல்லப்பட்டன. 709-ல் வட ஆப்ரிக்காவும், 713-ல் ஸ்பெயினும் இஸ்லாமியரின்கீழ் வந்தன. ஆனால் கி. பி. 732-ல் பிரான்சில் ஏற்பட்ட தோல்வியின் காரணமாக மேலும் ஐரோப்பாவில் அம்மதம் முன்னேறவில்லை. 652-ல் பாரசீகம் முறியடிக்கப்பட்டது. அவ்வமயம் இஸ்லாமின் எல்லை, ஆக்சஸ், இந்துகுஷ் வரை இருந்தது. அதே ஆண்டில் சஸ்ஸானிய வமிசத்தின் இறுதி மன்னனை மூன்றாம் எஸ்டிகிர்ட் (Yezdigird) கொலைசெய்யப்பட்டு அவ்வமிசம் முடிவுற்றது. 650-முதல் 700-வரை பலவெற்றிகளைப் பெற்றபோதிலும், ஆப்கானித்தானம், பஞ்சாப் ஆகிய நாடுகளின் ஷாஹியர் அரேபியரைப் பலமுறை முறியடித்தனர். கி. பி. 700-முதல் 870-வரை காபூல் தன் உரிமையான ஆட்சியைப் பெற்றிருந்தது. பிந்திய ஆண்டில் அரேபியர் அதனைக் கைப்பற்றினர். அரேபியர் ஆப்கானித்தானத்தை வெல்லாததால், கைபர். போலன் கணவாய்கள் வழியாக, இந்தியாவுக்கு வரமுடியாதுபோயிற்று. ஆதலால், இந்தியாவில் படையெடுக்க அவர்கள் மக்ரான் கடலோர வழியைத்தேர்ந்தெடுத்தனர்.

## காசிம் படையெடுத்தல்

அட்லாண்டிக் பெருங்கடலிலிருந்து, இந்துகுஷ் மலைத்தொடர்வரை பரவியிருந்த ஓர்பேரரசு (இஸ்லாம்) இந்தியாவை அடைய, செய்த பல முயற்சிகளின் முடிவாக 712-ல் சிந்து நாடு படையெடுக்கப்பட்டது. தாணு (பம்பாய் அருகில்) புரோச், தேபால் (சிந்துவின் கீழ்ப்பகுதி) ஆகிய இடங்களில் 634-க்கும்

643-க்கு மிடைப்பட்ட காலத்தில் அரேபியர் கொள்ளையிட முயன்றது வெற்றியடையவில்லை. பல தோல்விகளுக்கும், இடையூறுகளுக்கும் பின்னர் 685-ல் மக்ரான் அவர்களால் வெல்லப்பட்டது. ஈழ மன்னன், பாக்தாத் கலிபாவுக்கும், பாரசீகத் தலைவனுக்கும் வேறு சில முஸ்லிம் நாடுகளுக்கும் அனுப்பிய கப்பல்களை தேபால் கடற்கொள்ளைக்காரர் கைப் பற்றியதற்காக அவர்களைத் தண்டிக்கும்பொருட்டு கலிபா ஒரு படையை அனுப்பினன். இதன் விளைவாக சிந்து நாட்டுக்கும் படையெடுப்பாளரின் தலைவனுக்கும் போர்மூண்டு, பின்னவன் கொல்லப்பட்டான். இத்தோல்வியால் சினமடைந்த பாரசீகத் தலைவன், முகம்மதுபின் காசிம் என்பானை, சிந்து நாட்டை வெல்லுமாறு அனுப்பினன். காசிம் உயரியபண்புகள் வாய்ந்த இளைஞன். 712-ல் தேபாலை அவன் கைப்பற்றினன். பின், ராவர் என்றவிடத்தில் நடந்தபோரில் தாகர் (சிந்து நாட்டுத் தலைவன்) கொல்லப்பட்டான். பிராமணாபாத், மூல்த்தான் இரண்டும் 713-ல் கைப்பற்றப்பட்டன. பின்னர் கன்னியா குப்ஜத்தை முற்றுகையிட முயலும்பொழுது, 715-ல் கலிபா வின் ஆணைப்படி காசிம் கொலைசெய்யப்பட்டான். இதற்குரிய காரணங்களைக்கூறும் சில கதைகள் உள.

### சிந்துநாட்டின் நிலை.

கலிபாவின்பொருட்டு, சிந்துநாட்டை அவனது குறுநிலத் தலைவர்கள் ஆட்சிபுரிந்தனர். அவர்களிற் சிலர் அரேபிய ஆட்சியை உறுதியுடன் ஆண்டு நிலைநிறுத்தியதுடன் இந்தியா வின் பல இடங்களுக்கும் படைகளை அனுப்பி வந்தனர். வாலாபி அழிக்கப்பட்டது. ஆனல் அக்காலத்திலேயே இந்திய சிற்றரசர்கள் சிந்து அரேபியரைத் தோற்கடித்த போர்களும் உள. கூர்ச்சரப்பிரதிகாரர் அரேபியரின் பகைவர்களாகவும், இராட்டிரகூடர் அவர்தம் நண்பர்களாகவுமிருந்தனர். சிந்து அதிகாரிகள் தொடக்கத்தில் தாம் பெற்ற வெற்றிகளை நன் முறையில் பயன்படுத்திக்கொள்ளத் தவறிவிட்டனர். சுமார் 870-ல் கலிபாவின் ஆதிக்கம் குறையத்தொடங்கியவுடன், சிந்து அதிகாரிகள் உரிமையுடன் இருக்கலாயினர். பத்தாம் நூற்ருண்டில், சிந்துநாடு, மூல்தான் பகுதி என்றும் மன்சுரா

என்றும் இரண்டாகப் பிளவுற்றது. கன்யாகுப்ஜத்தின் பிரதி காரப்பேரரசு வீழ்ச்சியுற்றகாலை மூல்தானின் அமீர்கள் சில வெற்றிகள் பெற்றதாகக் கூறப்படுகிறது. அடுத்த நூற்றுண்டில் கசினி முகம்மது மூல்தானையும் (1005) மன்சுராவையும் (1025) வென்றுன். முகம்மது கசினி இறந்தபின், மூல்த்தான் துருக்கியப் பேரரசுடன் இணைக்கப்பட்டிருக்கையில், மன்சுரா பகுதி ஒரு இராசபுத்திர குலத்தினரின்கீழ் தனி அரசு பெற்றது (1030).

### படையெழுச்சியின்தன்மை.

அரேபியரின் சிந்துப்படையெடுப்பு "பயனற்ற வெற்றி" எனவும் வெற்றியைத் தொடர்ந்து ஒரு பேரரசு நிறுவப்படாததால் அது ஒருதோல்வி எனவும் கருதப்படுகிறது. முகம்மது பின் காசிமின் படைத்தொழில் தேர்ச்சியும், கலிபா அளித்த உதவியும், தாகரின் உள்நாட்டு, வெளிநாட்டுப் பகைஞர்களின் செயல்களும், தொடக்கத்தில் அரேபியரின் வெற்றிக்குக்காரணமாயின. ஆனல் காசிமிக்குப் பின்வந்தோர், அவனைப்போல் வீரமும், திறமும், பெருந்தன்மையும் வாய்ந்தவரல்லர். அவர்கள், அவனுடைய முறையைத் தொடர்ந்து ஊக்கத்துடன் பின்பற்றவில்லை. கலிபாக்கள் சிந்து நாட்டை, சிறிது சிறிதாக மறக்கலாயினர். மேலும் பேரரசை பரப்புவதற்கான வலிமைதரும் சாதனங்கள், சிந்துநாட்டில் மிகுதியாக இல்லை. அனைவற்றிற்கும் மேலாக காச்மீரத்தின் கார்கோட குடும்பத்தினரும், கன்யாகுப்ஜத்தின் கூர்ச்சரப்பிரதிகாரரும் அரேபியரின் தோல்விக்குக் காரணமாயினர். சிந்து நாட்டை அவர்கள் இழக்கவில்லையாயினும் "ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் அரேபியர் பெற்ற வியக்கத்தக்க வெற்றியை நாம் நினைத்தால், அவர் இந்தியாவில் பெற்ற வெற்றி அதற்கு எதிர்மறையாக இருக்கின்றது.‡

### இந்தியப்படையெழுச்சியின் விளைவுகள்.

தொடக்கத்தில், படையெழுச்சியின் விளைவாக உயிர், பொருட்சேதங்களும் நாட்டின் நினைவுச்சின்னங்கள் அழிபாடும்

‡ R. C. Majumdar, The Arab Invasion of India, (1931) p. 51—52

ஏற்பட்டன. படையெடுப்பாளர், அரசியல், இராணுவத் தொடர்பான செய்திகளையே சிறப்பாகக் கருத்தில்கொண்டனர். அவர்கள் கைப்பற்றிய நிலங்கள், வெல்லப்பட்டோரால் பயிரிடப்பட்டன. பயிரிடுவோர், நீர்ப்பாசனம் பெற்ற நிலங்களுக்கு விளைவில் $\frac{2}{5}$-பகுதியையும் எஞ்சியவற்றிற்கு $\frac{1}{4}$-பகுதியையும் நிலவரியாகச் செலுத்தினர். தவிர, இந்துக்கள் தலைவரிசெலுத்தினர். முஸ்லிம் நீதிபதியான காசி (Kazi) குரான் சட்டப்படி, இந்து, முகம்மதிய சச்சரவுகளைத் தீர்த்தார். வேறு பல செய்திகளிலும் இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் வேறுபாடுகள் வற்புறுத்தப்பட்டன. ஆயினும் அரேபியர் பல செய்திகளை இந்தியப் பஞ்சாயத்துகளும், உள்நாட்டு அதிகாரிகளும் முடிவுசெய்யும்படி அமைத்தனர். சமயக்கொள்கையில், பின்னர்வந்த துருக்கிய அரசர்களைவிட, அரேபியர் சிறிது மிகுதியாகப் பொறுமை காட்டினர். மூல்த்தான் போன்ற சில இடங்களில், அரசிறையை மிகுதியாக்கும் நோக்குடன், கோவில்களில் வழிபாட்டு முறையை ஆதரித்தனர் என்பதற்குச் சான்றுகள் உள. அழிவுற்ற கோவில்களைப் புதுப்பித்துக்கொள்ள ஆணை தந்தனர். மேலும் படையெடுப்பாளர், இந்திய மகளிரை மணந்துகொண்டு, இந்தியப்பழக்க வழக்கங்களைப் பின்பற்றியதால் இந்து-முஸ்லிம் இனம் ஒன்று புதிதாகத் தோன்றியது. வாணிகம் முன்னேறியது. மூல்தானும், கடற்றுறைமுகங்களும், சீன, நடு ஆசிய, ஈழ நாடுகளுடன் வாணிகத்தைப் பெருக்கிவந்தன.

## அரேபியர்பெற்ற நன்மைகள்.

"அரேபியரின் இந்தியப் படையெழுச்சி, இந்தியரின் வாழ்க்கையையோ, கலைகளையோ நிலையாக மாற்றுதுபோயினும் அரேபியரின் பரந்த பேரரசில், இந்நாட்டுக் கலைகளும், அறிவியல் நூல்களும், கருத்துக்களும் பரவி பின் ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றன. "அரேபிய எண்கள் (Arabic Numerals) என்பவற்றை இந்தியரிடமிருந்து அறிந்ததுடன், இந்திய வானநூற் கருத்துக்களையும், மருத்துவக் கருத்துக்களையும் அரேபியர் ஏற்றுக்கொண்டனர். ஒரு அரேபிய வானநூல் அறிஞன் காசியில் பத்தாண்டுகள் வானநூல்

பயின்றனனென்று ஒரு குறிப்பு அறியப்பட்டுள்ளது. 'சரக சம்கிதை' என்ற மருத்துவநூலும் 'பஞ்சதந்திரம்' என்ற அரசியல் நூலும் அரேபியமொழியில் மொழி பெயர்க்கப்பட்டன. எட்டாம் நூற்றுண்டில் பல இந்திய அறிஞர் பாக்தாத்துக்குச் சென்று கலிபாக்களால் ஆதரிக்கப்பெற்றனர். மங்கா, சலே என்ற இரு இந்தியர்கள், கலிபா அருன்அல்ரஷீதின் (786-809) (847-ல்முடிவுற்ற இஸ்லாமின் 'பொற்காலத்தை'த் தொடக்கியவர்) அவைக்கள மருத்துவர்களாம். சிந்து நாடு அரேபியப்பேரரசின் ஒரு பகுதியாக இருந்தவரை, இந்தியக் கருத்துக்கள், அப்பேரரசின் தலைநகருக்குத் தடையற்றுச் சென்றுகொண்டிருந்தன. ஒன்பதாம் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் சிந்து தன்னரசு எய்தியதால் மேற்கு ஆசியா இந்தியா வுடன் கொண்டிருந்த கலைப்பண்புத்தொடர்பு மாறுபட்டது.

## பகுதி 5

### காச்மீரநாட்டின் கார்கோடரும், உத்பலரும். கல்ஹணனின் இராசதரங்கிணி.

காச்மீரநாட்டின் ஆதிவரலாற்றை அறிய, கல்வெட்டுக் கள் இல்லாத குறையை, கல்ஹணனின் இராசதரங்கிணி என்ற நூலும், காசுகளும், நினைவுச்சின்னங்களும், சீன, முஸ்லிம் குறிப்புகளும், நீக்குகின்றன. கல்ஹணன் என்ற இந்தியாவின் மிகச்சிறந்த வரலாற்றறிஞன், காச்மீர் நாட்டின் வரலாற்றின் வருந்தத்தக்க காலப்பகுதியில் வாழ்ந்தான். இவன் தந்தை, ஹர்ஷனின் அமைச்சனுக இருந்தான். இவன் தன் நாட்டைப்பற்றியும் அதன் பொதுச்செய்திகளைப் பற்றியும் நன்கு உணர்ந்திருந்தான். அதன் நில அமைப்பை உண்மையாக அறியத்தக்க வாய்ப்புக்கள் அவனுக்கு இருந் தன. அவன்காலத்திய காச்மீர்வரலாற்றின் உள்நிலையை அவன் நன்கு உணர்ந்திருந்தான். பண்டைக்காலப் பொருள் களின் சின்னங்களை அறிவதில் அவனுக்கிருந்த ஊக்கம் போற்றற்குரியது. பில்ஹணனின் விக்கிரம சரிதம் பாணனின் ஹர்ஷசரிதம், காச்மீரத்தின் பல செய்திக்கோவைகள் யாவும்

அவனுல் படித்தறியப்பட்டன. தான் படித்தவற்றுள் உள்ள முரண்பாடுகளுக்காகவும் குற்றங்களுக்காகவும் வருத்தம் தெரிவித்திருக்கிருன். மேலும், பழம்பொருள் ஆராய்ச்சியில் அவன் ஊக்கங்காட்டிச் சிறப்பித்துள்ள செய்திகள், இக்கால ஆராய்ச்சியாளருக்கும் உதவுகின்றன. மேலும், அவனுக்குக்கிடைத்த கல்வெட்டுக்களை ஆராய்ந்து உணர்நது அவற்றின் செய்திகளை கல்ஹணன் அறிவிக்கின்ருன். காச்மீரத்தின் பண்டைய காசுகளையும் அவன் வரலாறு எழுதப் பயன்படுத்திக்கொண்டான். இன்று நாமறிந்த வரலாற்றுமுறை கல்ஹணனுல் அறியப்படவில்லையாயினும், பில்ஹணன், பாணன் ஆகியோரின் மாணவனுன அவன், வரலாறு எழுதும்முன்னர், இலக்கிய, கல்வெட்டு, நாணய, பழம் பொருட்சான்றுகளை ஆராய்ந்தனன் என்பது வியப்புக்குரியதே.

## வரலாற்றுச்சிறப்பு

கல்ஹணன் தனது நூலை 1150-ல் எழுதிமுடித்தான். காச்மீரத்தின் மரபுகளை முறையாக அது அறிவிக்கின்றது. ஆதிகாலப்பகுதிக்கு, மக்களிடை நிலவிய கதைகள், விரிவுரையின்றி குறிப்பிடப்பட்டுள்ளன. இராணுதித்யன் என்ற ஒருவன் முன்னூறு ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. இயற்கைக்கு மீறியதாகவும், மிகைப்படுத்தப்பெற்றதும், மூடநம்பிக்கை பொருந்தியதுமான செய்திகள் ஆசிரியரின் ஐயப்பாட்டுக் குறிப்பு எதுவுமின்றி எழுதப்பட்டிருப்பதாக, அறிஞர் ஸ்டெயின் கூறுவர். கல்ஹணன், பிறர்கூற்றை எளிதில் நம்புந்தன்மை மிகுதியாகப் பெற்றிருந்தான். பண்டைய காச்மீரக்கதைகளை ஆதாரமாகக் கொண்ட குறிப்புகளை அவன் நம்பினன். ஏழாம் நூற்ருண்டு முதல் அவன் வரலாறு அமைதியான முறையில் உள்ளது. ஆனுல் சிற்சில இடங்களில் அளவுக்கு மீறிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவன் தரும் காலவரலாறு ஏற்றுக்கொள்ளத் தகும். ஆனுல் சர். A. ஸ்டெயின் (இராசதரங்கிணியை முதலில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்) சீனச்சான்றைக் கொண்டு, இருபத்தைந்து ஆண்டுகள், கல்ஹணன்தரும்

ஆண்டுடன் கூட்டப்படவேண்டுமென்று கருதுகிறார். C. V. வைத்தியா என்பார் இத்திருத்தம் இன்றியமையாததன்று என்பர். 837-ம்ஆண்டு முதல், லௌகிக ஆண்டு முறைப்படி (கி. மு. 3076—5) திருத்தமான ஆண்டுக் குறிப்புகள் உள்ளன:— நூல் இயற்றப்பட்டகாலம் சக ஆண்டின் எண்ணிக்கையிலும் தரப்பட்டிருக்கிறது — 855 முதல் (அவந்திவர்மன் உத்பலனின் ஆட்சித்தொடக்கம்) ஒவ்வொரு ஆட்சிக்காலத்தின், தொடக்கத்திற்கும் முடிவுக்கும், ஆண்டு, மாதம், நாள் முதலிய விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவை முழுவதும் நம்பத்தக்கனவே. கல்ஹணனின் காலத்தைப்பற்றிய செய்திகள், அவனாலும் அவனுடன் தொடர்பு கொண்டோராலும் அறியப்பட்டவற்றை அடிப்படையாகக் கொண்டன. முடிவாக தன்னுரிமையும் நடுநிலையும் வாய்ந்த தன்மையை அவன் நூலில் காணலாம். ஹர்ஷனைப்பற்றிக் கூறுகையிலும், கல்ஹணன் நேர்மை தவறவில்லை. பகட்டான தோற்றங் கொடுத்த கட்டுக்கதையை அவன் கூற முற்படவில்லை ஆனால், வரலாற்று முதல்வர்களையும் அவர்தம் உதவியாளரையும் கூறுகையில், அவர்களுடைய மேம்பாடுகளையும், குறைபாடுகளையும் விளக்குகிறான். அவனது நேர்மை, ஐயப்படத் தக்கதன்று. "வரலாற்றறிஞனிடம் நேர்மை என்பது, நுணுகி ஆராய்ந்த முடிபுக்கு முன்னறிவிப்பு என்று கூறப்பட்டிருப்பது தகுதியானதே." (ஸ்டெயின்). திருத்தமாகச் செய்திகளை அறிவிக்கும் அவன் ஆற்றலும் போற்றற்குரியது. சிலபண்புகளில் இக்கால வரலாற்றறிஞனின் முறைக்கு, கல்ஹணனின்முறை ஒற்றுமைப்படாதபோதிலும், இவனை (கல்ஹணன்) ஒரு செய்திக்கோவை ஆசிரியன் அல்லது மரபுகள், ஆண்டுக் குறிப்புகளை எழுதும் ஆசிரியனிடமிருந்து வேறுபடுத்தி, ஒரு வரலாற்றறிஞன் என்று நாம் கூறலாம்.

## கார்கோடர்.

ஏழாம் நூற்றாண்டுக்கு முன்னர் மோரிய, குஷான, ஹூணப் பேரரசுகளில் காச்மீரம் உட்பட்டிருந்த காலங்களில், அந்நாட்டின் தனித்தநிலை முடிவுற்றிருந்தது. கார்கோட குலத்தைத் தோற்றுவித்தவன் துர்லபவர்த்தனன் என்பானுகும்

(626—662). இவன் தென்னிந்தியாவின் கார்கோடநாகரின் வழியிற்றேன்றியவன். காச்மீரம் செழிப்பான நிலேயிலிருந்த தாகவும், தட்சசீலமும் மற்றும் சில இடங்களும் அதற்கு உரியன என்றும் யுவான்சுவாங் குறிப்பிடுகிருன். அரசன், புத்த துறவிகளை ஆதரித்தபோதிலும், நாட்டினர் பிராமண சமயத்தைப் பின்பற்றியதாகவும் நாட்டில் அச்சமயச்சின்னங்கள் நிறைந்து காணப்பட்டதாகவும் கூறுகிருன். ஷாஹி வமிசத் தினரின் தலேநகர், ஓஹிந்திலிருந்து காபூலுக்கு மாற்றப்பட்ட தற்கு, காச்மீர அரசு, தட்சசீலம், சால்ட்ரேஞ்ச்வரை பரவியது காரணமாக இருக்கக்கூடும். பின் அரசனுக வந்த துர்லபகன் என்பானின் நீண்டகால ஆட்சிக்கு (662—712) மிகுதியான காசுகள் சான்ருயுள்ளன. அவன்பின் போந்தோரான, சந்திரா பீடன் (712—720) தாராபீடன் (720—724) என்ற அவன் குமாரர்களில், முன்னவன் நேர்மையானவனுகவும், பின்னவன் கொடியோனுகவும் தன்மையில் மாறுபட்டிருந்தனர்.

## முக்தாபீடாலலிதாதித்தியன் (724—760)

இவ்வரசன் காச்மீரத்தை ஆசியாவில் மிகுந்த வலிமை பெற்ற நாடுகளில் ஒன்ருகச் செய்தான். வரலாற்ருதாரம் பெற்ற அவனது "திக்குவிசயத்தை" கல்ஹணன் சிறப்பிக் கின்றனன். இவ்வரசன், கன்யாகுப்ஜத்தின் யசோவர்மனே இரு முறைகள் தோற்கடித்து, அவன் வெற்றி வாழ்க்கையை முடிவுறச்செய்தான். இந்துகுஷ் மலேத்தொடருக்கு வடக்கிலும், திபெத்திலும் இவன் படையெடுத்து வெற்றிகள் கொண்டான். காபூலின் ஷாஹி வமிசத்தினருடன் இம்மன்னன் நட்புஉறவு பூண்டிருந்தான். சிலர் அவர்கள் இவனுடைய மானியக்காரர் என்பர். சிந்து நாட்டு அரேபியரை, முக்தாபீடாலலிதாதித்தி யன் மும்முறை முறியடித்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. இதனே அறிஞர் ஸ்டெயின் மறுப்பர். வங்காளத்திலும், இவன் படையெடுத்தானும். சீனுவுக்கும், காச்மீரத்திற்கும் இவன் காலத்தில் நட்பு உறவு நிலவியது. இவனது காசுகள் இப் பொழுது இல்லாதபோதிலும், இவன் பேரரசு நிலேயைப்பற்றி ஐயுறுவதற்கில்லே. சேய்மையில் உள்ள ஒரு நாட்டில் படை யெடுத்தகாலே இவன் இறந்தான். பதினேரும் நூற்ருண்டின்

சிறந்த முகம்மதிய வடமொழி அறிஞனை அல்பரூனி, "முத்தை" (முக்தாபீடன்) என்ற காச்மீர மன்னனைக் குறிப்பிடுகையில், அவன் "உலகம் முழுவதையும் ஆட்சிபுரிந்தவன்" என்றும், துருக்கியரைத் தோற்கடித்தவனென்றும் கூறுவன். "தனது (அரசியல் அவையின்) வாயிற்படியில் "இந்து" நாட்டின் மற்ற அரசர்கள் தமது தலைகளை வைத்துப் பணியும்படியான புகழையுடைய காச்மீர மன்னன்........." என்று "சச்நாமா" அவனைச் சிறப்பிக்கின்றது. அவன் கட்டிடங்கள் நிறுவுவதில் ஆர்வம் கொண்டவன் என்பதற்கு எடுத்துக்காட்டாக, அவன் எடுத்த மார்த்தாண்டன் கோயிலின் அழிபாடுகள் உள. அழிவுற்ற நிலையிலும், அக்கோயில் வியக்கத்தக்கதாகவும், கட்டிடக் கலைச்சிறப்புகள் வாய்ந்ததாகவும் இருப்பதாக அறிஞர் ஸ்டெயின் கூறுவர். இவ்வேந்தனுல் தோற்றுவிக்கப்பட்ட பரிகாசபுரம் என்ற நகரின் அழிபாடுகள், கல்ஹணனின் புகழுரையை உறுதிப்படுத்தும். இவன் புத்த சமயத்துடன் அன்பு பூண்டு, "விகாரங்களையும்" தூபிகளையும் நிறுவினன். 759-க்கும் 763-க்கும் இடைப்பட்ட காலத்தில் காச்மீருக்குச் சென்ற ஒரு சீன யாத்திரிகன் இதனைக்குறிப்பிடுகிருன்.

## செயபீடவினயாதித்தியன்.

இரண்டு குறுகிய ஆட்சிக்காலங்களுக்குப் பின்னர், முக்தாபீடனின் பெயரனை செயபீட வினயாதித்தியன் (775—806) அரசுகட்டிலேறினன். பாட்டனைப்போலவே, இவனும் பல கதைகளின் தலைவனுக விளங்குகிருன். காசுகளும் இவன் வாழ்ந்ததற்குச்சான்ருக உள்ளன. இவனது 'திக்குவிசயத்தை' யும் கல்ஹணன் சிறப்பிக்கின்றனன். ஆனல், பாட்டனின் அச்செயலைக்காட்டிலும் மிகுந்த மரபுவழக்கான முறையில் பெயரனின் திக்குவிசயம் புகழப்பட்டுள்ளது. ஆயினும், கன்யாகுப்ஜ யசோவர்மனின் பின்போந்தோரான வச்சிராயுதனை இவன் தோற்கடித்ததுபற்றியும் இவனது பேரரசு நிலையைப் பற்றியும் ஐயுறுவதற்கில்லை. வங்காளம் வரை இவன் சென்றதாகக் கூறப்படுகிறது. சிறந்த கல்வி ஆதரவாளனுகவும் இம்மன்னன் விளங்கினன். பதஞ்சலியின் மகாபாஷ்யத்தில் ஆர்வம்கொண்டு அதனைப் போற்றினுன். ஆனல், இவன்

ஆட்சியின் முடிவுப் பகுதியில் பேராசைகொண்டு கொடிய வரிகள்மூலம் மக்களைத் துன்புறுத்தினன். ஆயினும் இவனைப் பற்றி கல்ஹணன் கூறுவதாவது:- "பிறமன்னர்களின் நாடுகளில் கல்வியறிவாளரைக் காண்பது அருமையாகப் போகும் அளவுக்கு இம்மன்னன் அறிஞர்களைத் தேடித்திரட்டினன்." பல அறிஞர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன:— தாமோதரகுப்தன், உத்பதன், வாமனன் முதலியோர் குறிப்பிடத்தக்கோர். முதலமைச்சனுக இருந்த தாமோதரகுப்தன் குத்தணிமாதா என்ற நூலை எழுதினன். இஃது மக்களின் நெறியைக்காக்கும் நோக்குடன், விலைமகளின் தொழிலைப்பற்றி விளக்குவதாகும். செயாபீடனின் பின்வந்தோர் சிறப்பற்றவர்கள். அவர்களின்கீழ், காச்மீரம் தான்பெற்றிருந்த அயல் நாட்டுப் பகுதிகளை இழந்து, முதலில் பெற்றிருந்த எல்லை அளவுடன் அமைதிபெற வேண்டியதாயிற்று.

## உத்பலகுலம்—அவந்திவர்மன்.

கார்கோடருடன், உத்பலர் என்பார், மணவினை உறவு பூண்டிருந்தனர். இக்குலத்தின் சீர்சால் வேந்தனை அவந்திவர்மன் (855-883) அரசுரிமையைக் கைப்பற்றி திறமையுடன் அரசாண்டனன். பேராசையுடன் பொருந்திய வலுக்கட்டாய முறையான அயல்நாட்டுக் கொள்கையை விடுத்து, இவன், நாட்டின் உள்நாட்டு உயர்வுக்குப் பெரிதும் முயன்முன். பிற்கால கார்கோடரின்கீழ் நிலவிய கொடுங்கோன்மையால் விளைந்த கேடுகளை ஒழிப்பதே இவனுடைய நோக்கம். நாட்டின் அமைதியைக் குலைத்துவந்த தமரர் என்ற பெருநிலக் கிழவரை அவந்திவர்மன் அடக்கினுன். இவன் ஓர் வைணவன். இவனது பெருமை வாய்ந்த முதலமைச்சனை சூரன், சிவ வழிபாட்டையுடையோன். பல மராமத்து வேலைகளில் அரசன் ஊக்கங்காட்டினன். சூரபுரம், அவந்திபுரம் என்ற இரு நகரங்களைத்தோற்றுவிக்க அடிகோலப்பட்டது. பல சிவன்கோயில்கள் தோன்றின. வெள்ளத்திஞல் விளையக்கூடும் கேட்டைத்தடுக்க முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன. சுய்யன் என்ற அமைப்பியலாளன் உதவியால் பல அருஞ் செயல்கள் தொடங்கப் பெற்றன. அவந்திவர்மன், கல்வியையும் வளர்த்தான்.

ஆனந்தவர்த்தனன், சிவசாமி, இரத்திநகரன், அபிநந்தன் முதலிய புலவர்கள் அவன் அரசவையில் விளங்கினர்.

### சங்கரவர்மன்.

அவந்திவர்மனின் பின்வந்த சங்கரவர்மன் (883-902) போரிட்டு அரசுரிமை பெற்றபின், பழையகார்கோடர் பேரரசைத் திரும்ப நிறுவுவதற்கு முயன்றான் மிகிரபோஜனுடன் போரிட்டு அவன் அதிகாரத்தைக் குறைத்ததாகச் சங்கரவர்மன் கூறிக் கொள்கிறான். (போஜனின் கீழிருந்த குறுநிலத்தலைவன் யாரேனும், தோற்கடிக்கப்பட்டிருக்கலாம்.) சில இடங்கள் இம் மன்னனால் இணைக்கப்பட்டபோதிலும், இவனது வலுவில் தாக்கும் கொள்கை வெற்றிபெறவில்லை. கொடியமுறைகளால் இவன் பொருளீட்டினான். ஏழை மக்கள் பலவகையான கட்டாய உழைப்புக்குட்படுத்தப் பெற்றனர். கோயிலுக்குரிய பொருள்களையும் தன் பண்டாரத்தில் சேர்த்தான். அரசியல் வருவாயை உயர்த்த, அளவைகள் முறையின்றி மாற்றப்பட்டன. சிக்கனத்தைக்கருதி புலவர்கள் கூட்டத்தை நீக்கினான். ஆனால் இரண்டு சிவன் கோவில்களையும் சங்கரபுரம் என்ற நகரையும் நிறுவினான். பல்லடன் என்ற புலவன் அவன் ஆதரவைப்பெற்றான். ஒரு படையெழுச்சிக்குப்பின் திரும்புகையில் சங்கரவர்மன் முடிவு ஏற்பட்டது.

## பகுதி 6

### வங்காளம், பீஹார் நாடுகளின் பாலர்.

### முன்னுரை.

ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் கௌடநாடு அல்லது வங்காளம், சிறிது சிறிதாக குப்தரிடமிருந்து விடுதலைபெற்று உரிமையடைந்தது. சசாங்கன் தலைமையில் கௌடர் வலிமை பெற்றனர். புத்தசமயத்தின் பகைவனான இவன் புத்தகயா விலிருந்த போதிமரத்தை வேரறுத்தனன். மௌகாரியரும் இவனுடன் பகைத்தனர். 637-வரை, ஒரிஸ்ஸாவில், சசாங்கன் தன்னாட்சியைச் செலுத்திய போதிலும், ஹர்ஷனும்,

அஸ்ஸாமின் பாஸ்கரவர்மனும் இவனதிகாரத்தைக் குலைத்த னர். ஏழாம் நூற்றாண்டின் பிற்பாதியில் வங்காளமும் பீஹாரும், மகதநாட்டுகுப்தர்கீழும், சாமதத்தநாட்டு கட்கரின்கீழும் அடங்கின. ஆதித்தியசேனன், குப்தர் பேரரசை மீண்டும் நிலைநாட்டினனென்று நாமறிவோம். சுமார் 700-ல் வங்காளத்தில் ஆதிசூரன் முயற்சியால் மீண்டும் பிராமணசமயம் வலிமையடைந்தது. எட்டாம் நூற்றாண்டின் முற்பாதியில் வங்காளம் நிலைகுலைந்திருந்ததால், கன்யாகுப்ஜத்தின் யசோவர்மன் அந்நாட்டை வென்றான். இவன் கட்க அரசனையும் தோற்கடித்தான் என்று தோன்றுகிறது. காச்மீரத்தின் பேரரசர்களான முக்தாபீடனும், செயபீடனும், வங்காள, பீஹார் நாடுகளின் செய்திகளில் தலையிட்டதாகக் கூறப்படுகிறது. நாட்டில் நிகழ்ந்த பிற படையெழுச்சிகளைப்பற்றியும் குறிப்புகள் உள. ஆகையால், வங்காளத்தில் பாலர் மரபு ஏற்படும் முன்னர், குழப்பம் மிகுந்திருந்ததென்பது, மற்ற இந்திய நாடுகளின் போர்ச் செய்கைகளால் வலியுறுத்தப்படுகிறது.

## முதலாம் கோபாலன்.

பாலர் மரபினரின் முறையான காலவரலாறு மிகுதியாக ஆராயப்படுமொன்றும். பேரறிஞர் H. C. ரே (Ray)§ என்பாரின் திட்டத்தை நாம் பின்பற்றலாம். முதலாம் கோபாலன் (சுமார் 765—769) அரசுரிமைக்குத் "தேர்ந்தெடுக்கப்பட்டு" முந்திய அரை நூற்றாண்டில் நிலவியிருந்த குழப்ப நிலையிலிருந்து வங்காளத்தைக் காத்தான். அவன் அரசகுடும்பத்தைச் சேர்ந்தவனாகக் காணப்படவில்லை. இடுக்கண்ணுற்றிருந்த காலத்தில் அவன்புரிந்த தொண்டுகளின் விளைவாக, அவன் குலம் ஆட்சியில் அமர்த்தப்பட்டிருக்க வேண்டும். இவன்பின் வந்தோனின் பேராண்மைச்செயல்கள், கோபாலன் மிகுந்த ஆற்றலுடன், நாட்டில் வலிமையான அரசு ஏற்படுத்தியிருக்கவேண்டுமென்பதைக் காட்டும். இவன் ஆட்சிக்கால அளவைப்பற்றி நாமறியோம். இவன் பத்த

§ H. C. Ray, The Dynastic History of Northern India, I (1931) pp. 384—'85.

சமயத்தைப் பின்பற்றினன். நாலந்தா அருகில் ஓதாந்தபுரியில் (பீஹார் நகரம்) ஒரு பல்கலைக்கழகம் இவனுல் நிறுவப்பெற்றது

## தர்மபாலன்.

முதலாம் கோபாலன் பின் வந்த அவன் மகன் தர்மபாலன் (சுமார் 769—815) கன்யாகுப்ஜத்தின், இந்திராயுதனைத் தோற்கடித்து, தன்னுல் தேர்ந்தெடுக்கப்பட்ட சக்ராயுதன் என்பானை அந்நாட்டின் அரசனுக்கினன். ஆனுல் இவ்வெற்றி நீடிக்கவில்லை. கூர்ச்சரபிரதிகார மன்னன் இரண்டாம் நாகபட்டன் கன்யாகுப்ஜத்தை வென்றான். ஆனுல், இராட்டிரகூடமன்னன் மூன்றும் கோவிந்தன், நாகபட்டன், தர்மபாலன் இருவரையும் தோற்கடித்தான். இவ்வாறு பாலர் பேரரசு சிறிது இடர்ப்படலாயிற்று. ஆயினும், கல்வெட்டுச்சான்றுகளின்படி, அப்பேரரசு பாடலிபுத்திரத்திலிருந்து இராசஷாஹி வரை பரவியிருந்தது. கன்யாகுப்ஜத்தின் பொருட்டு நிகழ்ந்த போர்களின் காலவரலாறு சிறிது குழப்பம் நிறைந்ததாக உள்ளதால், சில செய்திகளை உறுதியாக நம்பமுடியவில்லை. இப்போர்களிலீடுபட்ட மன்னர்களின் காலங்கள் பல்வகை மாறுபாடுகளுடன் அறிஞர்களால் பேசப்படுகின்றன. தர்மபாலன் பரமசௌகதன் (சிறந்த பௌத்தன்) என்ற பட்டம் பெற்றிருந்தான். கங்கையாற்றின் தென்கரையில் விக்கிரமசீலா பல்கலைக்கழகத்தை நிறுவியவனும் இவனே. பஹர்பூரின் (இராசஷாஹி மாவட்டம், வங்காளம்) பெரிய பௌத்தர் கோயிலுடனும், மடத்துடனும் இவன் பெயர் இணைக்கப்பட்டுள்ளது. இவற்றின் கட்டிடக்கலை மிகவும் சிறப்புற்றதாம்.

## தேவபாலன்.

தர்மபாலனின் மகனுன தேவபாலன் (சுமார் 815-854) ஓர் சிறந்த பேரரசன் என்று அவன் கல்வெட்டுக்கள் அறிவிக்கும். மூன்றும் கோவிந்தன் இறந்தவுடன், இராட்டிரகூட நாட்டின் உள்நாட்டுக் குழப்பத்தையும், பிரதிகார இரண்டாம் நாகபட்டனுக்குப்பின் இராமபத்திரனின் ஆற்றலற்ற ஆட்சிமுறையையும் தேவபாலன் தன்னலத்திற்குப் பயன்படுத்

திக்கொண்டிருக்கக்கூடும். ஆயினும் மிகக்குறுகிய கால அளவுக்கே இவன் உயர்நிலை நீடித்திருக்கவேண்டும். மிகிர போஜனின் ஆட்சித்தொடக்கத்திற்குப் பின்னர், கூர்ச்சரப் பேரரசு சிறப்புற்றதால், 908-ல் மகேந்திரபாலனின் மரணம் வரை, பாலர் தமது அரசியல் பேராசையை மறந்திருக்க வேண்டியதாயிற்று. தேவபாலனின் நாலந்தா செப்பேடு, அவனது முப்பத்தி ஒன்பதாவது ஆண்டு ஆட்சியில் ஐந்து ஊர்களை, நாலந்தாவில் இருந்த "விகாரத்தை" (மடம்)ப் பேணும்பொருட்டு அளித்தனன் என்று கூறும். அம்மடம் சுமத்திராவின் பாலபுத்திரதேவன் என்ற சைலேந்திரப்பேரரசனுல் கட்டப்பட்டதாம். தேவபாலனும் அவன் முன்னேனைப் போலவே சிறந்த புத்தசமயத்தவன். சுமத்திராவின் சைலேந்திரகுலத்துடன் இவன் நட்பு உறவுகொண்டிருந்தானென்று அறியக்கிடக்கிறது.

பின்னர் ஆட்சிபுரிந்த முதலாம் விக்கிரகபாலன் (854-857) துறவற நெறியில் மிகுந்த கருத்து செலுத்தினுன். அவன் அரசிருக்கையைத் துறந்தவுடன், நாராயணபாலன் (857—911) என்ற அவனது மகன் பட்டமேற்ருன். மிகிர போஜன் காலத்திலும், அவன் மகன் காலத்திலும், பாலர் தமது பேரரசின் பல பகுதிகளை இழந்து சிறப்பு குன்றினர் என்பது, பீஹாரிலும் வடக்கு வங்காளத்திலும் கிடைக்கப் பெற்ற கூர்ச்சர மகேந்திரபாலனின் கல்வெட்டுக்களினின்று அறியலாம்.

## பகுதி 7

### வாதாபி மேலேச்சாளுக்கியர்.

#### தோற்றம்.

சாளுக்கியரின் பிற்காலக்கல்வெட்டுக்கள், அயோத்தியே அவர்கள் ஆதிஅகம் என்று அறிவிக்கும். விக்கிரமசரிதத்தின் ஆசிரியரும் ஆறும் விக்கிரமாதித்திய சாளுக்கியனின் அவைக்களப் புலவனுமான பில்ஹணனும் அவ்வாறே கருதுவன். ஆனுல் சாளுக்கியர் என்பது வடமொழிச்சொல் அன்று எனவும், பில்ஹணன், சுளுகு என்ற சொல்லிலிருந்து சாளுக்கியர்

என்பதைப்பெற்று பொருள் கூறுவது பொருந்தாதது என்றும் கருதப்படுகிறது. சாளுக்கியமென்ற சொல் துருக்கியச் சொல்லெனவும், அது கொள்ளையடித்தலென்னும் பொருளைத்தாதுவாக உடையதெனவும் பேரறிஞர் ஹோயர்ன்லி (Hoernle) கருதுகிறார். கூர்ச்சர வகுப்பைச்சேர்ந்த சபர் என்பாரிடையேயும் புலிகேசி என்ற பெயர் காணப்படுவது நோக்கத்தக்கது. பேரறிஞர் ரைஸ், சாளுக்கியம் என்ற சொல் செல்யூகியம் என்பதுடன் ஒத்திருப்பதால் தைகிரஸ், யுபிரதஸ் ஆறுகளின் கரைகளில் செல்யூக்கியருக்கும் பார்த்தியருக்குமிடையே நடந்த போர்களின் தொடர்ச்சியாக, தென்னிந்தியாவில் சாளுக்கியப் பல்லவ போர்கள் நிகழ்ந்ததாக எண்ணலாமென்று ஊகிக்கிறார். பல்லவர், பார்த்தியராவர் என்றும் அவரால் கருதப்படுகிறது. இந்நிலையில், சாளுக்கியர் அல்லது சோலங்கியரை கூர்ச்சரருடன் இணைந்தவர் என்று கொள்ளல் தகும்.

## ஐஹோள் கல்வெட்டு.

இரண்டாம் புலிகேசியின் ஐஹோள் (பீஜப்பூர் மாவட்டம் பம்பாய்) கல்வெட்டு அம்மன்னன் காலம்வரை சாளுக்கியரைப் பற்றிக்கூறும் நீண்ட குறிப்பாகும். முதலாம் புலிகேசியின் முன்னோரைப்பற்றிய குறிப்புக்கள் காணப்படினும், இவனே (முதலாம் புலிகேசியே) வரலாற்றுச் சான்று பெற்ற குல முதல்வனாகும். இவன் வாதாபியைக் கைப்பற்றி (பாதாமி-பீஜப்பூர் மாவட்டம்) அசுவமேத வேள்வியைப் புரிந்தான். இவனுடைய மகன் முதலாம் கீர்த்திவர்மன் (567—598) வனவாசியையும் கொங்கணத்தையும் வென்றான். அவனுக்குப்பின் அவனுடைய தம்பி மங்களீசன் (598—608) இரேவதீபத்தைக் (பம்பாய் - இரத்தினகிரி மாவட்டத்தில் உள்ளது) கைப்பற்றினன். பின்பு அரசுக்கட்டிலேறிய (கீர்த்திவர்மனின் மகனான) இரண்டாம் புலிகேசி என்பான் (608—642), மங்களீசன், அப்பாயிகன், கோவிந்தன் முதலிய அவனுடைய பகைவர்களை முறியடித்தனன். ஐஹோள் குறிப்பின்படி, அவன், கதம்பர், மேலைக்கங்கர், ஹர்ஷன், இலாட்டாமக்கள், மாளவர், கூர்ச்சரர், கலிங்கர், கோசலர், ஆகியோரையும், கொங்கணம், காஞ்சி, பிஷ்டாபுரம் முதலியன

வற்றையும் வென்றதாக அறியப்படும். இவ்வாறு, பேரார், மகாராட்டிரம், குந்தளம் ஆகிய நாடுகள் அவற்றைச்சார்ந்த ஆயிரக்கணக்கான ஊர்களுடன் புலிகேசி ஆட்சிக்கு உட்பட்டன. கொங்கணத்தைக் கைப்பற்ற கடற்போர் நிகழ்த்தி இவன் வெற்றிபெற்றனனும். காவிரியையும் கடந்து சேர, சோழ, பாண்டியரையும் வென்றதாகக் கூறப்படுகிறது. இவனுடைய திக்குவிசயத்தைப் பற்றிய குறிப்பு வழக்கமாயுள்ள மரபுமுறையைப் பின்பற்றியதாகும். எனினும் இவனது மிகுதியான போர்ச்செயல்களைப்பற்றி ஐயுறுவதற்கில்லை. ஜீனேந்திரனுக்கு ஒரு கற்கோயில் புலிகேசியால் கட்டப்பட்டகாலத்தில், இரவிகீர்த்தி என்பானுல் ஐஹோள் கல்வெட்டு இயற்றப்பெற்றது. காளிதாசன் பாரவி ஆகியோரை ஒத்த நிலையில் புலிகேசி புகழெய்தினனென்று அவ்வாசிரியன் கூறுகிருன். வடமொழி இலக்கிய வரலாற்றில் இரவிகீர்த்தியின் சிறப்பு குறிப்பிடத்தக்கது. காளிதாசனைப்பற்றிய இவன் குறிப்பு அக்கவியின் காலத்தை ஆராய்வதில் உதவிபுரிகிறது. இக்கல்வெட்டின் காலம் கி. பி. 634-க்கு ஒத்த கலியுக, சக ஆண்டுகளில், குறிப்பிடப்பட்டுள்ளது.

## இரண்டாம் புலிகேசி.

வேறு சில கல்வெட்டுக்களிலிருந்து, முதலாம் புலிகேசி பல வேள்விகள் புரிந்தானென்று அறியப்படுகிறது. முதலாம் கீர்த்திவர்மன் வாதாபி நகரை அழகுபெறச்செய்தான். அங்கே ஒரு திருமால் கோயிலை மங்களீசன் எடுத்தான். "பரம பாகவதன்" (திருமாலை மிகுந்த அன்புடன் வழிபடுவோன்) என்ற பட்டம் மங்களீசனுக்கு இருந்தது. இரண்டாம் புலிகேசியின் பட்டங்களாவன:— சத்யாஸ்ரயன், பிருதிவிவல்லபன், பரமேஸ்வரன், பரமமாகேஸ்வரன் முதலியனவாம். இவன் தனது பலவெற்றிகளின் பயனுய், தென்னிந்தியாவில் மிகவும் வலிமையும் சிறப்பும் பெற்ற அரசனுக விளங்கினுன். ஹர்ஷன், தென்னிந்தியாவை வெல்ல முயற்சி செய்ததை இவன் தோற்கடித்தான். ஆனுல், பெயரளவுக்கே, தென்னிந்தியா முழுவதையும் இவன் வென்றதாகக் கொண்டாடப்பட்டது. ஆந்திரதேசத்தில் தமது நாடுகளில் ஒரு பகுதியை பல்லவர்

இழந்தனர். 611-ல் கீழைச்சாளுக்கிய அரசுக்கு அடிகோலப் பட்டது. எட்டாம் நூற்றுண்டின் பல்லவர் கல்வெட்டு ஒன்று, முதலாம் மஹேந்திரவர்மன் அவன் பகைவர்களை, பள்ளலூரில் (காஞ்சியின் அண்மையில் உள்ள பள்ளூர்) முறியடித்த தாகக் குறிப்பிடுகிறது. இஃது சாளுக்கிய-பல்லவப்போர்களில் ஓர் நிகழ்ச்சியாக இருக்கலாம். ஆனால், இரண்டாம் புலிகேசி பல்லவரைத் தோற்கடித்து அவர் நாட்டின் ஒரு பகுதியைத் தன்னுடன் இணைத்துக் கொண்டானென்பதில் ஐயமில்லை. சுமார் 625-ல் -இரண்டாம் புலிகேசி பாரசீகத்தின் இரண்டாம் குஷ்ருவுக்கு ஒரு தூதுக்குழுவை அனுப்பிவைத்ததாக ஒரு முகம்மதிய வரலாற்றறிஞன் கூறுகிறுன். அஜந்தாவில் முதற் குகையில் உள்ள ஒரு ஓவியம், பாரசீகத்திலிருந்து தூதுக்குழு இந்நாட்டிற்கு அனுப்பப்பட்டதைக் குறிப்பிடுவதாகக் கருதப் படுகிறது. ஆனல் இதனை மறுக்கும் சில அறிஞர்கள் இஃது பௌத்த ஓவியக்கலையின் ஒரு காட்சியைக் குறிப்பிடுவதாகக் கூறுவர்.

### யுவான்சுவாங்.

யுவான்சுவாங் தென்னிந்தியாவில் சுற்றிவரும்பொழுது, 641-ல் இரண்டாம் புலிகேசியிடம் சென்றுன். சந்தித்த இடம் 'நாசிக்'காக இருக்கலாம். இவன் கூறுவதாவது:- "இந் நாட்டு (மகாராட்டிரம்) மக்கள் யாவரும் தன்மதிப்புடையராக வும், போர்விருப்பராகவும் நன்றியுடையவராகவும், குற்றஞ் செய்தோரிடம் வஞ்சமுடையவராகவும் உள்ளனர். இவர், தம்மிடம் வந்து இரப்போரிடம் தன்னலமற்ற உணர்ச்சியுடை யோராகவும், தம்மை இகழ்ந்தார்பால் மிக்க பகையுடைய ராகவும் இருக்கின்றனர். இவர் தம் வீரர்கள் போருக்குச் செல்லுமுன் வெறியூட்டும் பொருளை அருந்திச் செல்கின்றனர். போர் யானைகளுக்கும் அதனை ஊட்டுகின்றனர். தமது படை வீரரின் துணையாலும், யானைகளின் வலிமையாலும் செருக்குற்ற அரசன் அண்டையிலிருந்த மன்னர்களைப் புறக்கணித்தான். இவனது செங்கோலாட்சி, ஆழ்ந்து அகன்று நிலவியது இவன் கீழாட்கள் மிகவும் உண்மையுடன் பணியாற்றினர்."§

§ Watters. On Yuan Chwang's Travels in India. Vol. II 1905. p. 239.

## இரண்டாம் புலிகேசியின் தோல்வியும் முடிவும்.

இம்மன்னனின் முடிவு துயரம் நிறைந்ததாகும். பல்லவ மன்னன் முதலாம் நரசிம்மவர்மன், சாளுக்கியர் படையை மணிமங்கலத்திலும் (காஞ்சியின் அண்மையில்) வேறு சில இடங்களிலும் தோற்கடித்தான். மேலும், பல்லவனின் படைத் தலைவர் பரஞ்சோதியார் என்னும் சிறுத்தொண்டநாயனாரால் வாதாபி முற்றுகையிடப்பட்டது. அவர் அந்நகரத்தை அழித்து அங்கு ஓர் வெற்றித்தூணை நாட்டினார். நரசிம்மவர்மனின் வாதாபி கல்வெட்டு, பல்லவரின் அச்செயலை உறுதிப்படுத்தும். 642-ல் புலிகேசி இறந்தான். உடனே அரசியல் குழப்பம் மேலிட்டது. 642-முதல் 655-வரை சாளுக்கிய வரலாற்றில் அரசனில்லாக்காலம் நிலவியதாகத் தோன்றுகிறது. இவ்வாறு நரசிம்மவர்மன், தன் தந்தையையும், ஹர்ஷனையும் வென்ற புலிகேசியை முறியடித்தனன்.

## இரண்டாம் புலிகேசியின் பின்வந்தோர்.

இரண்டாம் புலிகேசியின் மகனான முதலாம் விக்கிரமாதித்தன் (655—680) பதின்மூன்று ஆண்டுகள் குழப்பத்திற்குப்பின், தன்குலத்தை மீண்டும் செழிப்புறச்செய்தான். 674-ம் ஆண்டின் இவனது செப்பேடுகள், கத்வால் (பழைய நிசாம்நாடு) என்னுமிடத்தில் கண்டெடுக்கப்பெற்றன. வழக்கமான சாளுக்கியப் பட்டங்களையன்றி, "இராசமல்லன்" என்றும் அவன் புகழப்படுவன். மாமல்லன் (முதலாம் நரசிம்மவர்மன்) குடும்பத்தை அழித்ததின் காரணமாக இப்பட்டத்தை இவன் சூடினான். மேலும் "இரணரசிகன்" (போரில் மகிழ்ச்சி கொள்வோன்) என்றும், காஞ்சியையும், ஈஸ்வரபோதராசனையும் (முதலாம் பரமேஸ்வரவர்மன்) வென்றவன் எனவும் இவன் சிறப்பிக்கப்படுகிறான். ஆனால் பல்லவர் கல்வெட்டில் இவன் பெருவளநல்லூரில் (திருச்சிராப்பள்ளியின் அண்மையில்) தோற்கடிக்கப் பெற்றதாகப் பேசப்படுகிறது. ஆனால் திருச்சிராப்பள்ளிவரை அவன் சென்றான் என்ற செய்தி, காஞ்சியை அவன் கைப்பற்றியதையும், தன் தந்தையை தோற்கடித்த பல்லவரின்மீது வெற்றி கொண்டதையும் வலி

யுறுத்தும். பின்வந்தோருள் சிறப்பான மன்னன் இரண்டாம் விக்கிரமாதித்தன் (733—746). இவனும், பல்லவருடன் பகைத்து, அவரை வென்று, காஞ்சியுள் புகுந்தனனென்று அறியக்கிடக்கிறது. ஆனால் அத்தலைநகரை அவன் அழிக்க வில்லை. 740-ல் நந்திவர்மன் பல்லவமல்லன் தோற்கடிக்கப் பெற்றானெனினும், விரைவில் தன் தலைநகரை மீட்டனன். ஆகவே, சாளுக்கியர்வெற்றி, பல்லவ ஆதிக்கத்தின் வீழ்ச்சி யைக்குறித்ததாக எண்ணுவதற்கில்லை. வாதாபி சாளுக்கிய குலத்தின் இறுதியான மன்னன் இரண்டாம் கீர்த்திவர்மன் (746—753) என்பானாகும். தந்திதுர்க்க இராட்டிரகூடன். சாளுக்கியர் நாட்டைக்கைப்பற்றினன் (753). 973-ல் சாளுக் கியர் ஆட்சிமீண்டும் தழைத்தெழும்வரை இராட்டிரகூடர்குலம் ஆட்சிபுரிந்தது.

## சமயம்.

ஆதி சாளுக்கியரின் ஆட்சிக்காலமாகிய சுமார் இரு நூற் றாண்டுகளில், பிராமண சமயம், சிறிது சிறிதாக, முன்னேறி, புத்தசமயம் தாழ்வுற்றது. வேதகால சமயத்தை மன்னர்களும் மன்பதையும் ஆதரித்தனர். இந்திய சமயத்தலைவர்கள் வேதங்களின் சிறப்பையும் உண்மையையும் வற்புறுத்தத் தொடங்கினர். அக்காலப்பகுதியின் முடிவில் சமணசமயம், ஆதரவுபெற்றது. இரண்டாம் விக்கிரமாதித்தன் இதனைப் போற்றி வளர்த்தான்.

## கலைப்பண்புகள்.

சாளுக்கியர்காலத்திய பௌத்தச்சிற்பங்களின் உயர்வை யும், ஓவியங்களின் சிறப்பையும் அஜந்தா குகைகளில் காணமுடியும். ஔரங்காபாத், நாசிக் ஆகிய இடங்களிலும் பௌத்தரின் குகைச்சிற்பங்கள் அழகாக உள்ளன. ஆனால் பிராமணசமய முறையைப் பின்பற்றிய குகைச்சிற்பங்களே, ஆதிகால சாளுக்கியரின் கலைத்தன்மையை நன்கு புலப்படுத்து வதாகும். எல்லோரா (ஔரங்காபாத் அருகில்) சிற்பங்களில் சிறந்தவை, இராவணன் கைலாயமலையை எடுப்பதும், சிவ பெருமானின் நடனமும், இரணியகசிபைக் கொல்லும் திருமா

வின் நரசிம்மாவதாரக் காட்சியும் ஆகும். வாதாபியில் திருமாலின் நரசிம்ம, வராக அவதாரக்காட்சிகள் வியப்புக்குரிய வகையில் அமைந்துள்ளன. சாளுக்கியரால் எடுக்கப்பெற்ற கற்கோயில்கள் ஐகோளிலும் வாதாபியிலும், பட்டக்கடலிலும் (வாதாபி அருகில்) காணப்படுகின்றன. இராமாயணத்தை விளக்கும் சிற்பங்களுடன் கூடிய விருபாட்சர் கோயில் மிகச் சிறந்த கலைச்சின்னமாகும். காஞ்சி கைலாசநாதர் கோயிலைப் பின்பற்றி, சுமார் 740-ல் இக்கோயில் கட்டப்பட்டது. சாளுக்கிய மரபினர், ஆண் பன்றி உருவத்தைத் தமது அடையாள உருவமாகக்கொண்டனர்.

## பகுதி 8

### மான்யகேடத்தின் இராட்டிரகூடர்.

### தோற்றம்.

மான்யகேடத்தின் (ஷோலாபூருக்குத் தென் கிழக்கில் 60-மைல்கள் தூரத்திலுள்ள மால்கேட்) இராட்டிரகூடர் யாதவ குலத்தினின்று தோன்றியவர் என்ற மரபுரை, ஒன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்டதாகும். இவர்கள் இராசபுதனத்தின் இரதர்களினின்று தோன்றியவர் என்ற கருத்தை ஏற்றுக்கொள்வதற்கில்லை. ஏனெனின், அவர்களுக்கு முன்னரே, தெற்கு இராட்டிரகூடர் வாழ்ந்தனர். இராட்டிரம் என்ற சொல்லிலிருந்து மாறுபாடடைந்து 'ரெட்டி' என்ற பெயர்தோன்றி யிருக்கலாமென்ற கருத்தைக்கொண்டு இராட்டிரகூடர், தெலுங்கர் என்று தோன்றிய கோட்பாடும் ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று. ஏனெனின் தெலுங்குமொழியில் அத்தகைய மாறுதலேற்படுவது இயலாத ஒன்றும். மேலும் 'ரெட்டி' என்ற வகுப்பினர், 14, 15-ம் நூற்றாண்டுகளில் தான் அரசியலதிகாரம் பெற்றிருந்தனர். ஆகவே, இராட்டிரகூடர், அசோகன் கல்வெட்டுக்களில் காணப்பெறும் இராட்டிரிகர் என்போரின் வழியில்வந்த மராத்தியர் என்று கருதுவது ஏற்றுக்கொள்ளத் தக்கதாகும். ஆனால் இராட்டிரிகர், மகாராட்டிரத்தில் மட்டுமின்றி கன்னட நாட்டிலும் பரவியிருந்தனர். இராட்டிரகூடரின் மொழி கன்னடமே. கன்னட இலக்கியத்தை அவர்கள் ஆதரித்தனரேயன்றி மராத்திய

இலக்கியத்தை அன்று. இவ்வினத்தோற்றத்தை ஆராய்ந்து முடிவுசெய்வது எளிதாக இல்லாதபோதிலும், பெரும்பான்மையில், இவர்கள், உள்நாட்டு இராசபுத்திரர் என்றும், இவர்தம் ஆதி அகம், இலட்டலூரு (பழைய நிசாம் நாட்டில் இலட்டூர் என்னும் கன்னடப்பகுதி) என்றும் கருதப்படுகிறது. தந்திதுர்க்கனின் முன்னோர், எலிச்பூருடன் (பேரார்) தொடர்பு கொண்டிருந்ததாக அறியப்படுவதால் இலட்டூரிலிருந்து (150 மைல் தெற்கில் உள்ள) அவ்விடத்திற்கு (எலிச்பூருக்கு) இராட்டிரகூடர் சென்றிருக்கக்கூடும் §

## தந்திதுர்க்கன்.

முதலாம் இந்திரன் என்பான் கூர்ச்சரத்தின் ஒரு சாளுக்கிய இளவரசியை மணம்புரிந்துகொண்டு போரில் வலிமையடைந்தான். அவன் மகனான தந்திதுர்க்கன் (745—756) ப்ரோச்நாட்டு கூர்ச்சரரையும், கூர்ச்சரத்தின் சாளுக்கியரையும் வென்று அவர்நாடுகளைக் கைப்பற்றி நந்திவர்மன் பல்லவ மல்லனுடன் உடன்படிக்கை செய்துகொண்டு, இராட்டிரகூடரின் தன்னரசை நிலைநாட்டினன். பின்பு இரண்டாம் கீர்த்தி வர்ம சாளுக்கியனை, 753-ல் முறியடித்து மகாராட்டிரத்தின் வடபகுதியைத் தன்னுடன் இணைத்துக்கொண்டான். இவன் மாளவத்தில் படையெடுத்ததாகவும் கூறப்படுகிறது. தந்திதுர்க்கன் மிகுந்த ஆற்றலும் முன்னோக்கும் வாய்ந்தவன். தன்வலியும், மாற்றான்வலியும் தூக்கிச்செயலாற்றினான். நாட்டின் சாதனங்களைத் தக்கவழியில் பயன்படுத்திக்கொள்ளும் திறமை இவனிடமிருந்தது. பழமைப்பற்றுகொண்ட இந்து அரசனான இவன் திருநிலைத்தூய்மை நாட்களில் புண்ணியத் தலங்களுக்குச்சென்று நன்கொடைகளை வழங்கினன். இவனிறக்கும்பொழுது இவனுடைய வயது ஏறத்தாழ முப்பது ஆண்டுகளாகலாம். மான்யகேடம், முதலாம் அமோகவர்ஷன் காலத்திற்றான் இராட்டிரகூடரின் தலைநகராகியது. முதல் தலைநகர் யாது என்பது அறியப்படவில்லை. நாசிக், எலிச்பூர் அல்லது எல்லோரா என்று பலவாறாகக் கருதப்படுகிறது.

§ A. S. Altekar, The Rashtrakutas and their Times (1934), pp. 15—27.

## முதலாம் கிருட்டினனும் இரண்டாம் கோவிந்தனும்.

ஆண்மகவின்றி இறந்த தந்திதுர்க்கனின் சிற்றப்பனை கிருட்டினன் என்பான், (756—775) சுமார் 760-ம் ஆண்டில் மேலைச்சாளுக்கியரை முடிவாக வென்றான். 768-ல் மேலைக் கங்கரின் நாட்டில் படையெடுப்பு நிகழ்த்தப்பட்டது. 770-ல் நான்காம் விட்டுணுவர்த்தனன் என்ற கீழைச்சாளுக்கிய அரசனைத்தாக்க தன்மகன் கோவிந்தனை அனுப்பினன். இவ்வாறு மேலைச்சாளுக்கிய நாட்டின் தென்பகுதியும், கீழைச் சாளுக்கிய நாட்டின் ஓர் பகுதியும் முதலாம் கிருட்டினனால் தன்னடிப்படுத்தப்பெற்றன. இவனுடைய இறுதி வெற்றி தெற்கு கொங்கணத்திலேற்பட்டதாகும். தன் தந்தையிட மிருந்து அடைந்த நாட்டை மும்மடங்காகப் பெருக்கியதும், தக்கணத்தில் இராட்டிரகூட குலத்தைச் சிறப்புறச்செய்ததும், தன்பின்னோர் விந்தியமலைக்கு அப்பாலும் வெற்றிகொள்வதற் கானவழி வகுத்ததும், கிருட்டினனின் அருஞ்செயல்களாகும். கட்டிடக்கலை வளர்ச்சிக்கு இவன் புரிந்த உதவி, இவனாட்சி யின் சிறப்பை மிகுதியாக்கும். எல்லோராவில் பெரும் பாறையைக்குடைந்து "கைலாசர்" கோயிலை இவன் எடுத் தான். அக்கோயில் மிகுந்த வேலைப்பாடுடன் கூடிய குகைக் கோயில் என்றும், உலகத்தின் அற்புதங்களில் ஒன்று எனவும் எந்நாட்டினரும் பெருமிதம் கொள்ளத்தக்க ஓர் செயல் என்றும், அச்செயலை ஆதரித்த மன்னனின் சிறப்பு போற்றற் குரியதென்றும், அறிஞர் ஸ்மித் கூறுவர்.‡ கிருட்டினனுக்குப் பின்போந்த இரண்டாம் கோவிந்தன் (775—780) குணக் கேடனாகவும், அரசியல் கடமைகளை உணராதவனுமாகவுமிருந்த தால், அரசுகட்டிலினின்று நீக்கப்பட்டு, அவன் இளவல் துருவன் அரசனானன்.

## துருவன்.

துருவனின் ஆட்சியில் (780—794) மேலைக்கங்கர் அரசன் இரண்டாம் சிவராமன் தோற்கடிக்கப்பெற்று சிறை சென்றான். அவனது நாடுகள் கைப்பற்றப்பட்டன. அவற்

‡ Smith, The Early History of India (1924) pp. 445 & 447.

றில் ஆணைசெலுத்த ஒரு குறுநிலத் தலைவன் அமர்த்தப்பெற்றனன். தந்திவர்ம பல்லவனை எதிர்த்து காஞ்சியிலும் துருவன் படையெடுத்தான். இந்த இராணுவ நடவடிக்கைகள், முன்னர், இரண்டாம் கோவிந்தனுக்கு உதவியளித்த (தனக்குப் பகையாக) மேலைக்கங்கரையும் பல்லவரையும் தண்டிப்பதற்காக, எடுக்கப்பட்டனவென்று தோன்றுகிறது. துருவன் வட இந்திய அரசியலில் தலையிட்டு கூர்ச்சரபிரதிகார மன்னனை வத்சராசனை முறியடித்தது இராட்டிரகூடரின் பேரரசுச்சிறப்பை மிகுதியாக்கும். ஆனால் புதியநாடு எதுவும் கைப்பற்றப்படவில்லை. இப்படையெழுச்சியும் முன்கூறப் பட்டதுபோல், இரண்டாம் கோவிந்தனுக்கு உதவியளித்த காரணத்தின் பொருட்டே இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. இவன் பிறரைத் தண்டிப்பதற்காகவே நிகழ்த்திய படையெழுச்சிகள் வெற்றியாகவே முடிந்தன. துருவன், தனது மூன்றுவது மகனை கோவிந்தனையே தனக்குப்பின் அரசனுகுமாறு தேர்ந்தெடுத்தான்.

## 'மூன்றும் கோவிந்தன்.

துருவன், தனக்குப்பின் அரசுரிமைப்போர் ஏற்படாவண்ணம் முயற்சிசெய்திருந்தும், மூன்றும் கோவிந்தன் (794-814) அரசனனவுடன் அவன் உடன்பிறந்தானை ஸ்தம்பன், வேறு பல நாடுகளுடன் இணைந்து, தம்பியை எதிர்த்துப் போர் தொடுத்தான். மூன்றும் கோவிந்தன், தனது குறுநிலத் தலைவர்கள் உதவியுடன், போரில் வெற்றியடைந்து ஸ்தம்பனை அன்புடன் நடத்தினன். தவிர, மேலைக்கங்கர் நாட்டுத்தலைவனுகவும் ஸ்தம்பன் மீண்டும் அமர்த்தப்பெற்றுன். இதற்கிடையில் கோவிந்தனல் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட இரண்டாம் சிவமாரன், தன்னுரிமையெய்தி, ஸ்தம்பனுக்கு உதவிபுரிய முன்வந்தான். அதனல் கோவிந்தன் மீண்டும் படையெடுத்து மேலைக்கங்கர் நாட்டைக்கைப்பற்றினன். பின்பு பல்லவ நாட்டில் படையெடுத்து, சுமார் 803-ல் தந்திவர்மனைத் தோற்கடித்தான். உடனே கீழைச்சாளுக்கிய மன்னனை இரண்டாம் விசயாதித்தியனை எதிர்த்துப் போர்புரிந்து வெற்றிக்கொண்டான். கோவிந்தன், தன்தந்தையின் முறை

யைப்பின்பற்றி வட இந்தியாவிலும் படையெடுத்து, கூர்ச்சர மன்னன் இரண்டாம் நாகபட்டனையும், வங்காளத்தின் தர்ம பாலனையும் தோற்கடித்தனன். வடக்கிலிருந்து திரும்பியபின் சுமார் 810-ல் மீண்டும் பல்லவ நாட்டிலும் கங்க நாட்டிலும் வெற்றிகளடைந்தான். இவ்வெற்றிகளைக் கேள்வியுற்ற ஈழ மன்னன், அவ்வமயம் காஞ்சியிலிருந்த கோவிந்தனிடம், தனது உருவச்சிலையை அனுப்பி தனது பணிவை அறிவித்துக்கொண்டதாகக் கூறப்படுகிறது. மூன்றும் கோவிந்தனின் படைவலிமையும், அரசியல் ஆற்றலும், இந்தியாமுழுவதிலும் ஓர் இணையற்ற நிலையை அவனுக்கு அளித்தன. இராட்டிர கூடமரபு அவன் காலத்தில் அதற்கு முன்னரும் பின்னரும் அடைந்திராத புகழை அடைந்தது. உள்நாட்டில், கோவிந்தன், தனது உடன்பிறந்தாருடனும், குறுநிலத் தலைவருடனும் இணக்கமான கொள்கைகளைப் பின்பற்றி தன்னாட்சி வலிமை பெறச்செய்தான். இதனால் அவனது அறிவாற்றல் நன்கு வெளிப்படுகிறது. ஆற்றல் மிக்க அரசர் பலரைக்கொண்ட இராட்டிரகூட குலத்தில் தலைமைச் சிறப்பு வாய்ந்தவன் மூன்றுவது கோவிந்தனாகும்.

## முதலாம் அமோகவர்ஷன் (814—880)

முதலாம் அமோகவர்ஷன், தனது ஆருவது வயதில் பட்டமெய்தியபடியால், நாட்டில் குறுநிலத் தலைவர்கள் கலகம் செய்து தம்மதிகாரங்களைப் பெருக்கலாயினர். மேலைக்கங்கர் உரிமைபெற்றனர். அரசன் பதவியினின்று நீக்கப்பெற்றான். 816-க்கும் 821-க்குமிடைப்பட்ட காலத்தில் இராட்டிரகூடப் பேரரசு அப்பெருங்குழப்ப நிலையினின்றும் காப்பாற்றப்பட்டது. அமோகவர்ஷன் மீண்டும் தன்னரசுபெற்றான். சுமார் 860-ல் வேங்கிநாட்டு கீழைச்சாளுக்கிய மன்னனை மூன்றும் விசயாதித்தியனைத்தோற்கடித்து அமோகவர்ஷன் வெற்றிகொண்டான். இவன் காலத்தில், உள்நாட்டு நெருக்கடிகள் காரணமாக, வடஇந்தியாவிலும், தென்னிந்தியாவிலும் இராட்டிரகூடரின் படையெழுச்சி நிகழவில்லை. மேலைக்கங்கர் தன்னுரிமை பெற்றதை அமோகவர்ஷன் ஏற்றுக்கொண்டதன்றி, அவருடன் மணவினை உறவும் கொண்டான். அவ்வமயம் மிகிரபோஜன்

சிறப்புற்று விளங்கியபடியால், இராட்டிரகூடர், வடஇந்தியப் படையெழுச்சியில் ஊக்கங்கொள்ளவில்லை. சுருங்கக்கூறின், அமோகவர்ஷன் போரை விரும்பவில்லை; சமயப்பற்றுடன் கூடிய அமைதியை அவன் நாடினுன். சமண சமயத்தை இவன் வியந்து ஆதரித்தான். சிலர் இவனைச் சமணன் என்பர். அமோகவர்ஷன், அறக்கோட்பாடுகளை, செயல்முறையில் அமைக்கமுற்பட்டான். ஜினசேனன் என்ற சமணக்குரவன் அவனது ஞானசிரியன். ஆனுல் அரசன் இந்து சமயத்தையும் அதன் கொள்கைகளையும் கைவிட்டுவிடவில்லை. மகாலெட்சுமியை அவன் வழிபட்டனன். கன்னட செய்யுளியலைப்பற்றி முதன்முதலெழுந்த "க்விராசமார்க்கம்" என்ற நூல், அமோகவர்ஷனுல் எழுதப்பட்டதென்பர். (அவைக்களப் புலவனுன ஸ்ரீவிசயனுல் இயற்றப்பட்டதாகவுமிருக்கலாம்.) பிரஸ்னுேத்தாரரத்தினமாலை என்ற வடமொழி நூலையும் இவ்வரசன் இயற்றினுனென்று கருதப்படுகிறது. 875-க்கும் 879-க்கும் இடைப்பட்ட காலத்தில் இஃது இயற்றப்பட்டதாகக் காணப்படுகிறது. அமோகவர்ஷன் அரசிருக்கை துறந்ததாகக்கூறப்பட்டிருப்பதன் உண்மை எவ்வாறிருப்பினும் பட்டத்துக்குரிய இளவரசனுன கிருட்டினனிடம் அவன் மிகுந்த அதிகாரங்களை வழங்கியிருந்தான் என்பதில் ஐயமில்லை. மான்ய கேடத்தை நிறுவி அதனையே நாட்டின் தலைநகராக்கியதும் இவ்வரசனே. "நீண்டகாலம் வாழ்ந்த வல்ஹரன்" (வல்லபன் என்ற சொல்லின் திரிபு) என்று சூலைமான், குறிப்பிட்டிருப்பது இம் மன்னனையே என்று கருதப்படுகிறது. "கான்ஸ்ட்டாண்டி நோபிள், பாக்தாத், சீனு ஆகிய பகுதிகளின் அரசர்களை ஒத்த உலகப் பேரரசன்" என்று சூலைமான் அவ்வரசனைச் சிறப்பிக்கின்றுன் (851).†

## இரண்டாம் கிருட்டினன் (880—912)

இவ்வரசன் மிகிரபோஜனுடன் போரிட்டானெனினும், குறிப்பிடத்தக்க பயன் எதுவும் ஏற்படவில்லை. இவனுட்சியில் மூன்றும் விசயாதித்தியனும், முதலாம் பீமனும் கீழைச்சாளுக்

† Elliot and Dowson, The History of India as told by its own Historians I. pp. 3—4.

கியர், தன்னரசு எய்துமாறு செய்தனர். கூர்ச்சரத்திலிருந்து, தனித்த ஆட்சி நடத்திவந்த இராட்டிரகூடர் மரபு, பேரரசின் ஆளுகையின் கீழ் கொணரப்பட்டது. அமோகவர்ஷனைப் போலவே, இவனும் சமணசமயத்தை விரும்பிப்போற்றினன். குணபத்திரன் என்ற சமண ஆசிரியன், மன்னனால் போற்றப் பட்டான். இவன்பின் வந்த மூன்றும் இந்திரன் (912-917) குலப்பெருமையையும் புகழையும் மீண்டும் நிலை நாட்டினன். அவன் தன் முன்னோரைப் பின்பற்றி வட இந்தியாவில் படையெடுத்தான்.

### கலை.

முதலாம் கிருட்டினனின் கைலாயநாதர் கோயிலைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பெற்றது. முடிவாகக் கூறுமிடத்து, இராட் டிரகூடர், கலையை மிகுதியாகப் போற்றியவர்களாகத் தோன்றவில்லை.

## பகுதி 9

### வேங்கிநாட்டு கீழைச்சாளுக்கியர்.

### முதலாம் விட்ணுவர்த்தனன்.

வேங்கி சாளுக்கியர், வாதாபி சாளுக்கியரின் கிளைஞ ராவர். கி. பி. 611-ல் இரண்டாம் புலிகேசி, ஆந்திரநாட்டை விட்ணுகுண்டினரிடமிருந்து வென்று, பின் அவனது தம்பி குப்ஜ விட்ணுவர்த்தனனை அந்நாட்டின் தலைவனாகச்செய்தான். நெல்லூரிலிருந்து விசாகப்பட்டினம் வரை அப்பகுதி விரிவடைந் திருந்தது. 630-ம் ஆண்டு கல்வெட்டொன்று, புலிகேசிக்கு விட்ணுவர்த்தனன் கீழ்ப்படிந்திருந்தானென்பதை அறிவிக்கும். கீழைச்சாளுக்கியர் கல்வெட்டுகளின்படி முதலாம் விட்ணு வர்த்தனன் ஆட்சியின் முதல் ஆண்டும், இறுதி ஆண்டும், முறையே 615, 633-என்று அறியப்படுகிறது. இம்மன்ன னின் வெள்ளி நாணயம் ஒன்றில், விஷமசித்தி (இடையூறு களை வெல்லுவோன்) என்ற அவன் பட்டமும், சிங்கத்தின் உருவமும் இருமருங்கிலும் விளக்குகளை உடைய முத்தலைச் சூலத்தினுருவமும் காணப்படுகின்றன.

## வேங்கி, தன்னரசு பெறுதல்.

புலிகேசியின் அவலமுடிவு, வேங்கிநாட்டின் தன்னரசுக்குக் காரணமாயிற்று. இப்பிரிவுக்குப்பின் ஒரு நூற்றுண்டு வரை கீழைச்சாளுக்கியர் வரலாறு தெளிவாகக் காணப்படவில்லை. இடையிடையே அரசுரிமைப்போர்கள் காணப்பட்டன. மேலைச்சாளுக்கியரை வீழ்ச்சியுறச்செய்து எழுந்த இராட்டிரகூட குலம், கீழைச்சாளுக்கியருக்கும் இடையூறளித்தது. நான்காம் விட்ணுவர்த்தனனென்ற வேங்கிமன்னன் (764—799) இராட்டிரகூட அரசன், முதலாம் கிருட்டினனுக்கு அடங்கினன். பின்னவன் இறந்தபிறகு, முன்னவன் துருவனுக்குப்பகையாக, இரண்டாம் கோவிந்தனுக்கு உதவியளித்தான். ஆனல் துருவன் வெற்றிபெற்றபின், விட்ணுவர்த்தனன், மேலைக்கங்கருக்குப் பகையாக துருவனுக்கு உதவியளித்தனன். வேங்கி அரசன் விட்ணுவர்த்தனன் மூன்றும் கோவிந்தனுக்கும் கீழ்ப்படிந்து நடந்தான். ஆனல் பின்வந்த அவன் மகன் இரண்டாம் விசயாதித்தியன் (799—843) இராட்டிரகூடர் ஆட்சியை எதிர்த்துக்கலகம் செய்தனன். ஆதலால் மூன்றும் கோவிந்தன் அவனை அரசப்பதவியினின்று நீக்கினன். 814-ல் கோவிந்தன் இறந்தபின், பட்டமிழந்த வேங்கிமன்னன் மீண்டும் அரசுரிமை அடைந்தான்; மேலும், இராட்டிரகூட நாட்டிலும் படையெடுத்து முதலாம் அமோகவர்ஷனைத் தோற்கடித்தனன். மகாராசாதிராசன், பரமேச்வரன் என்ற பட்டங்கள், இரண்டாம் விசயாதித்தியனல் சூட்டிக்கொள்ளப்பட்டன. பல கோயில்களையும் இவன் எடுத்தான். மூன்றும் விசயாதித்தியன் (844-888) அமோகவர்ஷனல், சுமார் 860-ல் தோற்கடிக்கப்பெற்றான். ஆனல், இந்த கீழைச்சாளுக்கிய மன்னன், பல்லவர், பாண்டியர், மேலைக்கங்கர், கீழைக்கங்கர், இராட்டிரகூடர் முதலியோரை எதிர்த்துப் பல வெற்றிகளடைந்ததாக, அவன் கல்வெட்டுக்கள் சிறப்பிக்கின்றன.§ முதலாம் பீமன் (888-918) கீழைச்சாளுக்கியரின் தன்னரசை மீண்டும் நிலை நாட்டினன். இரண்டாம் கிருட்டினன் காலத்தில் இராட்டிரகூடர், வேங்கியை இழந்தனர். பாண்டுரங்கன் என்பான், மூன்றும் விசயாதித்

§ D. C. Ganguly. The Eastern Calukyas (1937), pp. 57—64.

தியன், முதலாம் பீமன் ஆகிய இரு அரசர்களிடமும் பணி யாற்றிய சிறந்த படைத்தலைவனுவன்.

## பகுதி 10

### மேலைக்கங்கர் (தொடர்ச்சி)

### ஸ்ரீபுருஷனும் இரண்டாம் சிவமாரனும்.

ஏழாம் நூற்ருண்டில், ஆட்சிசெலுத்திய முஷ்கரன், புவிக் கிரமன், முதலாம் சிவமாரன் ஆகியோர், சாளுக்கிய– பல்லவர் போர்க்காலத்தில் புரிந்த செயல்களைப்பற்றி தெளிவாக அறியப் படவில்லை. பின்வந்த ஸ்ரீபுருஷன் (726—788) காஞ்சியின் பல்லவரைத் தோற்கடித்ததாகக் கூறிக்கொள்கிருன். இவன் பெங்களூருக்கு அண்மையிலுள்ள மண்ணை (Manne) என்ற இடத்தைத் தன் தலைநகராகக்கொண்டனன். இவனது ஆட்சி முறை செம்மையாக இருந்தமையால், ஸ்ரீராச்சியம் என்று நாடு அழைக்கப்பெற்றது. யானையைப்பற்றிய நூலொன்றை இவன் எழுதியதாக அறியப்படுகிறது. முதலாம் கிருட்டினனின் தலைமையில் இராட்டிரகூடர் கங்கவாடி நகரைத் தாக்கினர். இரண்டாம் சிவமாரன் (788—812) துருவனுடனும் மூன்ரும் கோவிந்தனுடனும் போரிட்டுத் துயருற்ருன். தருக்கநூல், மெய்விளக்கநூல், நாடகம், இலக்கணம் முதலிய பலகலைகளை சிவமாரன் நன்கு கற்றுணர்ந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. யானை, குதிரைகளை அடக்கும் முறையும் அவனுல் அறியப் பட்டிருந்ததாம்.

### அவன்பின் வந்தோர்.

முதலாம் அமோகவர்ஷன், இராட்டிரகூடரின் அரசனுக அமர்ந்தவுடன், கங்கர் தன்னரசு எய்தமுயன்றனர். முதலாம் இராசமல்லன் (817–853) இராட்டிரகூடருக்கு மாருகக்கலகம் செய்தனன். முதலாம் நிதிமார்க்கன் (853—870) கங்கரின் தன்னரசுக்காகப் போரைத் தொடர்ந்து நடத்தினன். இரண் டாம் இராசமல்லன் (870—907) என்பானும், முதலாம் பூதுக னும், அமோகவர்ஷனுடன் நட்பு உறவு பூண்டனர். பூதுகன், அமோகவர்ஷனின் பெண்ணை மணந்தான். இவ்விரு குலத்தி னரும் வேங்கியின் சாளுக்கியரை எதிர்த்துப் போரிட்டனர்.

மேலும் இவர்கள் பல்லவருடன் இணைந்துகொண்டு பாண்டிய ருடன் போரிட்டனர். இராட்டிரகூட மன்னனுன இரண்டாம் கிருட்டினன் மேலைக்கங்கரின் உரிமையான அரசுக்கு இடையூறு விளைவிக்கவில்லை. இதற்கிடையில், கங்கரின் நாடு இரு பிரிவுகளாக்கப்பட்டது. முதலாம் பிருதிவிபதி (853 — 880) கங்கர் குலத்தின் மற்ருெரு கிளையைச் சேர்ந்தவன். இவன் கோலார் பகுதியில் ஆட்சி புரிந்தான். திருப்புரம்பியம் (தஞ்சாவூர் மாவட்டம்) போரில் அபராசிதபல்லவனுக்கு, உதவிசெய்தான். இரண்டாம் பிருதிவிபதி (880 — 925) முதலாம் பராந்தக சோழனின்கீழ் குறுநிலத்தலைவனுனுன்.

## பகுதி 11

### பல்லவர் வரலாறு (தொடர்ச்சி)

### முதலாம் மகேந்திரவர்மன்.

முற்பகுதியில், பல்லவர் வரலாற்றில் காணப்பெற்ற தெளிவற்ற தன்மைமாறி, ஏழாம் நூற்றுண்டில், அரசியல், கலைப்பண்பு துறைகளில், அவர்தம் வரலாறு மிகுந்த சிறப்பைப எய்துகிறது. முதலாம் மகேந்திரவர்மன் (சுமார் 600—630) ஆட்சிக்காலத்தில், பல்லவநாட்டின் ஒரு பகுதியை, சாளுக்கிய இரண்டாம் புலிகேசி கைப்பற்றினன். (ஆனுல் மகேந்திரவர்மனின் நாடுகள் தெற்கில் விரிவுற்றதாக அவனுடைய திருச்சிராப்பள்ளி குகைக்கல்வெட்டு கூறும். மேலைச்சாளுக்கியரால் தோற்கடிக்கப்பட்டானெனினும், மற்ற துறைகளில் அவன் புகழ் ஓங்கி நின்றது. ஒப்பிலாத்துறவியான அப்பரடிகளால் அவன் சமண சமயத்தினின்று நீங்கி சைவனுனுன். லிங்க வழிபாட்டு முறையை அவன் பின்பற்றியதைக் குறித்தும், ஒரு குகைக்கோயில் எடுத்து கல்லால் ஆகிய அவனுடைய உருவச் சிலை ஒன்றை அதில் நிறுவியதைப்பற்றியும், திருச்சிராப்பள்ளி கல்வெட்டு கூறும்.) வல்லம் (செங்கல்பட்டு அருகில்), மகேந்திர வாடி, (அரக்கோணம் அருகில்) தளவானூர் (திண்டிவனம் அருகில்) முதலிய இடங்களிலும், சிவன், திருமால் கோயில்கள் இவனுல் எடுக்கப்பெற்றன. மகேந்திரவாடியில் ஏற்பட்ட குளம் மிகவும் சிறப்புவாய்ந்தது. மண்டகப்பட்டில் (தென்னுற்காடு மாவட்டம்) உள்ள ஓர் கல்வெட்டில் "விசித்திரசித்தன்

(மகேந்திரவர்மன்,) பிரமன், திருமால், சிவன் ஆகிய கடவுளர்க்கு, செங்கல், மரம், உலோகம் அல்லது சுண்ணும்பு முதலியன வற்றைப் பயன் படுத்தாமல், ஒரு கோயில்நிறுவச் செய்தான் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இவன், சமணனு யிருந்த காலத்தில் அம்மதத்தினரைத் தவிர பிறமதத்தினரைத் துன்புறுத்தினனென்றும், சைவனுனபின், பாடலிபுத்திரத்தில் (தென்னுற்காடு மாவட்டம்) சமணப்பாழியை அழித்ததாகவும் கூறப்படுகிறது. "குணபரன், சத்தியசந்தன், பரமமகேஸ்வரன், மஹேந்திரவிக்கிரமன், சேத்தகாரி (கோயில்கள் எடுப்போன்) மத்தவிலாசன் முதலிய பல சிறப்புப்பெயர்களை இம் மன்னன் பெற்றிருந்தான். மகேந்திரவர்மன், அக்கால சமயப் பூசல்களைப் பொருளாகக்கொண்டு, 'மத்தவிலாசப்பிரகசனம்' என்னும் நகைச்சுவை நாடகத்தை வடமொழியில் எழுதினன். சித்தன்னவாசல் (புதுக்கோட்டைப்பகுதி) குகைக்கோயிலில் நடனமாடும் சித்திரங்கள் உட்பட, பல வனப்பு நிறைந்த வண்ண ஓவியங்கள் காணப்பெறும். அவை சமணருடையன. மன்னன் நடனக்கலையையும் ஆதரித்ததாகக் கருதப்படுகிறது. "சித்திரக்காரப்புலி" என்ற இவன் விருது ஓவியக்கலையைப் போற்றி வளர்த்ததை அறிவிக்கின்றது. குடுமியாமலையில் (புதுக்கோட்டைப்பகுதி) அக்கால இசையைப்பற்றிக்குறிப்பிடும் ஒரு கல்வெட்டு உளது. இசையிலும், அரசன் வல்லுநன் என்று அறியக்கிடக்கிறது. விசித்திரசித்தன் என்ற பட்டம், மன்னனின் பல்கலைத்தேர்ச்சியைக் காட்டாநிற்கும். இவனுடைய திருச்சிராப்பள்ளி உருவச்சிலை இன்று இல்லை. ஆயினும், மாமல்லபுரக்கோயிலில் (செங்கல்பட்டு அருகில்) தன்னிரு மனைவிகளுடன் கூடிய மகேந்திரவர்மனின் உருவச்சிலைகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

### முதலாம் நரசிம்மவர்மன் *(சுமார் கி. பி. 630—655)*

நரசிம்மவர்மனின், மணிமங்கல வெற்றியைப்பற்றியும் அவன் படைத் தலைவரான பரஞ்சோதியாரென்னும் சிறுத் தொண்ட நாயனுரின் மேலைச்சாளுக்கிய நாட்டுப் படையெழுச்சியைப்பற்றியும், இரண்டாம் புலிகேசி, 642-ல் இறந்ததைப் பற்றியும் முன்னர் குறிப்பிடப்பட்டது. இவ்வெற்றிகளின்

காரணமாகவே பல்லவ மன்னன், ''வாதாபிகொண்டான்'; ''மகாமல்லன்'' என்ற பட்டங்களைப் பெற்றனன். இவனை அடைக்கலமடைந்த மானவர்மன் என்பானின் பொருட்டு ஈழ நாட்டில் இரு கடற்படையெழுச்சிகளை நிகழ்த்தி அவனுக்கு உரிய அந்நாட்டு அரசாட்சியை அவன் பெறுமாறு செய்து நரசிம்மவர்மன் புகழ்பெற்ருன்.

640-ல் யுவான்சுவாங் காஞ்சி சென்ருன். அந்நகரம் ஆறுமைல் பரப்புடையதாகவும், நூறு புத்தமடங்களையுடைய தாயும், 10,000 பௌத்தத் துறவிகளையுடையதாகவும் இருந் ததாக அவன் சிறப்பிக்கின்ருன். பாண்டிய நாட்டில் புத்த சமயம் மங்கியிருப்பதாகவும் குறிப்பிட்டுள்ளான். மேலும், புத்தசமயச்சார்பற்ற எண்பது கோயில்களும் திகம்பர சமண சமயமும், காஞ்சியில் காணப்பட்டதாகக் கூறுகிருன். மகாபலி புரம் அல்லது மாமல்லபுரத்தைத் தோற்றுவித்தவன் நரசிம்ம வர்மனே. அவ்விடத்தில் புகழத்தக்க சிற்பவேலை நிறைந்த கற்கோயில் எடுக்கப்பெற்றது.

## இராசசிம்மன்.

இரண்டாம் மகேந்திரவர்மன் சுமார் 655-முதல் 660 வரை ஆட்சிபுரிந்தான். பின்போந்த முதலாம் பரமேச்வர வர்மன் (சுமார் கி. பி. 660—680) ஆட்சியில், முதலாம் விக்கிரமாதித்தியன் என்ற சாளுக்கியன், காஞ்சியில் படை யெடுத்தனன். முதலில், முறியடிக்கப்பட்ட பல்லவமன்னன், பின்னர், சாளுக்கிய அரசனை நாட்டைவிட்டுத் துரத்தின னென்று கூறப்படுகிறது. 'மாமல்லபுரத்தில் ஒரேகல்லாலாகிய கணேசனின் கோயில் ஒன்று, இவனுல் கட்டப்பட்டது. சிவ வழிபாட்டையுடைய இம்மன்னன், பல சிவன்கோயில்களை எடுத்தான். சுமார் கி. பி. 680-முதல் 700-வரை, இராச சிம்மன் என்ற பெயரையுடைய இரண்டாம் நரசிம்மவர்மனின் ஆட்சி நிலவியது. அக்காலத்தில் அமைதியும் கலைவளர்சி யும் காணப்பெற்றன. மாமல்லபுரம் கடற்கோயிலையும், காஞ்சி கைலாசநாதர் கோயிலையும் எடுத்தவன் இவனேயாவன். ''சங்கரபக்தன், வாத்ய வித்யாதரன் ஆகமப்பிரியன்'' என்பது

போன்ற இவனது விருதுகள் இவனுடைய பலதிறப்பட்ட ஆற்றலைக் குறிப்பிடும்.) சீனுவுக்கு இவன் ஓர் தூதுக்குழுவை அனுப்பினன்.† சிறந்த வடமொழி அறிஞரான தண்டி இராச சிம்மனின் அவையிலிருந்ததாகச் சிலர் கருதுவர்.

### நந்திவர்ம பல்லவமல்லன்.

இரண்டாம் பரமேச்வரனுக்குப்பின் (சுமார் 700—710) இரண்டாம் நந்திவர்ம பல்லவமல்லன் (சுமார் 710—775) அரசுகட்டிலேறினன். இப்பின்னவன், முடியைக் கவர்ந்து கொண்டவன் என்று சிலரால் கருதப்படுகிருன். ஆனல் வேறு சிலர் இம்மன்னன் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவன் என்று கூறுகிருர்கள். இவன், சிம்மவிட்ணுவின் தம்பியான பீமவர்மனின் கால்வழியைச் சேர்ந்தவன். சுமார் 740-ல், இரண்டாம் விக்கிரமாதித்திய சாளுக்கியன் காஞ்சியைச்சிறிது காலம் கைப்பற்றிக்கொண்டான். நந்திவர்மன் தலைவணங்க நேரிட்டது. மேலும் இப்பல்லவ அரசன், முதலாம் இராச சிம்மபாண்டியனல் நந்திபுரத்தில் (குடந்தைக்கருகில்) முற்றுகை யிடப்பட்டான். அவ்வமயம் பல்லவரின் தானைத்தலைவனை உதயசந்திரன், அரசனுக்கு உதவியாகச்சென்று, பாண்டியரைத் தோற்கடித்தனன். மன்னனின் உதயேந்திரச் செப்பேடுகளில் அத்தானைத் தலைவனின் அருஞ்செயல்கள் பேசப்படுகின்றன. கீழைச்சாளுக்கிய நாட்டின் ஒரு பகுதியையும் அவன் வென்ற தாக அவற்றில் குறிப்பிடப்படுகிறது. பல்லவருக்கும் பாண்டி யருக்கும், தஞ்சாவூரைச்சுற்றியுள்ள பகுதியில் பல போர்கள் நிகழ்ந்தன. இராட்டிரகூடரும் பல்லவர் தலைநகரைப் படை யெடுத்ததாக அறியக்கிடக்கிறது. பின் இராட்டிரகூட தந்தி துர்க்கனும் நந்திவர்மனும் ஓர் உடன்பாடு செய்துகொண்டனர். பின்னவன், முன்னவனின் பெண்ணொருத்தியை மணந்து கொண்டான். ஸ்ரீபுருஷன் தலைமையின்கீழிருந்த மேலைக்கங்க ருடனும் நந்திவர்மன் போரிட்டான். இப்பல்லவன் வைணவ சமயச்சார்புடையவன். 'நாலாயிரப்பிரபந்தத்தின்' பலபாசுரங் களை எழுதிய சிறந்த வைணவ சமயத்தவரான திருமங்கை

† Nilakanta Sastri, Foreign Notices of South India (1939), pp. 116—'17.

ஆழ்வார் இவன் காலத்தவர். காஞ்சி முக்தேஸ்வரன்கோயில் இவனால் எடுக்கப்பட்டது. அதே ஊரிலுள்ள வைகுண்டப் பெருமாள் கோயிலைக்கட்டியதும், நந்திவர்மனாக இருக்கலாம்.

## தந்திவர்மனும் அவன்பின் வந்தோரும்.

தந்திவர்மன் சுமார்(775-826), நந்திவர்மனுக்கும் அவன் மனைவி இராட்டிரகூட இளவரசிக்கும் பிறந்தவன். ஆயினும் துருவனும், மூன்றாம் கோவிந்தனும் காஞ்சியில் படையெடுத்தனர். திருவல்லிக்கேணி (சென்னை) பார்த்தசாரதி கோயிலிலுள்ள தந்திவர்மனின் கல்வெட்டு, அதனுடைய பழமையைக் காட்டாநிற்கும். முதலாம் வரகுணபாண்டியன் சிறிதுகாலம் காவிரி நாட்டைக் கைப்பற்றியிருந்ததாகக் கருதப்படுகிறது. பின்னர், மூன்றாம் நந்திவர்மபல்லவன் (826-849) தெள்ளாறு என்ற இடத்தில் (வந்தவாசிக்கருகில்) ஸ்ரீமாரபாண்டியனைத் தோற்கடித்துப் புகழ்பெற்றான். இதனால் "தெள்ளாறெறிந்த நந்திவர்மன்" என்று பட்டம்பெற்றனன். தெற்கில் வைகை ஆறுவரை இவன் படையுடன் சென்றனன். அக்காலத்தில் எழுதப்பட்ட நந்திக்கலம்பகம் என்ற சீரியநூலில், அம்மன்னனின் வெற்றிகள் சிறப்பிக்கப்படுகின்றன. இந்நூலில், காஞ்சி, மாமல்லபுரம், மயிலை (மைலாப்பூர், சென்னை) முதலிய சிறந்த நகரங்கள் குறிப்பிடப்படுகின்றன. இவனும் ஒரு இராட்டிரகூட இளவரசியை மணந்தான். சிவவழிபாடுடைய இவ்வரசன் தமிழ் இலக்கியத்தைப்போற்றி வளர்த்தான். பாரதவெண்பா பாடிய பெருந்தேவனார், மூன்றாம் நந்திவர்மன் காலத்தவராகக் காணப்படுகிறது. பின்போந்த அவன் மகனான நிருபதுங்கவர்மன் (சுமார் 849—875) பாண்டியன் ஸ்ரீமாரனை, அரிசிலாற்றங்கரையில் தோற்கடித்தனன். இவனுடைய பாஹூர் (வாஹூர், புதுச்சேரி அருகில்) செப்பேடுகள், வேதங்களையும், சாத்திரங்களையும் கற்பிக்க ஒரு நிலையத்திற்கு மூன்று ஊர்களை இவனுடைய அமைச்சன் நன்கொடையாக வழங்கியதைக் குறிப்பிடுகின்றன. அபராசிதன் (சுமார் 875—893) என்ற இறுதியான பல்லவமன்னன், ஸ்ரீபுரம்பியத்தில் (திருப்புரம்பியம், குடந்தை அருகில்) சுமார் 880-ல் இரண்டாம் வரகுண

பாண்டியனைத் தோற்கடித்தான். இப்போரில் மேலைக்கங்க மன்னன் முதலாம் பிருதிவிபதி பல்லவனுக்கு உதவினன். ஆனால் ஒன்பதாம் நூற்றாண்டின் முடிவில் ஆதித்தசோழன், அபராசிதனை வென்றதுடன் பல்லவ அரசு வீழ்ந்தது.

## அரசியலும் கலைப்பண்பும்.

கி. பி. நான்காம் நூற்றாண்டில் சிறந்த ஆட்சி முறை அமைந்திருந்ததென்பது, சிவக்கந்தவர்மனின் இரகடகல்லி செப்பேட்டிலிருந்து அறியக்கிடக்கிறது. அரசியலார் பலவகையான வரிகளை வாங்கினர். வரிச்சுமையினின்று விலக்கைப் பெற்ற சில நிலப்பகுதிகள் அந்தணர்களுக்கு நன்கொடையாக வழங்கப்பட்டதைப்பற்றி, அச்செப்பேடு விளக்குகிறது. உப்புக்காய்ச்சுதலும், சர்க்கரை செய்தலும் அரசியலாரின் தனி உரிமைகளாயிருந்தன. மேலும் குறுநிலத் தலைவர்கள், இளவரசர்கள், தளபதிகள், மாவட்டத்தலைவர்கள், சுங்கஅதிகாரிகள் மற்றும் பல அரசியல் அலுவலாளர்கள் முதலியோருக்கு அரசன் அனுப்பிய ஓர் ஆணையையும் அச்செப்பேட்டிலிருந்து அறிகிறோம். கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. மூன்றாம் நூற்றாண்டு வரை, தொடர்ந்துவந்த மோரிய ஆட்சி முறையை ஒத்து, ஆதிபல்லவரின் ஆட்சிமுறை அமைந்திருந்தது. வரிவாங்கும் முறையைப்பற்றியும், ஊராட்சிக்குழுக்களைப் பற்றியும், பல்லவ மன்னர்களின் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. ஊராட்சிக்குழுக்கள், சிறிதளவு, பிற்காலத்திய சோழருடையதைப் போன்றிருந்தன. ஊர்களின் பேரவை (சபா) களில் அந்தணர்கள் நிறைந்திருந்தனர். குழுவின் உறுப்பினருக்கு விதிக்கப்பட்டிருந்த தகுதித் திட்டங்களைக் கொண்டு அஃது அறியப்படுகிறது. கோயில்களைக்கண்காணித்தல், குளங்களை மேற்பார்வையிடுதல், மற்ற பொது வேலைகளைப் பார்த்தல் முதலிய செயல்களை பேரவை ஆற்றிவந்தது.§

---

§ C. Minakshi, Administration and Social Life under the Pallavas (1938), Chapter IX.

## சமயமும், இலக்கியமும்.

கி. பி. ஏழாம் நூற்றுண்டில் சிவ, விட்டுணு வழிபாட்டு முறைகளுடன் கூடிய இந்து சமயம் முன்னேறியும், பல்லவர் பேரரசில் புத்தமும், சமணமும் வீழ்ச்சியுற்றும் வந்தனவென்று முன்னர் கூறப்பட்டது. சிறந்த அறிவியல் நகரமாக (சிறப்பாக வடமொழிக் கல்வியில்) விளங்கிய காஞ்சியின் பெருமைக்கு, பேரறிஞர்களால் இயற்றப்பெற்ற கல்வெட்டுக்கள் சான்ருக ளாம். பிற்காலத்திய பட்டயங்களில் மட்டுமே ஒரு தமிழ்ப் பகுதி காணப்பெறும். கதம்பகுல முதல்வனுன மயூரசர்மன், கல்விகற்று முழுத்தேர்ச்சிபெற காஞ்சி சென்ருன். திங்நாக னின் பெயர், காஞ்சியுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. பாரவி சிம்மவிட்ணுவின் அவைக்கு அழைக்கப்பட்டாணும். ஏழாம் நூற்றுண்டில் முதலாம் மகேந்திரவர்மன் வடமொழியில் ஓர் நகைச்சுவை நாடகம் இயற்றினன். சீலபத்திரனுக்கு முன்னர், நாலந்தா பல்கலைக்கழகத்தின் தலைவனுயிருந்த தர்ம பாலன், காஞ்சிக்கு உரியவனென்று யுவான்சுவாங் கூறுகிருன். தண்டி, பல்லவர் அவையில் இருந்ததாகச் சிலர் கூறுவர். பாசனின் நாடகங்கள் இராசசிம்மனின் அவைக்களத்தில் நடிக்கப்பட்டன என்பாருமுளர்.

தேவாரங்களியற்றிய அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவரும், சிலருடைய கருத்தின்படி மாணிக்கவாசகரும் (சிலர் மாணிக்க வாசகர் அப்பருக்குமுன் வாழ்ந்தவர் என்பர்) பல்லவப்பேரரச ரின் காலத்தவராவர். திருமங்கை ஆழ்வார்போன்ற சில ஆழ் வார்களும் அக்காலத்திற்குஉரியவராவர். ஆகவே, தேவாரமும் நாலாயிரப்பிரபந்தமும் பல்லவர் கால சமய இலக்கியத்தின் தன்மைக்கும் உயர்வுக்கும் எடுத்துக்காட்டுகளாயுள்ளன. சைவ, வைணவ அடியார்களான, சம்பந்தர், திருமழிசை, தொண்டரடிப்பொடி, திருமங்கை ஆழ்வார்கள், மாணிக்க வாசகர் முதலியோர் புத்த, சமண, சமயங்களின் வீழ்ச்சியை விரைவுறச்செய்தனர்.

## கலை.

**தேர்கள்.** முதலாம் நரசிம்மவர்மன், ஒரு கல்லையே கோவிலாக அமைக்கும் பணியை மேற்கொண்டிருந்தான். மாமல்லபுரத்தில் உள்ள அத்தகைய சில கோவில்களுக்கு பாமர மக்கள் "தேர்கள்" என்று பெயரிட்டனர். ஒரே வரிசையில் ஐந்து கோவில்கள் இருக்கும் காரணத்தால் "பாண்டவர் தேர்கள்" என அவை வழங்கப்பெறுகின்றன. தருமராசன் தேர், வீமன் தேர், அர்ச்சுனன் தேர், சகாதேவன் தேர், திரௌபதி தேர், ஆகிய ஒவ்வொன்றும் ஒரே கல்லால் ஆக்கப்பெற்ற சிவன் கோவில்கள். அங்கு காணப்பெறும் பல விலங்கு உருவங்களும் பல காட்சிகளும் வியப்புக்குரியன. மகாபலிபுரம் என வழங்கும் மாமல்லபுரத்தில் காணப்படும் மண்டபங்கள் கோவில்களைப்போலவே, இறை உள்ளிடமும் வெளி மண்டபமும் உடையதாக உள்ளன. பெரிய பாறைகள்மீது செதுக்கியுள்ள சிற்பங்கள் போற்றத்தக்கன. கண்ணன் கோவர்த்தன மலையைப் பிடித்துள்ள காட்சி அறிஞர்களால் மிகவும் வியந்து பாராட்டப்பட்டுள்ளது. "அர்ச்சுனன் தவம்" எனப் பலரால் கூறப்பட்டு வரும் கங்கைக்கரைக் காட்சி, அக்காலச் சிற்பிகளின் திறனை நன்கு எடுத்துக்காட்டும். ஒரு ஆறு; அதன் நடுவில் நாகர் நீராடல்; ஆற்றுக்கு மேற்புறத்தில் பறவைகள் நீராட நிற்றல்; கீழ்புறத்தில் முனிவர் தவம்செய்யும் காட்சி; இவர்களைப் பார்த்து ஒரு பூனை யோக நிலையிலிருத்தல்; எலிகளும் அதைக்கண்டு அச்சம் நீங்கி அன்புகொண்டு விளையாடுதல் முதலிய சிற்பக்காட்சிகள் காண்போருளத்தில் கழிபேருவகை ஊட்டுவனவாக உள்ளன. பல்லவர் காசுகள், சிறந்த வேலைப்பாட்டு முறைகளுடன் செம்பு, வெள்ளி, பொன் ஆகிய உலோகங்களால் செய்யப் பட்டனவாயுள்ளன.

## திராவிடக்கலை அமைப்பின் படிமுறைத்தோற்றம் (Evolution)

தமிழ்நாட்டில் கருங்கல் திருப்பணிவேலை பல்லவர்காலத்திற்றான் தொடங்கியது. பல்லவக்கட்டிட அமைப்பில் நான்கு வகையான நிலைகளைக் காண்கிறோம். அவையாவன :—

1. முதலாம் மகேந்திரவர்மன்
2. மாமல்லன்
3. இராசசிம்மன் — இரண்டாம் நந்திவர்மன்
4. அபராசிதன்

} நிலைகள்

கல்லில் காணப்பெறும் சிற்பவேலை, மரத்தில் செதுக்கப்பட்டது போல் தோன்றுவது போற்றற்குரியது. கட்டிட அமைப்பு, பழைய குடிசை முறையிலிருந்து கோயில் முறையில் வளர்ச்சி யடைந்ததை நோக்குங்கால், பல்லவர் கலை, உள்நாட்டுத் தோற்றத்தைக் கொண்டதேயன்றி வெளிநாட்டுத்தொடர்புடைய தன்று என்பது தெளிவாகும். கலை வளர்ச்சி உள்நாட்டு முறைகளை அடிப்படையாகக் கொண்டதாகும். பேரறிஞர் ஜுவோ-தூப்ரியல் (Jouveou-Dubreuil) திராவிடக்கட்டடக் கலையின் வரலாற்றை ஐந்து பகுதிகளாகப் பிரித்துள்ளார். ''பல்லவர் காலப்பகுதி — (600—850) கல்லில் சிற்பவேலை (குகைக் கோயில்கள் இப் பகுதியிற்றான் தோன்றுகின்றன); சோழர் காலத்தின் முற்பகுதி (850—1100) – சிறப்பான 'விமானங்கள்' (கருக்கோயில்) காலம்; சோழர் காலத்தின் பிற்பகுதி (1100—1350) மிகவும் அழகிய 'கோபுரங்கள்' காலம்; விசயநகர வரலாற்றுப்பகுதி (1350—1600) மண்ட பங்கள் காலம். ; புதிய காலம் — (1600-முதல்) இடை வழிகள் அமைக்கப்பெறும் காலம். கட்டடக்கலை அமைப்பு சிறிது சிறிதாகவே மாறுதலடைந்ததென்றும், வளர்ச்சி, சிறப் பாக அணிசெய்வதைப் பொறுத்ததே என்றும் ஆதலால் திராவிடக் கட்டடக்கலையின் வரலாறு, அணிசெய்யும நுட்ப வேலைப்பாட்டின் வரலாருகவே சுருங்கி அமையுமென்றும் அவ்வறிஞர் கூறுகிறுர். அமைப்பு வளர்ச்சியில் அதிகமாறுதல் காணப்படவில்லை. சிற்பவேலை மிகவும் கவர்ச்சியுள்ளதா யிருப்பினும், கட்டடமுறைகள், தொடக்கநிலையிற்றனிருந்தன.

## பகுதி 12

### பாண்டியர் வரலாறு.

#### குல வரலாறு.

சில செப்பேடுகள், குறிப்பாக, நெடுஞ்சடையனின் வேள்விக்குடி செப்பேடு ஏழாம் நூற்றுண்டிலிருந்து ஒன்பதாம்

நூற்றாண்டுவரையுள்ள பாண்டியர் வரலாற்றை அறிய சிறப்பாக உதவும். களப்பிரருக்கு அடிமைப்பட்டிருந்த பாண்டியர் தலையெடுத்து, அவர்தம் அரசு விரிவுற்றதைப்பற்றி, அச் செப்பேடுகளின் செய்திகள் குறிப்பிடுகின்றன. ஆயினும் அவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள மன்னர்களின் கொடிவழியைப் பற்றியும் முறையான காலவரலாற்றைப்பற்றியும் கருத்து வேறுபாடுகள் அறிஞரிடை காணப்படுகின்றன. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளின் ஒன்றிரண்டு குறிப்புகளிலுள்ள காலத்தை ஆதாரமாகக்கொண்டு, பின்னோக்கி ஒரு ஆட்சிக் காலப்பகுதிக்கு, சராசரியில் இருபத்தைந்து ஆண்டுகள் என்று கணக்கிடுவதன்மூலம், ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டியர் தலையெடுத்ததாகக் கொள்வோமாக.

கடுங்கோன், மாரவர்மன்அவனிசூளாமணி, ஆகிய முதலிரண்டு அரசர்களும், ஏழாம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்ததாகக் கருதலாம். மூன்றாவது மன்னன் சேந்தன் (சுமார் 645—670) போர் விருப்பமுள்ளவனாகவும், முறை வழுவாமலும் இருந்ததாகக் கூறப்படுகிறது. வானவன் என்ற அவன் விருது, சேரரை அவன் வென்றதைக் குறிப்பிடக் கூடும். அவனுக்குப்பின் பட்டமேற்ற அரிகேசரிபராங்குச மாரவர்மன் (சுமார் 670—710) மரபுரையிலுள்ள கூன் பாண்டியனாக இருக்கலாம். நின்றசீர்நெடுமாறன் என்றும் இவனுக்கு ஒரு பெயருண்டு. இவனாட்சியில் பாண்டியர்—பல்லவர் போர் தொடங்கியது. இவன் நெல்வேலியில் ஓர் வெற்றிபெற்றனன். இவ்விடம், சிலரால் திருநெல்வேலி என்று ஊகிக்கப்படுகிறது. “நெல்வேலி வென்ற நின்ற சீர்நெடுமாறன்” என்னும் திருத்தொண்டத்தொகைக் குறிப்பு ஈண்டு நோக்கத்தக்கது. சேரரையும் இவன் முறியடித்தான். கூன் பாண்டியன், சமண சமயத்தினின்று, திருஞானசம்பந்தநாயனாரால் சைவசமயத்தைச் சார்ந்ததாக அறியக்கிடக்கிறது. அதன் பின், பாண்டியன் சமணரை மிகவும் துன்புறுத்தியதாகவும் அறிகிறோம். ஒரு கதையின்படி 8000-சமணர் கழுவிலேற்றப் பட்டனராம். இவ்வெண், மிகைபடக் கூறப்பட்டதென்பது

தெளிவு.§ ஒரு சோழ இளவரசி (மங்கையர்க்கரசி)யை கூன் பாண்டியன் மணந்ததாகவும் அவளும், அமைச்சர் குலச்சிறை யாரும் சம்பந்தரை, மதுரைக்கு அழைத்தனர் என்றும் கூறப் படுகிறது. பின்போந்த கோச்சடையன் ரணதீரன் (சுமார் 710—740) மருதூரில் ஆய்வேளிரையும் (மருதூர்—அம்பா சமுத்திரத்தின் அருகில்) மங்களூரில், மராட்டியரையும் வென் றனன். அவனுக்குப்பின் மாரவர்மன் முதலாம் ராசசிம்மன் (சுமார் 740—765) காவிரிநாட்டுப் பகுதியை வென்று நந்தி புரத்தில் நந்திவர்மன் பல்லவ மல்லனை முற்றுகையிட்டான். பல்லவத்தளபதி உதயசந்திரன், அரசனின் உதவிக்குச்சென்ற வரலாறு முன்னர் குறிப்பிடப்பட்டது. இப்பாண்டியன், மேலைக் கங்க இளவரசியை மணந்தனன். சாளுக்கியரும் (பெரும்பா லும் இரண்டாம் கீர்த்திவர்மன்) இவனால் முறியடிக்கப்பெற்ற னர். இவன் மகாதானங்கள் (பெரிய நன்கொடைகள்) பல வற்றைப்புரிந்தான். பின்வந்த ஜடிலபராந்தகன், நெடுஞ் சடையன் என்னும் சிறப்புப்பெயர்களையுடைய முதலாம் வர குணன் (சுமார் 765—815) பாண்டிய குலத்தின் மிகச்சிறந்த பேரரசனாகக் கருதப்படுகிறான். தனது மூன்றாவது ஆண்டு ஆட்சியில் வேள்விக்குடி பட்டயங்களை வெளியிட்டவன் இவனே. பல்லவர், சேரர் ஆகியோரும் இவனால் தோற்கடிக்கப்பெற்றனர். இவன் காலத்தில் பாண்டியப்பேரசு, தஞ்சாவூர், திருச்சிராப் பள்ளி, சேலம், கோயம்புத்தூர் மாவட்டங்களைத் தன்னுள் ளடக்கியிருந்தது. பல சிவன் கோயில்களும், திருமால் ஆலயங்களும் இவனால் எடுக்கப்பெற்றன. மாணிக்கவாசகர் இவன் காலத்தவரென்று சில அறிஞர்கள் கருதுவர். பின் னர் போந்த ஸ்ரீமார ஸ்ரீவல்லபன் (சுமார் 815—862) ஈழ நாட்டில் படையெடுத்தான். பின்னர் ஈழ வீரர் இவன் நாட்டில் படையெடுத்தபொழுதும் நாட்டைக் காப்பாற்றினன். குடமூக்கு (குடந்தை) என்ற இடத்தில் இவன் சிறந்த வெற்றியை அடைந்தான். "பரச்சக்கரகோலாகலன்" என்ற பட்டத்தையும் இவன் சூடியிருந்தான். மூன்றாம் நந்திவர்ம பல்லவன் இவனை, தெள்ளாறு என்ற இடத்தில் தோற்கடித் தான். பின்பு, இரண்டாம் வரகுணன் (சுமார் 862—880)

§ Nilakanta Sastri, Historical Method in Relation to Problems of South Indian History (1941), pp. 16—17.



இந்தியா கி. பி. 600-900
துருக்கி
ஷாஹியர்
காபூல்
பரிகாசபுரம்
ஸ்ரீநகர்
அவந்திபுரம்
ஜலந்தாரா
பத்ரிநாத்
மூல்தான்
தானேஸ்வரம்
நேபாளம்
மதுரா
கன்னோசி
அயோத்தி
காமரூபம்
மக்ரான்
அரேபியர்
பிராமணபாத்
தேபால்
பின்மால்
அலஹாபாத்
காசி
விக்கிரமசிலா
நாலந்தா
துவாரகை
வாலாபி
புரோச
அஜந்தா
தாம்ரலிப்தி
நாசிக்
எல்லோரா
பூரி
எலிபெண்டா தீவு
மான்யகேடம்
கீழைச் சாளுக்கியர்
பட்டடக்கல்
வாதாபி
மேலைக்கங்கர்
சிருங்கேரி
பல்லவர்
மகாபலிபுரம்
தெள்ளாறு
ஸ்ரீபுரம்பியம்
நந்திபுரம்
தலைக்காடு
கொல்லம்
பாண்டியர்
அனுராதபுரம்
பொலொன்னருவம்
நெல்வேலி
1 காஞ்சி
2 திருச்சிராப்பள்ளி
3 சித்தன்னவாசல்
4 குடிமியாமலை
5 மதுரை
6 கஞ்சம்
7 கலிங்கநகரம்
8 வேங்கி
× போர்க்களம்
---- ஹர்ஷன் பேரரசின் தோராயமான எல்லை, — கோடிட்ட இடங்கள் சங்கரரின் மடங்களைக் குறிக்கும்

அபராசித பல்லவனால் சுமார் 880-ல் திருப்புறம்பியத்தில் முறியடிக்கப்பட்டான். பராந்தக வீரநாராயண பாண்டியன், (சுமார் 880—900) ஒரு சேர இளவரசியை மணந்தனன். தன் நாட்டைக்காப்பாற்ற பெரிதும் முயன்றான். பின்வந்த இரண்டாம் இராசசிம்மன் (சுமார் 900—920) முதலாம் பராந்தகசோழனால் முறியடிக்கப்பட்டனன். சுமார் 920-ல் மதுரை, சோழரால் கைப்பற்றப்பட்டது. இராசசிம்மன், ஈழத்துக்கும் பின்னர் சேரநாட்டுக்கும் ஓடினன்.‡

## ஆட்சிமுறையும் சமயமும்.

"உத்தரமந்திரி" (முதலமைச்சர்) போன்ற பலபணியாளர் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர். மக்களைப் பொறுத்த ஆட்சிமுறையும், இராணுவ அமைப்பும், தனித் தனியாகப்பிரிக்கப்படவில்லை. சுமார் கி. பி. 800-க்கு உரிய மானூர் (திருநெல்வேலி மாவட்டம்) என்ற இடத்தில் கிடைக் கப்பெற்ற ஒரு கல்வெட்டு, பேரவைகளையும், குழுக்களையும் கொண்டு ஊராட்சிமுறை நடைபெற்றதை விளக்குகின்றது. பத்தாம் நூற்றாண்டின் சோழர் முறையை இஃது ஓரளவு ஒத்துள்ளது. பேரவையின் உறுப்பினர், தடை செய்யும் தந்திரங்களைப் பயன்படுத்தினால் தண்டனைக்குரியராவர் என்று அக்குறிப்பில் காணப்படுவது போற்றற்குரியது. நாம் குறிப் பிட்டு வரும் காலப்பகுதியின் பாண்டிய மன்னர்கள் வட மொழியையும், தமிழையும் போற்றி வளர்த்தனர். இக்கால கல்வெட்டுக்கள் முதலியவற்றிலும் இலக்கியச்சிறப்பு காணப் படுறது. சைவ சமயமும், வைணவமும் முன்னேறியதால் புத்தமும், சமணமும் வீழ்ச்சியுறலாயின. சங்க காலத்திய சமயநிலை அடியோடு மாறிவிட்டது. சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார்களும், நாட்டில் ஆன்மீக ஆற்றலைவளர்த்து எளிய மக்களுக்கு அறிவுபுகட்டினர். சமயத்துறையில் துன் புறுத்தல் நிகழ்ந்ததைப்பற்றியுள்ள செய்திகள் யாவும் கலப்பற்ற கற்பனைக்கதைகள் என்று நாம் கூறிவிடலாகாது. சிதம்பரத் தில் மாணிக்கவாசகர், சொற்போர்புரிந்து பௌத்தர்களைச்

‡ K. A. Nilakanta Sastri. The Pandyan kingdom. (1929) Chapters V & VI.

சைவராக்கினர். கூன் பாண்டியன் முன்னிலையில் சமயப் போரில் தோல்வியுற்ற சமணர், தாங்களே கழுவிலேறிய தாகவும் சிலர் கூறுவர்.

## பகுதி 13.

### சேரர்.

இடைக்காலச் சேரர் வரலாறு தெளிவாக அறியப்பட வில்லை. சோழர் அவரைத்தம்மடிப்படுத்தும் வரை, சேரரைப் பற்றிய ஒரு சில குறிப்புக்களே பொதுப்படையாக அறியப் படுகின்றன. சேரநாட்டில் (மலையாளம்) யூதரும், கிறித்தவரும் எப்பொழுது தோன்றினரென்ற சிக்கலான கருத்து ஆராய்ச்சிக் குரியது. மேற்குக்கரை கிறித்தவர் மரபுரையின்படி தாமஸ் என்ற துறவி கி. பி. 52-ல் சொகோத்திரத்திலிருந்து கிராங்க னூர் சென்று, பின் ஏழு மாதாகோயில்களைத் தோற்றுவித்த னரென்றும், முடிவில் மைலாப்பூரில் உயிர்நீத்தார் எனவும் அறியப்படும். கி. பி. ஆறும் நூற்றுண்டில் மலையாளத்தில், கிறித்தவமதம் நிலவியதென்பது, காஸ்மஸ் இண்டிகோபுளுஸ் டெஸ் தரும் குறிப்பிலிருந்து தெரியவரும். கி பி. முதல் நூற்றுண்டில் யூதர் அப்பகுதிக்குச் சென்றதாகக்கருதப்படுகிறது. மரபுரையின்படி அரேபியர் ஒன்பதாம் நூற்றுண்டில் மலையா ளப்பகுதிக்கு வந்தனரென்றும், இந்தியப் பெண்டிரையும் அவர்கள் மணந்ததாகவும் கூறப்படுகிறது. கி. பி. 824—5 முதல் தொடங்கிய கொல்லம் ஆண்டு, கொல்லம் என்ற இடம் தோன்றியதிலிருந்து கணக்கிடப்படுவதாகக் கருதப்படு கிறது. அல்லது கேரளநாட்டுப் பெருமாள்களாட்சியின் முடிவி லிருந்து தொடங்குவதாகவும் கூறுப. கி. பி. 11 அல்லது 12-ம் நூற்றுண்டுக்குரிய சேரரின் ஒரே ஒரு வெள்ளி நாணயம் (நாகரி எழுத்துக்களுடன் கூடியது) காணப்பட்டுள்ளது.

## பகுதி 14.

### சமயம்.

**புத்தசமயம்** — வரலாறு. புத்தருடைய போற்றற்குரிய ஆற்றலும், குணப்பண்பும், அரச குலத்தினர் அவர்பால் கொண்டிருந்த நன்மதிப்பும், அவருடைய வாழ்நாளில், புத்த

சமயம் வளர்ச்சியடையக் காரணங்களாயின என்று முன்னர் கூறப்பெற்றது. அவர் யாரையும் தனக்குப் பின்தோன்றலாக அமர்த்தவில்லை. அவர் கூறிப்போந்த "அறமே" அவரைப் பின்பற்றுவோருக்கு வழிகாட்டியாகுமென்று அறிவித்துச்சென்றார். ஆயினும் அவர் அமைத்திருந்த சங்கம் அவர்தம் குறிக்கோளை நிறைவேற்ற முற்பட்டது. பௌத்தத்துறவிகளிடையே மாறுபாடுகள் பெருகிவந்தபோதிலும் சங்கம் பல அருஞ்செயல்களைப்புரிந்தது. ஒழுங்கான முறையில் சட்டங்கள் அமையப்பெற்றன. ஆனால் அம்மதம் போற்றத்தக்க புற வளர்ச்சியைப்பெறவில்லை. இதைப் பொறுத்தவரை, சமணம் புத்த சமயத்தைவிட வெற்றிபெற்றது. மோரியரின் வீழ்ச்சிக்குப்பின், கங்கைவெளியிலும், கலிங்கத்திலும் முறையே புஷ்யமித்திரன், காரவேலன் ஆகியோரின்கீழ், புத்தசமயம் அரசியலாரின் ஆதரவை இழந்தது. ஆயினும் இந்தியாவின் மற்றப் பகுதிகளில் அஃது வலிமையுற்றிருந்தது. பின் கனிஷ்கனின் ஆதரவைப்பெற்று இந்தியாவுக்கு வெளியே விரைவில் பரவியது. கி. பி. ஏழாம் நூற்றாண்டுவரை தென்னிந்தியாவில் அதன்நிலை மாறுதலடையவில்லை. ஆனால் வட இந்தியாவில் குப்தர் காலத்தில் வளர்ச்சியுற்ற பிராமண சமயம் இதற்குப் பெரும் பகையாயிற்று. ஆயினும் இரு சமயங்களும் பல வகைகளில் ஒரே நிலையான வளர்ச்சியைப் பெற்றிருந்தன. உருவவழிபாடு முதலிய பண்புகளில் இரண்டுக்கும் ஒற்றுமை காணப்பெற்றது. புத்த சமயத்தை, பிராமண சமயம் சிறிது சிறிதாகவென்ற முறை அமைதியானதாகவும் நிலையானதாகவுமுள்ளது. பாகியான், யுவான்சுவாங் ஆகியோரின் குறிப்புக்களிலிருந்து, உள்நாட்டில் புத்த சமயத்தின் வீழ்ச்சியையும், பிராமண சமயத்தின் சிறப்பையும் நன்கு உணரலாகும். புத்த சமயத்திற்கு குறிப்பிடத்தக்க வீழ்ச்சி, வடஇந்தியாவில் எட்டாம் நூற்றாண்டிலும், தென்னிந்தியாவில் ஏழாம் நூற்றாண்டிலும் ஏற்பட்டது.

### வெற்றிக்குரிய காரணங்கள்.

புத்தசமய வீழ்ச்சியை நோக்குவதற்கு முன்னர் அதன் வெற்றிக்குரிய காரணங்களைக் கூறுவாம். புத்தர் இறந்தபின்

அவர்தம் சிறந்த பண்புகள், தூய மரபிலக்கியங்கள் மூலம் போற்றப்படலாயின. இவ்வாறு மரபாக வந்த பௌத்தக் கதைகளின் வரலாற்று உண்மை எவ்வாறிருந்தபோதிலும், பெரியார்பற்றும் அடக்கமும்கொண்ட மக்களும், ஊக்கம்மிக்க துறவிகளும், அவற்றை உண்மையெனவே நம்பிப்போற்றினர். புத்தரின் பெருந்துறவும், சிறந்த பண்புகளும், அருஞ்செயல்களும் அவரைப்பற்றி அறிந்த மக்களின் மனதைப்பெரிதும் கவர்ந்தன. இதற்கு இணையான ஒன்று பிராமண சமயத்தில் இல்லை என்பது நோக்கற்பாலது மகாயானத்தின் தோற்றத்திற்குப் பிறகு புத்தர், ஒரு கடவுளாக்கப்பெற்றார். இஃது மேலும் மக்களின் உளத்தைக்கவர உதவியது. அடுத்தபடியாக, எளிய வாழ்க்கையும் சீலமும் பொருந்திய உறுப்பினர்களைக் கொண்ட புத்தசமயச் சங்கங்களின் சிறப்பு குறிப்பிடத்தக்கதாகும். சமயம் பரவுதற்கும் பொதுமக்களிடமிருந்து பொருளுதவியைப் பெறவும் ஏற்ற முறையில் அவை அமைந்திருந்தன. மகாயான முறையின் வளர்ச்சியின் பயனாக அச்சமயம், பெருக்கமுற்றது. அனைவற்றிற்கும் மேலாக, அரசியலாரின் உதவி கிடைத்தமை சிறப்பாக நோக்கத்தக்கது. அஃதின்றி, சங்கம் அருஞ்செயல்களைச் செய்ய இயலாது. அசோகன், கனிஷ்கன் ஆகியோரின் முயற்சிகளின் விளைவாக, அஃது உலகத்திலே ஒரு சிறப்பான நிலையை அடையலாயிற்று. மக்கள் வழங்கிய நன்கொடைகளுக்கு அரசர்கள் அளித்த ஊக்கம் சிறந்த காரணமாகும். எடுத்துக்காட்டாக, அசோகனும், கனிஷ்கனும் புரிந்தசெயல்கள் நோக்கற்பாலன.

## புத்தசமய வீழ்ச்சி.

காபூல், தட்சசீலம், சிந்து, சட்லெச் ஆற்றுக்குத்தெற்கிலும் தானேசுரத்துக்கு வடக்கிலும் உள்ள பகுதி, மகதம், ஒரிஸ்ஸா முதலிய இடங்களில் புத்தசமயம் செழிப்புற்றிருந்ததாக யுவான்சுவாங் கூறுவன். அஸ்ஸாமில் அது நிலைபெற்றிருக்கவில்லை. பெரும்பாலும் பிராமண சமயத்துடன் தொடர்ந்தே அஃது முன்னேறியது. ஆனால் (மேலே குறிப்பிட்ட பகுதிகளைத் தவிர) வடமேற்கு இந்தியாவில் இது வீழ்ச்சியுற்ற நிலையிலிருந்தது. தென்னிந்தியாவில் காஞ்சிப்பகுதி தவிர மற்றெங்கும்

அதன் சிறப்பு குன்றிவிட்டது. பாண்டிய நாட்டிலும் அதன் நிலை சிதைவுற்றதாயிருந்தது. எட்டாம் நூற்றுண்டிலும் அதன் பின்னரும், வங்காளம், பீஹார், நேபாளம், சிந்து ஆகிய இடங்களைத்தவிர்த்து மற்றெங்கிலும், பிராமணசமய வளர்ச்சியின் விளைவாக பௌத்தம் மறைந்தது. மேற்கூறிய பகுதிகளில் சமணசமயத்தைச் சார்ந்த இடங்களைத் தவிர்த்து பிற இடங்களிற்றான் புத்தசமயம் காணப்பட்டது.

## சமணமும் பிராமணசமயமும்.

கத்தியவார், குஜரத், மைசூர் ஆகிய பகுதிகளில் சமணம் வலிமையுற்றிருந்தது. இராட்டிரகூடரின் ஆதரவு அதற்குக் கிடைத்தது. வாதாபி சாளுக்கியரும் சமணரைத் துன்புறுத்தாமல் அன்புடன் நடந்துகொண்டனர். தொடக்கத்தில் சில பாண்டிய மன்னர், அச்சமயத்தைப் பின்பற்றினரெனினும், கூன்பாண்டியனுக்குப் பிறகு அதன் சிறப்பு அவர்கள் நாட்டில் குன்றியது. முதலாம் மகேந்திரவர்மன், சைவ சமயத்துக்கு மாறியபின், சமணம், பல்லவரின் ஆதரவை இழந்தது. ஆயினும் தமிழ்நாட்டில் அதன் நிலை, புத்த சமயத்தைவிடச் சிறந்ததாகவே இருந்தது. பிராமண சமயம், புத்தசமயத்தையும், சிறிதளவு சமணத்தையும் அடக்கி மேலோங்கியது. நாம் குறிப்பிட்டுவரும் காலப்பகுதியில், குமரில்லபட்டர், சங்கரர் என்று இருபெரும் தலைவர்கள், பிராமண சமயத்திற்காகத் தொண்டாற்றினர்.

## சொராஸ்திரிய சமயம்.

கி. பி. 652-ல் அரேபியர், பாரசீகத்தில் சஸ்ஸேனிய மரபைக் கவிழ்த்தனர். அதன் விளைவாக, "ஈரானிய புண்ணியப்பயணத் தந்தையர்" அல்லது பார்சியர் என்பார், ஓர்மஸ்ஸை விட்டுநீங்கி, சுமார் 716-ல் டையூ (Diu) வந்தடைந்தனர். சில ஆண்டுகள் அங்கு தங்கி, பின் சஞ்சன் (பம்பாய்க்கு 100-மைல் வடக்கிலும், டாமனுக்கு (Daman) சுமார் 16-மைல் தெற்கிலும் உள்ளது) என்ற இடத்துக்குப் போந்து சுமார் 735-ல் ஆண்டு தங்கலாயினர். இந்நிகழ்ச்சிக் காலத்தைப்பற்றி கருத்து வேறுபாடு உளது. சில அறிஞர்

936-ம் ஆண்டு என்றும் பேசுவர். பார்சியர், தமது இந்திய வருகைக்குமுன், இந்து அரசருக்குக் கீழ்க்காணும் அறிக்கையை விடுத்தனர். அதாவது "எம்மைக்கண்டு அஞ்சற்க; எம்மால் நுமது நாட்டிற்கு எத்தீங்கும் விளையாது; யாம் இந்தியாவின் நண்பர்களாயிருந்து உமது பகைவரை அழிப்போம்." இவர் தம் இந்திய வருகை, ஹூக்னேக்கள்† இங்கிலாந்துக்கும், பியூரிடன்கள் என்னும் ஆங்கிலேயச் சமயச்சீர்திருத்தவாதிகள் அமெரிக்காவுக்கும் சென்றதுடன் ஒப்பிடப்படுகிறது. 1492 வரை சஞ்சன் என்றவிடத்தில் பார்சியர் தங்கினர். அவ்வாண்டில், குஜரத் சுல்தானுடன் முகம்மதுடன் போரிட்டுத் தோற்றதன் விளைவாக அவர்கள் இடம் தாக்குண்டது. பின் குஜராத்துக்குச் செல்லலாயினர். பிற்காலத்தில், பெண்கல்வி, குடும்ப வாழ்க்கை, இனப்பழக்க வழக்கங்கள் முதலிய பண்புகளில் பார்சியரின் சேவைகள் போற்றற்குரியன.

## பகுதி 15

### இனவாழ்க்கை.

**சாதி முறை.** நாம் கூறிவரும் காலப்பகுதியில், நான்கு சிறப்பான பிரிவுகளைத் தவிர வேறு சாதிகளும் காணப்பட்டதெனினும், பின்னர் ஏற்பட்டதுபோல எண்ணற்ற சாதி உட்பிரிவுகள், தோன்றவில்லை. சுமார் 900-ம் ஆண்டில் ஓர் அரேபிய ஆசிரியர் பின்வரும் முறையில் ஏழு சாதிகளைக் குறிப்பிடுகிறார். அரச குலத்தினர், அந்தணர், க்ஷத்திரியர், சூத்திரர், வைசியர், சண்டாளர், லகுதர் (நாடோடி மக்களாயிருக்கலாம்). ஆனால் இஃது முழு உண்மை நிறைந்ததெனக் கூறுவதற்கில்லை. மணவினை உறவு சாதிமுறையால் கட்டுப்படுத்தப்பட்டதெனினும் விதிவிலக்குகள் காணப்பட்டன. மற்ற சாதியினருக்குரிய வேளாண்மை முதலிய பல தொழில்களை, அந்தணர்களும் கைக்கொண்டிருந்தனர். பெரும்பான்மையில் மக்களிடம் குடிப்பழக்கம் இல்லை என்று அயல் நாட்டு அறிஞர்கள் குறிப்பிடுவர். "கொல்லாமை" என்றகொள்கை சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து வந்தது. வேள்வி முறை பெரும்பாலும் வழக்கில் இல்லை. உயர் வகுப்பினரிடை கூட்டு உணவுகொள்ளும் முறை தடைசெய்யப்படவில்லை.

† Huguenots - பிரான்ஸ் நாட்டின் சமயச்சீர்திருத்தக் குழுவினர்.

### பெண்டிர்.

அணிகலன்கள் அணிவதில் மிகுந்த அவா பெண்டிரிடம் காணப்பட்டது. அரசகுலப் பெண்டிரும் விலை உயர்ந்த காதணிகள், கழுத்தணிகள் முதலியவற்றை அணிந்தனர். ஆனால் மூக்கிற்கு அணிகலம் சிறப்பாகக் காணப்படவில்லை. அதற்குரிய சொல் வடமொழியில் இல்லை. ஆகவே, பிற் காலத்தில், முஸ்லிம்களிடமிருந்து அஃது அறியப்பட்டிருக்க வேண்டும்.‡ இளமைப்பருவ திருமணமுறை, எட்டாம் நூற் றாண்டில் தொடங்கியதென்பது, அறிஞர் C. V. வைத்யா அவர்கள் கருத்து. ஆனால், "சூத்திரங்கள் கால"த்திலேயே அந்தணரிடை அப்பழக்கம் நிலவியதென்று முன்னர் கூறப் பெற்றது. மேலும், பிரம்மபுராணம், நான்கு ஆண்டுகளைக் கடந்த பெண் மணம்புரிந்து கொள்ளலாமென்று கூறுவதும் நோக்கத்தக்கது. உடன்கட்டையேறும் பழக்கமும், கைம்பெண் மறுமணத் தடையும் வழக்கிலிருந்தன. பாணன், தனது "காதம்பரி" என்ற நூலில், உடன்கட்டை ஏறும் முறையைக் கண்டிக்கின்றான். ஆயினும் ஏழாம் நூற்றாண்டிலும் அதன் பின்னும் அப்பழக்கம் வளர்ச்சியுற்று வந்தது.

## பகுதி 16

### கலைப்பண்புகள்.

**இலக்கியம்.** மேலே பல்வேறு குலங்களின் வரலாற் றைப்பற்றிக் கூறுகையில், கலைப்பண்பும் குறிப்பிடப்பெற்றது. ஈண்டு, ஒவ்வொரு நூற்றாண்டாக, வடமொழி இலக்கிய வளர்ச்சியைப்பற்றிப் பேசுவோம்.

### ஏழாம் நூற்றாண்டு.

**பர்த்ருஹரி.** முன்னர், ஹர்ஷன், பாணன், மயூரன், முதலாம் மகேந்திரவர்மபல்லவன், முதலியோருடைய நூல் களைப்பற்றிக் குறிப்பிடப்பட்டது. இட்சிங்கின் குறிப்புப்படி

‡ **Altekar—The position of Women in Hindu Civilisation pp. 362—64.**

பர்த்ருஹரி, சுமார் கி. பி. 651-ல் இறந்தார். அவரது புகழ் பெற்ற "வாக்கியபாடியம்" என்றநூல், வடமொழி இலக்கண தத்துவங்களை உணர்த்தும். பதஞ்சலியின் "மஹாபாஷ்யத்" திற்கும் அவர் விரிவுரை எழுதியுள்ளார். ஒழுக்கம், அன்பு, துறவு ஆகியனவற்றைப்பற்றி பர்த்ருஹரி எழுதிய மூன்று "சதகங்கள்" (சதகம் நூறு பாட்டுகளைக்கொண்டது) அவ்வாசிரியரின் புகழுழை மிகுதியாக்கின. ஆனல் மேற்கூறிய இலக்கண நூலையும் செய்யுட்களையும் எழுதியவர் ஒரே ஆசிரியரா என்பது பற்றி ஐயம் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. ஆனல் "வாக்கிய பாடியம்" ஆசிரியர், ஏழு முறைகள் துறவியாக மாறிய ஒரு பௌத்தர் என்பதில் ஐயமில்லை. இவரே "சதகங்களையும்" எழுதியிருக்கக்கூடும். ஐரோப்பா அறிந்த முதல் வடமொழிக் கவி இவரேயாவர். "நீதிசதகம்" "வைராக்கியசதகம்" என்னும் இவரது நூல்களை, 1651-ல் அப்ரஹாம்ரோஜர் என்ற டச்சு மதபோதகர் மொழிபெயர்த்தார்.

## பிரபாகரரும் பிரம்மகுப்தரும்.

"ஜானகிஹரணம்" என்ற வீரகாவியத்தை எழுதியவர், காளிதாசனைப் பின்பற்றிய குமாரதாசர் என்பாராவர். பிரபாகரர் என்னுமறிஞர், மீமாம்ச வகுப்பைத் தோற்றுவித்தார். பிரம்மகுப்தர், 628-ல் தனது வானநூலையும், 665-ல் கணித நூலையும் இயற்றிப் புகழ்பெற்ருர்.

## எட்டாம் நூற்ருண்டு.

பவபூதியைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பெற்றது. பட்டநாராயணர் என்பார், "வேணிசம்ஹாரம்" என்ற நாடகத்தை இயற்றினர். இஃது துரௌபதியின் கூந்தலைப்பிடித்து இழுத்துச் சென்றதையும், அவள் அவ்வாறு துன்புறுத்தியவரின்மீது பழிதீர்த்துக்கொள்ளும் வரை கூந்தலை முடிப்பதில்லை என்று உறுதி பூண்டதையும்பற்றிக் கூறுகிற்கும். "சிசுபாலவதம்" என்ற மகாகாவியம் எழுதிய, மாகன் ஒரு சிறந்தகவி. "சதகம்" என்னும் காதல் நூலை இயற்றிய அமரு என்ற

கவியின் காலம் 650-க்கும் 750-க்கும் இடைப்பட்டதென்பது பேரறிஞர் A. B. கீத் அவர்களின் கருத்து. மற்றும், தாமோதர குப்தன், உத்பதன், வாமனன் முதலியோரைப்பற்றி முன்னர் கூறப்பட்டது.

## குமரில்லபட்டர்.

அறிஞர் C. V. வைத்யா அவர்கள், குமரில்லபட்டர், மத்தியதேசத்துக்கு உரியவரென்றும், மற்றும் சிலர் அவர் அஸ்ஸாமில் தோன்றியவரென்றும் கூறியபோதிலும், அவர் தென்னிந்தியாவுக்கு உரியவரென்றே கூறலாம். வேதங்களின் உயர்வை மறுத்த புத்தசமயத்தை, குமரில்லர் வலிமையுடன் எதிர்த்து நின்றனர். அதனை அடக்கி, பிராமண சமயத்தைப் பரப்புவதில் அடுத்த நூற்றாண்டுக்குரிய சங்கரரைவிட மிகுதி யாகவே, இவர் தொண்டாற்றினர். இவருடைய எதிர்ப்பார்வம் சில இடங்களில் பௌத்தர் துன்புறுத்தப்பட்டமைக்குக் காரணம் என்று கதைகள் உண்டு. குமரில்லர், பலமொழி களில் வல்லுநர். மீமாம்ச முறையில் புதிய பிரிவை இவர் தோற்றுவித்தார். தன்னை ஓர் பௌத்தன் என்று உண்மையை மறைத்துக்கூறி, இவர் பௌத்த ஆசிரியர்களிடமிருந்து அச் சமயக் கருத்துக்களை உணர்ந்தாரென்றும் பின், முதுமைப் பருவத்தில், "குருத்துரோகக்" குற்றத்துக்காக, தன்னைத் தீக்கிரையாக்கிக் கொண்டாரென்றும் கூறப்படுகிறது. சுருங்கக் கூறின், குமரில்லர் பௌத்த அறிஞர்களை வாதில் வென்று, வேதங்களின் உயர்வை நிலைநிறுத்தி, புத்தசமய வீழ்ச்சிக்கு ஒரு காரணமாக இருந்தார்.

## காமந்தகனும் வாக்பாடரும்.

கௌடில்யரின், அர்த்தசாத்திரத்தை ஒத்த "நீதிசாரம்" என்ற நூலை காமந்தகர் இயற்றினர். இளைய வாக்பாடர் எழுதிய "அஷ்டாங்க இருதய சம்ஹிதை" என்பது ஓர் சிறந்த மருத்துவ நூல்.

## ஒன்பதாம் நூற்றாண்டு.

சங்கரர் :— சங்கரரின் வாழ்க்கையைப் பற்றிய நம்பத்தக்க வரலாற்று உண்மைகள் மிகக்குறைவு. இவர், காலடியில் (வடக்கு திருவாங்கூர்) நம்பூத்ரி பிராமண குலத்தில் பிறந்தார். பெரும்பாலும் இவர் தோன்றிய காலம் எட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியாகலாம். ஆனால் அறிஞர், K. G. சங்கர், என்பார் சங்கரர் குறிப்பிடும் பூர்ணவர்மன் என்ற பெயர் அதே பெயரைக்கொண்ட சாவக (Java) மன்னனைக்குறிப்பிடுவதாகச் சான்று காட்டி அவர்காலம், கி. பி. 452—'84 என்று பேசுவர்.‡ கௌடபாதரின் மாணவரான கோவிந்தர், சங்கரரின் ஆசிரியராயினர். பகவத்கீதை, உபநிடதங்கள், பாதராயணரின் பிரம்ம சூத்திரங்கள் முதலியவற்றிற்கு சங்கரர் விரிவுரை எழுதினர். உச்சயினி, காச்மீரம், நேபாளம், அஸ்ஸாம் முதலிய பல இடங்களுக்குச் சென்றார். பத்ரிநாத், துவாரகை, பூரி, சிருங்கேரி முதலிய இடங்களில் மடங்களை நிறுவினர். சங்கரர் தமது முப்பத்திரெண்டாவது வயதில் இறந்தார் என்னும் மரபுரை நம்பத்தக்கதாக இல்லை. அவ்வயதில் துறவறம் பூண்டிருக்கலாமென்று ஊகிக்கலாம். இவர் தனது பன்னிரெண்டாவது வயதில் "சூத்திர பாஷ்யத்தை" இயற்றிமுடித்தாரென்ற நம்பிக்கை சிலரிடம் காணப்படுகிறது.

### அத்துவைதம்.

மாயை முதலிய பல கொள்கைகளை, சங்கரர் புத்த சமயத்தவரிடமிருந்து அறிந்தபோதிலும், அடிப்படையில், உபநிடதங்களை ஆதாரமாகக்கொண்டு, புத்தசமயத் தத்துவங்களை எதிர்த்துத் தனது தத்துவத்தை வெளியிட்டார். அத்துவைத முறையில், சங்கரர் தமக்கு முற்பட்டோருக்கு சிறிதளவு கடப்பாடுடையோராயிருந்தபோதிலும் அவர் தத்துவம், தனித்த கற்பனைசக்தியுடன் விளங்குவதைக் காண்கிறோம். மெய்யறிவுக்கும், பொய்யறிவுக்கும் உள்ள வேறுபாட்டை இவர் நன்கு உணர்த்தினர். இந்திய மெஞ்ஞானப் பெரியாருள் ஒருவரென சங்கரர் மேனாட்டு நுண்ணறிஞர்களாலும் போற்றப்படுகிறார்.

‡ A. Volume of Eastern and Indian Studies pp. 262—264.

### வாசஸ்பதிமிஸ்ரர்.

இவர், மீமாம்சம், அத்துவைதம், சாங்கியம், யோகம், நியாயம் முதலிய பல சாத்திரநூல்களுக்கு விரிவுரை எழுதிப் புகழ்பெற்றார். இவர்தம் நடுநிலையான போக்கு போற்றற் குரியது.

## அதிகாரம் 8.

## (கி. பி. 900—1200)

### கூர்ச்சரப்பிரதிகாரர் (தொடர்ச்சி)

**பகுதி 1**

### முதலாம் மகிபாலன்.

முதலாம் மகிபாலன் (914—943) 916-வரை தன்னு டைய பேரரசு சிதறாமல் காப்பாற்றி வந்தான். அவ்வாண்டில் இராட்டிரகூட அரசன் மூன்றாம் இந்திரன் அவனை முடியடித்த துடன் கூர்ச்சரப்பிரதிகாரப் பேரரசின் வீழ்ச்சி தொடங்கியது. அவனுக்குப்பின் கன்யாகுப்ஜத்தை ஆட்சிபுரிந்த, இரண்டாம் மகேந்திரபாலன், தேவபாலன், விநாயகபாலன், இரண்டாம் மகிபாலன், இரண்டாம் வத்சராசன், விசயபாலன் முதலிய அரசர்களின் காலமுறை வரலாறு தெளிவற்றதாகும். தேவ பாலன் விரும்பிப்போற்றிவந்த ஒரு திருமால் உருவச்சிலையை, சந்தேலமன்னன் யசோவர்மன் தூக்கிச்சென்றான். பத்தாம் நூற்றாண்டின் பிற்பாதியில், பிரதிகாரப் பேரரசுக்குட்பட்டிருந்த மானியக்காரர் பலர் உரிமைபெற்று தனி ஆட்சி நடத்த லாயினர். சிறப்பாக, பரமாரர், சந்தேலர் குறிப்பிடத்தக்கோர். அனகில்வாடின் சோலங்கியர், திரிபுரியின் காலசூரியர் முதலி யோரும் அவ்வாறே உரிமைபெற்றனர்.

### இராச்சியபாலன்.

கி. பி. 960-க்கும் 1018-க்குமிடைப்பட்ட காலத்தில் அரசுகட்டிலேறிய இராச்சியபால கூர்ச்சரன் கங்கைக்கும், யமுனைக்கும் இடைப்பட்ட பகுதியையே ஆண்டு வந்தனன்.

1018—19-ல் முகம்மது கசினி கன்யாகுப்ஜத்தில் படையெடுத்தபொழுது இராச்சியபாலன் போரிடாது அவனுக்கு அடிபணிந்தனன். ஆயினும் அத்தலைநகர் தாக்கப்பட்டது. ஆண்மையற்ற செயல்புரிந்ததற்காக, இராச்சியபாலனைத்தண்டிக்க விரும்பிய சந்தேல சிற்றரசன் அவனுடன் நடத்திய போரில், முன்னவன் இறந்தான். இவ்வாறு பிரதிகாரப் பேரரசு முடிவுற்றது. 1090-ல் சந்திரதேவ காகடவாலன் கன்யாகுப்ஜத்தைக் கைப்பற்றியிருந்தான். பிரதிகாரர், சிவனையும் திருமாலையும் வழிபட்டனர். பகவதி வழிபாடும் மிகுந்த அன்புடன் போற்றப்பட்டது.

## பகுதி 2

### கசினிமுகம்மது.

### யாமினிகுலம்.

சபக்டஜீனின் மூத்தமகனுன மூகம்மது என்ற துருக்கியன், கி. பி. 971-ல் பிறந்தான். அவன் இளமையில் இலக்கியங்களைக் கற்றதுமன்றி தன் தந்தையின் உடனிருந்து ஆட்சி முறை அறிவையும், போர்ப் பயிற்சியையும் பெற்றனன். ஆனல் சபக்டஜீன், அவனுடைய இளைய குமாரனை இஸ்மெயிலைத் தனக்குப்பின் அரசுரிமை ஏற்குமாறு தேர்ந்தெடுத்து, 997-ல் இறந்தான். அடுத்த ஆண்டில் முகம்மது அவன் தம்பியைத் துரத்திவிட்டு, கசினியின் மன்னனுனன். இவ்வாறு, ஆப்கானித்தானம், கொராசான் அல்லது கீழைப் பாரசீகம் அடங்கிய பகுதியைப்பெற்ற முகம்மது, தன்படைத் தொழிற்றிறமையால், 999-ல் சீஸ்தான் முதலிய இடங்களைக் கைப்பற்றி தன்னுட்டைப் பெருக்கினுன். இவனுடைய செயல்களை ஆதரித்து மெச்சி, கலிபா இவனுக்கு "யாமினுட்டௌலா" என்ற பட்டத்தை அளித்தனன். ஆதலால் இவன் குலத்தினர் யாமினியர் எனப் பெயர் பெற்றனர்.

### முகம்மதுவின் இந்தியப்படையெழுச்சி.

ஆண்டுதோறும் இந்தியாவைப் படையெடுத்து, புறச் சமயத்தினருடன் போர்புரிய அவன் செய்துகொண்ட முடிவுப்

படி, கசினிமுகம்மது, பதினேழு இந்தியப் படையெழுச்சிகளை நிகழ்த்தினனென்று கூறப்படுகிறது.

(1) சுமார் கி. பி. 1000-ஆண்டில், இந்திய எல்லையில் கொள்ளையிட்டு சில இடங்களைக் கைப்பற்றினன். (2) அடுத்த ஆண்டில், ஷாஹி மன்னன், செயபாலன் முறியடிக்கப்பட்டான். மீண்டும் இந்தியா, முகம்மது கசினியால் குறையாடப்பட்டது 1002-ல் முகம்மது, சீஸ்தானில் கலகக்காரர்களை அடக்கு வதில் முனைந்தான். (3) 1004-ல் ஊச் என்ற இடம் கொள்ளையிடப்பட்டது. தன்னை எதிர்த்த மூல்தான் அரசனைத் தண்டிப்பதற்காக 1005-ல் முகம்மது அந்நாட்டில் படையெடுத்தான். (4) அனந்தபால ஷாஹி, அவனுடன் ஒத்துழைக்க மறுத்ததால், முகம்மது அவனைத் தோற்கடித்து பின், மூல்தானையும் தன்னடிப்படுத்தினன். அவ்வமயம் கசினியில் நேர்ந்த துருக்கியப் படையெழுச்சியையும் எதிர்த்து வெற்றி கொண்டனன். இந்தியரும் அவனுடைய படையில் சேர்க்கப் பட்டனர். (5) 1007-ல் முகம்மது, தன் விருப்பப்படி நடக்காத சுகபாலனை (அனந்தபாலனின் மகன்) முறியடித்து சிறைப்படுத்தினன். (6) மற்ற இந்திய மன்னரின் துணையைப்பெற்ற அனந்தபாலனுக்கும், முகம்மதுவுக்கும் சிந்துப் பேராற்றங்கரையில் கடும்போர் நடந்தது. எதிர்பாராவகையில் முகம்மது வெற்றிகொண்டான். அனந்தபாலன், முகம்மதுவின் கீழிருந்த மண்டலத்தலைவருள் ஒருவனானன். கங்கராவில் கொள்ளை நிகழ்த்தியபின் சுல்தான், தனது நாடு சென்று, 1009-ல் கோரியைக் கைப்பற்றினன். (7) அடுத்த ஆண்டில் டில்லியைத் தாக்கும் குறிக்கோளுடன் முகம்மது வந்த போதிலும், கர்னல் என்ற இடத்தருகில் வெற்றியடைந்து கொள்ளையடிக்கப்பட்ட பெரும் பொருள்களுடன் திரும்பி விட்டான். (8) 1011-ல் மூல்தானில் முகம்மது தனது நிலையை வலியுமைறச் செய்துகொண்டான். (9) 1013-ம் ஆண்டு படையெழுச்சியில், திரிலோசனபாலஷாஹி தோற்கடிக்கப்பட்டனன். முகம்மது, உயர் நிலையிலிருந்த பல இந்தியர்களை எளிய வணிகர்களின் அடிமைகளாக்கி அவர்களைத் தன் தலைநகருக்கு அனுப்பினன். (10) 1014-ல் முகம்மது தானேசுவரத்தைச் குறையாடினன். ஆண்டிருந்த

சில உருவங்கள் அழிக்கப்பட்டன. சிறப்பாயிருந்த வழிபாட் டுப்புனே உருவம் ஒன்று கசினிக்கு அனுப்பப்பட்டது. அவன் சமயத்தினர், அடியிட்டு நடக்கும்படியான வழியில் அஃது வைக்கப்பட்டது. (11) அடுத்த ஆண்டில் காச்மீரத்தில் அவன் படையெடுத்தது தோல்வியில் முடிந்தது. 1016, 1017-ம் ஆண்டுகளில் கொராசானில் அவன் தங்கவேண் டியது இன்றியமையாததாகியது. (12) 1018—19-ல் மது ராவைச் சூறையாடி பெரும் செல்வத்துடன் திரும்பினன். மேலும் அதேசமயத்தில் கன்யாகுப்சத்தின் பிரதிகார மன்னன் இராச்சியபாலன் முகம்மதுவுக்கு அடிபணிந்தான். அதுகாறு முள்ள அவனுடைய படையெழுச்சிகளில் இதுவே மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். மிகுதியான அடிமைகளையும், செல்வத் தையும், இந்தியாவிலிருந்து கொண்டுசென்றுன். இப்பொரு ளைக்கொண்டு சுல்தான், கசினியில் ஒரு பெரிய மசூதியையும் கல்லூரியையும் கட்டினுன். (13) 1021-ல் இராச்சியபால னைக்கொன்ற வித்தியாதரசந்தல மன்னனை அடிப்படுத்துவ தற்காக, முமம்மது படையெடுத்தான். வித்தியாதரன், அடி பணிந்தான். (14) அதே ஆண்டில் முகம்மது மறுபடியும் காச்மீரத்தில் படையெடுத்து தோல்வியுற்றுன். ஆனுல், பஞ்சாபின் ஷாஹியர் நாட்டைத்தன் பேரரசுடன் இணைத்தான். (15) 1022 ல் குவாலியரையும் காலஞ்சராவையும் கைப் பற்ற அவன் செய்த முயற்சி வெற்றிபெறவில்லை.

## சோமநாதப் படையெடுப்பு.

(16) மூன்றுண்டுகள் பின்னர் அவனுடைய புகழ்பெற்ற சோமநாதப்படையெடுப்பு நிகழ்ந்தது. சோமநாதப் பட்டினத் தின் பிராமணர்கள், தமது கடவுளான சிவனே, எல்லா கடவுளரிலும் மிகச்சிறந்தவர் என்று பெருமையாகக் கூறிக் கொண்டதைப்பொருத கசினிமுகம்மது, அங்கு படையெடுத் ததாகக் கூறப்படுகிறது. முகம்மது இந்தியப் பாலைவனத்தின் வழியே சென்று 1025-ல் அனகில்வாட் என்ற இடத்தை அடைந்தனன். அங்கிருந்த சோலங்கி மன்னன் முதலாம் பீமதேவன் அஞ்சிப் புறங்காட்டினன். பின்னர் முகம்மது, நன்கு காப்பாற்றப்பட்டிருந்த சோமநாதக் கோட்டையைக்

கைப்பற்றினுன். ஆண்டிருந்த கோயில், "10000 ஊர்களி னின்று பெற்ற வருவாயுடன், 1000 மதகுருக்கள், 300 அம்பட்டர்கள், 350 நாட்டியப்பெண்கள்" முதலியோரையும், மொத்தம் 15-அடி உயரமும் தரைக்குமேல் 9-அடி உயரத் தையும் கொண்ட லிங்கத்தையும் கொண்டிருந்ததாம். 750 மைல்களுக்கு அப்பாலிருந்து கொணரப்பட்ட கங்கை நீரால், அக்கடவுளுக்கு நாள்தோறும் திருமஞ்சனம் செய்யப்பட்டதாம். காச்மீர மலர்களால் லிங்கம் அணி செய்யப்பெற்றது. மிகுதி யான பொருள் தருவதாகவும் அச்சிலே உருவை யாதும் செய்யாதிருக்குமாறு இந்தியர் விடுத்த வேண்டுகோள் புறக்கணிக்கப்பட்டது. சிலையை முகம்மது உடைத்து, கசினி, மெக்கா, மதீனு முதலிய இடங்களுக்கு துண்டுப்பகுதிகளை அனுப்பினன். இச்செய்தி உண்மையன்று என சிலர் அண் மையில் கூறத்தொடங்கியுள்ளனர். மிகுந்த செல்வத்துடன், முகம்மது, சிந்து வழியாக மூல்தான் சென்று 1026-ல் கசினிக்குத் திரும்பினுன். அவனது சோமனுதப்படையெழுச்சி யின் புகழ் இஸ்லாமிய உலகில் பரவியது. கலிபா, பல பட்டங்கள் அளித்து அவனைச்சிறப்பித்தான். (17) முகம்மது சோமநாதத்திலிருந்து தனது நாடு திரும்புகையில் ஜாதர் என்ற மக்கள் வழியில் துன்புறுத்தியதால் அவர்களை அழிப் பதற்காக 1027-ல் இறுதியாக இந்தியாவில் படையெடுத்தான். அவர்கள் தண்டிக்கப்பெற்றனர்.

## கசினிப்பேரரசு.

முகம்மது, அவன் இறுதிக்காலத்தில், முறைக்காய்ச்சல், எலும்புருக்கி நோய், வயிற்றுப்போக்கு நோய் முதலியவற்ருல் துயருற்றபோதிலும், நாட்டின் கலகங்களை அடக்கியும், ஆட்சி முறையில் ஊக்கங்கொண்டும் தன்பேரரசை நிலைநிறுத்தினுன். 1030-ல் தனது 59-வது வயதில், அவன் இறந்தான். ஆப்கானித்தானத்தையும் பாரசீகம், பஞ்சாப் நாடுகளின் பெரும் பகுதிகளையும் அவன் பேரரசு தன்னுட்கொண்டிருந்தது. ஆனல் கசினி முகம்மதுவின் அரசியல் செல்வாக்கு தைகிரஸ் ஆற்றிலிருந்து கங்கை, அலகாபாத் வரையிலும், காஸ்பியன், ஏரல் கடல்களிலிருந்து அரேபியன் கடல், இராசபுதனம்,

கத்தியவார் வரையிலும் பரவியிருந்தது. இப்பரந்த பகுதி சுமார் 2000-மைல்கள் நீளமும், சுமார் 1400-மைல்கள் அகலமும் கொண்டதாகும்.‡

## முகம்மதுவின் குணவியல்பு.

கசினி முகம்மது, தன்னுடன் பிறந்தோர் மூவரில் இருவரிடம் மிகுந்த அன்புபூண்டிருந்தான். இஸ்மெயில் என்னும் மூன்றுமவனிடம் அவன் தந்தை அதிகமாகப் பற்றுகொண்டிருந்ததால். அவனை முகம்மது கடுமையாக நடத்தநேரிட்டது. கடுமையான தன்மையைப்பெற்றிருந்த போதிலும் முகம்மது அவன்கீழிருந்த பணியாளரிடமும், அவனை எதிர்த்த கலகக்காரரிடமும், விட்டுக்கொடுக்கும் பண்பு கொண்டிருந்தான். ஆனால் பணியாளரைத் தேர்ந்தெடுக்கும்பொழுது அவர்களுடைய ஆற்றலையும் ஒழுக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டே முடிவு செய்தான். அவன் குடும்ப வாழ்க்கை தூய்மையுடையதா யிருந்தது. குடிப் பழக்கமும் அவனிடம் சிறிதளவே காணப்பட்டது. குரானில் விதிக்கப்பட்டபடியே நான்கு மனைவியர்களுக்குமேல் அவன் பெற்றிருக்கவில்லை. அவனுடைய ஏழு குமாரர்களும், சிறந்த முறையில் பயிற்சி அளிக்கப்பட்டனர். அவனுடைய காலத்தில் அவனுக்கு ஒப்பாரும், மிக்காரும் இல்லையாம். போர்வீரன் மட்டுமின்றி அவன் ஓர் அறிஞனாகவும், நூலாசிரியனாகவும், கல்வியை ஆதரிப்பவனாகவும் விளங்கினன். சன்னி பிரிவைச் சார்ந்த இவன், குரானிடத்தும், அல்லாவிடத்தும் மிகுந்த அன்பு கொண்டிருந்தான். போர்க்களத்தில் உதவிக்காக கடவுளிடம் முறையிடும் பழக்கம் அவனிடமிருந்தது. ஏழைகளின் நண்பனாக அவனிருந்தபோதிலும், சன்னி பிரிவைச்சாராத முகம்மதியரைத் துன்புறுத்தினன். கசினியில், இந்தியர் அவனால் காப்பாற்றப்பட்டனர். இந்துக்களை முகம்மதியராகச்செய்ய வேண்டுமென்ற நோக்கமும், இந்தியாவின் பொற்குவியல்களைக் கொள்ளைகொள்ள வேண்டுமென்ற பேராசையுமே அவனது இந்தியப் படையெடுப்புகளுக்குக் காரணங்கள் என்று

‡ **M. Nazim. The Life and times of Sultam Mahmud of Ghazna (1931) pp. 168—169.**

# இந்தியா 900 - 1200

1 தஞ்சாவூர்
2 கங்கைகொண்ட சோழபுரம்
3 சிதம்பரம்
4 எண்ணாயிரம்
5 உத்தரமேரூர்
6 திருமுக்கூடல்
7 காஞ்சி
× போர்க்களம்

கூறப்படுகிறது. இந்தியரை, முகம்மதியராகும்படி அவன் கட்டாயப்படுத்தாத போதிலும், மதமாற்றத்திற்கு ஏற்ற நிலையைத்தோற்றுவித்தான். மதம் மாறியவர்களுக்கு சலுகைகள் வழங்கப்பட்டன. போர்கள் நிகழுங்காலை, கோயில்களிலுள்ள செல்வத்தைக் கொள்ளையிட்வே, முகம்மது, கோயில்களை அழித்தானென்றும், அதனல் அவன்செயல், கண்டிக்கத்தக்க தன்று என்று சிலர் கூறலாம். ஆனல், இக்கூற்று ஒரு சார்புடையதாகும். கோயில்களின் உருவச்சிலைகள் உடைக்கப்பட்டபின் அவற்றைத் தாழ்வுறச் செய்த செயலையும் நாம் நோக்குதல் வேண்டும். மதமாற்றம் அவனது குறிக்கோளாக இல்லாவிடில், இந்துக்களுக்கு வெறுப்பு ஏற்படும்வகையில், அவர்தம் கோயில்களையும், சிலை உருவங்களையும் அழிவுறச் செய்து, இஸ்லாமிய சமயத்தை உயர்வுறச்செய்தமை, யாது கருதியோ என்ற கேள்வி எழுகிறது. போர்க்காலங்களில், பகைவர்களின் செல்வங்கள்நிறைந்த இடங்களை அழிப்பது இன்றியமையாதது என்பதை ஏற்றுக்கொண்டபோதிலும், முகம்மது சிறிதும் மதவெறி கொண்டோனன்று என்று முடிவாகக் கூறுவதற்கில்லை. ஆனல், மதமாற்றம் செய்வதே, அவனுடைய படையெடுப்பின் குறிக்கோளாயிருந்தால், இந்துக்களின் உளப்பண்பை அறியாது, அவர்தம் கோயில்களை அழித்தல், அக்குறிக்கோளை நிறைவேற்ற உதவிபுரியாது என்ற உண்மையை, அறிவாற்றல் நிறைந்த அவன் அறியவில்லை என்றும் கருதமுடியாது. ஆதலால் முகம்மது சிறிதளவு மதவெறி கொண்டிருந்தான் என்று கூறலாம். மேலும் வல்லாளனை முகம்மது, தனது கருத்துக்கு மாருக உள்ள எதையும் ஏற்றுக்கொள்ளக்கூடியவனன்று. முடிவாக மனிதன் என்ற வகையில் அவனுடைய பெருமை போற்றற்குரியதே.

## அவன் அருஞ்செயல்கள்.

### நாடுகளைவென்று கைக்கொள்ளல்.

கசினி முகம்மதுவின் வாழ்க்கை, வீரமும், வெற்றியும் வாய்ந்தது. தன் தந்தையிடமிருந்து பெற்ற நாட்டின் எல்லை

யைப் பெருக்கி, அவன் இறக்குமுன், தன்னிரு குமாரர் களிடை நாட்டைப் பகிர்ந்து அளித்தனன். அவன் இணைத் துக்கொண்ட நாடுகளில் மட்டுமின்றி மிகுதியான பல இடங் களில் அவன் படைகள் போர்புரிந்தன. முப்பது ஆண்டு களுக்கு மேலாக ஓயாப்போரில் அவன் கருத்தைச் செலுத் தினன். அவன் வெற்றிகளுக்கு, வீழ்ச்சியுற்றோரின் ஆற்றலின்மையும் தவறுகளும் மட்டும் காரணமல்ல; அவனு டைய படை ஆற்றலும் காரணமாகும். படை அமைப்பு, போர், முறைகளில் புதிதாக இவன் ஒன்றையும் தோற்றுவிக்காத போதிலும், அக்காலத்திய போர்முறைகளைச் சிறந்தவகையில் பயன்படுத்திக்கொண்டான். பலநாட்டினரைக் கொண்டிருந்த அவன் படையில் சமய ஒற்றுமை காணப்பட்டது. முகம்மது உறுதியான முறையில் படைவீரர்களை அடக்கிவைத்திருந்தது போற்றற்குரியது. அவனது வீர உணர்ச்சியும், இடையூறு களைக் கண்டு அஞ்சாது அவற்றை வரவேற்கும் திண்மையும், அவன்கீழிருந்தோருக்கு மிகுந்த ஊக்கத்தையும், உவகையையும் அளித்தன. இயற்கை அரண்களைக்கண்டு அவன் அஞ்சான். பெரிய ஆறுகளும், பரந்த பாலைவனங்களும் அவன் வெற்றி வாழ்க்கைக்குத் தடைகளாக இல்லை. அவன் படைகள் சென்ற விரைவைக்கண்டு, அவன் பகைவர்கள் குழப்ப மடைந்தனர். சில சமயங்களில் அவன் குறிக்கோள் நிறை வேற்றப்படாதுபோயினும், தோற்கடிக்கப்பட்ட பெரும் இழிவு அவனுக்கு ஏற்படவில்லை. சிற்சில காலங்களில் அவன் பகைவர்கள், போர் தொடங்கு முன்னரே அவனுக்கு அடி பணிந்தனர். முகம்மதுவின் சோமநாதப் படையெழுச்சியின் பொழுது அவன் காட்டிய போர்த்திறமை அவனுக்கு அழியாப் புகழை அளித்தது. ஆற்றல்வாய்ந்த படைத்தலைவனயிருந்தது மன்றி அவன் ஓர் பெருமைசால் வேந்தனும்.

## கலைகளை ஆதரித்தல்.

கசினி முகம்மது அறிவுத்துறையிலும், அறவழியிலும், சிறந்த பண்புகளைப்பெற்றிருந்ததுடன், கல்வியையும் போற்றி வளர்த்தான். கசினியில் ஒரு பல்கலைக்கழகமும், ஒருபெரும்

பள்ளிவாசலும், சுவடிநிலையமும், பலகட்டடங்களும் இவனால் தோற்றுவிக்கப்பெற்றன. அவனுடைய வெற்றியின் அடையாளமாக விளங்கும் ஒரு கல்லறை இன்றும் காணப்படுகிறது. மகமதுபுரி (லாஹூர்) யில் அச்சிடப்பட்ட அவன் வெள்ளி நாணயத்தில் வடமொழியில், அவன் பெயரும், முஸ்லிம் கொள்கையைப்பற்றிய குறிப்பும் காணப்பெறும். "ஷாநாமா" என்ற காப்பியம் எழுதியவனும் "பாரசீக ஹோமர்" என்று புகழப்பட்டவனுமான பிர்தௌஸி (Firdausi), வரலாற்றறிஞன் உத்பி, மிகச்சிறந்த கவியான உன்சூரி, "கிதாப்-உல்-ஹிந்த்" (1030) என்ற நூலின் ஆசிரியரான அல்பருனி (973–1048) முதலியோர், கசினியின் அவைக்களப் புலவர்களாம்.

## அல்பருனி.

அல்பருனி, இயல்நூல், மெய்விளக்கநூல், வடமொழி ஆகிய யாவற்றிலும் வல்லுநனாக இருந்தான். வானநூல், கணிதம், பூதநூல், (Physics) இயைபியல் (Chemistry), கனிப்பொருளாராய்ச்சி, நிலநூல், காலமுறை வரலாறு ஆகிய கலைகளிலும் அவன் மிகுந்த தேர்ச்சிபெற்றிருந்தான். அவன் நூலை மொழிபெயர்த்தல் எளிதான செயலன்று. அவன், முகம்மது கசினியைப் பின்தொடர்ந்து இந்தியா வந்து, பஞ்சாபில் தங்கி, வடமொழியையும், இந்தியக் கலைப்பண்புகளையும் கற்றறிந்தனன். உபநிடதங்களையும், பகவத்கீதையையும் அவன் வியந்து போற்றினன். கல்வியின் பல துறைகளில் இந்தியரின் அருஞ்செயல்கள் அவன் மனதைக் கவர்ந்தன. "கிதாப்" என்ற அவன் நூல் பண்டைய இந்தியாவைப்பற்றி, சிறப்பாக, இந்தியக் கலைப்பண்பைப்பற்றி அறிய உதவும் ஒப்புயர்வற்ற ஒன்றாகும். வடமொழியிலுள்ள பல வானநூல்களையும், மெய்விளக்கநூல்களையும் அல்பருனி அரேபியில் மொழிபெயர்த்தான். வரலாறு அமைப்பதிலும் நிகழ்ச்சிகளின் காலமுறையைப் போற்றுவதிலும் இந்தியரிடம் காணப்பட்ட குறைபாடுகளை அவன் குறிப்பிடுகிறான். மேலும் கல்வித்துறையில், தாமே சிறந்தவர் என்ற உணர்ச்சியுடன் பிறருடைய திறமையைப் புறக்கணிக்கும் தன்மை இந்தியரிடம்

இருந்ததாகக் கூறுவன். பாரசீகத்தில் சிறந்த அறிஞர்கள் இருப்பதாக யாரேனும் இவர்களிடம் கூறினால் அவன் பொய் புகலுவோன் என்று முடிவுசெய்யும் குணம் இந்நாட்டவரிடம் காணப்பட்டதாம். முகம்மதியனுக்கு இயல்பாக இருக்கக் கூடிய ஒருதலையான எண்ணமின்றி, அல்பருனி, இந்தியரின் அறிவாற்றல்மிக்க செயல்களைப் போற்றியது குறிப்பிடத்தக்க தாகும். அல்பருனியின் நூல்கள் "ஆழ்ந்து அறிந்து உணர்ந்த இக்கால ஐரோப்பியன் ஒருவனுடைய நூல்களை பெரும்பாலும் ஒத்ததாகக் காணப்படுகின்றன." §

## முகம்மதுவின் ஆட்சிமுறை.

முகம்மது, பேரரசில் கலகங்களை அடக்குவதில் மிகுந்த கருத்துச்செலுத்தினன். அவன் இறுதிக்காலத்திலும் ஆட்சிமுறை யில் ஊக்கம் செலுத்தப்பட்டது. முறை வழங்குதலில் அவன் சிறப்பு போற்றத்தக்கது. ஆனால், வெல்லப்பட்ட பகுதிகளை ஒன்றுக்கி அவன் ஒரு பேரரசை நிறுவவில்லை. அமைதியை யும், காவலையும் ஏற்படுத்துவதில் அவன் முழு வெற்றிபெற வில்லை. அவன் ஆட்சிமுறை வரம்பற்ற அதிகாரங்களையுடைய வல்லாட்சியாக இருந்தது. அவனுடைய ஆற்றல், புகழ், ஆணை ஆகியனவற்றையே அஃது அடிப்படையாகக் கொண்டிருந்தது.

முகம்மதுவின் பின் ஆட்சிபுரிந்த மசூத், 1040-ல் செல்ஜக் துருக்கியரால் தோற்கடிக்கப்பட்டனன். 1117-ல் அவர்கள் கசினியைக்கைப்பற்றி, யாமினி பஹ்ராம் என்பானை அதன் அரசராக்கினர். இவன் 1150-ல் கோரியின் தலைவன் ஒருவனால் முறியடிக்கப்பட்டதால், யாமினிகுலத்தவர், கசினியை இழந்து, பஞ்சாப்நாட்டிற்குச் சென்றனர். 1173-ல் கசினி, கோரிநாட்டுடன் இணைக்கப்பட்டது. 1187-ல் முகம்மதுகோரி, கசினிமுகம்மதுவின் குலத்தையே முடிவுறச்செய்தான். இறுதி யாக எஞ்சியிருந்த யாமினி குலத்தவனை குஸ்ரு மாலிக் என்பான், 1201-ல் கோரியால் கொலைசெய்யப்பட்டனன்.

§ Sykes p. A History of persia Vol. II 1930. p. 60.

# பகுதி 3

## பரமாரர்.*

**முஞ்சனும் சிந்துராசனும்.** பரமாரர் குலத்தைத்தோற்று வித்தவன் உபேந்திரன் என்பான். அவனுக்குப்பின், முதலாம் வைரிசிம்மனும், முதலாம் சீயகனும் தோன்றினர். நான்காவது தலைவனுன முதலாம் வாக்பதிராசன் அக்குலத்தின் நிலையை உயர்த்தினன். இரண்டாம் வைரிசிம்மன் (பத்தாம் நூற்ருண்டின் முற்பாதி) தாரா என்னும் நகரைக்கைப்பற்றி பிரதிகாரருடன் சச்சரவிடலானுன். அவர்கள் இவனை, மாளவத்திலிருந்து விரட்டினர். உடனே கூர்ச்சரத்திற்குச்சென்று இராட்டிரகூடருக்குக் கீழ்ப்படிந்தனன். அவன் பின்போந்த இரண்டாம் ஹர்ஷசீயகன் (சுமார் 948—974), கூர்ச்சரபிரதிகாரர், இராட்டிரகூடர் ஆகிய இரு குலத்தினரின் வீழ்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டு, மாளவத்தில் மீண்டும் ஆட்சி புரியலாயினன். பின்பு, இரண்டாம் வாக்பதிராசமுஞ்சன் (974 –995), அண்மையிலிருந்த காலசூரி மரபினர், சோலங்கியர், கல்யாணி மேலைச்சாளுக்கியர் ஆகியோருடன் போரிட்டு வெற்றி பெற்றனன். ஆனல் கல்யாணியின் இரண்டாம் தைலன் என்பானல் முறியடிக்கப்பெற்ருன். முஞ்சன் ஒரு கவி என்பது, கல்வெட்டுச் சான்றுகளாலும், இலக்கியக் குறிப்புகளாலும் அறியக்கிடக்கிறது. "நவசாகசாங்க சரிதம்" என்னும் காவியத்தை எழுதிய பத்மகுப்தன் அவ்வரசனல் ஆதரிக்கப்பெற்ருன். மேலும் தனஞ்சயன், தனிகன் என்ற நாடகக்கலை ஆசிரியர்களும், செய்யுள் அமைதியைப்பற்றிய ஒரு நூலுக்கு விரிவுரை எழுதிய ஹாலாயுதன் என்ற புலவனும் அரசனின் ஆதரவுபெற்று அவனவையிலிருந்தனர். பல கோயில்கள் அவனல் எடுக்கப்பட்டன. தாராவில் முஞ்சசாக்ரம் எனப்பெற்ற ஓர் குளத்தையும் அவன் வெட்டினுன். அவனுக்குப்பின் சிந்துராசன் (995—1010) அரசுகட்டிலேறினன். மன்னனின் வெற்றிகளைப்பற்றி பத்மகுப்தன் தனது நூலில் குறிப்பிட்டிருப்பவை, மரபு முறைப்படிப் புகழ்ச்சியாக இருப்பினும், அவற்றில் வரலாற்றுச் சிறப்பு இல்லை என்று

கூற முடியாது.‡ சிந்துராசன் பல வெற்றிகளைப் பெற்றிருந்த போதிலும் சாமுந்தராசசோலங்கியால் முறியடிக்கப்பட்டனன்.

## முதலாம் போஜன்.

### இராணுவத்தொடர்பான வாழ்க்கை.

பரமாரர் குலத்தின் மிகச்சிறந்த அரசனான முதலாம் போஜன் (1010—1055) சிறந்த போர்வீரன். முஞ்சன், தோற்கடிக்கப்பட்டதால் ஏற்பட்ட இழிவை மாற்றுவதற்கு இவன் போரிட்டு, கல்யாணி சாளுக்கிய அரசன் இரண்டாம் ஜயசிம்மனை முறியடித்தான். கலிங்கநாட்டுக் கங்கரின் கீழிருந்த ஒரு தலைவனையும், வடகொங்கணத்தின் அரசர்களையும், போஜன் வென்றான். காங்கேயதேவ காலசூரியும் இவனால் வெல்லப்பட்டனன். வேறுசில வெற்றிகளையும், இவன் அடைந்தபோதிலும், முடிவில் கல்யாணியின் முதலாம் சோமேஸ்வரன் வேறு சில அரசர்களுடன் சேர்ந்து, போஜனைத் தோற்கடித்தனன். பரமாரரின் ஆதித்தலைநகர் தாரா (தார்—மத்தியஇந்தியா). இரண்டாம் சீயகனின்கீழ் உச்சயினி, சிறப்புற்றது. முதலாம் போஜன், மீண்டும் தாராவைத் தலைநகராக்கி அதனைப்புதுப்பித்தான். அவன் முதலமைச்சன் ரோஹகன் என்பானாவன். அவனுடைய பேரரசு பன்ஸ்வாராவிலிருந்து நாசிக்வரையிலும், கெய்ரேவிலிருந்து பில்சாவரையிலும் பரவியிருந்தது. போஜனுடைய இராணுவத்தொடர்பான வாழ்க்கை துயரம் நிறைந்த முடிவையுடையதாயிருப்பினும் பொதுவாக இவனாட்சி பல சிறப்புக்களைப் பெற்றிருந்தது. ஆனால் முகம்மது கசினியுடன் இவன் தொடர்பு கொள்ளவில்லை. செல்வம் நிலையற்றதாகையால், அறவழியில் புகழ் பெறுவதையே குறிக்கோளாகக் கொள்ளவேண்டுமென்று அவன் உணர்ந்திருந்தானென்பது அவனுடைய கல்வெட்டுக் குறிப்பிலிருந்து அறியலாகும்.

### நூலாசிரியனும் புரவலனும்.

பலபொருள்களைப்பற்றிய பல நூல்கள், போஜன் பெயருடன் இணைக்கப்பட்டிருக்கின்றன. இவன் அவற்றின் ஆசிரி

‡ D. C. Ganguly. History of the paramara Dynasty (1933) pp. 65—77.

யனு, அல்லது புரவலனு என்பது ஐயப்பாட்டுக்குரியது. ஆனால் இவன், சிறந்த ஆசிரியன் என்பதும் கல்வி, கலையின் வளர்ச்சிக்கு மிகவும் துணைபுரிந்தானென்பதும், மறுக்கப்படக் கூடியன அல்ல. போஜனால், இயற்றப்பட்டதாகக் கருதப்படும் ''இராமாயண சம்பு'', செய்யுளும் உரைநடையும் கலந்த ஓர் சிறந்த நூலாகும். சரஸ்வதிகண்டாபரணம், சிருங்காரப்பிர காசம் இரண்டும் செய்யுளியலைப்பற்றிய அவனது நூல்கள். அரசியலைப்பற்றிய யுக்திகல்பதரு என்பதும் அவனது நூலாகும். குதிரைகளைப்பற்றியும் அவற்றின் நோய்களைப்பற்றி யும் அவன் எழுதியிருப்பதாகக் கூறப்படுகிறது. 'யோக சூத்திரத்தி'ற்கு, 'இராசமார்த்தாண்டம் என்ற தன்நூலில் விரிவுரை எழுதியுள்ளான். 'சமராங்கண சூத்திரதாரம்' என்ற அவனது நூலில், கட்டிடக்கலை தொடர்பான செய்திகள் காணப்பெறும். தத்துவப்பிரகாசம் என்ற மற்றொருநூல் சைவத்தைப்பற்றியது. தனபாலன், சோபாணன், ஆகிய அறிஞர்கள் அவன் அவைக்களப் புலவராவர். சீதா, என்ற பெண்கவியும் அவன் அவையில் இருந்திருக்கலாம். வேறு பலரும் போஜனுடன் இருந்திருக்கவேண்டும். ஆனால் நம்பத் தக்க ஆதாரங்களில்லை.

### கட்டடங்கள்.

போஜன் பல கட்டடங்களை நிறுவினன். ஆனால் மாளவம் முகம்மதியரால் படையெடுக்கப்பட்டகாலை, சில அழிக்கப்பட் டும், சில பள்ளிவாசல்களாக்கப்பட்டும் மாறிவிட்டன. தார் (Dhar) என்ற இடத்திலுள்ள கமால் மௌலா பள்ளிவாசல், போஜனின் கல்லூரியாக இருந்திருக்கலாமென்று ஊகிக்கப் படுகிறது. இவ்வரசன் போஜபுரி (போபால் அருகில்) நகரத் தைத் தோற்றுவித்தான். அதற்கருகில் ஒரு பெரிய ஏரியும் வெட்டப்பட்டது. இதன் பரப்பு சுமார் 250-சதுர மைல்கள். இதனமைப்பு மிகவும் போற்றற்குரியது.

மாளவசுல்தான், ஹாஷங்ஷா என்பானால் பதினைந்தாம் நூற்றுண்டில் இவ்வேரி மூடப்பட்டு, உழக்கூடிய நிலமாக்கப் பெற்றது. அதே இடத்தில் போஜனின் பெயரைக்கொண்ட

ஒரு சிவன்கோயில் உளது. தார் நகரிலுள்ள, ஒரு பெரிய இரும்புத்தூண் (43-அடி 4-அங்குலம் உயரமுள்ளது) போஜன் காலத்துக்குரியதா அல்லது அர்ச்சுனவர்மன் காலத்ததா (13-ம் நூற்றாண்டு) என்பது தெளிவாக அறியப்படவில்லை. தாரில் (Dhar) போஜனின் கலைக்கோயிலில் அமைப்பதற்காக 1034-ல் சரஸ்வதியின் உருவச்சிலை ஒன்று செய்யப்பட்டது. பிற்காலத்தில் ஆங்கிலேயப் பொருட்காட்சிசாலைக்கு இச்சிலை எடுத்துச் செல்லப்பெற்றது. இச்சிலையின் வேலைப்பாடுகள் மிகவும் உயர்வாக அறிஞர்களால் புகழப்பட்டுள்ளன.

## போஜனின் சமயக்கோட்பாடு.

போஜன் சமண சமயத்திடம் அன்பு பூண்டிருந்தான். பல்வேறு சமயப்பிரிவினரின் பிரதிநிதிகளைக் கூட்டுவித்து, "வீடுபெறுதல்" என்ற செய்தியைப்பற்றி ஆராய்ச்சிகள் செய்தான். இதனால் "எச்சமயத்தினராயினும், ஆழ்ந்த உள்ளாராய்ச்சியினால் வீடுபெற முடியும்" என்ற முடிபு வெளியிடப்பட்டது. இதுவே போஜனின் சமயக்கோட்பாடும் ஆகும்.

## போஜனின் பின்வந்தோர்.

முதலாம் போஜனுக்குப்பின் அரசுகட்டிலேறியவன் அவன் மகன் முதலாம் ஜயசிம்மனாவன் (1055—1060). இவன் இலட்சுமி-கர்ண காலசூரிக்குக் கீழ்ப்படிந்திருந்ததாகக் கூறப்படுகிறது. பின், உதயாதித்தியன் என்பான், (1060-1087) (முதலாம் போஜனின் உடன்பிறந்தவனாக இருக்கலாம்) அரசுரிமையைக் கவர்ந்துகொண்டனன். காலசூரி அரசனைத் தோற்கடித்து, போஜனுக்குப் பின் சிதைவுற்றிருந்த தன்குலப் பெருமையை மீண்டும் நிலைநாட்டினன். உதயபுரியில் நீலகண்டேச்வரர் கோயிலை இவன் கட்டினான். இன்றும் நல்ல நிலையிலுள்ள இக்கோயிலின் அமைப்பு, அக்கால வடஇந்திய கட்டடக்கலையில் சிறப்பான ஒன்றாகக்கூறப்படுகிறது. ஊன் (இந்தூர் நாட்டிலுள்ள ஒரு ஊர்) என்ற இடத்தில் அவ்வரசனால் எடுக்கப்பெற்ற பல இந்து, சமண கோயில்கள்

காணப்பெறும். அவனுக்குப்பின் பட்டமேற்ற இலட்சுமண தேவன் (1087—1097?) என்பான், யசகர்ணகாலசூரியைத் தோற்கடித்தனன். சோழரையும், முகம்மது கசினியின் மரபின ரையும் இவன் முறியடித்ததாகவும் கருதப்படுகிறது. பின் போந்த அரசர்கள், நரவர்மன் (1097—1111) யசோவர்மன் (1134—1142) என்பாராவர். அவர்கள் காலத்தில் சோலங் கியர் மாளவத்தைக் கைப்பற்றிக்கொண்டனர். 1137-முதல் 1173-வரை, மாளவம், அவர்கள்கீழிருந்தது. எஞ்சியிருந்த பரமாரரின் நாடுகள், யசோவர்மன் இறந்தபிறகு அவன்பின் வந்தோரால் பங்கிட்டுக்கொள்ளப்பட்டன. சோலங்கியரின் வரலாற்றில் குமரபாலன் என்ற மன்னன் இறந்தபின், அவர்களுக்கு ஏற்பட்ட இடையூறுகள், பரமாரர் மாளவத்தைத் திரும்பவும் பெறுவதற்கு உதவின. சுமார் 1192-ல் விந்திய வர்மன் தார் நகரைத்திரும்பவும் பெற்றான். பின்வந்த சுபத வர்மனும் தன்னிலையை வலிமையுறச் செய்துகொண்டான்.

## அர்ச்சுனவர்மன்.

பின் அரசனான அர்ச்சுனவர்மன் (1211—1215) சிறி தளவு, பரமாரரின் பழைய உயர்நிலையை மீட்டனன். அக் காலத்திய புலவனான மதனன் என்பான் ''பாரிசாதமஞ்சரி'' என்ற வடமொழி நாடகத்தை இயற்றினன். அஃது நான்கு காட்சிகளையுடையது. அர்ச்சுனவர்மன் அதில் புகழ்ந்து பேசப் படுகிறான். இவ்வரசனுக்குப்பின் பரமாரர் அரசு கலங்கி விழத்தொடங்கிற்று.

1234-ல் அடிமை வமிசத்தின் இல்ட்டமிஷும், 1292-ல் அலாவுதீன் கில்ஜியும் மாளவத்தில் படையெடுத்துச் சூறை யாடினர். 1305-ல் அலாவுதீன் மாளவத்தைக்கைப்பற்றினன். பரமாரர் ஆட்சி முடிவுற்றது. பரமாரர் சிவ வழிபாடு உடையோர். இந்துசமயம் ஆதரிக்கப்பெற்றது. ஆயினும், முஞ்சன், போஜன், நரவர்மன், விந்தியவர்மன், அர்ச்சுன வர்மன் முதலியோர் அளித்த ஆதரவினால், நாட்டில் சமண சமயமும் செழிப்புற்றிருந்தது.

## பகுதி 4

### காலசூரிமரபினர்.

### காங்கேயதேவ விக்கிரமாதித்தியன.

கி. பி. ஆறும் நூற்ருண்டிலிருந்து தொடங்கும், காலசூரியர் கல்வெட்டுக்களின்படி, அவர்கள், வீரகாவியங்களில் குறிப் பிடப்பெறும் ஹெய்ஹயர் வழியில் தோன்றியதாகக் கூறிக் கொள்வர். கி. பி. 248—9 முதல் தொடங்கும் திரெய்கூடக அல்லது சேதி ஆண்டு அவர்களால் பயன்படுத்தப்பெற்றது. இதனுல் அவர்களை திரெய்கூடகருடனே, ஆபிரருடனே இணைக்கவேண்டியதில்லை. வாதாபி சாளுக்கியரும், கூர்ச்சர பிரதிகாரரும் தோன்றுவதற்கு முன்னரே காலசூரியர் சிறப்புற் றிருந்தனர். பண்டல்கண்டிலிருந்து, கூர்ச்சரம், நாசிக்வரை யிலும், சிறப்பாக நர்மதைச் சமவெளியின் மேற்புறத்தில் இவர்களாட்சி நிலவியது. சாளுக்கிய பிரதிகாரப் பேரரசுகள் தோன்றியபின், காலசூரியர் அதிகாரம் குறைக்கப்பட்டு தாகலா (ஜபல்பூரைச்சுற்றியபகுதி) பகுதியில் மட்டும் அவர்தம் ஆட்சி நிலைத்தது. திரிபுரி (ஜபல்பூரிலிருந்து ஆறுமைல்கள் தூரத்தி லுள்ளதேவார்) அவர்கள் தலைநகராகியது. ஆகவே, அவர்கள் ஹெய்ஹயர் அல்லது சேதிகாலசூரியர், தாகலா அல்லது திரிபுரி காலசூரியர் என்று அழைக்கப்பெறுவர். வரலாற்றின் படி முதலாம் கோக்கல்லன் (சுமார் 875—925) காலசூரியர் ஆட்சியைத் தோற்றுவித்தவனுவன். அவன், இராட்டிரகூட ருடனும், சந்தேலருடனும், மணவினை உறவுபூண்டும், பிரதி காரருடன் நட்பு உறவுபூண்டும், தன்னரசு வலிமையுறுமாறு செய்துகொண்டனன். அவன் பின்போந்த முதலாம் சங்கர கணன், இராட்டிரகூடருக்கு அடங்கியிருந்தான். சந்தேல மன்னன் முதலாம் யசோவர்மனுல் முறியடிக்கப்பட்டவன், பின்வந்த காலசூரி அரசன் பாலஹர்ஷனுக இருக்கலாம். அவனுடைய உடன்பிறந்தானுன முதலாம் யுவராசன், இராட்டிர கூடருடன் போரிட்டு, சுமார் 940-ல் தோல்வியுற்ருன். சைவத்துறவிகளுடன், இம்மன்னன் நெருங்கிய தொடர்பு பூண்டிருந்தானென்று இவன் கல்வெட்டுக்கள் குறிப்பிடும். இவன் மகன் இலக்குமணராசன், பத்தாம் நூற்ருண்டின் பிற்

பாதியில், கத்தியவாரையும், வங்காளத்தையும் தாக்கி, தன் குலத்தின் சிறப்பை உயர்த்தினன். தந்தையைப்போலவே சைவத்துறவிகளை இவனும் ஆதரித்தான். இரண்டாம் சங்கர கணன், வைணவன். அவன் உடன்பிறந்தானை இரண்டாம் யுவராசன், திரிபுரியைச் சூறையாடிய முஞ்ச பரமாரனால் முறியடிக்கப்பெற்றான். பின்போந்த கோக்கல்லன், வித்யா தரசந்தேலனுக்கு அடிபணிந்திருக்கக்கூடும். இவனும் சைவ சமயத்தைப் போற்றினான். இவன் மகனான காங்கேயதேவ விக்கிரமாதித்தியன் (சுமார் 1030—1041) அலகாபாத்தைக் கைப்பற்றி, பஞ்சாப், வங்காளம், ஒரிஸ்ஸா முதலிய இடங் களைத்தாக்கி, கல்யாணி சாளுக்கியரையும் தோற்கடித்தனன். முதலாம் போஜ பரமாரனால் வெல்லப்பட்டபோதிலும் அவன் ஓர் சிறந்த வீரன். அவன் குலத்தில் அவனொருவனே, நாணயங்களை வெளியிட்டவன். பொன், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களில், அவன் பெயரும், இலக்குமி உருவமும் கொண்ட காசுகள் வெளியிடப்பட்டன. சிவனுக்காக ஓர் கோயிலையும் அவன் எடுத்தான்.

## இலக்குமிகர்ணனும், யசகர்ணனும்.

காங்கேயதேவனின் மகன் இலக்குமிகர்ணன் (சுமார் 1041—1073) பலவெற்றிகளை அடைந்து நாட்டைப்பெருக்கி னன். ''சிறந்த இந்தியப் போர்த் தலைவர்களில் ஒருவன்'' என்று இவன் புகழப்படுகிறான். கல்யாணி, அனகில்வாட், அரசர்களின் உதவியுடன் அவன் போஜ பரமாரனை வீழ்த்தி னன். பாலரும், சந்தேலரும் அவனால் வெல்லப்பெற்றனர். அவன் கல்வெட்டுக்கள், வங்காளத்திலும், உத்தரப்பிரதேசத் திலும் கிடைத்துள்ளன. கூர்ச்சரத்திலிருந்து வங்காளம் வரை யிலும் அவன் பேரரசைப் பரப்பினனென்பதுதெளிவு. ''மூன்று கலிங்கநாடுகளின் தலைவன்'' என்ற பட்டம் அவனால் சூட்டிக் கொள்ளப்பட்டது. திரிபுரிக்கு அண்மையில் ஓர் நகரத்தையும், கர்ணமேரு என்றழைக்கப்பட்ட ஒரு கோயிலைக் காசியிலும் அவன் நிறுவினன். அவனும் சைவசமயத்தவனே. சிலர் அவனை நெப்போலியனுடன் ஒப்பிடுவர். ஆனால் முடிவில், பாலர், சந்தேலர், பரமாரர், சோலங்கியர், கல்யாணிசாளுக்

கியர் முதலியோரால் பல முறைகள் முறியடிக்கப்பட்டான். அவன்பின் அரசுரிமை பெற்ற அவன் மகன் யசகர்ணன் (1073—1125) வேங்கிநாடு, வடக்கு பீகார்வரை, வெற்றியுடன் சென்றதாகக் கூறப்படுகிறது. ஆனால் காகடவாலரின் எழுச்சியால் காலசூரியர் கங்கைப்பகுதியை இழந்தனர். மேலும், சந்தேலரும் பரமாரரும், காலசூரியர்நாட்டைக் கைப்பற்றலாயினர். பின்போந்த கயகர்ணன் காலத்தில், மதன வர்மனின்கீழ் சந்தேலர் சிறப்படைந்ததால், மேலும் காலசூரியர் அரசு மெலிவுற்றது. பின்பு அரசாட்சி செய்த நரசிம்மனும் (சுமார் 1155—1170) அவன் உடன்பிறந்தானும், சந்தேலரிடமிருந்து இழந்த பகுதிகள் சிலவற்றைப்பெற்றனர். விசயசிம்மனும், (1180—1195) அவன்பின்போந்த அஜயசிம்மனும் எவ்வகைச் சிறப்பும் பொருந்தியவர்களல்ல. 1251-க்கும் 1309-க்கும் இடைப்பட்ட காலத்தில் டில்லி சுல்தான்கள் காலசூரியரை வென்றனர். ஆயினும், திரிபுரிக்கு அண்மையில் பதினைந்தாம் நூற்றூண்டின் தொடக்கம் வரை, காலசூரியர், சிறப்பற்றுக் குறுநில ஆட்சியுடன் இருந்ததாகத் தெரிகிறது.

## பகுதி 5

### சந்தேலர்.

**தங்கன்.** ஒன்பதாம் நூற்றூண்டின் முற்பாதியில் பிரதிகாரர் ஆட்சியில், கஜுராகோ என்ற இடத்தின் தலைவனாயிருந்த நன்னுகன் என்பானே, சந்தேலகுலத்தின் முதல்வனாகும். வாக்பதி, அவன் குமாரர்களான ஜயசக்தி, விசயசக்தி என்பாரின் முயற்சிகளால் அக்குலம் வளர்ச்சியுற்றது. ஜயசக்தி அல்லது ஜேஜன் ஆட்சிபுரிந்தபகுதி, பின்னர் ஜேஜபுக்தி அல்லது பண்டெல்கண்டு எனப் பெயர் பெற்றது. விசயசக்தியின் மகன் இராகிலன், அவன் மகன் ஹர்ஷன், அவன் பிள்ளை முதலாம் யசோவர்மன், யாவரும் பத்தாம் நூற்றூண்டின் முற்பாதியில் பிரதிகாரரும், இராட்டிரகூடரும் போரிட்டு வந்தகாலை, முன்னவருக்கு அடங்கி வாழ்ந்தனர். ஆயினும் ஹர்ஷன், சாகமானருடனும், காலசூரியருடனும் மணவினை உறவுபூண்டு தன்னிலையை வலிமைபடுத்திக் கொண்டனன். முதலாம் யசோவர்மன், காலிஞ்சரை, இராட்டிரகூடரிடமிருந்து

கைப்பற்றினன். அவனுடைய பல வெற்றிகள் அவனது நிலையை மிகவும் உயர்த்தியிருக்க வேண்டும். கஜுராகோ என்ற ஊரில் ஒரு திருமால் ஆலயத்தையும் ஓர் குளத்தையும் அவன் எடுத்தனன். அவனது மகன் தங்கன் (954–1002). என்பான் வெளியிட்ட கல்வெட்டுக்கள், 955-க்குப் பிறகு, பிரதிகாரர்களை; அவனுடைய மேலதிகாரிகளாகக் குறிப்பிட வில்லை. காலிஞ்சர், குவாலியர் இரண்டு இடங்களையும் அவன் பெற்றிருந்ததால் நடு இந்தியாவில் அவன் ஆட்சி வலிமை பொருந்தியதாயிருந்தது. அலகாபாத்தையும் அவன் கைப்பற்றி யிருக்கக்கூடும். சபக்டிஜின், கஜினிமுகம்மது ஆகியோரை எதிர்க்க, ஷாஹியர் அமைத்த கூட்டுறவில் தங்கன், இணைந்து கொள்ளவில்லை. பத்து, பதினேரும் நூற்றுண்டுகளில், கஜுராகோவில் கட்டப்பட்ட ஜினநாதர், வைத்தியநாதர் ஆலயங்கள் குறிப்பிடத்தக்கன. அவை தோன்றுவதற்கு தங்கனும் உதவியிருக்கக்கூடும். பிரபாசன் என்பான் அவனது முதலமைச்சன். தங்கன் அலகாபாத்தில் ஆற்றில் குதித்து இறந்தான் என்று கூறப்படுகிறது.

## வித்தியாதரன்.

தங்கனின் பின்போந்த கண்டனைப்பற்றி யாதும் அறியப் படவில்லை. 1002-முதல் 1019-வரை அவன் ஆட்சிபுரிந் திருக்கலாம். பின்பு அரசுரிமைபெற்ற வித்தியாதரன், (சுமார் 1019—1051?) கஜினிமுகம்மதை எதிர்க்காது அஞ்சித்தலை குனிந்த பிரதிகாரமன்னன் இராச்சியபாலனைத் தக்க முறையில் தண்டித்தான். கன்யாகுப்சப் பிரதிகாரப்பேரரசின் வீழ்ச்சி இவனுல் முடிவுற்றது. முதலாம் போஜபரமாரனும், காலசூரிய மன்னன் இரண்டாம் கோக்கல்லனும், அச்சந்தேல அரசனைக் கண்டு அஞ்சினர். சம்பல் ஆற்றிலிருந்து நர்மதைவரை வித்தியாதரனின் ஆட்சி பரவியிருந்தது. அக்காலத்திய மிகச் சிறந்த இளவரசன் என்று, அவன் முகம்மதிய ஆசிரியர்களால் சிறப்பிக்கப்படுகிருன். 1021-ல் முகம்மது, வித்தியாதரனை எதிர்த்தான். பின்னவன், போர்செய்யத் துணியாது ஓடினன் என்று ஒரு ஆசிரியர் குறிப்பிடுவர். ஆனுல் பேரறிஞர், ரே (Ray) என்பார், கொடிய போர் நிகழ்ந்ததாகவும் முடிவில்

இருமருங்கினரும் வெற்றிபெருமல் திரும்பினர் எனவும் கூறுவர்.‡ அடுத்த ஆண்டில் அவ்விருவரும் மற்றொருமுறை போரிட்டனர். கசினிமுகம்மது, குவாலியரையும், காலிஞ்சரையும் கைப்பற்றமுடியாது திரும்பினன். வித்தியாதரனின் கீழிருந்த சந்தேலநாடு, இராச்சியபாலனின் பிரதிகார நாட்டைப் போன்றதன்று, என்பதை முகம்மது தெளிவாகக்கண்டனன். பின்னர், சந்தேலநாட்டினரசர்களாக, விசயபாலனும் அவனுக்குப்பின் தேவவர்மனும் அமர்ந்தனர்.

## கீர்த்திவர்மன்.

விசயபாலன், தேவவர்மன், கீர்த்திவர்மன் முதலியோர் காலங்களில் சந்தேலர் இலக்குமிகர்ண காலசூரியரால் அடக்கப்பட்டிருந்தனர். கீர்த்திவர்மனின் பொற்காசுகள், காங்கேய தேவ காலசூரியின் காசுகளைப் பின்பற்றி அமைக்கப்பட்டனவாகும். சுமார் 1073-ல் இலக்குமிகர்ணன் தோல்வியுற்று இறந்தபிறகு, கீர்த்திவர்மன் சந்தேலர் ஆட்சியை மீண்டும் சிறப்புறச் செய்தான். அவன் காலத்தில் கிருட்டினமிஸ்ரன் என்பான் எழுதிய "பிரபோத சந்திரோதயம்" என்ற நாடகம், கீர்த்திவர்மனுக்கு உதவியாகவும், இலக்குமிகர்ணனுக்கு எதிராகவும் சந்தேலவேந்தனின் கீழிருந்த மானியக்காரத் தலைவனை கோபாலன் செய்த தொண்டுகளைச் சிறப்பிக்கும். கர்ணன் கோபாலனுல் தோற்கடிக்கப்பட்டது, அந்நாடகத்தில் மாயையை பகுத்தறிவுவெல்வதுடன் ஒப்பிடப்பட்டுள்ளது. அந்நாடக ஆசிரியனை ஆதரித்ததுமன்றி கீர்த்திவர்மன், மகோபா என்ற இடத்தில் ஓர் சிவன் கோயிலையும் காலிஞ்சர், அஜைகார் ஆகிய இடங்களில் மாளிகைகளையும் எடுத்தனன். மகோபாவிலும், சந்தேரியிலும் ஏரிகள் தோண்டப்பெற்றன. அவனுக்குப்பின் சல்லட்சணவர்மனும், பின்பு ஜயவர்மனும் அரசாண்டனர். இவர்களின் செப்புக்காசுகளில் அனுமானின் உருவம் காணப்பெறும்.

‡ H. C. Ray, The Dynastic History of Northern India, II (1936) p. 691.

## மதனவர்மனும், பரமார்த்தியும்.

பிருதிவிவர்மனுக்குப் பிறகு அவன் மகன் மதனவர்மன் (சுமார் 1129–1163) பட்டமேற்றான். கஜுராகோ காலிஞ்சர் மகோபா, அஜைகார் ஆகிய பழைய இடங்கள் இவனாட்சிக்கு உட்பட்டிருந்தன என்பது இவனுடைய கல்வெட்டுக்களிலிருந்து அறியலாகும். மாளவம், கூர்ச்சரம், சேதி ஆகியநாடுகளுடன் இவன் போரிட்டான். காகடவாலருடன், மதனவர்மன் நட்பு உறவுபூண்டனன். இவனுடைய நாடு யமுனையும், பெத்வா நதிகளும் இருமருங்கும் அமையப்பெற்று, பண்டெல்கண்டை யும், பாகேல்கண்டின் வடபகுதியையும் தன்னுள் அடக்கி யிருந்தது. தெற்கில் ஜபல்பூரின் அண்மைப்பகுதிவரை அது பரவியிருந்தது. பின்பு அரசனான பரமார்த்தி (1167-1202) என்பான், மூன்றும் பிருதிவிராசன் என்ற சாகமான மன்ன னால் தோற்கடிக்கப்பட்டான். அவ்வெற்றிவீரன் மகோபாவைக் கைப்பற்றி சுமார் 1183–ல் காலிஞ்சரையும் சூறையாடினன். பின்னர் பரமார்த்தி, குத்புதீன்ஐபெக்காலும் முறியடிக்கப் பெற்றான். 1202-ல் காலிஞ்சரையும், அடுத்த ஆண்டில் மகோபாவையும், ஐபெக் கைப்பற்றினான். பின்பு முடிசூடின திரைலோக்கியவர்மன் (1202-1241) 1205-ல் காலிஞ்சரை முகம்மதியரிடமிருந்து மீட்டனன். இவ்வாறு அக்குலத்தின் சிறப்பு நிலைபெற்றதெனினும், 1309-ல் அலாவுதீன் கில்ஜி அதனை வீழ்த்தினன். ஆயினும் காலிஞ்சர், சந்தேலரின்கீழ் இருந்து வந்தது. அக்பருடன் போரிட்டு 1564-ல் இறந்த இராணி துர்க்காவதி ஒரு சந்தேல இளவரசியாவள். ஆகவே 1569-ல் காலிஞ்சர் முடிவாக மொகலாயப் பேரரசுடன் இணைக்கப்பட்டது.

# பகுதி 6

## சாகமானர்.

### நான்காம் விக்கிரகராசன்.

சாகமானர் என்பார், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் சாகம்பரி (சாம்பார்) என்னும் ஏரிக்கரையில், அதேபெயருள்ள நாட்டில் (சாம்பார் இராசபுதனம்) காணப்பெற்றனர். ஒன்பதாம் நூற்

ருண்டில் அவர்கள் கூர்ச்சரபிரதிகாரரின்கீழ் சாமந்தராய் அமர்ந்தனர். 973-ல் இரண்டாம்விக்கிரகராசன் என்பான்அவர்களின் தனிஅரசை நிறுவினன். அனகில்வாடின் முதலாம்மூலராசனே அவன் தோற்கடித்ததாகக் கூறப்படுகிறது. 1105-ல் முதலாம் பிருதிவிராசன் சாகமானரின் அரசனுயிருந்தான். அவன் மகன் அசயராசன், அசயமேரு அல்லது அச்மீரம் என்ற நகரைத் தோற்றுவித்தான். பின் அரசுகட்டிலேறிய அருணேராசன் 1150-க்கு முன்னர், அனகில்வாடின், ஜயசிம்ம சித்தராசனுடனும், குமாரபாலனுடனும் போரிட்டனன். 1139-என்ற காலக்குறிப்புடன் கூடிய அவனுடைய இரண்டு கல்வெட்டுக்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. பின்போந்த நான்காம் விக்கிரகராசன் (1153—1164) பஞ்சாபில் கசினி முகம்மதுவின் பின்னேரான யாமினியரோடு அடிக்கடி போர்செய்து, தன் நாட்டைப் பரப்பினுன். சுமார் 993—994-ல் டில்லியைத் தோற்றுவித்து அப்பகுதியில் ஆட்சிபுரிந்து வந்த தோமாரரிடமிருந்து அந்நகரை, விக்கிரகராசன் கைப்பற்றினன். இம்மன்னன் இயற்றிய ஹரகேளிகா நாடகம் என்ற சிவனைப் புகழும் நூலும், அவைக்களப்புலவனுல் இயற்றப்பட்ட "லலித விக்கிரகராசன்" என்ற நாடகமும் (மன்னனின் காதல்தொடர்பான செய்திகளைக் கூறுவது) அச்மீரக் கல்வெட்டுக்களில் கண்டுபிடிக்கப்பெற்றன. அதே நகரில், ஒரு கல்லூரியையும் இவன் கட்டுவித்தான்.

### மூன்றும் பிருதிவிராசன்.

இரண்டாம் பிருதிவிராசனும் (1164—1170) சோமேஸ்வரனும் (1170—1177) ஆட்சிபுரிந்த பிறகு, பின்னவனின் மகனை மூன்றும் பிருதிவிராசன் 1177—1192) அரசுரிமை பெற்றனன். இவன் ஆதரவிலிருந்த சந்த் என்பான் இந்தியில் எழுதிய 'பிருதிராஜ்—ரெய்ஸம்' என்ற காப்பியமும், வடமொழியில் உள்ள "பிருதிவிராசவிசயம்" என்ற நூலும் மிகுந்த இலக்கியச் சிறப்பு வாய்ந்தவை. பிந்திய நூலில் காணப்பெறும் குலவழி, கல்வெட்டுக்களால் உறுதிசெய்யப்படுவதால் அதன் வரலாற்றுச் சிறப்பு போற்றற்குரியது.

பிருதிவி, காகடவால மன்னன் செயசந்திரனின் மகளை சுமார் 1175-ல் தூக்கிச்சென்றதாகவும், சந்தேல அரசன் பரமார்த்தியைப் புறங்காட்டச் செய்ததாகவும் கூறப்படுகிறது. விக்கிரம ஆண்டை மாற்றும் கருத்துடன் பிருதிவி ஒரு புதிய ஆண்டைத் தோற்றுவித்ததாகவும், இராசவிக்கிரமனின் குலவழியிற்றோன்றியவன் என்று தன்னைக் கருதிவந்த செயசந்திரன், அக்காரணத்தால் அச்சாகமான மன்னனின் பெரும் பகைவனுனுன் என்றும் அறியக்கிடக்கிறது. 1191-ல் பிருதிவி, முகம்மது கோரியை தரெய்ன் (தானேசுவரத்திலிருந்து 14-மைல் தொலைவில்) போர்க்களத்தில் முறியடித்தான். ஆனால் வெற்றி பெற்றோர், தோல்வியுற்றோரைத் தொடர்ந்து செல்லவில்லை. ஆகவே சுல்தான் முகம்மது 1192-ல் மீண்டும் போரிட்டு அதே இடத்தில் பிருதிவியைத் தோற்கடித்துக் கொன்றனன். அச்மீரம் தாக்கப்பட்டது. அத்துடன் சாகமான குலம் தன் சிறப்பை இழந்தது. பிருதிவியின் உடன்பிறந்தானுன அரிராசன் 1194-வரையில் ஆட்சிபுரிந்தான். பின்னர் கோவிந்தராசன், (பிருதிவியின் மகனாக இருக்கலாம்) இரான்தம்பூரில் தன் குலத்தைத் தோற்றுவித்தனன். 1301-ல் அலாவுதீன் கில்ஜியால் அஃது வீழ்த்தப்பட்டது.

## பகுதி 7.

### காகடவாலர்.

### கோவிந்தசந்திரன்.

காகடவாலர் (அல்லது காகர்வர்) இராட்டிரகூடரைச் சேர்ந்தவர்கள் என்ற கோட்பாடு ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று.† இவர்கள் கர்நாடகநாடு அல்லது தென்னிந்தியாவில் தோன்றியதாகக் கருதப்படுகிறது. இவர்தம் தோற்றத்தைப் பற்றி தெளிவாகக்கூறுவது எளிதன்று. சந்திரதேவன் (சுமார் 1080—1100) என்பானின்கீழ் அவர்கள் அரசாட்சி எழுந்தது. காசி, அயோத்தி, கன்யாகுப்சம் ஆகிய மூன்றும் அவர் ஆட்சிக்குட்பட்டன. மதனசந்திரனும் (1100-1114) அவன் மகன் கோவிந்தசந்திரனும் (1114-1155) ஆட்சிபுரிந்த காலத்தில் அவர்தம் சிறப்பு, அவர்தம் காசுகளால் அறியப்படுகிறது.

† Tripathi. History of Kanauj (1937) pp. 296—300.

பின்னவனின் நாற்பதுக்கு மேற்பட்ட கல்வெட்டுக்கள், பனிரெண்டாம் நூற்ருண்டின் முற்பாதியில் அவனுடைய வலிமையையும், செல்வாக்கையும் உணர்த்தும். லாகூர் யாமினியர், பாலர் முதலியவருடன் போரிட்டதன்றி, மாங்கீர் வரையிலும் அவன் வெற்றியுடன் சென்ருனும். சேனர் கங்கையைக் கடந்து படையெடுத்ததற்கு அவன் செயலே காரணமாகலாம். காலசூரியருடன் பகைத்த கோவிந்தசந்திரன், சந்தேலருடனும், சோழருடனும் நட்புபூண்டிருந்தனன். 'துருஷ்கதண்டம்' என்று சொல்லப்பட்ட ஒரு வரி அவனுல் விதிக்கப்பெற்றது. இஃது முகம்மதியரை எதிர்த்து நாட்டைக் காப்பாற்றும்பொருட்டு விதிக்கப்பட்டதாயிருக்கலாம். அவனுடைய பொன், வெள்ளி காசுகள், காலசூரியரால் வெளியிடப்பட்ட இலக்குமி உருவம் கொண்ட காசுகளை ஒத்தன. அவன் நாணயத்தின் மற்ருெரு புறத்தில், அவனுடைய பெயரும், முக்கவர்ச்சூலமும் (திரிசூலம்) காணப்பெறுகின்றன. அவனுடைய நான்கு மனைவியருள் ஒருத்தியான குமாரதேவி, பௌத்தசமயத்தவள். கோவிந்தசந்திரனின் அமைச்சன், இலக்குமிதரன் என்பான் "ஸ்மிருதிகல்பதரு" என்ற ஓர் இந்து சட்டநூலை இயற்றினுன்.

## செயசந்திரன்.

கோவிந்தசந்திரனின் மூன்ருவது மகனுன விசயசந்திரன் (1155—1170) ஆட்சி நடத்தியபின், செயசந்திரன் (1170—1193) பட்டம்பெற்ருன். "நைடதம்", "கண்டன-கண்டகாத்யம்" என்றநூல்களை இயற்றிய ஹர்ஷகவி, அவர்களால் ஆதரிக்கப்பெற்றனன். செயசந்திரன், தெற்கு பீகாரில் சேனரை எதிர்த்துத் தன்னிலையை வலியுறுத்தினுன். இவன் மகள் கடத்திச்செல்லப்பட்டகதை முன்னர் குறிப்பிடப்பெற்றது. இவன் சந்தேலருடன் நட்புபூண்டு சாகமானரை எதிர்த்தனன். 1193-ல் இவ்வரசனை கோரிமுகம்மது, சந்த்வர் (எடவா மாவட்டம், உத்தரப்பிரதேசம்) என்ற இடத்தில் தோற்கடித்தான். 1200-வரை அரிச்சந்திரன் என்பான் ஆட்சிபுரிந்து வந்தபோதிலும், காகடவாலர் குலம், சிறப்பை இழந்திருந்தது. கோரியின் வெற்றியுடன் அக்குலம் முடிவுற்றதென்றே கூறலாம். காகடவாலர், இந்து சமயத்தின், பலபிரிவுகளையும்

விரும்பிப்போற்றினர். குமாரதேவி, புத்த சமயத்தைச்சார்ந் திருந்த செய்தி, அவர்கள் அச்சமயத்தையும் ஆதரித்தனர் என்பதைத் தெளிவாக்குகிறது.

## பகுதி 8.

### பாலர் வரலாறு (தொடர்ச்சி)

### முதலாம் மகிபாலன்.

நாராயணபாலன் (857—911) இரச்சியபாலன் (911—935) ஆகியோர் ஆட்சிபுரிந்தபின் பட்டம்பெற்ற இரண்டாம் கோபாலன், இ ர ண் டா ம் விக்கிரகபாலன் (935—992) ஆகியோராட்சிக்காலங்களில், பாழடைந்திருந்த பாலர் ஆட்சி மீண்டும் தலையெடுத்தது. புத்தகயாவிலும், கூர்ச்சரரின் ஆட்சிக்குட்பட்டிருந்த நாலந்தாவிலும் காணப்பட்ட பாலர் கல் வெட்டுக்கள், மேற்கூறிய உண்மையை உணர்த்தும். ஆனல் சந்தேலர் அரசு விரிவுற்றதால் பாலருக்கு புதிய இடையூறு ஏற்பட்டது. மேலும், 911-க்கும் 992-க்கும் இடைப்பட்ட காலத்தில், திபெத்தியர், அல்லது மங்கோலியராகக் கருதப் படும், கம்போஜரின்கீழ் வடக்கு வங்காளம் இருந்துவந்தது. முதலாம் மகிபாலன் (992—1040) கம்போஜர் ஆட்சியை முடிவுறச்செய்தனன். அவனுடைய கல்வெட்டுக்கள் காசியி லிருந்து பிரம்மபுத்திரா வ ரை யி லு ம் உள்ள பகுதியில், (வடக்கு வங்காளம் உள்பட) காணப்பெறுகின்றன. ஆனல், கல்யாணி சாளுக்கியர், காலசூரியர், சோழர் முதலியவர்களின் வெற்றிகள், பாலரின் சிறப்பைக் குன்றச்செய்தன. ஆகவே வங்காளத்திலும், பீகாரிலும் ஒரு சிறு பகுதியிலேயே பாலர் ஆட்சி நிலவியது. நயபாலன் (1040—1055) பீகார் நாட்டில் மட்டும் அரசு செலுத்தினன். அவன் இலக்குமிகர்ணகால சூரியுடன் ஓயாப்போர் நடத்திவந்தான். மூன்ரும் விக்கிரக பாலன் (1055—1081) மேற்கூறிய காலசூரிவேந்தனை முறி யடித்து அவன் மகளையும் மணந்துகொண்டான். ஆயினும் பாலரின் வீ ழ் ச் சி தடைப்படுத்தப்படவில்லை. பதினேரும் நூற்ருண்டின் பிற்பாதியில், கிழக்கு வங்காளமும், வடக்கு, மேற்கு வங்காளத்தின் சில பகுதிகளும் வர்மன் குலத்தின ரின்கீழ் சென்றன.

## இராமபாலன்.

விக்கிரகபாலன் இறந்தவுடன் அவனுடைய மூன்று பிள்ளைகளுக்கும் போர்மூண்டது. 1082-ல் இரண்டாம் மகிபாலன் பட்டம்பெற்று, தன் உடன்பிறந்தோரைச் சிறையிலிட்டனன். கைவர்த்தர் (ஒரு மரபுக்குழுவின் பெயர்) தலைவனை அடக்கச் சென்ற மகிபாலன் கொல்லப்படவே, சிறையிலிருந்து விடுதலை பெற்ற இரண்டாம் சூரபாலன் (1083) முடிசூட்டிக்கொண்டான். அவனை எதிர்த்துப்பலர் கலகம் செய்யவே, இராமபாலன் என்ற மூன்றுமவன் (1084—1126) அரசுரிமை பெற்றான். கைவர்த்தர் இவனால் அடக்கப்பெற்றனர். தன் வெற்றியைக் கொண்டாட, இராமாவதி என்ற நகரம் இவனால் தோற்றுவிக்கப்பட்டது. சந்தியாக்கிரநந்தி என்பான் இயற்றிய "இராமசரிதத்தில்" இம்மன்னனின் அருஞ்செயல்கள் விளக்கப்படுகின்றன. அஸ்ஸாம் முதலிய சில புதிய இடங்களை இவன் கைப்பற்றியதாக அறியக்கிடக்கிறது. இறுதியில் அரசிருக்கைதுறந்து பின்னர் கங்கை ஆற்றில் விழுந்து இவன் இறந்தான். பின்போந்த குமாரபாலன் (1126—1130) காலத்தில் அஸ்ஸாம் தன்னரசு எய்தியது. அவன் மகன் மூன்றும் கோபாலன், மதனபாலன் (1130—1150) என்பானால் கொலைசெய்யப்பட்டான். ஆனால் சுமார் 1138-ல் சேனர், மதனபாலனை வங்காளத்திலிருந்து விரட்டினர். தெற்கு பீகாரில் மட்டும் (பாட்னா—மாங்கிர்) மதனபாலனின் ஆட்சி தொடர்ந்து நடைபெற்றது. பின் அரசுகட்டிலேறிய கோவிந்தபாலன் (1150—1162) கயாவிலிருந்து ஆட்சி நடத்தினன். காகடவாலரும், சேனரும் அவனை மிகவும் துன்புறுத்தினர். 1197-ல் முகம்மதுபின்பக்தியாரால், தெற்கு பீகாரிலிருந்து விரட்டப்பட்ட பால மன்னன் இந்திரத்துய்மன் என்பானாக இருக்கலாம். ஆனால் பேரறிஞர், ரே, இதனை மறுப்பர்.‡ பாலர், புத்தசமயப்பற்று மிக்கோராயிருந்தபோதிலும், இந்து சமயத்தையும் ஆதரித்தனர். இலக்கியம், கலை, கல்வி முதலிய யாவும் அவரால் போற்றப்பட்டன.

‡ H. C Ray. op. Cit., I p. 371 n.

# பகுதி 9.

## சேனர் வரலாறு.

**தோற்றம்.** வங்காளத்தின் சேனர் குல முதல்வனான சாமந்தசேனன். "கருநாட க்ஷத்திரியன்" எனவும், "பிரம வாதி" எனவும் சிறப்பிக்கப்படுகிறான். "சாமந்தசேனன், மயூரசர்மனைப்போல், அந்தணர் குலத்தவனாக இருந்து, க்ஷத்திரியர் வாழ்க்கையை மேற்கொண்டு அரசியல் பணியாற்றிப் புகழெய்தியிருக்கக்கூடும்.§ பதினோராம் நூற்றாண்டிலோ அதற்கு முன்னரோ நிகழ்ந்த, வடஇந்திய, கருநாடப்படையெழுச்சிகளில், அவன் குடும்பத்தினரும் இணைக்கப்பட்டிருத்தல் வேண்டும். தார்வார் மாவட்டத்தின் சமண ஆசாரியர் பெயர்களின் வரிசையில் "சேனன்" என்ற பின்னிணைப்பு காணப்படுகிறது. கல்யாணியின் இரண்டாம் செயசிம்மன் (1015–1042) சமணனாயிருந்து சைவனானான். ஆதலால் வங்காளத்தின் சேனர், ஆதியில் கருநாட நாட்டுச்சமணர்களாயிருந்து பின் சைவர்களாகி, மூன்றாம் விக்கிரகபாலன் காலத்தில் கல்யாணி சாளுக்கியர் வடஇந்தியாவில் படையெடுத்தபொழுது அவர்களுடன் சென்றிருக்கலாமென்று சில அறிஞர்கள் கருதுகின்றனர்.

## விசயசேனனும், வல்லாளசேனனும்.

ஹேமந்தசேனனுக்குப்பின் (1075–1097) விசயசேனன் (1097–1159) பட்டம்பெற்றான். இவன், கைவர்த்தருக்குப் பகையாக இராமபாலனுக்குத் துணைபுரிந்ததாகக் காணப்படுகிறது. 'சூர' குல இளவரசியை இவன் மணம்புரிந்துகொண்டு வங்காளத்திலிருந்து 'வர்மன்' குலத்தினரை, விரட்டினான். மதனபாலன், வடக்கு வங்காளத்திலிருந்து இவனால் விரட்டப்பட்டான். நேபாளம். அஸ்ஸாம், கலிங்கம் ஆகியவற்றை இவன் வென்றதாகவும், கங்கை ஆறுவரை, ஓர் கப்பற்படையை அனுப்பி வெற்றிகொண்டதாகவும் கூறப்படுகிறது. ஆகவே, இராமபாலன் இறந்தபின்னர், வங்காளத்தின் கிழக்கு, மேற்கு, வடக்குப்பகுதிகளை இணைத்து, சேனர் ஆட்சியை விசயசேனன்

§ Ray. op. Cit. I. P. 356.

வலிமையுறச்செய்தனன். 'பரமமகேச்வரன்' என்ற பட்டத்தை யும், இவன் பெற்றிருந்தான். ஓர் சிவன்கோயிலையும், விசய புரம் என்ற நகரையும் இவன் தோற்றுவித்தனன். ஓர் ஏரியும் தோண்டப்பெற்றது. உமாபதி என்ற புலவன் அரசன் ஆதரவைப் பெற்றனன். பின் போந்த வல்லாளசேனன் (1159—1185) தந்தையிடமிருந்து பெற்ற நாடுகளைக் காப்பாற்றினன். கௌடபுரம், விக்கிரமபுரம், சுவர்ணகிராமம் என்ற மூன்று தலைநகரங்களைக் கொண்ட, ஐந்து மண்டலங் களாக, நாடு பிரிக்கப்பட்டது. இவ்வரசன், ஈகையைப்பற்றி தன் ஆசிரியரான அநிருத்தனனின் உதவியுடன், "தான சாகரம்" என்றநூலை 1170-ல் இயற்றினன். குறி (நிமித்தம்) களைப்பற்றிய "அற்புதசாகரம்" என்னும் முற்றுப்பெறாத நூல் ஒன்றும் இவனால் எழுதப்பெற்றது. சிவ வழிபாட்டையுடைய இம்மன்னன் "பரமமகேச்வரன்" "நிஸ்ஸங்கசங்கரன்" என்ற பட்டங்களைப்பெற்றிருந்தனன்.

## இலக்குமணசேனன்.

வல்லாளசேனனின் மகன் இலக்குமணசேனன் (1185-1206) கலிங்கம், அஸ்ஸாம், காசி, அலகாபாத் முதலிய இடங்களில், தன் வெற்றிக்கு அடையாளமாக தூண்கள் நிறுவினன். அப்பகுதிகளை அவன் வென்றதாகக் கருதப்படு கிறது. கல்வியை மிகவும் அவன் ஆதரித்தான். அவனவை யில், "ஐந்துமணிகள்" எனப்புகழப்பெற்ற, உமாபதி, செய தேவன் (கீதகோவிந்தத்தின் ஆசிரியர்) தோயி ("பவண தூதன்" எழுதியோன்) ஹாலாயுதன் (பிராமணசர்வஸ்வத் தின் ஆசிரியர்) ஸ்ரீதரதாசன் (சாதுக்தி கர்ணாமிருதம் எழுதி யோன்) ஆகிய புலவர்கள் இருந்தனர். இலக்குமணசேனன், தந்தையால் முடிக்கப்பெறாத "அற்புதசாகரம்" என்ற நூலை முற்றுப்பெறச் செய்தான்.§ இவ்வரசனால் "மதனசங்கரன்" "பரமவைணவன்" என்ற விருதுகள் சூட்டிக்கொள்ளப்பெற் றன. இவன், சிறிது சிறிதாக வைணவ சமயத்தை விரும்ப லானான். முகம்மதுபின்பக்தியார், 1199-ல் வங்காளத்தைக்

§ S. K. De., Sanskrit Liteature under the Sera kings of Bengal, A Volume of Eastern and Indian Studies, pp. 50—74.

கைப்பற்றி அழித்துவிட்டு, லக்னௌடியைத் தலைநகராக்கினன். இலக்குமணசேனனின் அரசியல் சிறப்பையும், அவன் குணப் பண்பையும் முகம்மதிய வரலாற்றறிஞன் புகழ்ந்துள்ளான். அவன் பின்வந்தோர், கிழக்கு வங்காளத்தில், 1230 அல்லது 1280 வரை ஆட்சிபுரிந்தனர்.

## பகுதி 10

### கோரிமுகம்மது.

#### முகம்மதுவின் வாழ்க்கை.

1173-ல் கோரி தலைவன் கியாஸ்உதீன் என்பான், (யாமினியர் அல்லது) கசினியின் குலத்தினரிடமிருந்து கசினியைக்கைப்பற்றி தன்னுடன் இணைத்துக்கொண்டான். அவன் இளவல் ஷியாப் உதீன் (முயூசுதீன் முகம்மது) கசினியை ஆண்டுவரலானுன். இவன், 1203-ல் தனது மூன்னவன் இறக்கும்வரை அவனுக்குக் கீழ்ப்படிந்து ஒத்துழைத்தான். ஷியாப் உதீன் 1175-ல் இந்தியாவில் படையெடுத்து மூல்தானையும், ஊச்சையும் கைப்பற்றினன். 1178-ல் அவன் வெற்றிக்குத் தடையாக, அனஹில்வாடின் இரண்டாம் பீமதேவன் தோன்றினன். ஆயினும் 1179-ல் பெஷாவர் அம் முகம்மதியனால் கைப்பற்றப்பட்டது. 1187-ல் பஞ்சாபில், கசினியின் குலம் முடிவாக வீழ்த்தப்பெற்றது. முதலாம் தரெய்ன் போரின் (1191) தோல்வியுற்றபோதிலும், முகம்மது, இரண்டாவது போரில் (1192) மூன்றும் பிருதிவிராசனைப் புறங்காட்டச்செய்தான். அப்போர், இந்துக்களின் படைமுறையின் குறைபாடுகளையும், முகம்மதியரின் ஆற்றலையும் நன்கு வெளிப்படுத்தியது. முகம்மது தான்கைப்பற்றிய நாடுகளை, குத்புதீன்ஐபெக் என்பானிடம் ஒப்படைத்து, கசினிக்குத்திரும்பினுன். ஐபெக், நாட்டை விரிவுறச்செய்வதற்குத் தடையற்ற உரிமைகளைப் பெற்றிருந்தான். 1193-ல் முகம்மது, மீண்டும் இந்தியாவுக்குவந்து, கான்யாகுப்சத்தின் செயசந்திரனை வீழ்த்தி, பின் காசியைச் சூறையாடிவிட்டு தன்னூர் திரும்பினன். 1195-ல் குத்புதீனை தனது அரசப்பிரதிநிதியாக (Viceroy) அமர்த்தினுன். அவ்வாண்டில் அவன் சில இடங்களைக்கைப்

பற்றியபோதிலும் குவாலியரைப் பெறமுடியவில்லை. அடுத்த ஐந்து ஆண்டுகளில் தன்னுடன்பிறந்தானுடன், ஷியாப்உதீன் உள்நாட்டுச்செய்திகளில் கருத்தைச்செலுத்தினன். 1203-ல் கியாஸுதீன், இறந்தவுடன், கோரிபேரரசின் தனித்தலைவனுக, இவன் அமர்ந்தான். 1205-ல் துருக்கியரால் அவன் தோற்கடிக்கப்பட்டபோதிலும், இந்தியாவுக்கு மீண்டும் வந்து தன்னுடைய நிலையை உறுதிப்படுத்திக்கொண்டனன். 1206-ல் சிந்து ஆற்றங்கரையில், கோரிமுகம்மது கொலையுண்டான். இதற்கிடையில் குத்புதீனும், முகம்மதுபின்பக்தியாரும், வட இந்தியாவில் தம்மாட்சியைப் பரப்புவதில் ஈடுபட்டிருந்தனர். ஆனுல் பக்தியார், திபெத்தில் படையெடுக்கையில் மாண்டனன். கோரிமுகம்மதுவிற்குப் பிள்ளை இல்லாததால், குத்புதீன் இந்தியாவில் டெல்லி சுல்தானுக அமர்ந்தான். 1206-ல் இந்தியாவில் அடிமை மரபினராட்சி தொடங்கியது. 1210-ல் குத்புதீன் இறந்தான்.

## அருஞ்செயல்கள்.

கோரிமுகம்மது, தன்னுடன்பிறந்தானுடன் ஒத்துழைத்ததும், உண்மையும், திறமையும் வாய்ந்த குத்புதீன் ஐபெக்கிடம் அவன்கொண்ட நம்பிக்கையும், ஐபெக், முகம்மது-பின்-பக்தியாரின் உதவியைப் பெற்றிருந்ததும், அவனுடைய (முகம்மது கோரியின்) வெற்றி வாழ்க்கைக்கு உதவியாயிருந்தன. இவ்வாறு அவர்களிடம் காணப்பட்ட ஒற்றுமைப்பண்பு, அவர்களுடைய பகைவர்களான இந்திய அரசர்களிடம் இல்லாதது குறிப்பிடத்தக்கதாகும். இரண்டாவது தரெய்ன்போர், கோரிமுகம்மதுவின், பேராற்றலை நன்கு எடுத்துக்காட்டியது. நடு ஆசியப்படையெடுப்புகளில் அவன் நாட்டம் செலுத்தி வந்தபோதிலும், வடஇந்தியாவைச் சூறையாடிவிட்டுத்திரும்ப எண்ணுது, திட்டப்படி நாடுகளை வென்று ஆட்சிமுறை அமைக்கவே அவன் விரும்பினன். நம்பிக்கையினுல் நம்பிக்கையைப் பெறமுடியுமெனவும், இந்தியாவில் ஒரு பேரரசை நிறுவ வேண்டுமெனவும் அவன் கருதினன். இதில் அவனுடைய அரசியல் திறமையைக்காண்கிறோம். இடையிடையே ஏற்பட்ட தோல்விகள், அவனுக்கு மீண்டும் ஊக்கமளித்தன. இறுதியில்

வெற்றியை அடைந்தான். வெல்லப்பட்ட நாட்டின் ஒழுங்கான ஆட்சிமுறைக்குவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டே அவன் தன்னுடு திரும்பினன். அவன் செயல் இந்தியாவில் நிலைத்து நின்றது. "முகம்மது கோரியின் காலம் முதல், இந்தியப் பெருங்கலகம் வரை, டில்லி அரியணையில் ஒரு முகம்மதிய அரசன் இருந்துவந்தான்." கசினிமுகம்மது பேராற்றல் மிக்க வீரனுக இருந்தானெனினும், ஒரு பரந்த பேரரசு அவன் தலைமையின்கீழிருந்த போதிலும், நிலைத்திருக்கக்கூடிய அருஞ் செயல் எதையும் இந்தியாவில் அவன் செய்யவில்லை. மேலும், அவனது செயல்கள் இந்தியாவுக்கு அழிவை விளை விக்கக் கூடியதாக இருந்தன. முகம்மதுகோரியைப்போலன்றி, கசினிமுகம்மது தோற்கடிக்கப்படாத போர்வீரனுவன். ஆயி னும், கசினியின் முயற்சிகள் முகம்மதிய மதத்தை இந்தியா வில் நிலையாக ஏற்படுத்தவில்லை. கசினி, கல்வியை ஆதரித் தான்; கோரி அத்தகைய சிறப்பைப்பெற்றுனில்லை. ஆனுல் கோரியிடம் காணப்பட்டதுபோன்ற மிகுந்த அரசியலறிவு, கசினி யிடமில்லை. கசினியைவிடக் குறைந்த அளவில், முகம்மதுகோரி சமயத்தைப் பரப்பும் ஆர்வம் கொண்டிருந்தான். கோரி வீரனின் பொற்காசுகளில் இலக்குமி தேவியின் உருவம் காணப்பெறுவது குறிப்பிடத்தக்கது. கான்யாகுப்ச நாட்டின் இந்தியக்காசுகளைப் பின்பற்றி அவை வெளியிடப்பட்டன.

## இந்துக்களின் வீழ்ச்சி.

இதுகாறும் கூறப்பெற்ற காரணங்களன்றி, தோற்கடிக்கப் பட்ட இந்திய அரசர்களிடம் காணப்பட்ட குறைபாடுகளும், முகம்மது கோரியின் வெற்றிக்குக் காரணமாகும். முகம்மதி யர்கள், பிற்காலத்தில் பல இடையூறுகளைப் பெற்றபோதிலும், தொடக்கத்தில் வீரமும், ஊக்கமும்கொண்ட இராசபுத்திரரை யும், மக்கட்டொகையில் மிக்க இந்தியரையும், முடிவாகத் தோற்கடித்தது வியப்புக்குரியதே. வட இந்தியாவில் ஆற்றல் வாய்ந்த மன்னர்கள் அக்காலத்தில் விளங்கினர். பத்தாம் நூற்றுண்டில் முஞ்ச பரமாரன், சந்தேல மன்னன் தங்கன்; பதினேரும் நூற்றுண்டில் போஜபரமாரன், வித்தியாதர சந்

தேலன், காலசூரிய மன்னர்களான காங்கேயதேவன், இலக்குமிகர்ணன்; பனிரெண்டாம் நூற்றுண்டில் கோவிந்தசந்திர காகடவாலன், சோலங்கியரான செயசிம்ம சித்தராசன், குமார பாலன், பிருதிவிராசசாகமானன், முதலியோரின் ஆற்றலைப் பற்றி நாமறிவோம். மேலும், கலிங்கநாட்டில் அனந்தவர்மன் சோடகங்கன் என்ற வீரன் பனிரெண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவன். ஆகையால் பகைவரை எதிர்த்து வெற்றிபெறுதற்கு வேண்டிய சாதனங்கள் இந்தியாவில் இல்லை என்று கூறமுடியாது.

## காரணங்கள்.

இந்தியரின் தோல்விக்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. சில, யூகத்தை அடிப்படையாகக்கொண்டும், சில சிறப்பற்றதாயும், சில தவருனவையாகவும் உள. சிந்துநாடு போன்ற சில இடங்களில் புத்த சமயத்தின் அமைதிக்கோட்பாட்டினுல் அழிவு நேர்ந்ததெனினும், இந்தியரின் பெருந் தோல்விக்கு அதனைக்காரணமாகக் கூறுவது ஏற்றுக்கொள்ளத் தன்று. சமண சமயத்தவரின், கடுமையான 'துன்புறுத்தாக் கொள்கை, ஈண்டு பேசப்பட்டுவரும் காலப்பகுதியில், சமணரின் வீரம் வளர்ச்சியடைவதைத் தடைசெய்யவில்லை. முகம்மதியர் இந்நாட்டில் படையெடுத்தகாலை, வங்காளம், பீஹார் போன்ற சில இடங்களில் மட்டுமே, புத்தசமயம் விளங்கியது. அப்பகுதிகளில்கூட, சேனரின் உயர்நிலை புறக்கணிக்கத்தக்க தன்று. இராசபுத்திரர், சிறந்த இந்து சமயத்தினராவர். ஆதலால் குறிப்பிடப்பட்டுவரும் காலப்பகுதியில் இந்தியரைத் தோல்வியடையச் செய்யும் அளவில் புத்தசமயம் பரவியிருக்கவில்லை என்பது தெளிவு. இந்தியர், மரக்கறி உணவை மேலும் மேலும் அதிக ஆர்வத்துடன் மிகுதியாக உண்டதால், அஃது அவர்களுடைய உடல்வலிமைக்கும், வீரஉணர்ச்சிக்கும் தீமையை விளைவித்தது என்று சிலர் கூறுவர்.‡ இந்தியப் படையின் ஆற்றலின்மைக்கு, சாதிமுறை ஓர் காரணமென்பர்

‡ C. V. Vaidya. History of Mediaeval Hindu India Vol. III (1926) pp 360—'72

சிலர். இந்நாட்டுப்பெண்டிர் நிலை, தோல்விக்குக்காரணமென்ற கருத்தும் உளது. ஆனால், முகம்மதியர், தமது மங்கையருக்கு உரிமை அளித்து அதனால் தம்முடைய வலிமையைப்பெருக்கிக் கொள்ளவில்லை என்பதை நாமறிவோம். புற மரபு மண வழக்கம் புகுத்தப்பட்டமை, இந்தியரின் தோல்விக்குக்காரண மென்று ஒரு ஆசிரியர் குறிப்பிடுவர். அஃதாவது, ஒரே கோத்திரத்தைக் கொண்டோருள் மணவினை உறவு தடுக்கப் பட்டதால், வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, கட்டுப்படுத்தப்பெற்று, இனம் மெலிவடைந்தது.† ஆனால் நாம் முன்னர் குறிப்பிட்டதுபோல், முகம்மதியப் படையெழுச்சி ஏற்பட்டகாலை இந்தியாவில் ஊக்கமும், வீரமும் குறைவாக இருக்கவில்லை என்பதை நோக்குதல் வேண்டும்.

## உண்மைக் காரணங்கள்.

இரண்டு பண்புகளில் இந்தியரைவிட முகம்மதியர் சிறந் திருந்தனர். மிகுதியான படைவலிமை, சமய ஒற்றுமை, இன ஒற்றுமை ஆகியவற்றுடன் கூடிய முகம்மதியர், தமக்கு இந் நாட்டில் தோல்வி ஏற்படின் மிக்கஅழிவு ஏற்படுமென்றுணர்ந்து, எவ்வாற்றானும் வெற்றியை அடையும் உறுதியுடன், 'தியாக' உணர்வும் பெற்றிருந்தனர். ஆனால், இந்தியாவின் சாதிமுறை உள்நாட்டுப் போர்களில் படைவலிமையை அழிக்காத போதிலும், அஃது, சாதிமுறை அற்றதும், பொது உரிமைச் சமயத்தைக் கொண்டதும் ஆகிய ஒரு மக்கட்கூட்டத்தை எதிர்க்குங்காலத்தில், வலிமை அளிக்கும் ஒரு சாதனமாகாது. மேலும் அயலார் படையெடுக்கும்பொழுது, இந்திய அரசுகள், தமக்குள் ஓயாத போர்களை நிகழ்த்திவந்ததால் அயர்வுற்றும், பொறாமை, பகைமை முதலிய தீயபண்புகளால் வேறுபடுத்தப் பெற்றும் இருந்தன. ஆதலால், பொதுவான நாட்டின் பகை வர்களை எதிர்ப்பதற்கு இன்றியமையாத ஒற்றுமை காணப் படவில்லை. நாட்டில் தோன்றியிருந்ததாகக் கருதப்படும், ஒரு சில கூட்டுறவுகளும், உறுதியான அடிப்படையில் அமைய வில்லை. இந்து அரசுகள், தனித்தனியே வீழ்த்தப்பட்டன.

† S. V. Karandikar. Hindu Exogamy (1929, pp. 283—284 & 288.

இந்தியாவில் பேரரசு அமைக்கப்பட்டமுறை, மக்களை ஒற்றுமைப் படுத்தி ஒரு வலிமைமிக்க நடு ஆட்சியை ஏற்படுத்தும் குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டதன்று. இந்திய மரபி னரின் "திக்குவிசயங்கள்" தனிப்பட்டோரின் புகழுக்காக, மிகுந்த செலவுகளைக் கொண்டு நிகழ்த்தப்பட்டவையாகும். காலப்போக்கில், வெற்றியடைந்தோர், தோற்கடிக்கப்பட்டும், தோல்வியுற்றோர் வெற்றியடைந்தும் மாறி மாறி நிகழ்ச்சிக ளேற்பட்டு வந்தன. அக்காலப்பகுதியில், பல இந்தியநாடுகள் அடிக்கடி அண்மையிலும் சேய்மையிலுமிருந்த பல்வேறு நாடு களைத் தாக்கியும் சூறையாடியும் வந்தன என்பதையும் நாம் முன்பு கண்டோம். சுருங்கக்கூறின், ஒற்றுமையின்மை பல வாற்றானும் பெருகிவந்தது. அனைவற்றிற்கும் மேலாக, அக் காலத்திய இந்தியப் படையின் ஆற்றல், கசினி முகம்மது அல்லது கோரியின் படைகளுடன் ஒப்பிடுமிடத்து, குறைவு பட்டதாகவே கருதவேண்டும். மேலும், இந்தியர், தமது புதிய தேவைகளுக்குத்தக்கவாறு தம்மைத்திருத்தி அமைத்துக் கொள்ளத்தவறிவிட்டனர். இந்தியப் படை அமைப்பு முறை யின் ஆற்றலின்மை, பல காலங்களில், பகைவர்களின் வெற்றி களால் புலப்படுத்தப்பெற்றிருந்தும், அதனை நன்கு உணர்ந்து, சிறந்த சீர்திருத்தங்கள் எதுவும் நிறைவேற்றப்படவில்லை. ஆகவே, அரசியல் ஒற்றுமையின்மையும், குறைபாடுற்ற படை அமைப்பும், தோல்விக்குக் காரணங்களாக வற்புறுத்திக்கூறப் படலாம்.‡

## பகுதி 11

### நேபாளம்—அஸ்ஸாம்—கலிங்கநகரம்.

**நேபாளம்.** நேபாளநாடு, அசோகனுடைய பேரரசில் உட்பட்டிருந்தது. பின் கி. பி. ஆறும் நூற்றாண்டில் லிச்சாவி வமிச ஆட்சி, ஆண்டு ஏற்பட்டது. அடுத்த நூற்றாண்டில் மகாயான புத்தசமயம் அங்கே நிலைபெற்றது. அந்நூற்றாண் டின் பிற்பகுதியில் திபெத்தின் அரசியலாதிக்கம் நேபாளத்தி

‡ P. C. Chakravarti. The Art of war in Ancient India (1941) pp. 189—97.

லேற்பட்டது. ஒன்பதாம் நூற்றுண்டின் முடிவில், இராகவ தேவன் என்பானுல் அந்நாடு உரிமைபெற்றது. பதிமூேரும் நூற்றுண்டில் வங்காளம், பீஹார் நாடுகளுக்கும், நேபாளத் துக்குமிடையே, சமயம், கலை ஆகிய துறைகளில் நெருங்கிய தொடர்பு உண்டாயிருந்தது. சுமார் 1046-ல் இராகவதேவ னின் குலம் பாஸ்கரதேவனுல் முறியடிக்கப்பட்டது. பின்பு ஆட்சிபுரிந்த குலத்தவர் தக்கூரியர் எனப்படுவர்.

## அஸ்ஸாம்.

மோரியப் பேரரசு ஏற்பட்டிருந்த காலத்தில் அஸ்ஸாம் அதற்கு உட்படவில்லை என்பது நினைவுகூரத்தகும். கி. பி. 350 முதல் 650 வரை புஷ்யவர்மனின் குலம் அந்நாட்டில் ஆட்சிபுரிந்தது. புத்தசமயம் அங்கு போற்றப்படவில்லை. 650 முதல் 800 வரை சலஸ்தம்பன் குலமும், பின்னர் பிரலம்பன் குலமும் ஆட்சி நடத்தின. 800 முதல் 1000 வரை உள்ள காலப்பகுதியில் வங்காளத்தின் பாலர், அஸ்ஸாமில் அரசியலாதிக்கம் பெற்றிருந்ததாகக் காணப்படுகிறது. 11-ம் நூற்றுண்டில் அஸ்ஸாமின் பாலர்குலம் அரசுரிமையைப்பெற் றது. அக்குலத்தின் சிறந்த அரசனுன இரத்தினபாலன் சிவனை யும், விட்ணுவையும் வழிபட்டான். 12-ம் நூற்றுண்டின் முற் பாதியில், வங்காளத்தின் இராமபாலன், அஸ்ஸாமைக் கைப் பற்றினன். ஆனல் அவன் பின்போந்த குமாரபாலன், அந் நாட்டை இழக்கநேரிட்டது. அஸ்ஸாமில், பின்னர் தோன்றிய பாஸ்கரனின் குலம் (சுமார் 1150—1206) வங்காளத்தின் சேனருடன் சச்சரவிட்டு வந்தது. வல்லபதேவன் என்ற அரசன், முகம்மதியப் படையெடுப்பாளரை, நாட்டிலிருந்து விரட்டிப்புகழ்பெற்றுன்.

## கலிங்கநகரம்.

கலிங்கத்தில் கங்கர் என்பார் எட்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதியில் தமது ஆட்சியை நிறுவி, கலிங்கநகரத்தைத் தலைநகராக்கினர். ஆனல் அவர்தம் வரலாறு 11-ம் நூற் றுண்டிலிருந்துதான் மிகுதியாகவும் தெளிவாகவும் அறியப்படு கிறது. ஐந்தாம் வச்சிரஹஸ்தன் (1038—1068), சோழர்

ஆதிக்கத்தினின்று விலகி கலிங்கம் உரிமைபெறுமாறு செய்தனன். அக்குல மன்னருள் மிகவும் சிறப்பு வாய்ந்தவன் அனந்தவர்மன் என்பானுவன். ஜகன்னுதர் கோயில் அவனுல் எடுக்கப்பட்டது. பதினைந்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில், முகம்மதியப் படையெழுச்சியின் விளைவாக கங்கர் ஆட்சி முடிவுபெற்றது. இக்குலத்தவர், வரலாற்றில் கீழைக்கங்கர் என அழைக்கப்பெறுவர்.

## பகுதி 12.

### காச்மீரம் (தொடர்ச்சி)

### உத்பலகுலம் (தொடர்ச்சி).

சங்கரவர்ம உத்பலனுக்குப் பிறகு சிறிதுகாலம் அவன் மகன் கோபாலவர்மன் (902-904) ஆட்சிபுரிந்தான். அவன் காலத்திலும், அவனுக்குப் பின்னரும், சுகந்தா என்ற அரசி உண்மையில் ஆட்சிமுறையை நடத்தி வந்தாள். பிரபாகர தேவன் என்ற அந்தண அமைச்சனுடன் அவள் காதல் நட்பு பூண்டிருந்தனள். தந்திரிகள் என்னும் ஒரு வீரவகுப்பினரால் 914-ல் அவள் கொல்லப்பட்டாள். அவ்வகுப்பினர், உத்பல குலத்தின் முடிவுவரை, அரசரை ஆக்குவதும், அழிப்பதுமாக காலங்கழித்தனர். உன்மத்தவந்தி (937 — 939) என்ற அரசன் சூல்மகளிரின் வயிற்றை அறுத்துச்சோதித்து மகிழ்ச்சி அடையும் கொடியருள் கொடியனும். பிரபாகரதேவன் என்ற அமைச்சனின் மகன் யஸஸ்கரதேவன், (939—948) அவந்தி வர்மனின் குலத்தை முடிவுறச்செய்து, அரசுரிமையைக்கைப் பற்றினன். அவன் மகன் சங்கரமாதேவன் (948—949) என்பான் பார்வகுப்தன் என்ற அமைச்சனுல் கொல்லப் பட்டான்.

### குப்தர் குலம்.

பார்வகுப்தன் (945—950) முடிசூட்டிக்கொண்ட சிறிது காலத்திற்குள் இறந்த பிறகு அவன் மகன் க்ஷேமகுப்தன் (950 - 958) அரசாண்டனன். அவன் தித்தா வென்ற அரசியோடு நிகழ்த்திய காமச்செயல்களைப்பற்றி கல்ஹணன்

குறிப்பிடுகிருன். அவன் இறந்தபின், அவன் மகனும், பெயரனும் ஆட்சிபுரிந்தனரெனினும், 958-முதல் 1003-வரை தித்தாவே உண்மையான அரசியல் அதிகாரத்தைப்பெற்ருந் தாள். அவள், ஓர் "மதங்கொண்ட பெண் யானை" என்று கல்ஹணனுல் இழித்துக்கூறப்பட்ட போதிலும், அரசியலில் திறமை வாய்ந்தவளாயிருந்தாள். அமைச்சரின் கலகங்களை யும், தந்திரிகளின் சூழ்ச்சியையும் அஞ்சாது அடக்கி நாட்டில் அமைதியை ஏற்படுத்தினள். அவளுடைய அமைச்சனுன துங்கன் என்பானின் உதவியுடன் தான் பிறந்த குலமாகிய லோகர குலத்தை அரியணை யேற்றினள். அவளுக்குபின் அவள் உடன்பிறந்தான் மகனுன சங்கரமராசன் பட்டம் பெற்ருன். இவனே லோகர குலத்தின் முதல் அரசன். தித்தா, விட்ணுகோயில்களையும், மடங்களையும், தித்தபுரம் போன்ற நகரங்களையும் தோற்றுவித்தாள். நாணமற்ற நடத்தையைக்கொண்டிருந்த போதிலும், அவள், குருதிசிந்தப் படும் புரட்சியின்றி, ஒருகுலத்தை மாற்றி மற்ருென்றை அரசுகட்டில் ஏற்றிய ஆற்றல் போற்றற்குரியது. அவள் ஆட்சியும் வெற்றியுடையதா யிருந்தது.

## லோகரகுலம்.

சங்கரமராசன் (1003—1028) ஆட்சியில் துங்கன், அமைச்சன் பதவியில் தொடர்ந்து அமர்ந்திருந்தான். 1013-ல் கசினி முகம்மதுவுக்குப் பகையாக திரிலோசனபாலஷாகிக்கு உதவிபுரியச்சென்ற துங்கன் தோல்வியுடன் திரும்பினன். இதனைப்பொருத சிலர் அவனைப்பதவியினின்று விலக்கி பின் கொன்றனர். 1015, 1021-ஆகிய இரு ஆண்டுகளிலும், கசினிமுகம்மது காச்மீரத்தைக் கைப்பற்றமுயன்ற முயற்சிகள் வீணுயின. அனந்தன் (1028—1063) என்பான் ஆட்சியில், அவனுடைய வறுமை காரணமாக தன்னுடைய மணிமுடியை யும் அடகுவைக்க நேர்ந்தது. திறமை வாய்ந்த அவன் மனைவி சூரியமதி என்பாள் அறவுரையின்படி, அனந்தன் தன் மகன் கலசனுக்கு முடிசூட்டிவிட்டுத் தான் அரசுகட்டிலினின்று விலகி னன். கலசன் (1063—1089) பெற்ருேரைப்பொருட்படுத் தாது சச்சரவிடவே, அனந்தனும், சூரியமதியும் தற்கொலை

புரிந்துகொண்டனர். அதன் பின்னர் கலசனின் அயல்நாட்டுக் கொள்கை வெற்றியுடன் கூடியதாயிருந்தது. காச்மீரில் தன்னரசுபெற்றிருந்த பல சிறுநாடுகளை, அவன் தனது ஆட்சியின்கீழ் கொண்டுவந்தனன். ஆனால் அவன் இறுதிக்காலத்தில், அவனுடைய மகன் ஹர்ஷன், அரசுரிமையை வலியப் பெறுவதற்குச் சூழ்ச்சிசெய்தான்.

## காச்மீரத்தின் நீரோ.

ஹர்ஷன், (1089—1101) தனது இளவல் பெற்ற அரசுரிமையை, தன் வீரத்தினால் கைப்பற்றிக்கொண்டனன். அவன் ஓர் படைவீரனாக இருந்ததுமன்றி, ஒரு கவியாகவும், இலக்கியத்திலும், இசையிலும் பற்றுடையவனாகவும், பல மொழிகள் கற்றோனாகவும் விளங்கினன். பெரும்போக வாழ்க்கையை அவன் விரும்பினன். புதியமுறைகள் அவனால் போற்றப்பட்டன. அவனுடைய பொன், வெள்ளிக்காசுகளில் யானையின் உருவம் காணப்பெறும். லோகரகுலத்தினரின் நாணயங்களில், ஹர்ஷனின் காசுகள் மட்டும் கிடைக்கப் பெற்றுள்ளன. அவன் தந்தையின் அதிகாரிகளில் பெரும்பான்மையினரைப் பதவியிலிருக்கச்செய்தான். எளிய மக்களும் அவனை அணுகமுடிந்தது. ஆனால், அவனுடைய உறவினர்களே அவனுக்குப்பகையாக சூழ்ச்சிகள் செய்வதை உணர்ந்த பின்னர், கொடுமை நிறைந்தவனாக மாறினன். "காச்மீரத்தின் நீரோ" என்று அவன் அழைக்கப்பெறுகிறான். அரசியல் அலுவல்களைப் புறக்கணித்ததாலும், தவறான முறையில் பொருளைச் செலவழித்ததாலும் நாட்டில் குழப்பம் மிகுந்தது. வருவாயைப் பெருக்குவதற்கு கோயில்கள் தாக்கப்பட்டன. உலோகத்தாலாகிய கடவுளுருவங்கள் அழிக்கப்பட்டன. நாணய முறை கொடுமை நிறைந்ததாகியது. அரசனின் நேர்மை குறைந்தது. அவன் வளர்ப்புத்தாய்களும், உடன் பிறந்த மங்கையரும்கூட அவனால் துன்புறுத்தப்பெற்றனர். அவன் அவையில் சூழ்ச்சிகள் பெருகின. நாட்டில் கலகங்கள் ஏற்பட்டுவந்தன. ஆனால், வரலாற்றறிஞன் கல்ஹணனின் தந்தை சம்பகன், (ஹர்ஷனின் அமைச்சனாயிருந்தவன்) தன் தலைவனுக்கு உண்மையுடன் பணியாற்றி வந்தனன். நாட்டில்

வறுமையும், குழப்பமும் மிகவே அரசன் ஆட்சியைக்கைவிட்டு ஓடி, பின் கொல்லப்பட்டனன். ஹர்ஷனின் சில பண்புகள், முகம்மது பின் துக்ளக்கின் தன்மையை ஒத்தன என்று ஒரு அறிஞரால் குறிப்பிடப்பட்டுள்ளது.‡ அவனைச் சிறப்பிக்கப் புகுந்த கல்ஹணன், அவன் பண்புகளிற் சில உளங் கவரத்தக்கனவாயும், சில வெறுக்கத்தக்கனவாயும் உள்ளன என்று கூறுவன். தனது தந்தையை ஆதரித்த ஒரு மன்னனைப் பற்றி கூறுகையில் உள்ளதை உள்ளவாறு எழுதிய, அவன் (கல்ஹணனின்) தன்மை, அவனை வரலாற்றறிஞன் என்ற பெயருக்கு ஏற்றவனாகச் செய்கிறது. ஹர்ஷனுக்குப் பிறகு காச்மீரநாட்டின் வரலாற்றில், உள்நாட்டுப் போர்கள், வறுமை, நேர்மையின்மை, சூழ்ச்சிகள் முதலியன நிறைந்திருப்பதைக் காண்கிறோம். செயசிம்மன் (1128-1155) ஆட்சிக்காலத்தில் கல்ஹணன், "இராசதரங்கிணி" என்ற நூலை எழுதினன். ஆனால் அவன் அம்மன்னனால் ஆதரிக்கப்பெறவில்லை.

## காச்மீரத்தின் வீழ்ச்சி.

1150-முதல் காச்மீரம் சிறிது சிறிதாகச் சிதைவுற்றது. 1171-ல் லோகர குலம் முடிவடைந்தது. பின்பு தேர்ந்தெடுக்கப்பட்ட வப்பதேவனின் வழியில் வந்தோர் 1286-வரை ஆட்சி நடத்தினர். 1339-வரை, இந்து அரசர்களின் ஆட்சி நிலவியது. இறுதியான கோதாதேவி, அரசுகட்டிலினின்று விலக்கப்பட்டு, அரசியலாரின்கீழ் பணியாற்றி வந்த ஷாமீர் என்ற முகம்மதிய வீரன், தன் குலத்தை அரியணையிலமர்த்தினன்.

## காச்மீரநாட்டு வரலாற்றின் தன்மை.

பிற நாடுகளுடன் ஒப்பிடுமிடத்து, காச்மீரம், அரசியலில் தனித்த நிலையிலிருந்ததாகவே கூறவேண்டும். ஆயினும், எட்டாம் நூற்றாண்டின் வட இந்திய அரசியல் வரலாற்றில் காச்மீரம் சிறப்பான நிலையைப்பெற்றிருந்தது. அந்நாட்டு ஆட்சிமுறையில், அளவுக்குமீறிய வரிகள்விதித்தல், கொடுமை,

‡ Ray op. Cit. I. p. 156.

கைக்கூலி கொடுத்தல், நேர்மையின்மை, அமைச்சரின் கீழ்ப்படியாத்தன்மை, அரசிகளின் ஆதிக்கம் முதலிய பண்புகள் அடிக்கடி காணப்பட்டன. வலிமை மிக்க பெருநிலக்கிழவர்களும், இராணுவ வீரரும், சீர்கேடான பண்புகள் கொண்ட அரசர் அரசிகளும் நாட்டின் குழப்பத்திற்குக் காரணமாயிருந்தனர். மக்களோ, யாதுமறியாது விலங்குகள்போல் அடங்கிக் கிடந்தனர். ஆனால், அயல்நாட்டுப் படை எழுச்சி அங்கு ஏற்படவில்லை. சிற்சில காலங்களில் சிறப்பான ஆட்சிமுறையினால் கேடுகள் ஓரளவு நீக்கப்பெற்றிருந்தன. சைவசமயம் காச்மீர மக்களின் பண்பாட்டுக்கு இயைந்த முறையில் வளர்ச்சியுற்று வந்தது. வடமொழி இலக்கியமும், கலையும் சிறப்பெய்தின. சிலஅரசர்கள், கல்வி, கட்டடக்கலை முதலியனவற்றை ஆதரித்தனர். காச்மீரநாட்டுப் பண்டிதர், புகழ் வாய்ந்தோராவர். இந்தியக் கலைப்பண்பு வளர்ச்சிக்கு அந்நாடு உதவியளித்ததுடன், நடு ஆசியாவிலும், சீனாவிலும் அதனைப்பரப்ப, அந்நாட்டு மக்கள் சீரியமுயற்சி செய்தனர்.

## பகுதி 13

### இராட்டிரகூடர் *(தொடர்ச்சி)*

**மூன்றும் இந்திரன்.** இரண்டாம் கிருட்டினனின் பெயரனை மூன்றும் இந்திரன் (912—917) கூர்ச்சரப்பிரதிகாரப் பேரரசில் படையெடுத்து, 916-ல் கான்யாகுப்ஜத்தைக்கைப் பற்றுவதற்கு முன்பு உபேந்திரபரமாரனைத் தோற்கடித்தனன் என்பர் சிலர். முதலாம் மகிபாலப்பிரதிகாரனை அவன் வென்றபோதிலும், அடுத்த ஆண்டில் அவனிறந்துவிட்டதால் அவ்வெற்றியினால் மிக்க சிறப்பு ஏற்படாதுபோயிற்று. இரண்டாம் அமோகவர்ஷனுக்குப்பின் (917—918) நான்காம் கோவிந்தன் (918-935) பட்டம்பெற்றான். தனது நேர்மையற்ற நடத்தையாலும், வேங்கிநாட்டு இரண்டாம் பீமனால் தோற்கடிக்கப்பட்டதாலும், இழிவான பெயரைப்பெற்றான். இவன் அதிகாரிகள் இவனை எதிர்த்துக் கலகம் செய்யலாயினர். மூன்றும் அமோகவர்ஷன் (935—939) சமய வாழ்க்கையில் நாட்டம் செலுத்தியதால், உண்மையான ஆட்சிமுறை அவனுடைய திறமை வாய்ந்த மகன் மூன்றும் கிருட்டினனிடம்

ஒப்படைக்கப்பெற்றிருந்தது. கிருட்டினன் தனது மைத்துன னை இரண்டாம் பூதுகன் என்ற மேலைக்கங்க மன்னன் இழந்துபோன தலைக்காட்டு அரசுரிமையை மீண்டும் பெற அவனுக்கு உதவிசெய்தான். மேலும் திரிபுரி காலசூரியரைத் தோற்கடித்து காலிஞ்சரைக் கைப்பற்றியது அவனது இரண் டாவது செயலாகும்.

## மூன்றும் கிருட்டினன் (939—968)

இவன் பட்டம்பெற்றபின் சோழருடன் போரிட்டு, 949 ல் தக்கோலம் (வடஆற்காடு மாவட்டம்-அரக்கோணம் அருகில்) என்ற இடத்தில் சிறந்ததோர் வெற்றிபெற்றனன். சோழ நாட்டு இளவரசன், இராசாதித்தியன் அப்போரில் உயிரிழந் தான். அவ்வமயம் தனக்கு உதவியளித்த இரண்டாம் பூதுக னுக்கு வனவாசி நாட்டையும் வேறுசில பகுதிகளையும் கிருட்டி னன், பரிசாக அளித்தான். தென்னுற்காடு, வடஆற்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் கிடைக்கப்பெற்ற பல கல் வெட்டுக்களிலிருந்து, கிருட்டினன் தொண்ட மண்டலத்தை (வடக்கு, தெற்கு, பெண்ணுர் ஆறுகளுக்கு இடைப்பட்ட பகுதி) தன்னுடன் இணைத்துக் கொண்டானென்று அறியப்படுகிறது. காஞ்சியையும், தஞ்சாவூரையும் கைப்பற்றியவன் என்றும் அவை அவனைச் சிறப்பிக்கின்றன. இரண்டாம் சீயகனையும் (பரமார அரசன்) அவன் முறியடித்ததாகக் காணப்படுகிறது. ஆனுல் பரமார ஆட்சியின் வளர்ச்சியைத் தடுக்க அவனுல் இயலவில்லை. வேங்கி நாட்டில் கிருட்டினனுல் தேர்ந்தெடுக் கப்பட்ட ஒருவன் அரசனுயினன். இவ்வாறு தீபகற்ப இந்தி யாவில், மிகவும் உயர்வான நிலையை அம்மன்னன் (கிருட்டி னன்) எய்தினன். இத்துறையில் மூன்றும் கோவிந்தனைவிட அவன் சிறப்பு வாய்ந்தவனே. ஆனுல் இத்தகைய வெற்றிகள், அவனுக்கு வடஇந்தியாவில் கிடைக்கவில்லை. காலசூரியருடன் கிருட்டினன் பகைமைபூண்டிருந்ததும், முதலாம் யசோவர்மன், தங்கன் ஆகியோரின்கீழ் சந்தேலர் சிறப்புற்றிருந்ததும், வட இநதியாவில் அவன் தோல்விக்குக் காரணங்களாகக்கூறலாம். மூன்றும் கோவிந்தன் வடஇந்தியா, தென்னிந்தியா இருபகுதி களிலும் ஆதிக்கம் பெற்றிருந்தது ஈண்டு நினைவு கூரத்தகும்.

அவனைவிட, கிருட்டினன் வடஇந்திய நிகழ்ச்சிகளைப்பொறுத்த வரை, சிறப்பு குன்றியவனே. ஆயினும் இவனுடைய படை வீரமும் திறமையும் போற்றற்குரியன. இராட்டிரகூடகுலத்தின் சிறப்புமிக்க அரசர்களில் இவனே இறுதியானவன். கன்னடக் கவியான பொன்னன், கிருட்டினனின் ஆதரவைப்பெற்றனன். "உபய கவிச்சக்கரவர்த்தி" என்ற பட்டத்தை அரசன் அவனுக்கு வழங்கினன். வடமொழியிலும், கன்னடத்திலும் அக் கவி தேர்ச்சி பெற்றிருந்தனன். 941-ல் கன்னட பாரதம் பாடிய, பம்பா என்னும் கவியும் அக்காலத்தவனே. இவர்களிருவருடன் இரண்ணன் என்ற கவியும் சேர்க்கப்பட்டு கன்னட இலக்கியத்தின் மும்மணிகள் என்று புகழப்பெறுவர்.

## குலத்தின் வீழ்ச்சி.

மூன்றும் கிருட்டினனுக்குப் பின்போந்த கோட்டிகனென்பான் (968—972) காலத்தில், பரமார மன்னன் இரண்டாம் சீயகன் மான்யகேடத்தைத் தாக்கினன் (972). பின்பு இரண்டாம் கற்கன் (972--973), கல்யாணி சாளுக்கியகுல முதல்வனான இரண்டாம் தைலனுல், அரசுகட்டிலினின்று நீக்கப் பட்டான். சிறப்பு வாய்ந்த இராட்டிரகூட மரபினராட்சி முடிந்தது.

## இராட்டிரகூடரின் சிறப்பு.

இராட்டிரகூடகுலத்தின் பதினன்கு மன்னர்களில், தந்தி துர்கன், முதலாம் கிருட்டினன், துருவன், மூன்றும் கோவிந்தன், மூன்றும் இந்திரன், மூன்றும் கிருட்டினன் ஆகியோர் ஒப்பற்ற வகையில் மிக்க வலிமையுடையவர்களாக விளங்கியது குறிப்பிடத்தக்கது. சில பண்புகளில் முதலாம் அமோகவர்ஷன் பெருமை பெருந்தியவன். இக்குலத்தில் பயனற்ற அரசர்கள் மூவரே காணப்பெற்றனர். சுலேமான் என்னும் அரேபியன் "இராட்டிரகூடர் பிறர் அஞ்சத்தக்க பெருவலிமையைப்பெற்ற வர்கள்" என்று கூறுகிறுன். அடிக்கடி அரசுரிமைச்சச்சரவுகள் ஏற்பட்ட போதிலும், பேரரசு கேடுறுது உயர்வான நிலையில் அமைந்திருந்தது. அரேபியரெல்லாம் அவரோடு நட்பு பூண்டிருந்ததால் வாணிகம் சிறப்புற்றோங்கியது. இந்து சமயம்

(சைவமும், வைணவமும்) வளர்ச்சியுற்றது. ஆனால் அஃது சமண சமயத்தின் முன்னேற்றத்தைத் தடை செய்யவில்லை. அரசர்களும், அவர்கள்கீழிருந்த அதிகாரிகளும், சமணத்தை ஆதரித்தனர். தக்கணத்தின் மக்கட்டொகையில் மூன்றில் ஒரு பங்கினர் சமணர்களாயிருந்தனர் என்று அறியப்படுகிறது. புத்தசமயத்தின் வீழ்ச்சிக்கு அரசியலாரின் சமயக்கொள்கை சிறப்பான காரணமன்று. கனேரி (பம்பாய் அருகில்), ஷோலாபூர், தார்வார் மாவட்டங்களில் புத்தசமயம் அமைதியான முறையில் நிலைத்திருந்தது. இராட்டிரகூடரின் நாட்டில் காணப்பெற்ற சமய ஒற்றுமை, தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கவில்லை. சலோட்கி (பீஜப்பூர் மாவட்டம்) என்ற இடத்தில் காணப்பெற்ற 945-ம் ஆண்டுக்கு உரிய ஓர் கல்வெட்டு, இராட்டிரகூடர் காலத்திய ஒரு கல்லூரியைப்பற்றிச் சிறப்பிக்கின்றது. 27-உணவுவிடுதிகளும், 60-ஏக்கரா நிலமும் அக்கல்லூரிக்கு உரியனவாம். அவற்றின் வருவாய், விளக்குகள் அமைப்பதற்காக செலவிடப்பட்டதென்றும், கல்லூரித்தலைவர், 250-ஏக்கரா நிலத்தினின்று கிடைத்த வருவாயிலிருந்து ஊதியம் கொடுக்கப்பட்டாரென்றும், செல்வந்தரால் கொடுக்கப்பட்ட நன்கொடைகளைத்தவிர, ஊர்மக்களும், திருமணம் முதலிய கொண்டாட்ட காலங்களில் கல்லூரிக்குப் பொருள்கொடுத்து வந்தனரென்றும் அறியக்கிடக்கின்றன. இராட்டிரகூடர் இலக்கியத்தை மிகவும் ஆதரித்தனர். பல வடமொழி, கன்னட ஆசிரியர்கள், சிறப்புற்று விளங்கினர். அவர்களுள் பெரும்பான்மையினர் சமணர். ஆனால் மராத்திய இலக்கியம் இராட்டிரகூடரால் சிறப்பாகப் போற்றப்படவில்லை. அவர்களின்கீழ், கலை முன்னேற்றம் மிகுதியாக ஏற்படவில்லை. அவர்தம் கட்டட, சிற்பநிலை, எல்லோரா, எலிபெண்டா முதலிய குகைக்கோயில்களில் மட்டுமே காணப்பெறும். ஆயினும், "தக்கணம், இராட்டிரகூடரின்கீழ் பெற்றிருந்த உயர்ந்த அரசியல் சிறப்பைப்போல், பண்டைய இந்திய வரலாற்றில் வேறெந்த காலப்பகுதியிலும் அடையவில்லை...... அத்துணை நீண்டகால அளவுக்கு (200-ஆண்டுகட்கு மேல்) புகழுடன் ஆட்சி நடத்திய இந்துகுலங்கள் மிகச்சிலவாம்.†

---

† Altekar, The Rashtrakutas and their Times, pp 413—14.

## பகுதி 14.

### கல்யாணி—மேலைச்சாளுக்கியர்.

**இரண்டாம் தைலன்.** தக்கணத்தில் சாளுக்கியராட்சியை மீண்டும் நிறுவிய இரண்டாம் தைலனுக்கும் (973—997) வாதாபி சாளுக்கிய குலத்தின் இறுதியான மன்னன் இரண்டாம் கீர்த்திவர்மனுக்கும் உள்ள உறவைப்பற்றி நாம் தெளிவாக அறியோம். தைலன், சில இராட்டிரகூட அதிகாரிகளைத்துணைகொண்டு 973-ல் இரண்டாம் கற்கனை (இராட்டிரகூட அரசன்) முறியடித்தனன். அவ்வமயம் அவனுக்கு திரிபுரிகாலசூரியரும் உதவியிருக்கக்கூடும். ஏனெனின் தைலனின் தாய், அக்குலத்தினள் ஆவள். வேறுசில இராட்டிரகூட சாமந்தரும், தலைக்காட்டு கங்கரும் அவனை எதிர்த்த காலத்தில், தைலன், பகைவரைப் புறமுதுகுகாட்டச்செய்து வெற்றிகொண்டான். இரண்டாம் கற்கனின் மகளை அவன் மணம்புரிந்துகொண்டு, கல்யாணிநகரை (ஹைதராபாத்நாடு) தன் தலைநகராக்கினன். தைலன், பல முறைகள், முஞ்சபரமாரனால் தோற்கடிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆறு முறைகள் தோல்வியுற்றபோதிலும் இறுதியில் முஞ்சனைச் சிறைபிடித்தான் (995). அவனும் அவன்பின்போந்தோனும், இரண்ணன் என்ற கன்னடப் புலவனை ஆதரித்தனர்.

### முதலாம் சோமேஸ்வரன்.

சத்யஸ்ரயனும் (997—1008) ஐந்தாவது விக்கிரமாதித்தியனும் (1009—1014) ஆட்சிபுரிந்த காலத்தில் முதலாம் இராசராசசோழன், தன் பேரரசைப்பரப்பி வந்தான். அச்சோழன், கி. பி. 1000-க்கு முன்னர், கங்கவாடியையும், நோலம்பவாடியையும் (மைசூரின் தெற்கு, வடக்குப்பகுதிகள்) வென்று சுமார் 1008-ல் சாளுக்கியரைத் தோற்கடித்தான். நாடு சூறையாடப்பட்டு, ஈவிரக்கமற்ற வகையில், பெண்டிரும், குழந்தைகளும், அந்தணரும் கொலை செய்யப்பட்டனர். பெண்கள் கற்பழிக்கப்பெற்றனர். இரண்டாம் செயசிம்மன் (1015—1042) என்ற சாளுக்கிய மன்னனை, சுமார் 1021-ல் முஸங்கி (மாஸ்கி, ஹைதராபாத்) என்னுமிடத்தில் முதலாம்

இராசேந்திரசோழன் தோற்கடித்தான். முதலாம் சோமேஸ்வர ஆகவமல்லன் என்பான் (1042—1068) தொடக்கம் முதல் சோழருடன் ஓயாப்போர் நிகழ்த்தினன். 1052-ல் கொப்பம் என்ற இடத்தில் (கோலாப்பூர்-கிருஷ்ணு ஆற்றங்கரை) நடந்த போரில் முதலாம் இராசாதிராசசோழன் இறந்தானெனினும், சாளுக்கியர் தோல்வியுற்றனர். சோழரால், கோலாப்பூரில், ஓர் வெற்றித்தூண் நிறுவப்பெற்றது. பரமாரபோஜனுக்குப் பகையாக ஏற்படுத்தப்பட்ட கூட்டுறவில் சோமேஸ்வரனும் சேர்ந்து, அவனுடைய வீழ்ச்சிக்கு உதவினன் (1055). பிறகு இச்சாளுக்கியவேந்தன், திரிபுரிக்கு மன்னனான இலக்குமி கர்ணனை முறியடித்தான். 1062-ல் மீண்டும் சோமேஸ்வரன் கூடல் சங்கமத்தில் (கிருஷ்ணு, துங்கபத்திரா ஆறுகள் கடலுடன் கூடுமிடம்) சோழரால் வெல்லப்பட்டனன். இச்சாளுக்கியன் சைவ சமயத்தவன். கல்யாணி நகரை அவன் சிறப்புறச் செய்தான். மருத்துவரால் மாற்றமுடியாத கொடியநோயின் காரணமாக, துங்கபத்திரா ஆற்றில் விழுந்து இவன் உயிர் துறந்ததாகக் கூறப்படுகிறது.

## ஆறும் விக்கிரமாதித்தியன்.

இரண்டாம் சோமேஸ்வரன் (1068—1076) சோழர் படையெழுச்சியை ஆட்சித்தொடக்கத்தில் தடுத்துவிட்டதாகக் கூறியபோதிலும், சோழரின் கல்வெட்டுக்கள் அவர்தம் வெற்றியைப்பற்றியும், காம்பிலி என்ற சாளுக்கிய நகரம் அவர்களால் அழிக்கப்பட்டதென்றும் அறிவிக்கின்றன. இம்மன்னன் காலத்தில் சைவசமயம் சிறப்பாக முன்னேறியது. இவன் தம்பி, ஆறும்விக்கிரமாதித்தன் (1076-1127), அண்ணனைக்கவிழ்த்து அரசுரிமையைக் கைப்பற்றினன். அக்குலத்தில் மிகச்சிறந்த வேந்தன் இவனேயாகும். இவன் சக ஆண்டு முறையை ஒழித்து தான் பட்டம்பெற்றதுமுதல் தொடங்கும், சாளுக்கிய விக்கிரம ஆண்டு ஒன்றை ஏற்படுத்தினன். விக்கிரமாங்கன், எனவும் திரிபுவனமல்லன் என்றும் இவன் 'அழைக்கப்படுவன். இவன், தம்பியின் கலகத்தை அடக்கியதுடன், தொடக்கத்தி

லேயே சோழருடனும் போரிட்டான். விக்கிரமாதித்தனின் கீழிருந்த ஹொய்சலத் தலைவர்கள், சுமார் 1117-ல் சோழரிடமிருந்து தலைக்காட்டைக்கைப்பற்றிச் சிறப்புற்றனர். பெயரளவில் சாளுக்கிய மன்னனுக்கு அவர்கள் கீழ்ப்பட்டிருந்தனர். சுமார் 1118-ல் விக்கிரமாதித்தன், முதலாம் குலோத்துங்க சோழனை வென்று வேங்கிநாட்டைத் தன்னடிப்படுத்தினன். இவனுடைய பரந்த பேரரசு நன்கு ஆட்சிபுரியப்பட்டது. இவன் வாழ்க்கையின் தொடக்கத்தில் சமணனாக இருந்திருக்கலாம். ஆனால் பிற்காலத்தில் சைவப்பற்று மிகுந்தவனாகக் காணப்பட்டான். இவனால் ஆதரிக்கப்பெற்ற பில்ஹணன் எழுதிய "விக்கிரமாங்க சரிதம்" என்ற காவியத்தில், அரசன் மிகுதியாகப் புகழப்படுகிறான். இவனவையிலிருந்த முறைநூல் அறிஞனான விஞ்ஞானேஸ்வரன் கூறுவதாவது "கல்யாணி நகரைப்போல், இந்நிலவுலகில் மற்றோர் நகரம் இருந்ததில்லை; இப்பொழுதும் இல்லை; இனி இருப்பதுமில்லை. அவ்வாறே விக்கிரமாங்கனைப்போல் வளமுடைய மன்னன் பார்க்கப்படுவதுமில்லை; கேட்கப்படுவதுமில்லை". மன்னனின் ஆறு மனைவியரைப்பற்றி கல்வெட்டுக்கள் குறிப்பிடும். இவன் மகன் மூன்றும் சோமேஸ்வரன் 1127-ல் பட்டமெய்தினன். (1127—1136) இவனால் எழுதப்பட்ட வடமொழி நூலான "அபிலாஷிதார்த்த சிந்தாமணி" என்பது, சிறப்பாக அரசியலைப் பற்றிக்கூறும். இந்நூலாசிரியன், ஆட்சிமுறை, முறைவழங்கல் யானைகள், குறிநூல், சொற்கோப்புக்கலை, போர்க்கருவிகள், இரசவாதம், மருந்து வகைகள் முதலிய பல செய்திகளைப் பற்றிக் கற்றறிந்தவன் என்பது நூலினின்றே அறியலாகும். பின்வந்த, இரண்டாம் ஜகதேகமல்லன் (1136—1151), மூன்றும் தைலன் (1151—1163), மூன்றும் ஜகதேகமல்லன் (1163—1184) ஆகியோர் காலத்தில், சாளுக்கியப்பேரரசு சீர்குலையலாயிற்று.

## வீரசைவ சமயம்.

சுமார் 1156-ல் பிஜ்ஜலன் என்னும் அமைச்சன் (காலசூரியருடன் உறவுகொண்டவனாகக் கூறிக்கொண்டவன்) ஒரு

புரட்சியின் விளைவாக, அரசுரிமையைக் கைப்பற்றிக்கொண்டான். மூன்றாம் தைலன் இதனால் நாட்டின் ஒரு பகுதியையே ஆண்டுவந்தான். 1167-ல் பிஜ்ஜலன் அரசிருக்கை துறந்ததால் அவன்பின் வந்தோர் 1183-வரை ஆட்சிபுரிந்தனர். இப்புரட்சிக்கால ஆட்சிக்கும் வீரசைவ சமயத்திற்கும் தொடர்பு உண்டு. முடிகவர்ந்த காலசூரியர், வீரசைவராவர். அச்சமயத்தினர், சிவனை இலிங்கவடிவில் வணங்கியதால் "இலிங்காயதர்" என அழைக்கப்பெற்றார். வேதத்தின் ஆணையை இவர்கள் மறுத்தனர். மறுபிறப்பில் இவர்களுக்கு நம்பிக்கை இல்லை. இவர்களால் வயதுவந்தோர் திருமணம் எதிர்க்கப்பட்டது; கைம்பெண்கள் மறுமணம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அந்தணரின் உயர்வு மறுக்கப்பட்டது. ஆனால், இச்சமயத்தைத் தோற்றுவித்த பஸவர் (பிஜ்ஜலனின் அமைச்சன்) ஒரு அந்தணனாவன்.‡ இச்சமயத்தின் வளர்ச்சியால், சமணமும், புத்தமும் கன்னட நாட்டில் மிகுதியாகத் தாழ்வுற்றன. வீரசைவ இயக்கம் கன்னட இலக்கிய வளர்ச்சிக்கு உதவியது.§

## குலத்தின் முடிவு.

இறுதியான காலசூரி மன்னனைத்தோற்கடித்து நான்காம் சோமேஸ்வரன் (1184 – 1200) சாளுக்கிய குலத்தின் ஆட்சியை நிலைநிறுத்தினன். ஆனால், அவனாட்சியில் யாதவரும், ஹொய்சலரும் உரிமைபெற்று, சாளுக்கிய பேரரசின் பல பகுதிகளிலும் தம்மாட்சியைப் பரப்பினர். இதனால், சுமார் இரண்டேகால் நூற்றாண்டுகளாக நிலைத்திருந்த கல்யாணி சாளுக்கியராட்சி கவிழ்ந்தது. இக்குலத்தினர், கிண்ணம் போன்ற உருவையுடைய கதம்பர் நாணயங்களை ஒத்த காசுகளை வெளியிட்டனர். ஆனால். தாமரைக்குப்பதிலாக, சிங்கம் அல்லது கோயில் உருவமும், கன்னட எழுத்துக்களும் அவற்றில் காணப்பெறும்.

---

‡ Smith. The Early History of India.

§ E. P. Rice. A History of kanarese Literature (1921) Chapters IV & V.

## பகுதி 15.

### தேவகிரி யாதவர் வரலாறு.

**பில்லமன்.** தேவகிரி யாதவர், காவியங்கள் கூறும் கிருட்டினபிரானின் குலவழியில் தாம் தோன்றியதாகக் கூறுவர். நாசிக்கிலிருந்து தேவகிரிவரை உள்ள, சேவுண அல்லது சேயுண என்ற நாட்டை அவர்கள் ஆண்டுவந்ததால், சேவுணர் எனவும் அழைக்கப்பெற்றனர். நான்காம் சோமேஸ்வரனின் கீழ் மானியக்காரனுயிருந்த பில்லமன் (1187—1191) கல்யாணி சாளுக்கியரின் வீழ்ச்சியைப் பயன்படுத்திக்கொண்டு, கிருஷ்ண ஆறுவரை நிலப்பரப்பைக் கைப்பற்றி, தேவகிரி (தௌலத்தாபாத்,—ஹைதராபாத்) என்ற நகரைத்தோற்றுவித்து, 1187-ல் அதனைத்தன்நாட்டின் தலைநகராக்கினன். அவன் மேலும் நாட்டைப்பெருக்க முயலுகையில், இரண்டாம் வல்லாளன் என்ற ஹொய்சல மன்னன், 1191-ல் கடக் (தார்வார் மாவட்டம்—பம்பாய்) என்றவிடத்தில் தோற்கடித்து, லாக்குண்டி (தார்வார் மாவட்டம்) என்னுமிடத்தைக்கைப் பற்றினன். பில்லமன் உயிர்துறந்தான்.

### ஜெய்துகி.

பின்போந்த, பில்லமனின் மகனுன ஜெய்த்திரபாலன் அல்லது ஜெய்துகி (1191—1210) 1196-ல் திரிபுரிகால சூரியரையும், 1199-ல் மகாதேவகாகதீயனையும் வென்றனன். இவன், சிறையிலடைபட்டிருந்த கணபதிகாகதீயனை விடுதலை செய்து, வாரங்கல் (காகதீயர் தலைநகர்) அரசைப்பெறும்படி உதவினன் என்று கூறப்படுகிறது. வேதங்கள், தருக்கம், மீமாம்சசாத்திரம் ஆகியவற்றை, ஜெய்துகி நன்கு கற்றறிந்திருந்தான். கணிதத்திலும், வானநூலிலும் வல்லுநனுன பாஸ்கராசாரியனின் மகன் இலக்குமிதரன் என்பானே அம் மன்னனின் ஆசிரியராயினன். போஜசீலாகரனுக்கு உரிய கோலாபூர் நாட்டை, யாதவர் வென்று, பதின்மூன்றும் நூற்றுண்டில் மிகுந்த சிறப்பு எய்தினர். பதினன்காம் நூற்றுண்டில் அக்குலம் வீழ்ச்சியுற்றது. அவ்வரலாறு இரண்டாம் புத்தகத்தில் கூறப்பெறும்.

# பகுதி 16.

## வேங்கிநாட்டு கீழைச்சாளுக்கியர் (தொடர்ச்சி)

### உள்நாட்டுப்போர்.

முதலாம் பீமன் இறந்தபின் அவன் மகன் நான்காம் விசயாதித்தியன், ஆறுமாதங்கள் ஆட்சிபுரிந்தபின், முதலாம் அம்மா (918—925) என்பான் பட்டம்பெற்றான். அவன் மாண்டவுடன் உள்நாட்டுக் கலகம் தோன்றியது. இராட்டிர கூடர் அதில் தலையிடலாயினர். இரண்டாம் பீமன் (934—945) இராட்டிரகூட அரசனை நான்காம் கோவிந்தனைத் தோற்கடித்து, வேங்கியின் அரசுரிமையைப் பெற்றான். பின் போந்த இரண்டாம் அம்மா என்பானை (945—970), இராட்டிரகூட அரசன் (மூன்றும் கிருட்டினன்) அரசுகட்டிலி னின்று நீக்கி, நாடுகடத்திவிட்டு, 956-ல் தன்னால் தேர்ந் தெடுக்கப்பட்ட பாதபன் என்பானை வேங்கியின் அரசனாக்கி னன். 956-முதல் 999-வரை, அவனும் அவன்பின் வந்த இருவர்களும் ஆட்சிபுரிந்தனர்.

### சோழர் தலையிடுதல்.

மூன்றும் யுத்தமல்லன் என்ற வேங்கியின் அரசனை, முதலாம் இராசராசசோழன் விரட்டியதாகத் தோன்றுகிறது. 999-ல் அச்சோழன் வேங்கியில் அவன் அதிகாரத்தை நிலை பெறச்செய்து, பாதபனுக்கு முன்பு அரசு செலுத்திய சாளுக்கிய இளைஞரை மீண்டும் அரியணையிலமர்த்தினன். இவ்வாறு சோழர் உதவியுடன், முதலாம் சக்திவர்மன் (999—1011) ஆட்சிதொடங்கியது. பின்வந்த விமலாதித்யன் (1011–1018) முதலாம் இராசராசசோழனின் மகளை மணம்புரிந்து கொண்ட னன். விமலாதித்தியனின் மகன் முதலாம் இராசராசன் (கீழைச்சாளுக்கியன்) (1018—1060). அவனுடைய ஒன்று விட்டு உடன்பிறந்தோனுன ஏழாம் விசயாதித்யனுக்கு 1030-ல் நாட்டின் ஒரு பகுதியை இழந்துவிடவேண்டியதாயிற்று. முதலாம் சக்திவர்மனும், முதலாம் இராசராசனும் காட்டுப்

பன்றி உருவம்பெற்ற பொற்காசுகளை வெளியிட்டனர். நன்னையபட்டன், நாராயணபட்டன் என்ற இரு புலவர்கள், இராசராசனின் ஆதரவைப்பெற்றனர். மகாபாரதத்தின் ஒரு பகுதியை, நன்னையபட்டன் தெலுங்கில் மொழிபெயர்த்தனன். இராசராச சாளுக்கியன், முதலாம் இராசேந்திரசோழனின் மகளை மணந்து கொண்டனன். இதன் விளைவாகப் பிறந்த பிள்ளை, இராசேந்திரன் (முதலாம் குலோத்துங்கசோழன்) கீழைச்சாளுக்கிய குலத்தையும், சோழர் குலத்தையும் இணைத்தனன். சாளுக்கிய அரசன் முதலாம் இராசராசன் இறந்தபின், ஏழாம்விசயாதித்யன் வேங்கியின் அரசுரிமையைக் கைப்பற்றினன். முதலாம் குலோத்துங்க சாளுக்கிய சோழன், ஏழாம் விசயாதித்யனின் ஆட்சியை முடிவுறச்செய்து 1070-ல் வேங்கியைத் தன்னுட்சியின்கீழ் கொண்டுவந்தனன். 1076-ல் விசயாதித்யன் இறந்த பிறகு, வேங்கி, குலோத்துங்கனுல் கைப்பற்றப்பட்டிருக்கக்கூடும்.

## சமயநிலையும், கலைப்பண்பும்.

கீழைச்சாளுக்கியர், 500-ஆண்டுகட்குமேல் ஆட்சிபுரிந்தனர். வேங்கிநாட்டில், சைவம், வைணவம், வேதமுறையான சமயம், சமணம், யாவும் செழித்தோங்கின. இவை அரசர்களின் ஆதரவையும் பெற்றன. விமலாதித்யன் என்ற மன்னன் சமணன். சில இடங்களில் (சிறப்பாக அமராவதியில்) புத்தசமயம் நிலவியதென்பது கல்வெட்டுக்களிலிருந்து அறியப்படுகிறது. முதலாம் இராசராசன், மகாபாரதம் தெலுங்கில் எழுதப்படுவதை விரும்பிப் போற்றினன். கீழைச்சாளுக்கியர் தொடக்கத்திலிருந்து வட மொழியையும், மூன்றும் யுத்தமல்லன் காலம் முதல் (பத்தாம் நூற்றுண்டு) தெலுங்கையும் ஆதரித்து முன்னேறச்செய்தனர். பதினேரும் நூற்றுண்டின் பிற்பாதியில் வாழ்ந்த மல்லண்ணு என்பார், மகாவீராசாரியன் என்ற சமண ஆசிரியர் வடமொழியில் இயற்றிய சிறந்த கணித நூலை, தெலுங்குச் செய்யுட்களில் இயற்றினுர். முதலாம் குலோத்துங்கன், ஒரு வேதக்கல்லூரி நிறுவுவதற்கு உதவினன் என்று அறியப்படுகிறது.

# பகுதி 17.

## வாரங்கல்நாட்டு காகதீயர்.

### இரண்டாம் புரோலன்.

கல்யாணிநாட்டை ஆண்ட ஆறும் விக்ரமாதித்தியனின் மானியக்காரனுயிருந்த பேட்டன் காகதீயகுல வரலாற்றின் முதல் தலைவனாக அறியப்படுகிறது. மேலைச்சாளுக்கியரின் வீழ்ச்சியையும், முதலாம் குலோத்துங்கன் இறந்தபின் வேங்கி நாட்டிலேற்பட்ட குழப்பத்தையும் பயன்படுத்திக்கொண்ட இரண்டாம் புரோலன் என்ற காகதீயன், கிருஷ்ணு, கோதாவரி ஆறுகளுக்கிடைப்பட்ட பகுதியில் தன்னுட்சியை நிறுவினன். அனுமகொண்டம் அவன் தலைநகராக்கப்பெற்றது. சுமார் 1155-ல் அவன், கல்யாணிவேந்தன் மூன்றும் தைலனைத் தோற்கடித்து, சிறைப்பிடித்து பின் விடுதலை செய்தான். புரோலன், குளங்கள் வெட்டி, உழவுத்தொழில் முன்னேற்ற மடையச் செய்தான்.

### முதலாம் பிரதாபருத்ரன் (1162—1185.)

இவன் வாரங்கல் நகரைத்தோற்றுவித்தான். அதுவே, காகதீயரின் தலைநகராக்கப்பட்டது. படை ஆற்றல் பொருந்திய இவன், தன் நாட்டைப் பெருக்கினன். கல்வி ஆதரிக்கப் பெற்றது. அரசன், கோயில்கள் பலவற்றை எடுத்தான். நாட்டில் செங்கோன்மை நிலவியது. வட மொழியிலும், தெலுங்கிலும் நீதிசாரம் என்ற நூல் மன்னனுல் இயற்றப் பட்டது. வீரசைவ சமயத்தை அவன் போற்றினன். வட மொழி, தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் தேர்ச்சி பெற்ற சோமநாதன் என்ற புலவன், வேந்தனின் ஆதரவைப் பெற்முன். வீரசைவத்தைப்பற்றி அவனுல் நூல்கள் எழுதப் பட்டன. சுமார் 1150-ல் வாழ்ந்த நன்னெசோடு என்ற புலவன், தெலுங்கு மொழியில் குமாரசம்பவம் என்ற நூலை இயற்றினன். பிரதாபருத்ரனுக்குப்பின் அவன் தம்பி மகா தேவன் (1185—1199) பட்டமேற்முன். அவன் தேவகிரி யின் ஜைத்திரபாலனுல் முறியடிக்கப்பெற்முன். பதின்மூன்றும்

நூற்றுண்டில், கணபதி என்ற மன்னனும், உருத்திராம்பாள் என்ற அரசியும் புகழுடன் ஆட்சிபுரிந்து காகதியரின் சிறப்பை உயர்த்தினர்.

## பகுதி 18.

### மேலைக்கங்கர் (தொடர்ச்சி)

### நான்காம் இராசமல்லன்.

இரண்டாம் நீதிமார்கனின் (907—935) ஆட்சிக்குப்பின் வந்த மூன்றும் இராசமல்லன், 937-ல் பூதுகனுக்குத் துணையாகவந்த மூன்றும் கிருட்டினனுல் (இராட்டிரகூட அரசன்) துரத்தப்பட்டனன். ஆகவே இரண்டாம் பூதுகன் (937-960) இராட்டிரகூடருக்கு உதவியாக, தக்கோலப்போரில் சோழரை எதிர்த்து நின்றான். பூதுகன் சமணசமய தத்துவத்தை நன்கு கற்றறிந்திருந்தான். சொற்போரில் ஒரு பௌத்தனை அவன் வென்றதாகக் கூறப்படுகிறது. மூன்றும் மாரசிம்மனும் (960—974) இராட்டிரகூடருடன் நட்புபூண்டு, மூன்றும் கிருட்டினனுடன் ஒத்துழைத்தனன். ஆனுல் கல்யாணியின் இரண்டாம் தைலன் இராட்டிரகூடரைத் தாக்கியகாலை, அவர்களின் மன்னன் நான்காம் இந்திரனை, அரசுகட்டிலில் நிலைத்திருக்கச்செய்ய, மாரசிம்மனுல் இயலவில்லை. இவன் சமணர் கோட்பாட்டின்படி, உண்ணுதிருந்து உயிர்நீத்தான். பின்போந்த நான்காம் இராசமல்லனின் (974—985) அமைச்சன் ஸ்ரவணபெல்கோலாவில் (மைசூர்) தன் பெயரைப்பெற்ற ஒரு சமணக்கோயிலை எடுத்தனன். மேலும் 56½-அடி உயரமுள்ள இந்தியாவில் இணையற்ற, ஓர் கோமதீஸ்வரன் சிலையை 983-ல் நிறுவினன். இதன் சிறப்பு மிகவும் போற்றற்குரியது. சாமுண்டராயன் என்பது அவ்வமைச்சனின் பெயர். அவன் சமணசமயத்தவன். சிறந்த படைவலிமை அவனிடம் காணப்பட்டது. வீரமார்த்தாண்டன் என்ற பட்டமும் அவனுக்கு உரியதாகும். அரசனைக்கவிழ்க்க, நடைபெற்ற ஒரு கலகத்தை அவன் அடக்கி வெற்றிகொண்டான். மேலும், 978-ல் சாமுண்டராயபுராணம் என்ற கன்னட நூலும் அவனுல் இயற்றப்பெற்றது. அதில் 24-சமண தீர்த்தங்கரரைப்பற்றி விளக்கப்படுகிறது. ஆகவே, "ராயன்" என்ற பட்டம் அவனுக்கு ஏற்றதேயாகும்.

### சோழர் படையெழுச்சி.

நான்காம் இராசமல்லனுக்குப்பின் அவன் தம்பி இராக்க சகங்கன் (985—1024) அரசனானான். 1004-ல் சோழர் தலைக்காட்டைக் கைப்பற்றினர். அவ்வரசனின், 1024-ம் ஆண்டுக்கல்வெட்டில், முதலாம் இராசேந்திரசோழனை, அவனுடைய தலைவனாக குறிப்பிட்டிருப்பினும், 1004-ம் ஆண்டிலேயே மேலைக்கங்கராட்சி முடிவுற்றது என்று கருதலாம். கங்க இளவரசர்கள் பலர் பின்னரும் காணப்பட்டனர்.

## பகுதி 19

### துவாரசமுத்திரத்தின் ஹொய்சலர்.

### விட்ணுவர்த்தனன்.

மரபுரையின்படி ஹொய்சல குலத்தின் முதல்வன் சலன் என்பானாகும். வரலாற்றில் அறியப்படும் முதல் தலைவன் முதலாம் வினயாதித்யன் (1006—1022) ஆகும். பின் போந்தவன் நிருபகாமன் (1022—1047). இரண்டாம் வினயாதித்யன் (1047—1100), கல்யாணி சாளுக்கியரின் கீழ் மானியக்காரனாயிருந்தான். இத்தலைவர்கள் சாசகபுரம் (காடூர் மாவட்டம் மைசூர்) என்ற இடத்துக்கு உரியோராவர். மைசூரில் சோழரும், சாளுக்கியரும் பேரரசு நிகழ்த்திய காலத்தில் இவர்தம் செல்வாக்கு பெருகியது. முதலாம் வல்லாளன் (1100 —1106) தலைநகரை பேலூருக்கு (ஹஸ்ஸான் மாவட்டம் மைசூர்) மாற்றி துவாரசமுத்திரத்தையும், பிறர் தாக்குதலினின்று காப்பாற்றினன். பின்வந்த அவன் தம்பி பிட்டிதேவன் (சுமார் 1111—1141) ஹொய்சலர் ஆட்சியை உண்மையில் தோற்றுவித்தவனாவன். அவன் ஆட்சி தொடங்கிய காலம் தெளிவாக அறியப்படவில்லை. அவனுடைய படைவீரனான கங்கராசனின் துணைகொண்டு, சுமார் 1117-ல் சோழரிடமிருந்து கங்கவாடியைக் கைப்பற்றினன். "தலைக்காடுகொண்டான்" என்ற பட்டம் அவனால் சூட்டிக்கொள்ளப்பட்டது. அவன் தமிழ் நாட்டையும் படையெடுத்து, இராமேஸ்வரம் வரை சென்றதாகக் கூறப்படுகிறது.

அவனுடைய பட்டப்பெயரைக்கொண்ட (கன்னட எழுத்துக்களில்) பொற்காசுகள் அவனுல் வெளியிடப்பட்டன. 1137-ல் மைசூர்நாடு முழுமைக்கும், பிட்டிதேவன் தலைவனுகி, துவார சமுத்திரம் தலைநகராக்கப்பட்டது. ஆயினும், பெயரளவில், அவன் மேலைச்சாளுக்கியருக்குக் கீழ்ப்பட்ட ஒரு அதிகாரியாகக் கருதப்பட்டனன். முதலில் சமணனுகஇருந்த அவனை, இராமானுசர் வைணவத்திற்குத் திருப்பினுர். பின்பு அவன் விட்ணுவர்த்தனன் என்னும் பெயரைக்கொண்டான். ஆயினும் தன்னுடைய பழைய சமயமான சமணத்தைப் பின்பற்றியவரை கருணையுடன் நடத்தினன். சைவமும் அவனுல் ஆதரிக்கப்பெற்றது. பேலூர் முதலிய பல இடங்களில் அவன் கோயில்கள் எடுத்தான்.

## முதலாம் நரசிம்மனும், இரண்டாம் வல்லாளனும்.

பிட்டிதேவனின் மகன் முதலாம்நரசிம்மன் (1141-1173) அரியணையேற்றபொழுது, எட்டு ஆண்டுகளே நிரம்பப்பெற்றிருந்தான். அவன் ஆட்சி சிறப்பற்றதாயிருந்தது. இரண்டாம் வல்லாளன் (1173-1220), 1191-ல் தேவகிரியின் தலைவன் பில்லமல்லனைத் தோற்கடித்து, கிருஷ்ணு ஆறு வரை தன் நாட்டைப்பரப்பினன். அவ்வமயம் சாளுக்கிய மன்னன் நான்காம் சோமேஸ்வரன் சிறப்பை இழந்துவிட்டதால் தேவகிரி யாதவர், தன்னரசுபெற்றனர். இரண்டாம் வல்லாளனும், பேரரசனுக்குரிய பட்டங்களைச் சூட்டிக்கொள்ளலாயினன். கி. பி. 1191—2 முதல் தொடங்கும் ஒரு புதிய ஆண்டும் அவனுல் தோற்றுவிக்கப்பட்டது. இவ்வாறு 12-ம் நூற்றுண்டில் ஹொய்சலர், உரிமையும் சிறப்பும் பெற்ற ஆட்சியைத் தொடக்கினர். 14-ம் நூற்றுண்டில் விசயநகர அரசு தோன்றும்வரை தென்னிந்திய வரலாற்றில் ஹொய்சலர் ஆட்சி மிகச் சிறப்புற்றிருந்தது.

## கன்னட இலக்கியம்.

விட்ணுவர்த்தனனுல் ஆதரிக்கப்பட்ட நாகசந்திரன், சமணருக்கு உரிய முறையில் இராமாயணம் எழுதினன். அக்காலத்தில் காந்தி என்ற ஒரு பெண்துறவி செய்யுளியற்றும்

ஆற்றலைப்பெற்றிருந்தாள். இராசாதித்யன், கணிதநூற்சட்டங்களை செய்யுட்களாக்கினன். நயசேனன் (1112) என்ற நன்னெறியாளன், அக்காலத்தவர் வரம்புமீறி வடமொழிப் பதங்களைப்பயன்படுத்தி வந்ததைக் கண்டித்தான். இவ்வாசிரியர்கள் யாவரும் சமணராவர். வீரசைவ ஆசிரியர்களான அரீஸ்வரனும், இராகவாங்கனும், முறையே 'கிரிஜாகல்யாணம்' 'அரிச்சந்திரகாவியம்' என்ற நூல்களை எழுதினர் (1165). நேமிச்சந்திரன் என்ற சமணன் ''லீலாவதி'' எனப்பட்ட முதல் கன்னட புதுமைக் கதையை 1170-ல் எழுதினன். இஃது சுபந்துவின் ''வாசவதத்தை''யைப் பின்பற்றி எழுதப் பட்டதாகும்.

## பகுதி 20.

### தஞ்சாவூர் சோழர் வரலாறு.

#### உறையூர் சோழர்.

களப்பிரர் ஆட்சிக்காலத்திலும், பல்லவர் வலிமைபெற்றிருந்த காலத்திலும், சங்ககாலத்திய சோழரின் நிலை தெளிவாக அறியப்படவில்லை. இலக்கியங்களிலும், கல்வெட்டுக்களிலும் அதனைப்பற்றி இங்குமங்கும் சில குறிப்புகளே உள்ளன. ஆனல் அந்த ஆறு நூற்றுண்டுகளின் காலப்பகுதியில் தன்னரசு இன்றி இருந்தபோதிலும், சோழர் மரபு அழிந்துபோகவில்லை. உறையூர் பகுதியில் சோழர்குல இளவல்கள் பலர் சிறப்பற்ற நிலையில் வைக்கப்பெற்றிருந்தனர். அவர்தம் கிளைஞர், கடப்பை, கர்நூல் மாவட்டங்களில், ஏழாம் நூற்றுண்டில், யுவான் சுவாங்கின் கருத்தைக்கவரும் அளவுக்கு சிறப்புற்றிருந்ததும் நோக்கத்தகும். பல்லவர், பாண்டியர், வாதாபிசாளுக்கியர் முதலானேர் சோழரை வென்றதாக உள்ள கல்வெட்டுச், செப்பேட்டுக் குறிப்புகள், சோழநாட்டைக் குறிப்பிடுவதாகவே கொள்ளவேண்டும். சோழர், வலிமைபெற்று விளங்கிய அரச குலத்தினருக்குத் தமது இளவரசிகளை மணம்புரிந்தும், கீழ்ப்பட்ட அதிகாரிகளாகவும், கூட்டாளிகளாகவும் அக்காலப் போர்களில் பங்கெடுத்துக்கொண்டும் சிறிதளவு, சைவ, வைணவ சமயங்களை முன்னேறச்செய்து வந்தனர்.

## தஞ்சாவூர் சோழர்.

### விசயாலயனும், முதலாம் ஆதித்தனும்.

விசயாலயன் (சுமார் 850—871) என்பான் உறையூர் அண்மையிலிருந்து போந்த ஒரு குறுநிலத் தலைவனுவன். முத்தரையர் (களப்பிரரில் எஞ்சியவர்) என்பார், ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், பாண்டியரின்கீழ் குறுநிலத்தலைவர்களாயிருந்தனர். அவர்களிடமிருந்த தஞ்சாவூரை வென்றதன் விளைவாக, பல்லவருக்கும் பாண்டியருக்கும் போர்மூண்டது. 880-ல் ஸ்ரீபுரம்பியம் (குடந்தை அருகில்) என்ற இடத்தில் நிகழ்ந்த அப்பாண்டிய — பல்லவப்போரில், விசயாலயனின் மகன் முதலாம் ஆதித்தன் (871—907), வெற்றிபெற்ற பக்கலில் நின்று போரிட்டு, தனது நிலையை உயர்த்திக் கொண்டான். வெற்றியடைந்த பல்லவமன்னன் அபராசிதன், தஞ்சாவூருக்கு அண்மையில் சில புதிய இடங்களை, ஆதித்தனுக்கு அளித்தான். சுமார் 893-ல் மிகவும் வலிமைபெற்று விளங்கிய ஆதித்தன், தன் தலைவனையே முறியடித்துவிட்டு காஞ்சி நிலப்பகுதியைக் கவர்ந்தான். தவிர அச்சோழன், தாணுரவி என்ற சேரமன்னன் உதவியுடன், கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்களை பாண்டியரிடமிருந்து வென்றதாகவும் காணப்படுகிறது. இவ்வாறு அவன், காளத்தி முதல் புதுக்கோட்டை, கோயம்புத்தூர் வரை உள்ள நிலப்பகுதிக்குத் தலைவனுயினன். திருப்புரம்பியம் போர் உண்மையில், ஆதித்தனுக்கே மிகுந்த சிறப்பைஅளித்தது. பாண்டியரும், பல்லவரும் வலிமை குன்றலாயினர். விசயாலயன், அவன் வெற்றிக்குப் பின் தஞ்சாவூரில் துர்க்கை தேவிக்கு ஓர் கோயில் எடுத்தது போலவே, சைவப்பற்றுமிக்க ஆதித்தன், சிவனுக்குக்கோயில் கட்டினன்.

### முதலாம் பராந்தகன்.

முதலாம் ஆதித்தனின் மகன் பராந்தகன், அவனுட்சியின் தொடக்கம் முதல் பாண்டியரை முறியடிக்க உறுதிகொண்டான். மூன்றுவது ஆண்டு ஆட்சியில் மதுரையில் படையெடுத்ததால் அவன், "மதுரை கொண்டான்" என்ற பட்டம் பெற்றனன்.

சுமார் 915-ல் வெள்ளூரில் பாண்டியரையும், சிங்களரையும் தோற்கடித்தான். சுமார் 920-ல் மூன்ருவது படையெழுச்சியில் பாண்டியன் இரண்டாம் இராசசிம்மனைத் தோற்கடித்து விரட்டினன். மூன்ருண்டுகள் சென்றபின், பராந்தகன் தன்னை, "மதுரையும், ஈழமுங்கொண்டான்'' என் று சிறப்பித்துக் கொண்டான். ஆனல் பின்னர், சிங்கள மன்னனிடமிருந்து, பாண்டியன் அவனிடம் விடுத்திருந்த அரசச்சின்னங்களைக் கைப்பற்ற பராந்தகன் முயன்றது பயனுறவில்லை. பல்லவர் ஆட்சியை அழித்து, நெல்லூர்வரையிருந்த அவர் நாட்டைச் சோழன் கவர்ந்து கொண்டனன். இரண்டாம் பிருதிவிபதி என்ற மேலைக்கங்க மன்னன், பராந்தகனுக்குக் கீழ்ப்படிந்தனன். இவ்வாறு அவ்வமயம் சோழர் பேரரசு வடபெண்ணையிலிருந்து கன்னியாகுமரி வரை பரவியிருந்தது. ஆனல், பராந்தகன் ஆட்சியின் இறுதிப்பகுதியில், காஞ்சி, மூன்ரும் கிருட்டினன் என்ற இராட்டிரகூடனுலும், இரண்டாம் பூதுகன் என்ற மேலைக் கங்கனுலும், தாக்கப்பெற்றது. 949-ல் தக்கோலப்போரில், சோழர் தோல்வியுற்றனர். சோழ இளவரசன் மாண்டனன். பராந்தகனின் பேரரசு அழிவுற்றது. ஆயினும், சோழரின் ஊராட்சி முறையின் செழிப்பு குன்றவில்லை. உத்தரமேரூர் (செங்கற்பட்டு மாவட்டம்) கல்வெட்டுகள் (919-921 ஆண்டுகளுக்கு உரியன.) பேரவை, குழுக்கள் முதலியன அடங்கிய அவ்வாட்சிமுறைச் சிறப்பை விளக்கும். பராந்தகன், தன் தந்தையைப்போலவே, கோயில்கள் எடுத்தனன். சிதம்பரம் நடராசர் ஆலயத்தில் உள்ள சிறப்பான மண்டபத்தின் கூரையில் பொன்வேய்ந்தவனும் இவனே.

## முதலாம் பராந்தகனுக்கும், முதலாம் இராசராசனுக்கும் இடைப்பட்ட காலப்பகுதி.

கி. பி. 953-ல் பராந்தகன் இறந்தது முதல் 985-ல் இராசராசன் அரியணை ஏறும்வரை, சோழர் வரலாற்றில் நெருக்கடியான காலமாகும். அவர்தம் குலவழியும், கால வரலாறும் குழப்பம் நிறைந்ததாக உள்ளன. பராந்தகனுக்குப் பிறகு அவன் மகன் கண்டராதித்தன் பட்டம் பெற்ருன்.

அவன் மனைவி செம்பியன்மாதேவி என்பாள், பலராலும் போற்றப்பட்ட சிறந்த குணப்பண்புகள் வாய்க்கப்பெற்ற அம்மையாவள். பின்பு கண்டராதித்தனின் தம்பி அரிஞ்சயனின் மகனுன இரண்டாம் பராந்தகன் (சுந்தரசோழன்) அரசுகட்டிலேறினன். அவனுட்சிக் காலத்தில் (956—973) காஞ்சி இராட்டிரகூடரிடமிருந்து மீட்கப்பட்டது. ஆனுல் பாண்டியருடன் நடத்தப்பட்ட போர்கள், தெளிவான வெற்றியைத்தரவில்லை. அவன் மகன் இரண்டாம் ஆதித்தன், 969-ல் கொல்லப்பட்டான். கண்டராதித்தனின் மகன் உத்தமசோழனின் தூண்டுதலால் அக்கொலை ஏற்பட்டதென்று கருதப்படுகிறது. பின்போந்த உத்தமசோழன் (973—985) வெளியிட்ட பொற்காசு கிடைக்கப்பெற்றுள்ளது. அறியப்பட்டவரை இதுவே முதல் சோழ நாணயமாகும்.

## இராசராசப்பேரரசன்.

**படையெழுச்சிகள்.** இரண்டாம் பராந்தகனின் மகனும், இரண்டாம் ஆதித்தனின் உடன் பிறந்தானுமான, முதலாம் இராசராசன் 985-முதல் 1014-வரை ஆட்சிபுரிந்தனன். காந்தளூர்ச் சாலையில் (காந்தளூர் — திருவனந்தபுரத்தின் ஓர் பகுதி) சேரரின் கப்பற்படையை அழித்தது அவனுடைய முதல் அருஞ்செயலாகும். தெற்கில், அச்சோழன், பாற்கர ரவிவர்மனையும்,பாண்டியர், சிங்களர் ஆகியோரையும் வெல்லும் நோக்கத்துடன் படையைச் செலுத்தினன். பாண்டியநாட்டில் சோழர் ஆட்சி ஏற்படுத்தப்பட்டது. வடக்கு ஈழம், சோழ நாட்டைச்சேர்ந்தது. அங்கு சிவனுக்கு ஒரு கற்கோயிலையும், சோழ மன்னன் கட்டினன். பாண்டியரையும், சேரரையும் அடக்கும்பொருட்டு, மலைநாடு அல்லது குடகுப்பகுதியில், இராசராசன் படையெடுத்தான். 991-முதல் 1004-வரை உள்ள காலப்பகுதியில், கங்கவாடியும், மைசூரின் மற்ற பகுதிகளும் வெல்லப்பட்டதாகத் தெரிகிறது. கல்யாணியின் அரசன் சத்யாஸ்ரயன் தாக்கப்பட்டான். இதன் விளைவாக, துங்கபத்திரா ஆறு, சோழர் பேரரசின் எல்லையாகியது. இராசராசன், வேங்கிநாட்டுச் சாளுக்கியரின் அரசியலில் தலை

யிட்டு, அங்கு ஏற்பட்ட கலகங்களை அடக்கி, விமலாதித்த னுக்கு, தன் மகள் குந்தவையை மணம்புரிந்து தந்தான். மாலத்தீவுகளை வென்றது அவனுடைய இறுதியான பெருஞ் செயலாகும். இவ்வாறு, சோழ மன்னனின் கப்பற் படை, சேரரை வெல்லுவதற்கும், ஈழத்தைத் தோற்கடிப்பதற்கும், மாலத்தீவுகளை வெல்லவும் பயன்படுத்தப் பெற்றது.

## ஆட்சிமுறை.

1012-ல் இராசராசப் பேரரசன், அவன் மகன் இராசேந்திரனை அரசுரிமைக்குரிய இளவரசனுக்கினன். ஆகவே, பின்னவனின் ஆட்சி ஆண்டுகள், 1012-முதல் கணக்கிடப்பட்டன. இராசராசன் பல விருதுகளைப்பெற்றிருந் தான். அவற்றுள் சிறப்பாக, "மும்முடிச்சோழன்", "ஜயங் கொண்டான்" சிவபாதசேகரன் என்பன குறிப்பிடத்தக்கன. இவன் சிவ வழிபாடுடையவனுக இருந்தபோதிலும், வைணவ சமயத்தை ஆதரித்தான். 1006-ல் சுமத்திராவின் சைலேந் திரப்பேரரசன் நாகப்பட்டினத்தில் ஒரு பௌத்த மடத்தைக் கட்டுவதற்கு, அவன் உதவிபுரிந்ததும் குறிப்பிடத்தக்கது. "தமிழ்நாட்டுக் கட்டடக்கலைச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் தஞ்சாவூர் பெரிய கோயிலை, 1010-ல் அவன் கட்டிமுடித்தனன்." இராசராசன் ஆட்சியில் நிலங்கள் ஒழுங் காக அளக்கப்பட்டு வரிவிதிக்கப்பெற்றன. 1001-ல் முதலில் நிலங்களை அளவிடும் பெருந்திட்டம் தொடங்கியது. இக் காலத்திய ஆட்சி அமைப்பில் காணப்படுவதுபோல் பல சிறந்த பண்புகள் சோழர் அரசியலில் காணப்பெற்றன. வலிமைமிக்க நடு ஆட்சி நிலவியது. நாட்டின் பல பகுதி களில், மத்திய அரசியலாரால் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரிகள் சிறப்பான முறையில் ஆணை செலுத்தினர். ஊர் களிலிருந்த பேரவைகளும், மற்றய அலுவல் நிலையங்களும், அரசனின் அதிகாரிகளால் மேற்பார்வையிடப்பட்டு ஒழுங்கான முறையில் கட்டுப்படுத்தப்பெற்றன. ஆனால் அவைகளின் உரிமைகள் குறைக்கப்படவில்லை. வலிமைமிக்க படை, நாட் டில் நிலையாக நிறுவப்பட்டிருந்தது. கப்பற்படையும் போற்றற் குரிய முறையில் அமைந்திருந்தது. இத்தகைய பண்புகள்,

இராசராசசோழனை, தென்னிந்தியப் பேரரசர்களில் மிகவும் உயர்ந்தவனுகச் செய்கின்றன என்று ஓரறிஞர் குறிப்பிடுவர்.‡ இராசராசன், படைவலிமையிலும், ஆட்சிமுறையிலும் போற்றற்குரிய ஆற்றலைப் பெற்றிருந்ததுடன், அன்பு, கருணை, சமயத் துறையில் துன்புறுத்தாமை, பொறை முதலிய பண்புகள் நிறையப்பெற்றவனுகவும், கலை, இலக்கியம் முதலியவற்றை ஆதரிப்பவனுயும் விளங்கினன். இவனுல் உறுதியாக அமைக்கப்பட்ட அடிப்படையான பேரரசு நிலை, பின்போந்த இவன் மகனின் இணையற்ற வெற்றிகளுக்கு மிகவும் உதவியளித்தது. இராசராசன், கல்வெட்டுக் குறிப்புகளுக்கு, வரலாற்று முன்னுரை அளிக்கும் வழக்கத்தைத் தொடங்கினன். அவன்பின் வந்தோராலும் அது பின்பற்றப் படலாயிற்று. சோழர் வரலாற்றை அறிய, அவை மிகவும் உதவிபுரிகின்றன.

## பகுதி 21

### கங்கைகொண்டசோழபுரம் சோழர்.

### முதலாம் இராசேந்திரனும், பின்வந்தோரும்.

**முதலாம் இராசேந்திரன். கங்கைப்படையெழுச்சி.** முதலாம் இராசேந்திரன் (1012—1044) தன் தந்தை இராசராசனின் படையெழுச்சிகளில், சிறப்பாக, கல்யாணி நாட்டுப் படையெடுப்பில், பங்கெடுத்துக் கொண்டனன். தந்தை தோல்வியுற்ற முயற்சியில், மகன் வெற்றிகொண்டது போற்றற்குரியது. 1018-ல் பாண்டிய அரசைக்கைப்பற்றிய இராசேந்திரன், சிங்கள மன்னனிடமிருந்த பாண்டியர் அரசுக்கு உரியன யாவற்றையும் கவர்ந்து, அவன் நாட்டையும் வென்முன். அதே ஆண்டில், சேரமன்னனும் சோழனுல் அடிப்படுத்தப் பெற்முன். 1018—19-ல், இராசேந்திரன் தன் மகனை மதுரையின் அரசப் பிரதிநிதியாக (Viceroy) அமர்த்தினன். விரைவில் கேரளமும் அவன்கீழ்க்கொண்டுவரப்பட்டது. 1021-ல் கல்யாணியின் இரண்டாம் ஜயசிம்மன், இராசேந்திரனுல் தோற்கடிக்கப்பட்டான். ஆனுல் விரைவில் சாளுக்கியன், ரெய்ச்சூர் டோஆப் பகுதியை மீட்டு துங்கபத்திரா ஆறுவரை,

---

‡ Nilakanta Sastri. The Colas I (1935) p. 223.

தன்னுட்சியைத் திரும்பவும் நிலைபெறச் செய்ததுடன், பெல்லாரி நிலப்பகுதியிலும் புகுந்தனன். அடுத்தபடியாக இராசேந்திர னின் தலைமையில், சோழர் வட இந்தியாவில் படையெடுத் தனர். மன்னன், கோதாவரி ஆறு வரையிலும், அவன் தானைத்தலைவன் அதனைக்கடந்தும், படையைச் செலுத்தினர். இப்படையெடுப்பைப்பற்றிய குறிப்புகளிலுள்ள இடங்களின் பெயர்களும், மக்களும், தெளிவாக அறிந்துகொள்ளப்படுவதில் இடையூறுகள் அமைந்துள்ளன. சில செய்திகள் மிகைப் படுத்தப்பெற்றும், சில குறிப்பிடப்படாமலும் உள்ளன. ஆயி னும், மகாநதியைக் கடந்து இராசேந்திரன் படையெடுத்தா னென்பதில் வரலாற்று முறையில் எவ்வித ஐயமுமில்லை. சோழர்படை, கோதாவரி ஆற்றையும், பஸ்தர், ஒரிஸ்ஸா பகுதிகளையும் கடந்து, மேற்கு வங்காளம் சென்றது; ஆண்டு இரு மன்னர்களைத் தோற்கடித்தபின், கங்கையைக் கடந்து மற்றொரு வேந்தனை முறியடித்து, பின்னர் திரும்பி அவ் வாற்றைக்கடந்து, தனது நாடு சென்றது. இடையில் முதலாம் மகிபாலன் தாக்கப்பட்டு தோல்வியுற்றான். கங்கைப்படை யெடுப்பை, சோழ மன்னனின் புனிதயாத்திரை என்றோ கங்கவாடி (மைசூர்) படையெழுச்சி என்றோ கருதுவது, ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று. இவ்வட இந்திய நிகழ்ச்சியால், நிலை யான சில பயன்கள் ஏற்பட்டதாகச் சிலர் கருதுவர். அவை யாவன :- தென்னிந்தியர், வங்காளத்திலும், மிதிலையிலும் சென்று தங்கியதன் விளைவாக வங்காளத்தில் சேனர் அரசும், மிதிலையில் கருநாட குலமும் தோன்றியது. இரண்டாவதாக, வட இந்தியச் சைவர் தமிழ்நாட்டில் நிலைபெற்றனர்.

## கடாரம் படையெழுச்சி.

இராசேந்திரனின் வீரச் செயல்களில் அவன் 1025-ல் கடாரம், ஸ்ரீபோஜம் அல்லது ஸ்ரீவிஜயம் நாடுகளை, கடற் படைகொண்டு தாக்கியது மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். ஸ்ரீவிஜயம் என்பது சுமத்திராவிலிருந்த நாடு. கடாரம் அதே தீவிலிருந்ததென்று சிலர் கூறுவர். சிலர், மலேயா தீபகற்பத் தின் மேற்குக்கரையில், பினாங்கின் அண்மையிலுள்ள கெட்டா என்ற இடமே, கடாரம் என்று கூறுவர். இப்படையெடுப்பின்

முடிவாக, தோற்கடிக்கப்பட்ட சங்கிராம விசயோத்துங்கவர்மன் என்பான் முன்பு குறிப்பிடப்பட்டுள்ள மாறவிசயோத்துங்க வர்மன் என்ற சைலேந்திரப் பேரரசனின், பின்போந்தவனாகும், இப்படையெழுச்சியின் உண்மையான காரணம் புலப்பட வில்லை. 1006-ல் மாறவிசயோத்துங்கவர்மனால் நாகப்பட்டி னத்தில் எடுக்கப்பட்ட பௌத்த மடத்திற்கு நன்கொடையாக முதலாம் இராசராசசோழன் ஒரு ஊரையே அளித்தனன். இராசேந்திரன் பட்டம் பெற்றபின், அந்நன்கொடையைப் புதுப்பித்தனன். ஆதலால் சைலேந்திரப் பேரரசனுக்கும் சோழருக்கும் நிலவிய நட்பு உறவு மிகவும் விரைவில் பகை யாக மாறியதின் காரணம் விளங்கவில்லை. எவ்வாறிருப்பினும். இப்படையெழுச்சியினால், நிலைத்த சிறப்பான பயன்கள் எதுவும் ஏற்படவில்லை. வெல்லப்பட்ட சுமத்திரா, மலேயா நாட்டுப் பகுதிகள் சோழரின் ஆட்சிமுறையின்கீழ் கொண்டுவரப்பட்டன வென்று கூறுவதற்கில்லை.

## மற்ற போர்கள்.

கடாரம் படையெடுப்புக்குப் பின்னர், ஈழம் சுமார் 1029-ல் ஓர் உரிமைப்போரைத் தொடங்கியது. பாண்டிய நாட்டிலும், கேரளத்திலும் கலகங்கள் விளைந்தன. இக்கலகங் களை இராசேந்திரனின் மகன் இராசாதிராசன் அடக்கினான். முதலாம் சோமேஸ்வரனின் தலைமையின் கீழிருந்த மேலைச் சாளுக்கியப் பேரரசை சோழர்படை தாக்கியது. முதலாம் இராசாதிராசன் கல்யாணிநகரைத் தாக்கி, அங்கிருந்து "துவார பாலகர்" உருவச்சிலையைக் கொண்டுவந்ததாகக் கூறப்படு கிறது. அச்சிலை இப்பொழுது தாராசுரத்தில் (தஞ்சை மாவட்டம்) உள்ளது. அப்படையெடுப்பு, சாளுக்கியரின் சிறப்பைக் குலைத்தது. மைசூரின் சில பகுதிகளில் சோழர் சிறு படையெழுச்சிகளை நிகழ்த்தினர். முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் காலங்களிலும், சோழர் போருக்கு உரிய அற ஒழுக்கத்தை மீறினர் என்பதற்குச் சான்றுகள் உள. எடுத்துக்காட்டாக, மைசூரில் நடந்த போர்களைக் குறிப்பிடுகையில், "பசுக்கள் தூக்கிச்செல்லப்பட்டன; மங்கை யரின் அரைக்கச்சைகள் தளர்த்து விடப்பட்டன" என்று கூறப்பட்டுள்ளது.

## இராசேந்திரனின் விருதுகள்.

1044-ல் முதலாம் இராசேந்திரன் இறக்குங்காலத்தில், "அவனுடைய பேரரசு, அதன் மிகுந்த பரப்பைப்பெற்றும், அவன் கடற்படை நிலப்படைச் சிறப்பு மிக்க உயர்வை யுடையதாகவும்"† இருந்தன. மிகச்சிறப்பான அவனுடைய விருதுகள் "முடிகொண்டான், கங்கைகொண்டான், கடாரம் கொண்டான், பண்டிதன்" என்பனவாம். முதல் பட்டம், அவன், பாண்டிய, கேரள, ஈழ நாடுகளைத் தன்னடிப்படுத் தியதைக்குறிக்கும். கங்கைகொண்டசோழபுரம் என்ற புதிய தலைநகர் அவனால் தோற்றுவிக்கப்பட்டது. அஃது திருச்சிராப் பள்ளி மாவட்டத்தைச்சேர்ந்த, உடையார்பாளையம் தாலுக்காவி லுள்ளது. அந்நகருக்கு அண்மையில் நீர்ப்பாசனத்திற்காக ஒரு பெருங்குளத்தை, அச்சோழன் வெட்டினான். சோழகங்கம் என்று அது அழைக்கப்பட்டது. இப்பொழுது அதன்படுகை, காடாக உள்ளது. எண்ணாயிரம் (தென்னாற்காடு மாவட்டம்) என்ற இடத்தில் கிடைக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்று, இராசேந்திரன், வேதக்கல்லூரி தோன்ற உதவியதைப்பற்றிக் குறிப்பிடுகிறது. சோழர்காலத்திய கல்வி முறையை அறிய அக்கல்வெட்டு மிகவும் உதவும். பண்டிதன் என்ற இராசேந் திரனின் பட்டம், தகுதியுடையதென்பது இதனால் ஓரளவு பெறப்படும். இவனது இம்முறையை, இவன் பின்போந் தோரும், தொடர்ந்து நிலைக்கச் செய்தனர். இராசேந்திரன் இறந்தபின் இவனுடைய மூன்று பிள்ளைகளான முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், முதலாம் வீர ராசேந்திரன் என்பார், ஒருவர்பின் ஒருவராகப் பட்டம் பெற் றனர். அவன் மகள் அம்மங்கைதேவி வேங்கிநாட்டு முதலாம் இராசேந்திரனின் மனைவியாவள். அவர்கள் பிள்ளை முதலாம் குலோத்துங்கனென்பான் சாளுக்கிய — சோழ மன்னனாக விளங்கினான். விசயாலயன் காலம் முதல், சோழமன்னர்கள், "பரகேசரி" "இராசகேசரி" என்ற பட்டங்களை மாறி மாறிப் புனைந்துவந்தனர். இராசராசன் "இராசகேசரி" என்ற பட்டம் பெற்றிருந்தனன். அவன் மகன் "பரகேசரி" என்றழைக்கப் பட்டான்.

---

† Nilakanta Sastri, op. Cit. I p. 277.

## முதலாம் இராசாதிராசன் (1018—1052)

முதலாம் இராசாதிராசன், 1018-முதல், தன் தந்தையுடன் சேர்ந்து ஆட்சிபுரிந்தனன். 1044-முதல், அவனுடைய தனி ஆட்சி தொடங்கியது. அக்காலத்தில் சிங்களர் கலகம் செய்து வந்ததால், கடுமையான முறைகளை சோழன் கையாண்டனன். ஈழத்தின் பெரும்பகுதியில் சோழர் ஆட்சி நிலைத்திருந்தது. மேலைச் சாளுக்கியருடன், கொப்பம் என்ற இடத்தில் (1052 அல்லது 1054) நடத்திய போரில், சோழப் பேரரசன் உயிர் துறந்தபோதிலும் வெற்றி சோழருடையதே. பல முறைகள், கல்யாணியின் சாளுக்கியர் முறியடிக்கப்பட்டு, அவர்தம் நாடு தாக்கப்பட்டபோதிலும், அவர்களைத் தம்முடைய ஆணையின்கீழ் கொண்டு வருவதற்கோ, அவர் பேரரசின் ஒரு பகுதியைத் தம்முடன் நிலையாக இணைத்துக்கொள்ளவோ சோழரால் இயலவில்லை. இராசாதிராசன் முப்பது ஆண்டுகளுக்குமேலாக தொடர்ந்து போர்வாழ்க்கையிலீடுபட்டிருந்தான். அவன் "யானையின் முதுகிலிருந்து இறந்ததாக" பின்வந்தோர் குறிப்புகள் அறிவிக்கின்றன. சுமார் 1044-ல் அவன் குதிரை வேள்வி ஒன்றைச்செய்தனன்.

## இரண்டாம் இராசேந்திரன்.

இரண்டாம் இராசேந்திரன் (1052 — 1064) தான் வெற்றிகொண்ட கொப்பம் போர்க்களத்திலேயே முடிசூட்டிக் கொண்டான். பின், வெற்றித்தூண் ஒன்றை நிறுவ, கோலாப்பூர் சென்றதாக அறியப்படுகிறது. 1062-ல் சாளுக்கிய அரசன் முதலாம் சோமேஸ்வரன் கூடல் சங்கமம் போரில், இராசேந்திரனால் மீண்டும் தோற்கடிக்கப்பட்டான். அவனுடைய ஆட்சி வலிமையுறுமற் செய்வதற்கும் அவன் கீழைச் சாளுக்கியர் அரசியலில் தலையிடாதிருக்கவுமே, சோழர் இப் போரை நிகழ்த்தினர்.

## முதலாம் வீரராசேந்திரன்.

இரண்டாம் இராசேந்திரனின் தம்பி வீரராசேந்திரன் (1063—1070) 1067-ல் மேலைச்சாளுக்கியர் பேரரசைப்

படையெடுத்தான். ஆனால் முதலாம் சோமேஸ்வரன் அவ்வ மயம் நோயுற்றிருந்ததால், போர்நிகழவில்லை. வீரராசேந்திரன் ஐந்துதடவைகள் சோமேஸ்வரனைப் புறமுதுகுகாட்டச் செய்த தாக சோழர் கல்வெட்டுகள் கூறும். அவன் (வீரராசேந்திரன்) பெசவாடா அருகில் மேலைச்சாளுக்கியரை முறியடித்து, வேங்கி நாட்டில் தனது ஆட்சி நிலையை உறுதிப்படுத்திவிட்டு, கங்கை கொண்டசோழபுரம் திரும்பினன். ஈழநாட்டிலும் அவன் படையை அனுப்பி ஆண்டு நிலவிய கலகத்தை அடக்கினன். 1068-ல் கடாரத்தின் அரசன், அதனைத்திரும்ப அடைவதற்கு உதவிபுரிந்ததாகக் கூறப்படுகிறது. இரண்டாம் சோமேஸ்வர னுடனும் அச்சோழன் போரிட்டனன். ஆனால் இருவரும் வெற்றி பெற்றதாகக் கூறிக் கொள்கின்றனர். இரண்டாம் சோமேஸ்வரனும், அவனுடன்பிறந்தானான, ஆறும் விக்ரமாதித் தனும் சச்சரவிடவே, பின்னவன் சோழப் பேரரசனிடம் முறையிட்டான். ஆகவே முன்னவன், தன் நாட்டின் ஒரு பகுதியை, விக்கிரமாதித்தனுக்கு அளிக்கும்படி நேரிட்டது. விக்கிரமாதித்தன், ஒரு சோழ இளவரசியை மணம்புரிந்து கொண்டான். வீரராசேந்திரனுக்கு, "ஆகவமல்ல குலகாலன் (ஆகவமல்ல குலத்தை அழிப்பவன்) வல்லப வல்லவன்" என்பது போன்ற பல பட்டங்களிருந்தன. அவன் பல அறங்களைச் செய்தான். சிதம்பரம் ஸ்ரீ நடராசருக்கு ஒரு விலையுயர்ந்த சிவப்புக்கல்லை அணிவித்தனன். அவன் தலை நகரில் ஒரு மாளிகையை எடுத்து, ஒரு அரியணையையும் அமைத்தான்.

## ஆதிராசேந்திரன்.

1067 முதல் 1070-வரை ஆதிராசேந்திரன் தன் தந்தை யுடன் ஆட்சி நடத்தினன். பின்னர் சிலமாதங்களே, அவனால் தனி ஆட்சிபுரியப்பட்டது. அவன் வைணவ மரபுரையின்படி "கிருமிகண்ட சோழன் (நோயுற்ற கழுத்தை உடையவன்) என்றும், இராமானுசரைத் துன்புறுத்தியவன் எனவும், அறியப் படுகிறான். ஆனால் சிலர் அக்கொடுஞ்செயல் முதலாம் வீர ராசேந்திரன் அல்லது முதலாம் குலோத்துங்கனுக்கே உரிய

தாகும் என்பர். ஆதிரோசேந்திரன் இறந்தவுடன், விசயால யனின் சோழமரபு முடிவுற்றது.

## பகுதி 22.

### சாளுக்கிய சோழர்.

#### முதலாம் குலோத்துங்கன்.

இராசேந்திர கீழைச்சாளுக்கியன் அல்லது முதலாம் குலோத்துங்கன் (1070—1120) என்பான், இருவழிகளில், முதலாம் இராசராசசோழனின் பெயரனுவன். அவன் தாய் அம்மங்கைதேவி முதலாம் இராசேந்திரசோழனின் (இராசராச னின் மகன்) பெண்ணுவாள். தவிர குலோத்துங்கனின் தந்தையான இராசராச கீழைச்சாளுக்கியனின் தாய் குந்தவை, முதலாம் இராசராசசோழனின் மகள். இக்குலோத்துங்கனின் தந்தை 1060-ல் இறந்தது முதல், 1070-ல் இவன் பட்ட மேற்கும் வரை, அவனுடைய வாழ்க்கை தெளிவாக அறியப் படவில்லை. முதலாம் வீரராசேந்திர னுடன் குலோத்துங்கன், நட்புபூண்டு உதவிபுரிந்திருக்கக்கூடும்.

சுமார் 1073-ல், யசகர்ணகாலசூரி, வேங்கி நாட்டில் படையெடுத்தான். சுமார் 1075-ல் ஈழம் உரிமைபெற்றது. சுமார் 1076-ல் கல்யாணியின் ஆறும் விக்கிரமாதித்தனுடன் குலோத்துங்கன் போரிட்டனன். இதன் முடிவைப்பற்றித் தெளிவாகக் கூறமுடியவில்லை. ஏழாம் விசயாதித்தனுக்குப் பிறகு, கீழைச்சாளுக்கிய நாட்டில் குலோத்துங்கனின் மகன் அரசப்பிரதிநிதியாக (Viceroy)) அமர்த்தப்பட்டனன் (1076). 1088-ல் ஈழத்துடன் அமைதி உடன்படிக்கை ஏற்பட்டது. மணவினை உறவினுலும் அது வலியுறுத்தப்பெற்றது. பாண்டி யரும், சேரரும் மீண்டும் வெல்லப்பட்டனர். அவர்தம் நாடு களில் படைவீரர் குடியேற்றங்களை ஏற்படுத்தி அந்நாடுகளில் கலகங்கள் தோன்ருவண்ணம் செய்யப்பட்டது. ஆனுல் உள் நாட்டு ஆட்சிமுறையில் அந்நாட்டினருக்கு உரிமைகள் வழங்கப் பெற்றன. சுமத்திராவிலிருந்து, 1090-ல் சோழர் அவைக்கு

ஒரு தூதுக்குழு அனுப்பப்பட்டது. அஃது, நாகப்பட்டினத் திலிருந்த பௌத்த மடத்தின்பொருட்டே என்று அறியக் கிடக்கிறது.

## கலிங்கப் படையெழுச்சிகள்.

வேங்கி மண்டலத்தைச் சேர்ந்த தெற்கு கலிங்கத்தில் விளைந்த கலகத்தை அடக்க, குலோத்துங்கனின் முதல் கலிங்கப் படையெழுச்சி, சுமார் 1096-ல் நடைபெற்றது. அதைவிடச் சிறந்த இரண்டாவது படையெடுப்பு 1110-ல் நிகழ்ந்தது. குலோத்துங்கனின் அவைக்களப்புலவன் ஜயங் கொண்டான் ''கலிங்கத்துப்பரணி'' என்ற தனது நூலில் அந்நிகழ்ச்சியைச் சிறப்பிக்கின்றனன். படைத்தலைமை ஏற்றி ருந்த கருணாகரத்தொண்டைமான், வடக்குக் கலிங்கத்தின் அரசன் அனந்தவர்ம சோடகங்கனைத் தோற்கடித்தான். அனந்தவர்மன், குலோத்துங்கனின் பெயரன். அவ்வாறிருப் பினும் அப்படையெழுச்சி ஏற்பட்டதன் காரணம் தெளிவாக அறியப்படவில்லை. ஆனால் அதன் விளைவாக, அவன் நாடு சோழருடன் இணைக்கப்படவில்லை. குலோத்துங்கனின் 1111-ம் ஆண்டு கல்வெட்டு, காசி கன்யாகுப்சநாட்டு காகட வாலருடன் அவன் நட்பு உறவு பூண்டிருந்தானென்று குறிப்பிடுகிறது.

## கங்கவாடியையும், வேங்கியையும் இழத்தல்.

சுமார் 1117-ல் விட்ணுவர்த்தன ஹொய்சலன், கங்க வாடியைக் கைப்பற்றினன். தலைக்காட்டைக் கைப்பற்றிய அம் மன்னன், தமிழ் நாட்டையும் படையெடுத்து இராமேஸ்வரம் வரை சென்றனன் என்று கூறப்படுகிறது. சுமார் 1118-ல் கல்யாணி மன்னன் ஆறும் விக்கிரமாதித்தன் வேங்கி மண்ட லத்தைத் தன்னடிப்படுத்தினான். சோழரையும், கீழைச் சாளுக்கியரையும் வேறுபடுத்த வேண்டுமென்ற அவன் குறிக் கோள், அவனாட்சியின் இறுதிப்பகுதியில் வெற்றி பெற்றது. இவ்வாறு, முதலாம் குலோத்துங்கன் ஈழம், கங்கவாடி, வேங்கி ஆகியனவற்றை இழந்தான்.

## குலோத்துங்கன் பெருமை.

பேரரசின் பரப்பு குறைந்தபோதிலும், குலோத்துங்கன் அமைதியையும், போற்றற்குரிய வளமான ஆட்சியையும் நிலை பெறச்செய்தான். கங்கைகொண்டசோழபுரம், தலைநகராக இருந்தபோதிலும், குலோத்துங்கனின்கீழ் காஞ்சியின் சிறப்பு ஓங்கியது. அவன், "சுங்கந்தவிர்த்தசோழன்" என்ற பட்டம் பெற்றிருந்தான். ஆனால் இப்பட்டத்துடன் தொடர்புற்ற அவனுடைய பொருளாதாரச் சீர்திருத்தத்தைப்பற்றி யாதும் அறியப் படவில்லை. 1086-ல் நிலங்கள் அளக்கப்படுவதற்கு ஒரு ஆணை பிறப்பித்தான். 1110-ல் மறுபடியும் நிலம் அளக்கப் பட்டது.

## விக்கிரமசோழன் (1118 – 1135)

முதலாம் குலோத்துங்கனுக்குப் பின் அவன் மகன் விக்கிரமசோழன் 1120-முதல் தனித்து அரசுபுரியலானான். 1127-ல் ஆறும் விக்கிரமாதித்தன் இறந்தவுடன், வேங்கி நாட்டில் சோழர் ஆட்சி மீண்டும் நிறுவப்பட்டது. கங்கவாடியின் ஒரு சிறு பகுதியையும், இம்மன்னன் மீட்டனன் 1125-ல் வட ஆற்காடு, தென்னாற்காடு மாவட்டங்களில் வெள்ளமும், வறுமையும் ஏற்பட்டதாக அறியக்கிடக்கிறது விக்கிரமசோழனும், சிதம்பரம் ஸ்ரீநடராசர் ஆலயத்திற்கு கொடைகள் வழங்கினன். 1130-ம் ஆண்டுக்கு உரிய ஒரு குறிப்பு, மன்னன், சிதம்பரத்தில் தன் மாளிகையில் வாழ்ந்திருந்ததாக அறிவிக்கிறது. அவனுடைய பட்டங்களிலிருந்து அவன், அறஞ்செய்ய விரும்பினனென்றும், கடவுளிடத்தன்பு மிக்கவன் என்றும் தெளிவாக அறியப்படும்.

## இரண்டாம் குலோத்துங்கன்.

1135-ல் அவன் தந்தை இறந்தபின், இரண்டாம் குலோத்துங்கன் (1133—1150) தனித்து ஆட்சிபுரியலானான். இவனும் அவன் முன்னோரைப்பின்பற்றி, சிதம்பரம்கோயிலுக்கு

நன்கொடைகளளித்தான். ஆனால் வைணவத்தை வெறுத்த இவ்வரசன், கோவிந்தராசர் உருவச்சிலையை, கடலில் எறிந்ததாகக் கூறப்படுகிறது. வைணவ இலக்கியம் குறிப்பிடும் "கிருமிகண்டசோழன்" இவனே என்று சிலர் கருதுவர். இவனாட்சி, தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பு வாய்ந்ததாகும். இவனும் இவன்கீழிருந்த தலைவர்களும், ஒட்டக்கூத்தர், கம்பர், சேக்கிழார் ஆகிய புலவர்களை ஆதரித்தனர்.

## இரண்டாம் இராசராசனும், இரண்டாம் இராசாதிராசனும்.

இரண்டாம் குலோத்துங்கனின் மகன் இரண்டாம் இராசாதிராசன் (1146—1173) ஆட்சிக்காலத்தில், பாண்டியநாட்டில் உள்நாட்டுப்போர் ஏற்பட்டது. சுமார் 1169-ல் பராக்கிரம பாண்டியனும், குலசேகரபாண்டியனும் தமக்குள் போர் தொடுத்தனர். பின்னவன் மதுரையைக்கைப்பற்றி, முன்னவனையும் வேறு சிலரையும் கொன்றனன். பராக்கிரமன் ஈழ வேந்தனின் உதவியை நாடியிருந்தும் அஃது காலங்கடந்து கிடைத்தது. ஈழநாட்டுத் தானைத்தலைவன் இலங்காபுரன், குலசேகரனைவென்று, பராக்கிரமனின் மகன் வீரபாண்டியனை நாட்டின் தலைவனாக்கினன். விரைவில் சோழர் படையெடுத்து குலசேகரனை அரியணையிலேற்றினர். பராக்கிரமபாகு எதிர் பாராவகையில் தன் கருத்தை மாற்றிக்கொண்டு குலசேகரனுடன் நட்புகொண்டான். இதன் விளைவாக குலசேகரன், சோழரைப் பகைத்துக்கொண்டனன். சோழரும், தம் இயல்முறை (Policy) யை மாற்றிக்கொண்டு வீரபாண்டியனை அரியணையேற்றினர். இப்போர் 1177-வரை நீடித்தது. சோழர் பேரரசின் ஆற்றலின்மையை அந்நிலை வெளிப்படுத்துகிறது. இரண்டாம் இராசராசன் (1163—1179) காலத்தில் பாண்டியநாட்டுப்போர் முடிவுற்றது.

## மூன்றும் குலோத்துங்கன்.

இரண்டாம் இராசாதிராசன், மூன்றும் குலோத்துங்கனை (1178—1216) அரசுரிமை ஏற்குமாறு தேர்ந்தெடுத்திருந்தான்.

அவர்களின் உறவு அறியப்படவில்லை. வீரபாண்டியன் சோழருடன் பகைமைபூண்டனன். ஆதலால், சுமார் 1182-ல் மூன்றும் குலோத்துங்கன் அவனை விரட்டி, விக்கிரமபாண்டியன் என்பானை அரசுகட்டிலேற்றினன். 1189-ல் குழப்பம் விளைவித்த வீரபாண்டியனையும், பாண்டிய நாட்டில் படையெடுத்த ஈழர்படையையும் சோழன் முறியடித்ததாகத் தெரிகிறது. 1190-க்கும் 1194-க்கும் இடைப்பட்ட காலத்தில் கொங்கு நாட்டில் குலோத்துங்கன் தன்னதிகாரத்தை நிலைநிறுத்தினன். மீண்டும் பாண்டிய நாட்டில் குழப்பமேற்பட்டதால் 1205-ல் குலோத்துங்கன், அங்கு படையெடுத்து மதுரையில் முடிசூட்டுவிழா மண்டபத்தை அழித்தான். 1208-ல் தெலுங்கு நாட்டிலும் படையெடுத்து வெற்றி கொண்டதாகக் கூறப்படுகிறது. ஆனுல் அவனுட்சியின் இறுதியில், மாறவர்மன் சுந்தரபாண்டியன், சோழரைத் தோற்கடித்ததாகத் தெரிகிறது. ஆனுல் சோழர் சார்பில் ஹொய்சலர் தலையிட்டதால், அவ்வெற்றியினுல் பாண்டியர் மிகுந்த பயனடைய முடியவில்லை. குலோத்துங்கன், பேரரசையும் ஆட்சிமுறையையும் ஒழுங்காக காவல்புரிந்தபோதிலும், அவனுக்கு விளைந்த இடையூறுகள், பேரரசுக்கு ஏற்படவிருந்த தீமையை உணர்த்தும். அவன் காலத்தில் பேரரசு உயர்வடைந்திருந்ததற்கு அவனுடைய குணப்பண்புகளும் திறமையும் சிறப்பான காரணங்களாம். அவனை சிறப்புமிக்க சோழப்பேரரசர்களில் இறுதியானவன் என்று கருதலாம். குறுநிலத் தலைவர்களின் ஆதிக்க வளர்ச்சி, ஆற்றலற்ற அரசர்களின்கீழ் பேரரசுக் கேட்டை விளைவிப்பதில் வியப்பில்லை. பதின்மூன்றும் நூற்றுண்டில் பாண்டியரின் எழுச்சி, மூன்றும் இராசராசசோழனின் காலத்திய (1216—1246) சோழர் பேரரசைக் குலைத்தது. பின்போந்த மூன்றும் இராசேந்திரன் (1246—1279) காலத்தில், சோழர் அதுகாறும் பெற்றிருந்த உயர்நிலை பாண்டியருக்கு மாறியது. அவ்வரலாறு இரண்டாம் புத்தகத்தில் பேசப்படும்.

## பகுதி 23.

### ஆட்சி முறை.

**நடுஆட்சி.** சோழர் பேரரசின் பரப்பும், சாதனங்களும், கோனுட்சியின் சிறப்பை உயர்த்தின. அவ்வாட்சி மக்களால் விரும்பப்பெற்றது. பண்டைக்காலத்தில், அசுவமேதம் போன்ற வேள்விகளால் மன்னர்கள், தமது பகட்டான நிலையை வெளிப்படுத்தினர். இடைக்காலத்திய சோழவேந்தர், பெருந் தலைநகரங்களைத் தோற்றுவித்தும், புடைசூழ் புலங்களாலும், சிறந்த நன்கொடைகளாலும், வழிபாட்டு உருவச்சிலைகளுக்கு அரசர் பெயர்களை வைப்பதன் மூலமாகவும், கோயில்களில் அரசர், அரசிகளின் உருவச்சிலைகளை வழிபடச்செய்வதன் மூலமாகவும் முடியாட்சியின் சிறப்பை உயர்த்தினர். வழி வழியாக அரசுரிமைபெறும் முறை நிலவியது. ஆனால், சிற்சில காலங்களில் ஆட்சிபுரியும் மன்னன், மூத்தவனுக்கு மாருக, இளைய பிள்ளைக்குப் பட்டத்தை அளிப்பது வழக்கமாயிருந்தது. ஒழுங்கான முறையில் அமைக்கப்பட்டிருந்த அரசியல் பணி யாளர் தொகுதி வரம்பற்ற முடியாட்சியின் இயல்பை ஓரளவு மாற்றியது. நிலையான அமைச்சர்குழு இருந்ததாகத்தெரிய வில்லை. ஆகவே, பணியாளர்தொகுதியின் சிறந்த தலைவர்கள் அரசனுடன் தொடர்பு கொண்டு ஆலோசனை கூறினர். அரசர்களின் சுற்றுப்பயணங்களால் ஆட்சிமுறையில் அதிகமான திறமை புலப்பட்டது.

### வருவாய்.

அரசியல் பணியாளர், நிலங்களை ஊதியமாகப்பெற்றனர். நாட்டின் வருவாய், சிறப்பாக நிலத்தினின்றே பெறப்பட்டது. வரி, தானிய முறையில் அல்லது காசு முறையில் அல்லது இரு வகைகளாலும் செலுத்தப்பட்டது. ஊர்களின் பேரவைகள் வரிகளை அரசியலாரிடம் செலுத்தின. முதலாம் இராசராசன் காலத்தில், விளைவில் மூன்றிலொரு பகுதியை நிலவரியாக மக்களிடமிருந்து அரசியலார் பெற்றனர். நிலங்கள் அளக்கப் பட்ட பின்பே அத்தகைய விகிதம் முடிவு செய்யப்பட்டது.

முதலாம் இராசராசனும், முதலாம் குலோத்துங்கனும் நிலங்களை அளந்ததைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பட்டது. வரித் தொகையை முடிவு செய்ய, அடிக்கடி அவ்வாறு நடைபெற்று வந்தது. நிலவரியைத்தவிர, சுங்கவரிகளும், உப்புவரியும், பலவகையான தொழில்வரிகளும், சுரங்கம், காடு முதலியவைகளுக்கான வரிகளும், வசூலிக்கப்பெற்றன. வறுமை ஏற்பட்ட காலங்களில், நிலவரி விகிதம் குறைக்கப்பட்டது. அடிக்கடி, அரசியலார், ஊதியம் கொடாது தொழிலாளிகளைப் பயன்படுத்திக்கொண்டனர். வரிவசூல் முறையில் ஓரளவு கருணை காட்டப்பட்டதெனினும் — முதலாம் குலோத்துங்கன், சுங்கந் தவிர்த்தவன் என்று புகழப்படுகிறான் — கொடுமையும் நிலவியதென்பதற்குச் சில சான்றுகள் உள. மேலும், மானியக்காரரின் ஆதிக்க வளர்ச்சி வரிச்சுமையை அதிகரிக்கச்செய்திருக்க வேண்டும். வரி கொடுக்கத் தவறியவருக்கு உரிய நிலம் விற்கப்பட்டது. கோயில் நிலங்களும், அம்முறையினின்று விலக்கைப் பெறவில்லை. பொதுச் செலவுகளில், அரசன், அவனது புலங்கள், நிலப்படை, கடற்படை, உள் நாட்டு ஆட்சிமுறை, சாலைகள், நீர்ப்பாசனக் குளங்கள், கால்வாய்கள் முதலியனவற்றைப்பற்றியன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

## நிலப்படையும், கடற்படையும்.

நிலப்படையில், யானை, குதிரை, காலாள் ஆகிய உறுப்புகள் காணப்பெற்றன. சுமார் 70-படைப்பகுதிகள், கல்வெட்டுகளில் குறிப்பிடப்பெற்றுள்ளன. படை வீரர், கோயில்களுக்கு நன்கொடைகள் அளித்ததைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவர்களுடைய பயிற்சி, ஒழுக்கமுறை முதலியனபற்றிய செய்திகளில், அரசியலார் மிகுந்தகருத்தைச் செலுத்தினர். சோழர் போர்முறையின் அச்சந்தருகிற தன்மை முன்னர் குறிப்பிடப்பட்டது. போர்க்காலங்களில், பாமர மக்கள், குறிப்பாக பெண்டிர், துன்புறுத்தப்பட்டனர். மூக்கைக் கீறுதல் போன்ற தண்டனைகள் அளிக்கப்பட்டன. சோழர் காலத்தில், அரசர்களின் பெரும்போக வாழ்வையும், கோயில்களின் சிறப்பையும், குறிப்பிடுகையில், அவர்களால், அண்மையிலிருந்த நாடுகளுக்கு ஏற்பட்ட துன்பத்தை மறப்பதற்கில்லை.

தமிழரின் கடல்வலிமை அக்காலத்தில் அதன் உச்சநிலையிலி ருந்தது. மலையாளம், சோழமண்டலக் கரைகள் சோழரின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்ததுடன், சிலகாலம் வங்காளக் குடாக்கடல், சோழர் ஏரியாக விளங்கியது. கடல் வாழ்க்கைத் துறையைச்சார்ந்த தமிழ் இலக்கியம் இல்லாத காரணத்தால், அவர்தம் கடற்போர் முறைகளைப்பற்றிய நுணுக்கமான செய்திகள் மிகுதியாக அறியப்படவில்லை.

## ஊராட்சி.

முதலாம் இராசராசனின் பேரரசு, சுமார் எட்டு மண்ட லங்களாகவும், அவை வளநாடுகள், நாடுகள் எனவும் வகுக்கப்பட்டிருந்தன. நாடு பல கோட்டங்களாக பிரிக்கப் பட்டு, ஒவ்வொரு கோட்டமும் பல ஊர்களைக்கொண்டிருந்தது. ஆட்சி முறையில், உரிமைபெற்றிருந்த ஊர்களின் சிறப்பு போற்றற்குரியது. இளவரசர்கள், வேங்கி, மதுரை மண்டலங் களின் தலைவர்களா யிருந்தனரென்று முன்பு குறிப்பிடப்பட்டது. எட்டு, ஒன்பதாம் நூற்றுண்டுகளில், பல்லவர் ஆட்சியிலும் பாண்டியரின்கீழும், தொடக்க நிலையிலிருந்த, பேரவைகள் அவற்றின் குழுஉக்கள் ஆகியவற்றுடன் கூடிய உரிமையான ஊராட்சிமுறை, பத்தாம் நூற்றுண்டில் சோழரின்கீழ் அதன் முற்றிய நிலையை எய்தியது. பிற கூட்டு அமைப்புச்சங்கங்களை விட சிறப்பான முறையில், ஊர்ப்பேரவைகள் தொண்டாற்றின என்று கருதப்படுகிறது. மன்றங்கள் "ஊர்", "சபை" என்று இருவகைப்படும். 'ஊர்ப்பேரவை' பொதுமக்களுக்கு உரியது. 'சபை' என்பது அக்கிரஹாரம் அல்லது அந்தணர் தங்கி யிருந்த இடத்தைச் சார்ந்த 'அவை'யாகும். சோழர் கல் வெட்டுக்களில், பிந்தியவகையைச்சேர்ந்த அவை மிகுதியாக பேசப்படுகிறது.

## உத்தரமேரூர் கல்வெட்டுக்கள்.

உத்தரமேரூரில் (செங்கற்பட்டு மாவட்டம்) கிடைக்கப் பெற்ற இரண்டு கல்வெட்டுக் குறிப்புகள், முதலாம் பராந்தகன் ஆட்சியில் 919, 921-ஆண்டுகளுக்குரிய, அவ்வூர் மகாசபை

யின் இரண்டு தீர்மானங்களை அறிவிக்கும். அவை, ஆணைக் குழுக்களின் அமைப்பைப்பற்றியன. முதல் தீர்மானம், இரண்டாவதால் சீர்திருத்தப்பட்டிருக்கிறது. அதன்படி பின் வரும் செய்திகள் அறியப்படுகின்றன. ஊரின் முப்பது தொகுதிகளில் ஒவ்வொன்றும், பின்வரும் தகுதிப்பண்புகளை உடையவர்களின் பெயர்களை, தேர்ந்தெடுக்கப்படுவதற்காக குறிப்பிடவேண்டும் :– $\frac{1}{4}$-வேலி (சுமார் $1\frac{1}{2}$-ஏக்ரா) நிலத்தைப் பெற்றிருத்தல்; தனக்கே உரிமையான இடத்திலுள்ள வீட்டில் தங்கியிருத்தல், 35-வயதுக்குமேலும், 70-வயதுக்கும் உட்பட்டிருத்தல், வேதமந்திரங்களையும் "பிராமணங்களையும் கற்றறிந்திருத்தல் அல்லது $\frac{1}{8}$-வேலி நிலத்தைப்பெற்றிருப்பதுடன், ஒரு வேதத்தையும், ஒரு பாஷ்யத்தையும் (விரிவுரை) அறிந்திருத்தல்; முதலிய பண்புகள், தேர்ந்தெடுக்கப்படுவோரின் தகுதியுடமைக்கு வற்புறுத்தப்பட்டன. இவற்றைப் பெற்றிருப்பவரிலும், பின்வருவோர் விலக்கப்படுவர் :– கடந்த மூன்று ஆண்டுகளில், எக்குழுவிலாவது உறுப்பினராயிருந்தோர், குழுவின் உறுப்பினராயிருந்து கணக்கு திட்டங்களை ஒழுங்காக அனுப்பாதவர்கள், குறிப்பிட்ட அவர்தம் உறவினர், மண உறவுக்கொவ்வாதவரின் கலவி முதலிய பெருங்குற்றங்களைப் புரிந்தோரும், அவர்தம் உறவினரும், பிறர் பொருளைக் களவாடியவர், தாழ்ந்த இனத்தவருடன் தொடர்பு கொண்டு அக்குற்றத்தை நீக்குவதற்கான சடங்குகளைப்புரியாதவர், தடை செய்யப்பட்ட உணவை அருந்தியவர் முதலானவர்களாவர்.

## வாரியம், குடவோலை முறைகள்.

தகுதியுடையவராக, குறிப்பிடப்பட்ட பெயர்களிலிருந்து ஒரு தொகுதிக்கு ஒருவர்வீதம் தேர்ந்தெடுக்கப்படுவர். ஒரு ஆண்டுவரை அவர் பதவி நீடிக்கும். 'குடவோலை' முறைப்படி (சீட்டுவிழுதல்) தேர்தல் நடைபெறும். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட முப்பது உறுப்பினருள், வயதிலும், அறிவிலும் முதிர்ந்தவரும், தோட்டம், குளம் முதலியனவற்றைப்பொறுத்த குழுக்களிலிருந்து பணியாற்றியவருமான, பன்னிருவர். "சம்வத்சரவாரியம்" எனப்பட்ட ஆண்டுக்குழுவில் அமர்த்தப்

பெறுவர். மற்றும் பன்னிருவர், "தோட்டவாரியம்" என்ற குழுவிலும், (தோட்டக்குழு) அறுவர், "ஏரிவாரியம்" (குளக் குழு) என்பதிலும் அமர்த்தப்பெறுவர். அதே முறையில் அமையப்பெற்று, ஒவ்வொன்றும் ஆறு உறுப்பினரை உடைய "பஞ்சவாரம்"(?) குழு, பொற்குழு(பொன்)என்ற வேறிரண்டு குழுக்களும் காணப்பட்டன. சீட்டு விழும் முறை பின் குறிப்பிடப்படுவதுபோல் நடைபெற்றது. தகுதியுடையோரின் பெயர்கள் பனையோலைச் சீட்டுகளில் எழுதப்பட்டு, ஒரு பானையில் போட்டு குலுக்கப்பட்டன. எத்துணை உறுப்பி னர்கள் அமர்த்தப்படவேண்டியவர்களோ, அத்துணை சீட்டுகளை ஒரு சிறுவன், எடுக்குமாறு செய்யப்பட்டனன். உத்தரமேரு ரைத்தவிர்த்து, மற்ற இடங்களின் கல்வெட்டுக் குறிப்புகள் முறைவழங்கல், தொகுதிகள், நிலங்கள் முதலியவற்றிற்குரிய குழுக்களையும், அதிகமாகக் குறிப்பிடுகின்றன. "உதாசீனக் குழு" என்ற ஒன்றும் காணப்படுகிறது. அஃது அயலாரைப் பற்றியதாக இருக்கலாம். குழுக்களின் எண்ணிக்கையும், உறுப்பினரின் தொகையும் ஊருக்கு ஊர் மாறுபட்டது. உறுப்பினரின் பணிக்கு ஊதியம் அளிக்கப்படவில்லை. அவர்கள் "வாரியப்பெருமக்கள்" என்றழைக்கப்பெற்றனர். பேரவை "பெருங்குறி" எனப் பெயர்பெற்றது. அதன் உறுப்பினர் "பெருமக்கள்" என்று அழைக்கப்பட்டனர். பேரவை ஊர்க் கோயிலிலும், சில சமயங்களில், மரத்தினடி அல்லது குளக் கரையிலும் நடைபெற்றது. வாக்களித்தலைப்பற்றியோ, அவை யில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்படுவதற்கு இன்றியமையாத தான குறைந்த அளவு உறுப்பினரின் எண்ணிக்கையையோ, கல்வெட்டுக்கள் குறிப்பிடவில்லை. பொதுச்செய்திகள் பேரவை யில் சொல்லாடப்பெற்றன. தீர்மானங்களும் குறித்துவைக்கப் பட்டன.

### பேரவை.

#### நாட்டின் வருவாயைப்பற்றிய செயல்கள்.

நாட்டை அயலாரின் தாக்குதலிலிருந்து பாதுகாத்தல், உள்நாட்டில் அமைதியும், செழிப்பும் ஓங்கச்செய்தல், பேரரசின்

கலைப்பண்பு முன்னேற்றம் ஆகிய பொதுவான செய்திகள், மத்திய அரசியலாரின் ஆட்சிமுறையின்கீழ் வந்தன. ஊர்ப் பேரவைகள், தத்தமக்கு உரிய செய்திகளைத்தாமே நடத்தி வந்தன. இரு பேரவைகளுக்கிடையே சச்சரவு நேர்ந்தால் மட்டும் சிறப்பாக மத்திய அரசியலார் தலையிட்டனர். மத்திய அரசியலாரின் தலையீடின்றி ஒருகாலத்தில் ஊர்களின் ஐக்கியம் ஏற்பட்டது குறிப்பிடத்தக்கது. பேரவைகளின் செயல்களைக் கொண்டு அவற்றின் உரிமையான நிலையை நாம் அறியலாகும். பேரவை, சமூகப் பொது உடைமையான நிலங்களையன்றி, அதன் ஆட்சிக்கு உட்பட்ட தனிப்பட்டோர் நிலங்களையும் கட்டுப்படுத்தி ஆணை செலுத்தியது. மத்திய அரசியலாரின் உடன்பாட்டைப் பெறவேண்டிய, பொருள்களின் உரிமை மாற்றுதல் போன்ற செய்திகளில் பேரவை இன்றியமையாத முன்னேற்பாடுகளைச் செய்தது. காடுகளையும், தரிசான நிலங்களையும் பேரவை, பயன்படத்தக்கதாகச்செய்தது. நிலங்களின் விளைவை கணக்கெடுத்து, வரித்தொகையையும் திட்டம் செய்தது. நிலவரி அதனுல் வசூலிக்கப்பட்டதன்றி, வரி கொடாதவர் நிலங்களை ஏலம் விடுவதற்கும் அதற்கு உரிமை இருந்தது நிலவரித்தொடர்பான சச்சரவுகளை பேரவையே முடிவு செய்தது. சில காலங்களில், அண்மையிலிருந்த ஊர்களின் பேரவைகளின் உதவியைப் பெற்று, சிக்கலான செய்திகள் முடிவு செய்யப்பட்டன. பேரரசின் நிலங்களை மேற்பார்வையிட்டு அளவிட மத்திய அரசியலார் உரிமைபெற்றிருந்த போதிலும், ஒரு பேரவையின் ஆட்சிக்குட்பட்ட நிலங்களில் அதனுடைய உடன்பாடின்றி, பாகுபாட்டு மாறுதல்கள் செய்யப்படவில்லை. ஊர் அலுவல்களின்பொருட்டு, பேரவை வரி வசூல் செய்யவும் அதில் இன்றியமையாத மாறுதல்களைப் புகுத்தவும், உரிமை பெற்றிருந்தது. ஒரு நிலக்கிழவன், விரும்பினுல் ஒவ்வொரு ஆண்டும் வரிகளைச்செலுத்துவதற்கு மாருக, ஒரு குறிப்பிட்ட தொகையை பேரவையிடம் செலுத்தித் தன் முழுக்கடனையும் தீர்த்துக்கொள்ள முடியும். அறத்தின்பொருட்டு ஒதுக்கப்பட்ட நிலங்களிலிருந்து அத்தகைய முறையில் வரி வாங்கப்பெற்றது.

## முறைவழங்குதல்.

குழுஉக்கள், ஊதியம் பெற்ற ஊரதிகாரிகளின் உதவி கொண்டு, ஊராட்சி முறையை நடத்தின. பின்னவர் குற்றம் புரிந்தோரைக் கண்டு பிடித்தனர். பேரவையின் முறை வழங்கும் குழு (நியாயத்தர்) சச்சரவுகளைத் தீர்த்து, குற்றஞ் சாட்டப்பட்டோர், உண்மையில் குற்றவாளிகளா என்பதைப் பரிசீலனை செய்து முடிவு கூறியது. அரசனின் அதிகாரிகளால் குற்றத்திற்குரிய தண்டனைகள் அளிக்கப்பட்டன. மேலே குறிப்பிடப்பட்டுள்ள முறையைக்கொண்டு சோழர் காலத்தில், தீர்ப்புச்சான்றோர்குழு (Jury system) காணப்பட்டதாகக் கூறப் படுகிறது. மனிதனைக்கொல்லும் குற்றத்தின் பல வகைகள் ஒன்றுடனொன்று வேறுபடுத்தப்பட்டதாக, கல்வெட்டுக்களி லிருந்து அறியலாகும். எல்லாவகையான கொலைக்குற்றத் திற்கும், கொடுந் தண்டனை வழங்கப்படவில்லை. உள்ளப் பகைமையின்றி புரியப்பட்ட கொலைக்குத் தண்டனையாக, குற்றவாளி, 16-பசுக்களைக் கொடுக்குமாறும், ஊர்க்கோயிலில் நிலையாக, ஒருவிளக்கை ஏற்றிவைக்குமாறும் செய்யப்பட்டனன். இறந்தவனின் உயிர் பேறடைவதற்கு அஃது இன்றியமை யாததாகக் கருதப்பட்டது. சுருக்கமாக, சோழரின் முறை வழங்குந் தன்மை கடுமையற்றதாக இருந்தது. வரம்புமீறி குற்றவாளிகளிடம் கருணை காட்டப்பட்டதாகவும் கூறலாம். முறையற்ற புணர்ச்சி, பிறர்மனை நயத்தல், களவு, பொய்க் கையொப்பமிடுதல் முதலியன கொடிய குற்றங்களாகக் கருதப்பட்டனவென்று, உத்தரமேரூர் கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம். கழுதையின்மீது ஏற்றி சுற்றிவரச்செய்தல் ஒரு கொடிய குற்றத்திற்குத் தண்டனையாக இருக்கலாமென்று அறியப்படுகிறது.

## பிற பணிகள்.

பேரவை, சாலைகள் நிறுவுதல், நீர்ப்பாசன சாதனங்களை, அமைத்தல், அறநிலயங்களை மேற்பார்வை செய்தல், சமயம் மருத்துவம், கல்வி ஆகிய செய்திகளை கவனித்தல், முதலிய பணிகளையும் மேற்கொண்டிருந்தது. மத்திய அரசியலாரின்

உதவியை அத்துறைகளில், பேரவை மிகுதியாகப்பெற்றது. சுருங்கக்கூறின் சோழர் காலத்தில் ஊர் வாழ்க்கை, செழிப்பும், முன்னேற்றமும் பொருந்தியதாக்வும், மக்களின் விருப்பத்திற்கு ஏற்றதாகவும் அமைந்திருந்தது.

## பகுதி 24.

### இன வாழ்க்கை, பொருளாதாரம், கலைகள்.

**சாதிமுறை.** இனத்தில், சாதிமுறைப் பிரிவுகள் காணப் பட்டபோதிலும், பெரும்பான்மையில் பல்வேறு சாதியினரும், வாழ்க்கைமுறையிலும் சமயத்துறையிலும் ஒத்துழைத்தனர். ஆனல் அவர்களுக்குள், சச்சரவுகளும், சிலருக்குத் தனித்த உரிமைகளும், சிலருக்குத் தாழ்ந்த நிலையும் காணப்பெற்றன.

### பெண்டிரும் அடிமைகளும்.

இறந்த கணவனுடன் உயிர்விட்ட "(சதி)" மங்கையரைப் பற்றிய குறிப்புகள் ஒருசிலவே காணப்படுகின்றன. ஆயினும் சோழர்காலத்தில் பெண்டிர் நிலையில் முன்னேற்றமேற்பட்ட தாக அறியப்படவில்லை. கோயில்களைச்சேர்ந்த திறமையான நாட்டியப் பெண்கள் (தேவதாசிகள்) இனக்கட்டுப்பாட்டி லிருந்து விடுதலை பெற்றும், பெருமையுடனும் விளங்கினர். அவர்கள் தமது நன்கொடைகளாலும், அறச்செயல்களாலும் உயர்வான நிலையை எய்தினர். நாட்டில் பலவகையான அடிமைகள் காணப்பட்டனர். உரிமையுள்ளவர், வறுமையின் கொடுமை காரணமாக, தாமே விரும்பி, அடிமைகளான குறிப்புகள் கிடைத்துள்ளன.

### உழவும், கைத்தொழிலும்,

நிலங்களில் சில பகுதிகள் பொது உடைமையாகவும், சில தனிப்பட்டோருக்கு உரியதாயுமிருந்தன. உழவன் நிலத்துக்குரியவனக உள்ள முறையுடன் வேறு பல நில உரிமைக் கட்டுப்பாட்டு முறைகளும் காணப்பட்டன. அரசிய லார், நீர்ப்பாசனத்தில் மிகுந்த கருத்து செலுத்தியதால்,

உழவுத்தொழில் செழிப்புற்றது. காவிரி ஆற்று நீர், தக்க முறையில் பயன்படுத்திக்கொள்ளப்பட்டதுடன், பெருங்குளங் களும் வெட்டப்பட்டிருந்தன. சிற்சில காலங்களில் நாட்டில் வறுமை தோன்றியது. எடுத்துக்காட்டாக, 1152-ல் ஓர் பெரும் வறுமை ஏற்பட்டதாக அறியக்கிடக்கிறது. நகைகள் செய்யும் தொழில் மிகவும் முன்னேற்றமுற்றிருந்தது. கோயில் கள் பெருகியதன் விளைவாக, உலோகத் தொழில் மிகுந்த ஆதரவுபெற்று சிறப்புற்றது. காஞ்சி நகரின் நெசவுத்தொழில் புகழ்பெற்றதாகும். கன்னியாகுமரி, மரக்காணம், முதலிய பட்டினங்களில், கடலுப்பு உற்பத்தி செய்யும் தொழில் நடை பெற்று வந்தது.

## வாணிகமும் நாணய முறையும்.

ஆந்திரம், மேலைச்சாளுக்கிய நாடு, கொங்குநாடு, முதலிய வற்றுடன், சோழநாடு, "பெருவழிகளால்" (சாலைகள்) இணைக்கப்பட்டது. பல வணிகச்சங்கங்கள் இருந்தன. சிறப் பாக, பன்னாட்டுத் தொடர்புடைய ஒரு பெரிய வணிகர் சங்கம், குறிப்பிடத்தக்கது. 5 முதல் 50 சத வீதம் வரை, வட்டி வாங்கப் பெற்றபோதிலும், பொதுநிலையாக வழக்கிலிருந்தது, 12½ அல்லது 15 சத வீதமே. வாக்குறுதிக்கடன் பத்திரங் கள், பயன்படுத்தப்பட்டன. பொன், வெள்ளி, செம்பு நாணயங்களை மக்கள் பயன்படுத்தினர். அவற்றில் இரு வகை கள் காணப்பெறும். (1) சோழருக்கு உரிய உருவமாதிரியைப் பெற்றவை — புலி, சேரன்வில், பாண்டிய நாட்டுமீன், சோழ மன்னன் பெயர் முதலியவற்றைக் கொண்டன. (2) ஈழ நாட்டு உருவ மாதிரியைப் பெற்றவை. (முரட்டுத்தனமான மனிதனின் உருவத்துடன் கூடியது.) சோழர், சீனு, சுமத்திரா சாவகம், அரேபியா, மற்றும், பாரசீக வளைகுடாவைச்சுற்றிய நாடுகளுடன் நெருங்கிய வாணிகத் தொடர்பு கொண்டிருந்த னர். 1015, 1033, 1077 ஆகிய ஆண்டுகளில், சீனு வுக்கு மூன்று தூதுக்குழுக்கள் அனுப்பப்பட்டன. சோழரின் குதிரைப்படையை வலிமையுறச் செய்வதற்காக, அரேபியக் குதிரைகள் மிகுதியாக இறக்குமதி செய்யப்பட்டன.

## சமயம்.

பல்லவர் காலத்தில் காணப்பெற்ற சைவ, வைணவ சமயங்களின் முன்னேற்றம் சோழரின்கீழ் விரைவுபடுத்தப் பெற்றது. அவ்விருபிரிவுகளின் சட்டங்களும் உறுதியாக்கப் பட்டன. பெரும்பான்மையில், இரு சாராருக்குமிடையே அமைதியான உறவு நிலவியது. முதலாம் இராசராசன் இரு பிரிவுகளையும் ஆதரித்தான். அவன் உடன் பிறந்தாளான குந்தவை, தாராபுரத்தில் (தென்னுற்காடு மாவட்டம்) சிவனுக்கும், விட்டுணுவுக்கும் கோயில்கள் எடுத்தாள். பல கோயில் களில் இருகடவுளரும் வழிபடப்பெற்றனர். ஆயினும் சமயப் பகை, சிற்சிலகாலங்களில் தோன்றியது. எடுத்துக்காட்டாக, இராமாநுசர் துன்புறுத்தப்பட்டதும், இரண்டாம் குலோத்துங் கன் செயலும் நோக்கத்தகும். தஞ்சாவூர் மாவட்டத்தில், 1160-ம் ஆண்டுக்கு உரிய ஓர் கல்வெட்டுக் குறிப்பு, சைவர், வைணவருடன் தொடர்புகொள்ளலாகாது என்றும், இவ்வாணையை மீறியவரின் பொருள் கைப்பற்றப்படுமென்றும், ஒரு பேரவை நிறைவேற்றிய தீர்மானத்தை அறிவிக்கின்றது. ஆயினும், காஞ்சியில், சைவம், வைணவம், சமணம் யாவும் தழைத்தோங்கின. சோழர் காலத்தில், மடங்களில், சமயக் கொள்கைகள் கற்பிக்கப்பட்டு, அவை சிறப்புற்றன. அனை வற்றிற்கும் மேலாக, கோயில்கள், இனவாழ்க்கையிலும், சமய வாழ்க்கையிலும் மிகுந்த உயர் நிலையிலிருந்தன. தஞ்சாவூர் கோயில், சோழநாடு முழுமைக்கும் ஒரு எடுத்துக்காட்டாக விளங்கியது. கோயில், கல்லூரியாகவும், பொருட்காட்சிசாலை யாகவும், மருத்துவசாலையாகவும், நாகரிக உலகின் அடையாள மாகவும் விளங்கியதென்றும், எவ்வாற்றானும் இடைக்கால இந்தியாவில் கோயில், மக்கள் வரலாற்றில் இணையற்ற சிறப்பைப் பெற்றுள்ளதென்றும், ஓரறிஞர் கூறுவர்.‡ சோழ நாட்டில் திருச்சிராப்பள்ளியிலிருந்து காஞ்சிவரை, பல சமண நிலையங்கள் காணப்பட்டன. தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு, சமணர் தொண்டாற்றினர். சோழர் பேரரசில் புத்தசமயம், சிறப்புற்றிருந்த போதிலும், அஃது காஞ்சியிலும், நாகப்பட்டினத் திலும் நிலவியது.

‡ Nilakanta Sastri. op. cit II p. 504.

## கல்வி.

ஊர்களில் காணப்பட்ட பள்ளிக்கூடங்களைத் தவிர, கோயில்களிலும், வீரகாவியங்களும், புராணங்களும் மக்களுக்குக் கற்பிக்கப்பட்டன. உயர்நிலைக்கல்விக்கு ஏற்றசாதனங்கள் பேரரசில் இருந்தன. மீமாம்சமும், வியாகர்ணமும், சிறப்பான வகையில் கற்பிக்கப்பெற்றன. சமய சித்தாந்தக் கல்லூரிகளில் பல மாணவர்கள், பல்வேறு செய்திகளைக் கற்றுணர்ந்தனர். எண்ணாயிரத்தில் (தென்னாற்காடு மாவட்டம்) 14-ஆசிரியரின் கீழ், 340-மாணவர்கள், வேதங்கள், இலக்கணம், மீமாம்சம், வேதாந்தம் முதலியவற்றைக் கற்றுவந்ததாக, முதலாம் இராசேந்திரன் காலத்திய ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. மேலும், அக் கல்வி நிலையம், 45-வேலி நிலங்களின் வருமானத்தைக் கொண்டு போற்றப்பட்டதென்றும், ஆசிரியருக்கும், மாணவருக்கும் ஒவ்வொரு நாளும், நெல்லும், பணமும் கொடுக்கப்பட்டு வந்தனவென்றும் அறியக்கிடக்கின்றன. திரிபுவனி (புதுச்சேரி அருகில்) யில் கிடைத்த, 1048-ம் ஆண்டுக்கல்வெட்டு, 72-வேலி நிலங்களைப்பெற்ற மற்றொரு கல்வி நிலையத்தைக் குறிப்பிடுகிறது. அங்கே, முன்னர் கூறப்பட்ட, பாடப்பகுதிகளைத்தவிர, வீரகாவியங்களும், மனுதர்ம சாத்திரமும் கற்பிக்கப்பட்டனவாம். ஆண்டிருந்த 260-மாணவர்களும், 12-ஆசிரியர்களும் உள்நாட்டுப் பேரவையின் குழுக்களில் சேர்ந்து பணியாற்றக் கூடாதென்றும் ஆணையிடப்பட்டதாம். 1067-ம் ஆண்டின் மற்றொரு குறிப்பு, திருமுக்கூடல் (செங்கற்பட்டு மாவட்டம்) என்ற இடத்திலிருந்த மற்றொரு கல்லூரியைப்பற்றிக் கூறுகிறது. அக்கல்வி நிலையத்துடன், உணவு விடுதியும், மருத்துவச்சாலையும் கட்டப்பட்டிருந்ததாம் மாணவர்கள், உணவையன்றி, சனிக்கிழமைகளில் எண்ணையும், இரவு காலங்களில் விளக்குகளும் கொடுக்கப்பட்டனரென்று அதனின்று அறியலாகும். மருத்துவச்சாலையில் இரண்டு மருத்துவர்களும், இரண்டு தாதிகளும், பிறரும் இருந்தனர். மருத்துவவிடுதியில் தங்கும் நோயாளிகளுக்காக 15-படுக்கைகளிருந்தனவாம். பெரம்பலூரிலிருந்து (திருச்சிராப்பள்ளி மாவட்டம்) அவ்விடுதிக்கு தூய்மையான நீர்கொண்டு வரப்பட்டதாம். 1121-ம் ஆண்டின் மற்றொரு கல்வெட்டு

திருவாவடுதுரையிலிருந்த (தஞ்சாவூர் மாவட்டம்) மருத்துவக் கல்லூரியைப்பற்றிக் குறிப்பிடும். சரகனின் 'சம்ஹிதையும்' இளைய வாக்படனின், 'அஷ்டாங்க ஹிருதய சம்ஹிதை'யும் அங்கே கற்பிக்கப்பட்டனவாம்.

## இலக்கியம்.

சோழர் கல்வெட்டுக்களில் உள்ள குறிப்புகளை இயற்றியவர்களின் திறமைக்கு, அவை சான்றுகளாக உள்ளன. திருத்தக்கதேவர் என்ற சமணர், எழுதிய சீவகசிந்தாமணி என்ற நூல், தமிழ் இலக்கியத்தில் சிறந்த காப்பியமாகும். அநேகமாக அது பத்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகும். குண்டலகேசி என்ற பௌத்த செய்யுளும், கல்லாடம் என்ற நூலும் அதே நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படுகிறது. அமிதசாகரன் என்பான், யாப்பருங்கலம் என்ற செய்யுளியல் நூலை ஆக்கினன். சைவ ஆகமத்தை வகுத்த நம்பியாண்டார் நம்பி பதினோரும் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கூறப்படுகிறது. அதே நூற்றாண்டில் புத்தமித்திரன், வீரசோழியம் என்ற இலக்கண நூலை இயற்றினன். ஜயங்கொண்டாரின் 'கலிங்கத்துப்பரணி'யைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பட்டது. விக்கிரம சோழனும், இரண்டாம் குலோத்துங்கனும் ஆதரிக்கப் பெற்ற ஒட்டக்கூத்தன் அவனுடைய பாக்களில், அவர்களைப் புகழ்கிறான். "கவிச்சக்கரவர்த்தி" கம்பனின் இராமாயணம், தமிழ் நாட்டில் மிகுந்த புகழ்பெற்ற ஒரு நூலாகும். "நள வெண்பா" என்ற செய்யுள்நூல், புகழேந்தியால் இயற்றப் பட்டதாகும். சேக்கிழார் எழுதிய 'பெரியபுராணம்' சிறப்பான ஓர் 'குருபரம்பரை நூலாகும்.' பவணந்தி என்ற சமணரால் எழுதப்பட்ட "நன்னூல்" அவ்வாசிரியரின் இலக்கண ஆற்றலை நன்கு வெளிப்படுத்தும். இஃது மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் தோன்றியது. சோழர் காலத்தில் வடமொழி கற்பிக்கப்பட்ட நிலையங்கள் பல இருந்தபோதிலும், அக்காலப் பகுதியில் வடமொழி இலக்கியம் மிகுதியாக முன்னேறவில்லை. வடமொழியில் கல்வெட்டுக்குறிப்புகள் இருப்பது குறிப்பிடத் தக்கது. "இருக்குவேத பாஷ்யம்" எழுதிய வேங்கடமாதவன்

அனேகமாக முதலாம் பர்ாந்தகன் காலத்தவனகை இருக்கலாம், இரண்டாம் இராசராசன் ஒரு வடமொழி அகராதி இயற்றப் படும்படி செய்தனன்.

## பகுதி 25.

### மதுரை — பாண்டியர்.

(தொடர்ச்சி.)

முதலாம் பராந்தக சோழன், சுமார் 920ல் பாண்டியரை முறியடித்ததுபற்றி முன்னர் பேசப்பட்டது. 949ல் தக்கோலப் போரில் சோழரின் தோல்வியின் பயனகை, பாண்டிய நாட்டில் குழப்பமேற்பட்டு சோழர் ஆட்சி கவிழ்க்கப்பெற்றது. வீர பாண்டியன் என்பான் சிறிதுகாலம் வெற்றிமாலை சூடியிருந்தான். முதலாம் இராசராசன் மீண்டும் பாண்டியரை வென்றனன். ஆனல் முதலாம் இராசேந்திரனுக்குப் பின்போந்த சோழ மன்னர்களுக்குப் பாண்டியரால் இடையூறுகள் விளைந்தன. ஆயினும் இராசேந்திரனல் ஏற்படுத்தப்பட்டிருந்த ஆதி பத்தியம், முதலாம் குலோத்துங்கன் காலம்வரை நீடித்தது. அதன்பின் பாண்டிரின் உரிமை ஆட்சி சிறிது சிறிதாக நிலை பெற்றது. ஆனல் இடையில் 1169 முதல் 1177 வரை உள் நாட்டுப் போரினல் பாண்டியராட்சி சிதற்றிருந்தது. 1216ல் மூன்ரும் குலோத்துங்கன், மாறவர்மன் சுந்தர பாண்டினுக்கு அடிபணிய நேர்ந்தது என்று நாமறிவோம். இவ்வாறு ஏற் பட்ட பாண்டியர் பேரரசு புகழுடன் பதின்மூன்ரும் நூற்ருண்டு முழுவதும் நிலைத்திருந்தது.

## பகுதி 26.

### சமயம்.

**புத்தசமய வீழ்ச்சி** முன் குறிப்பிடப்பட்ட புத்தசமய வீழ்ச்சி, இப் பகுதியில் (900 —1200) மேலும் தொடர்ந்தது. வங்காளத்தில் பாலரின் ஆதரவை பௌத்தர் பெற்றனரெனி னும், பின்போந்த சேனர் அச்சமயத்தைப் போற்றவில்லை. சிந்து நாடு, அரேபியர் வசமாகியது. ஆனல் நேபாளத்தில்

சைவமும் புத்தமும் கலந்து காணப்பட்டன. குமரில்லர், சங்கரர் ஆகியோரின் வெற்றிகளும், பீஹாரில் 1197ல் முகம்மது-பின்-பக்தியாரின் படையெழுச்சியும், புத்தசமயத்தை மங்கச்செய்தன. பௌத்தத் துறவிகள், நேபாளத்திற்கும், திபெத்துக்கும் செல்லலாயினர். அவர்களைப் பின்பற்றிய பலர், இந்து சமயத்திற்கு மாறினர். தென்னித்தியாவில் சைவமும், வைணவமும் ஓங்கவே புத்த சமயம் சிற்சில இடங்களில் மட்டும் சிறப்புற்றிருந்தது.

### காரணங்கள்.

புஷ்யமித்திரசுங்கன், மிகிரகுலன் சசாங்கன், முகம்மது பின் பக்தியார் முதலியவர்களின் துன்புறுத்தல்களைவிட மிகவும் சிறப்பாக, ஹூணரின் படையெழுச்சிகள், புத்தசமய வீழ்ச்சிக்குக் காரணமாயின. ஆனால் வட இந்தியாவில் எட்டாம் நூற்றுண்டிலும் தென்னிந்தியாவில் ஏழாம் நூற்றுண்டிலும்தான் உண்மையான வீழ்ச்சி தொடங்கியது. பெரும்பான்மையில் இந்திய அரசர்கள் சமயத்தைப் பொறுத்தவரை கொடுமையாக நடக்கவில்லை. பண்பாட்டுக்கு, சமயத்துறையில் சகிப்புத்தன்மை என்பது ஓர் உரைகல்லாயிருக்குமாஞல், பண்டைய இந்தியா, பண்பாட்டைப் பொறுத்தவரை தனிச்சிறப்பும் மேன்மையும் பெற்றிருந்ததென்பதில் ஐயமில்லை. ஆகவே, புத்தசமயத்தின் வீழ்ச்சிக்கு மிகச்சிறந்த காரணம் அதன் சீர்கேடுகளேயன்றி, அரசியலாரின் கொடுஞ்செயல்கள் அல்ல. அமைதியான முறையில் பிராமண சமயம் அதனிடத்தைக் கைப்பற்றியது. சங்கத்துறவிகளின் வாழ்க்கை பெரும் மாறுதல்களைப் பெற்றது. ஆதியிலிருந்த அடக்கம் அன்பு, புனிதத்தன்மை முதலியவை அவர்களிடமிருந்து மறைந்தன. செல்வப் பேற்றுடன் கூடிய மடங்களில் பெரும்போக வாழ்க்கை தோன்றியது. எளிய மக்களின் தொடர்பினின்று மடங்கள் விலகி நின்றன. மக்கள் பௌத்தத் தலைவர்களிடம் நம்பிக்கை இழந்தனர். புத்தசமயத்தின் நடுநாயகமாக விளங்கிய சங்கம் சீர்குலைந்ததால் அச்சமயம் வீழ்ச்சியுறாமலிருப்பதற்கில்லை. ஹூணர், முகமதியர் முதலியோர்,

பௌத்தமடங்களைப் பெரிதும் தாக்கினர். குறைந்த எண்ணிக்கையுள்ள புத்தசமய ஆதரவாளரும், இறுதிக் காலத்தில் அச்சமய வீழ்ச்சியைப் பொருட்படுத்தாதிருந்தனர்.

மகாயானத்தின் தோற்றம் புத்தசமய வளர்ச்சிக்கு உதவிய போதிலும் புத்தரின் கொள்கைக்கு முரண்பாடான பண்புகள் அதில் இருப்பது நோக்கற்பாலது. புத்தர், வீடுபெறுவதற்கான ஓர் குறுக்குவழியை உபதேசித்தார். ஆனால் மகாயான முறையின்படி, வீடு எளிதில் அடையப்பெறமுடியாத ஒன்றாயிற்று. அவர் போதித்த, தன்முயற்சி, ஒழுக்கமுறைக் கட்டுப்பாடுகள், பயனற்றதத்துவ ஆராய்ச்சியில் கருத்துசெலுத்தாமை முதலிய பண்புகள் புதிய புத்த சமயத்தில் எளிதில் மாற்றப்பெற்றன. காலப்போக்கில் அச்சமயம், சைவ வைணவ சமயங்களை பல அம்சங்களில் ஒத்து நின்றது.

## பிராமண சமயம்.

பிராமண சமயம், புத்தசமயத்திடமிருந்து பல பண்புகளைப் பெற்றதன் விளைவாக முன்னது செழிப்புற்றும், பின்னது வீழ்ச்சியுற்றும் மாறுதலேற்பட்டது. குமரில்லர், சங்கரர் முதலியோரின் தொண்டுகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

## புத்தசமயத்தின் சிறப்பு.

இந்தியரின் வாழ்க்கை, பல்வேறு துறைகளிலும் உயர்வடைய புத்த சமயம் செய்துள்ள உதவி போற்றற்குரியது. வேறுபாடு பாராட்டாத அதன் குறிக்கோளும், சமயப்பரப்பு முயற்சியும், நீண்டகாலம், இந்தியா ஆசியாவின் மற்றப்பகுதிகளுடன் தொடர்புகொள்ளுமாறு செய்தன. கலை, இலக்கியம், தத்துவம், மெஞ்ஞானம் முதலியவற்றில் பௌத்தரின் அருஞ்செயல்களைப்பற்றி இந்நூலில் ஆங்காங்கு குறிப்பிடப்பட்டுள்ளன. உயிர்களைத் துன்புறுத்தாமை, விலங்கு உணவை வெறுத்தல், வேதமுறை வேள்விகளில் விருப்பமின்மை, முதலிய கொள்கைகள் வளர்ச்சிக்கும், ஒழுங்கான முறையில் சமயப்பிரசாரம் செய்தல், மடாலயமுறை, மதமாற்றம் செய்தல்,

உருவவழிபாடு, திருவிழாக்கள் கொண்டாடுதல், புனித இடங்களுக்கு யாத்திரை செல்லுதல், அறஞ்செய்தல், அமைதியாயிருத்தல் முதலிய பழக்கங்களின் வளர்ச்சிக்கும், புத்தசமயம் காரணமாயிருந்தது. நாலந்தா பல்கலைக்கழகம், அறிவாற்றல் துறையில் பௌத்தர் சேவைக்குச்சிறந்த எடுத்துக்காட்டாகும். நல்லொழுக்கம் பெருகவும், பெண்டிர் முன்னேற்றமடையவும் பௌத்தர் உதவினர். ஒத்த நிலையையுடைய இனஅமைப்பு வற்புறுத்தப்பட்டது. ஆனால் இரண வைத்திய முறையை வெறுத்தல், பயனற்ற வாதங்கள்புரிதல் முதலிய சில குறைபாடுகள் புத்த சமயத்திடமிருந்தன. எனினும் சமணரைப் போல் "துன்புறுத்தாமை" என்ற கொள்கையை மிகுந்த அளவுக்கு, பௌத்தர் கடைப்பிடிக்கவில்லை. முடிவாக, இந்தியாவில் முகம்மதியர் படையெடுத்து வெற்றி பெற்றமைக்கு புத்தசமயம் காரணமென்று கூறுவதற்கில்லை.

## சமணசமயம்

### வரலாறு.

சமணசமயம் மாளவத்தின் பரமாரராலும், இராசபுதனத்தில் சில பகுதிகளிலும் ஆதரவைப்பெற்றது. குஜராத்தில், ஹேமசந்திரர் என்ற சமணசமயத் துறவியின் அருஞ்செயல்கள் காரணமாக, ஜெயசிம்மசித்தராசன், (1094—1144) குமாரபாலன் (1144—1173) என்ற அரசர்களின்கீழ் அம்மதம் உயர்நிலை எய்தியது. தென்னிந்தியாவில் இராட்டிரகூடர் இதனைப்போற்றி வந்தனர். ஆனால் பிற்காலத்தில் வீரசைவத்தின் வளர்ச்சியால் சமணம் வலிமைகுன்றியது. தலைக்காட்டு கங்கர் சமணச் சார்புடையோராவர். இராமானுசரால், பிட்டி தேவன், வைணவனாக்கப்பட்ட காலம் வரை, ஹொய்சலர், சமண சமயத்தை ஆதரித்தனர். ஆகவே, சமணம், தமிழ்நாட்டில், சிறிதுசிறிதாக வலிமை இழக்கலாயிற்று. சமணர், இந்தியாவுக்கு வெளியே தமது சமயம் பரவ முயற்சி செய்யவில்லை என்பது நோக்கத்தக்கது.

### வளர்ச்சிக் குறைவுக்குக் காரணங்கள்.

துன்புறுத்தாமை, துறவறம் ஆகிய கொள்கைகள், சமணரால் மிகவும் தீவிரமான அளவுக்கு வற்புறுத்தப்பட்டன.

ஒழுக்கமுறையில் மிகுந்த வன்மையான வகையில் சட்டங்கள் இயற்றப் பெற்றிருந்ததால், பெரும்பாலோரால் அவற்றை விருப்பமுடன் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. சிற்சில மாறுதல் களைத்தவிர, பெரும்பான்மையில் கி. பி. முதல் நூற்றுண்டு முதல் சமணக் கொள்கைகள் அதிகமாக மாறுதலடையவில்லை. இத்தகைய பழமைப்பற்றுமிக்க ஒரு சமயம் பல்வேறு பகுதி களிலும் பரவுவதென்பது இயலாத ஒன்றும். ஆனல் புத்த சமயத்தைபோல் இஃது இந்தியாவிலிருந்து முழுவதும் மறைய வில்லை. புத்தசமயத்தைப்போல், சமணம், பிராமண மதத்தி ஞல் முழுவதும் கவிழ்க்கப்படவில்லை என்பதும் நோக்கற் பாலது. சமண சமயத்தில், மதத்தலைவர்களுக்கும், மக்களுக் கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. பின்னவர் மத நிலையத்தை எக்காலத்திலும் போற்றிக் காப்பாற்றி வந்தனர். இந்தியாவில் மெஞ்ஞான வளர்ச்சிக்கும், கலை முன்னேற்றத் துக்கும் வடமொழி, கன்னட, தமிழ் இலக்கியங்களுக்கும் சமணரின் தொண்டுகள் போற்றற்குரியன.

## பிராமண சமயத்தின் உயர்நிலை.

அரசியலாரின் ஆதரவு பிராமண சமயத்திற்கு மிகுதியாகக் கிடைத்து வந்தது. குமரில்லரும், சங்கரரும், புத்த சமய வீழ்ச்சியைப் பயன்படுத்திக்கொண்டு அருந்தொண்டுகளாற்றி னர். வைணவர்கள், பௌத்த சமயத்தின் "துன்புறுத்தாமை" என்ற கொள்கையை ஏற்றுக்கொண்டதுடன், புத்தரை, விட்ணுவின் ஒரு அவதாரமாகவே கருதலாயினர். சைவமும், வைணவமும் அமைதியான முறையில் முன்னேற்றமடைந்தன. வட இந்தியாவில் பல அரசகுலத்தினர் இரு பிரிவுகளையும் போற்றிப் பின்பற்றினர். விட்ணுவர்த்தனன் காலம் முதல் ஹொய்சளர், வைணவச் சார்புடையோரென்பது முன்னர், குறிப்பிடப்பெற்றது. ஆந்திர, தமிழ்நாடுகளில் சைவம் தழைத் தோங்கியது. கன்னடப்பகுதியில் வீரசைவர் பிற மதத்தவரிடம் சகிப்புத்தன்மையற்றிருந்தனர்.

# பகுதி. 27.

## இனவாழ்க்கை.

### சாதிமுறை.

இக்காலப் பகுதியில், நான்கு பெரும் சாதிகளுள் ஒவ்வொன்றிலும் எண்ணற்ற உட்பிரிவுகள் தோன்றியிருந்தன. மணவினைமுறை பல கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப் பெற்றது. பெண்டிர் நிலையும் கைம்பெண்கள் நிலையும் முன்னேற்றமடையவில்லை. ஆண் பெண் "ஜாதகக்" குறிப்புகளை ஆராய்ந்து மணம் புரியும் முறை வழக்கிலிருந்தது. காச்மீரத்தில் மிகுதியாக உடன்கட்டையேறும் வழக்கம் நிலவியது. தென்னிந்தியாவிலும் நாம் குறிப்பிட்டு வரும் காலப்பகுதியில் அப்பழக்கம் தொடங்கியது. மதம் மாறியவர்களை மீண்டும் பிராமண சமயத்தில் ஏற்றுக்கொள்ளும் முறை ஆதரிக்கப்படவில்லை. கைம்பெண்கள் தலைமயிரை மழிப்பது, கோயில்களில் நடனமாதர்கள் சேவைசெய்தல், பலவகை "விரதங்கள்" கைக்கொள்ளுதல் முதலிய பழக்கங்கள், இக்காலப் பகுதியில் ஏற்பட்டவையாகும். ஆகவே, சில அம்சங்களில் இந்து இனத்தில் குறுகிய மனப்பான்மை ஏற்பட்டதைக் காண்கிறோம்.

# பகுதி 28.

## கலைப்பண்புகள்.

**கல்வி.** நாலந்தா பல்கலைக்கழகம் ஏழாம் நூற்றாண்டில் எவ்வாறிருந்ததென்று முன்னர் படித்தோம். அஃது, ஒன்பதாம் நூற்றாண்டில் சுமத்திராவின் சைலேந்திரப் பேரரசனின் ஆதரவைப்பெற்றது. பத்து, பதினோரும் நூற்றாண்டுகளில் இரண்டாம் கோபாலனும், முதலாம் மகிபாலனும் அக்கழகத்தைப் போற்றி ஆதரித்தனர். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த தேவபாலன் அக்கல்வி நிலையத்திற்குச்செய்த உதவி மிகவும் போற்றற்குறியது. பனிரெண்டாம் நூற்றாண்டில் கோவிந்தபாலனின் ஆ த ர வு அதற்குக்கிடைத்தது. பல புகழ்பெற்ற

அறிஞர்கள் அக்கழகத்தில் தொண்டாற்றி வந்தனர். திபெத்தில் லாமெஸம் என்ற சமயத்தைத் தோற்றுவித்த பத்ம சம்பவர், நாலந்தாவின் ஓர் பேரறிஞராவர்.

## விக்கிரமசீலா.

விக்கிரமசீலா பல்கலைக்கழகத்தை நிறுவியவர் தேவ பாலன் (769–815). அவ்விடம் கங்கையின் தென்பகுதியில் பகல்பூர் மாவட்டத்திலிருக்கக்கூடும் (பீகார்). பதினோரும் நூற்றாண்டில் நயபாலன் அதனை ஆதரித்தனன். பல அம்சங்களில் இது, நாலந்தா கழகத்தை ஒத்ததே. அங்கு ஆறுமண்டபங்கள் இருந்தன. அடீஸா என்ற ஓர் வங்காளியப் பேரறிஞர், விக்கிரமசீலாவில் கல்விபயின்று, சுமத்திராவுக்குச்சென்று, அத்தீவின் புத்தசமயத்தை நன்கு உணர்ந்தபின், விக்கிரமசீலாவின் தலைவராகஅமர்ந்தார். அக்கழகத்தில் 108-பேரறிஞர்கள் தொண்டாற்றி வந்தனர். சிறந்த மாணவர்களுக்கு 'பண்டிதர்' என்ற பட்டம் வழங்கப்பெற்றது. பனிரெண்டாம் நூற்றாண்டின் முடிவில் நாலந்தாவைப் போலவே, விக்கிரமசீலாவும் சிறப்புக் குன்றியிருக்கவேண்டும். இவற்றைத்தவிர வேறுசில பல்கலைக் கழகங்களும் (ஓதாந்தபுரி — (பீகார்) — ஜகத்தலம் (இரமாவதி) இக்காலத்தில் தோன்றியிருந்தன.

## இலக்கியம். (பத்தாம் நூற்றாண்டு.)

கூர்ச்சரபிரதிகாரரின் அவையில் விளங்கிய இராசசேகரனைப்பற்றி முன்னர் கூறப்பட்டது. மகிபாலனின் அவையை அலங்கரித்த மற்றொரு நாடகாசிரியன் க்ஷேமேஸ்வரனுவன். மூன்றும் இந்திரன் என்ற இராட்டிரகூட மன்னனின் ஆதரவைப் பெற்ற திருவிக்ரமபட்டர், "நளசம்பு" முதலிய நூல்களை இயற்றினர். வேங்கட மாதவரைப்பற்றி முன்னர் கூறப்பட்டது. இரண்டாம் ஆர்யபட்டா (சுமார் 950) என்பார் எழுதிய வான நூலும், பட்டோத்பலர் என்பார் இயற்றிய பல விரிவுரைகளும் தனஞ்சயர் எழுதிய "தசரூபமும்" குறிப்பிடத்தக்கன.

## பதினேரும் நூற்ருண்டு.

சந்தேல மன்னன், கீர்த்திவர்மன் காலத்திய கிருட்டின மிஸ்ரர், பக்தி உணர்ச்சி உண்டாக்கும் நூல்கள் எழுதினுர். பரமார மன்னன் போஜன் ஒரு சிறந்த அறிஞன். காச்மீர நாட்டு க்ஷேமேந்திரன் எழுதிய நூல்கள் பல. பில்ஹணன் என்ற காச்மீர நாட்டறிஞன், 1088-க்கு முன்னர் தனது "விக்கிரமாங்க சரிதம்" என்ற நூலை எழுதி முடித்தான். கல்யாணியின் மன்னன் ஆரும் விக்கிரமாதித்தியன் அவ்வறிஞனுக்கு "வித்தியாபதி" என்ற பட்டம் அளித்தான். விஞ்ஞானேஸ்வரர் எழுதிய "மிதாட்சரம்" என்ற விரிவுரை நூல் மிகவும் புகழ்பெற்றது.

## பனிரெண்டாம் நூற்ருண்டு.

வத்சராசன் எழுதிய கிருதார்ஜுனியம், ஜெயதேவரின் "பிரசன்னராகவம்" தனஞ்சயர் இயற்றிய "இராகவ பாண்டவ்யம்" ஸ்ரீஹர்ஷரின் "நைடதம்" வங்காளத்தின் ஜயதேவர் எழுதிய "கீதகோவிந்தம்" கல்ஹணனின் "இராசதரங்கிணி" ஹேமசந்திரர் இயற்றிய "குமாரபால சரிதம்" முதலியன பனிரெண்டாம் நூற்ருண்டின் குறிப்பிடத்தக்க நூல்களிற் சிலவாம். ஹேமசந்திரன், 63 சிறந்த சமணப் பெரியோர்களைப் பற்றி (மகாவீரர் உட்பட) ஓர் பெரும் நூல் எழுதியுள்ளார். "யோகசாத்திரம்" என்ற அவரது மற்ருெருநூல் சமணசமய தத்துவங்களை விளக்கும். தவிர வேறுசில தத்துவ நூல்களும் அகராதிகளும், வடமொழி, பிராகிருத இலக்கண நூல்களும் அவரால் இயற்றப்பெற்றன. போரையும், சட்டமுறைகளையும் பற்றி, வடமொழியிலும், பிராகிருதத்திலும் இவரால் எழுதப் பெற்ற நூல்கள் போற்றற்குரியன. "பிருதிவிராசவிசயம்" என்னும் முற்றுப்பெருத நூல், 1178-க்கும் 1200-க்கும் இடைப்பட்ட காலத்தில், காச்மீரக்கவி, ஜெயநாதர் என்பாரால் இயற்றப்பட்டிருக்கலாமென்று நம்பப்படுகிறது. இந்நூல், முகம்மது கோரியால் இறுதியில் முறியடிக்கப்பட்ட சாகமான மன்னன் மூன்ருவது பிருதிவிராசனின் வெற்றிகளைச் சிறப்பிக்கும். வாத்சியாயனரின் 'காமசூத்திரத்தையும்' அதனை ஒத்த வேறு

நூல்களையும் பின்பற்றி, கொக்கோகர், "இரதி இரகசியம்" என்ற நூலை எழுதினர். கோவிந்தசந்திர காகடவாலனின் அமைச்சனுன இலக்குமிதரன், "ஸ்மிருதிகல்பதரு" என்ற சட்டநூலை இயற்றினன். இத்தகைய இலக்கியம் பனிரெண்டாம் நூற்றுண்டு முதல் சிறப்படையலாயிற்று. இராமாநுசர் என்ற வைணவப் பெரியார், "விசிஷ்டாத்வைதம்" என்ற தத்துவத்தைத் தோற்றுவித்தும், மெஞ்ஞான தத்துவங்களையும் சமயத்தையும் கலந்து விளக்கியும் புகழ்பெற்றுர். இவர் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஸ்ரீபெரம்புதூரில் பிறந்தவர். தொடக்கத்தில் அத்துவைதம், பயின்று பின் அதைவிடுத்து, ஸ்ரீரங்கத்தில் ஓர்வைணவ ஆசிரியரின் மாணவரானுர். பிறகு வைணவப்பிரிவினரின் தலைமைப்பதவி இவருக்குக் கிடைத்தது. "ஸ்ரீபாஷ்யம்" "கீதாபாஷ்யம்" என்னும் இவரது நூல்களில் முறையே "பிரம்ம சூத்திரங்களு"க்கும் பகவத்கீதைக்கும் விரிவுரைகள் எழுதியுள்ளார். "மாயை" என்ற தத்துவத்தை இவர் ஏற்றுக்கொள்ளவில்லை. இராமாநுசர், தமது சமயத்துடனும் தத்துவங்களுடனும், உபநிடதங்கள், புராணங்கள், பகவத் கீதை, மகாபாரதம் முதலியவற்றின் கொள்கைகளை ஒற்றுமைப் படுத்தி விளக்குவதையே குறிக்கோளாகக் கொண்டார். சோழரால் துன்புறுத்தப்பெற்ற இவர், மைசூருக்குச்சென்று ஆண்டிருந்த ஹொய்சளமன்னன், பிட்டிதேவனை சமணத்திலிருந்து வைணவத்திற்கு மாற்றினுர். ஸ்ரீரங்கத்தில் அவர் இறந்தது பனிரெண்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதியாயிருக்கலாம். இந்திய சமய வரலாற்றில், சிறப்பாக வைணவ சமய வரலாற்றில் இராமாநுசரின் புகழ் போற்றற்குரியது. பெல்லாரி மாவட்டத்தில் பிறந்து, வாழ்க்கையின் பெரும் பகுதியை மதுராவில் கழித்த நிம்பார்கர் என்பார், கிருட்டின-இராதை வழிபாட்டு முறையைச் சார்ந்தவர். தத்துவ அறிஞராகிய அவர், 'பிரம்ம சூத்திரங்களுக்கு' விரிவுரை எழுதியுள்ளார். இரண்டாம் இராசராசசோழனல் ஆதரிக்கப்பெற்ற "கேசவசுவாமி" என்பார் ஓர்சிறந்த அகராதி ஆசிரியர். 1150-ல் பாஸ்கராசாரியரால் எழுதப்பெற்ற "சித்தாந்த சிரோமணி" என்றநூல் பண்டைய இந்தியா, கணிதத்திலும், வான நூலிலும் எய்தியிருந்த உயர்நிலையைக்காட்டா நிற்கும்.

## கலை.

கலை அமைப்பில், வடநாட்டு முறை, தென்னாட்டு முறை, நடுநாட்டு முறை என மு ப் ப கு தி க ள் பேசப்படுகின்றன. சந்தேலர் காலத்திய கஜுராகோ என்ற இடத்தின் பிராமண, சமண சமயக்கோயில்கள், வடநாட்டு முறைக்குத்தக்க எடுத்துக்காட்டுகளாகும். அங்கே மகாதேவரின் கோயிலில் மிகுதியான சிற்பங்கள் உள்ளன. ஒரிஸ்ஸாவில் பூரி மாவட்டத்திலுள்ள கலைச்சின்னங்களும், சிற்பங்களும் மி கு ந் த சிறப்பு வாய்ந்தனவாகும். அடுத்தபடியாக நடுநாட்டுக்கலை அமைப்பு முறை, மைசூரில் ஹொய்சள குலத்தினரின்கீழ் மிக்க உயர்வு எய்தியது. சோமநாதபுரி, பேலூர், ஹொய்சளேஸ்வரம் முதலிய இடங்களின் கோயில்களில் வியக்கத்தக்க வேலைப்பாட்டுடன் கூடிய சிற்பங்கள் உள்ளன. ஹொய்சளேஸ்வரம் கோயிலில் இராமயணக்காட்சிகளை விளக்கும் சிற்பங்கள் — 2000-யானைகள் முதலியன – போற்றத்தக்க முறையில் அமைந்துள்ளன. இனி, தென்னாட்டு (திராவிட) முறையில், சோழரால் கட்டப்பட்ட தஞ்சாவூர், கங்கைகொண்டசோழபுரம் கோயில்கள் அமைந்துள்ளன. எளிமையும் உயர்வும் கலந்த அவற்றின் கலை அழகைப் பலவகையில் அறிஞர்கள் போற்றியுள்ளனர். தஞ்சாவூர் கோயிலில், அறிஞர், S. K. கோவிந்தசாமி அவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட ஓவியங்கள் மிகவும் புகழத்தக்கன. தமிழ் நாட்டிலும், ஈழத்திலும் காணப்பெற்ற உலோக உருவங்கள் பலவற்றுள் நடனமாடும் கடவுளின் உருவம் (நடராசர்) இந்தியக்கலையின் சிறப்பை உலகுக்கு நன்கு எடுத்துக்காட்டும். ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் மு த லி ய ஐந்து அருஞ்செயல்களைக் கடவுள்புரியும் தன்மையை அவ்வுருவம் கு றி க் கு ம் சிறப்பு போற்றற்குரியது.

# அதிகாரம் 9.

## கடல்கடந்த இந்திய நாகரிகம்.

### பகுதி. 1.

#### முன்னுரை.

இந்திய அல்லது மலாயாத் தீவுக் கூட்டத்திலும் (Archi Pelago) (கிழக்கிந்தியத் தீவுகள், இந்தோனேசியா அல்லது இன்சுலிந்தியா) இந்துசீனுவிலும், இந்து அரசுகள் ஏற்படுத்தப்பட்ட வரலாறு, ஆதி இந்திய வரலாற்றில் ஒரு சிறப்பான பகுதியாகும். அஃது, அமைதியான வாணிகத் தொடர்பைப் பின்பற்றித் தோன்றியதாகும். பிற நாடுகளுடன் கொண்ட வாணிகத் தொடர்பின் விளைவாக, இந்தியா, செல்வச்சிறப்பை எய்தியதுடன், இந்நாட்டுச் சமயமும் கலைப் பண்புகளும், பிறநாடுகளில் பரவின. அதனுல் இந்துக்கள் பிற இனத்தாருடன் ஒன்றுபட்டு, நீண்டகாலம், இந்தியப் பண்புகளைச் சிறப்பாகக் கொண்ட ஓர் கலப்பு நாகரிகம் வளர்ச்சி அடைவதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. இந்தியா, வெளிநாடுகளில் இராச்சியங்களை ஏற்படுத்திய போதிலும் அவற்றின்மீது பேரரசுக்குரிய ஆதிக்கத்தைப் பெறவில்லை. இந்தியரின் குடியேற்றமுறை ஓரளவு பண்டைய கிரேக்கக் குடியேற்ற முறைக்கு ஒப்பானதாகும். புதிதாக ஏற்பட்ட இந்தியக்குடியேற்ற நாடுகளில், பேரரசு முறை தோன்றியது. ஆனுல் அது குடியேற்ற மண்டலத்தின் எல்லையைக்கடந்து பரவவில்லை. ஆயினும் சிற்சில காலங்களில் மட்டும் இந்திய இராச்சியங்களுடனும், சிங்கள அரசுகளுடனும் போர் மூண்டதைக் காண்கிறேம். இக்கால வரலாற்றறிஞர், பண்டைய கடல்கடந்த கிரீஸ் அல்லது ஹெல்லாஸ் என்று குறிப்பிடும் முறையைப் பின்பற்றியே கடல்கடந்த இந்தியா என்ற சொல் ஈண்டு பயன்படுத்தப் பட்டுள்ளது.

வாணிகத் தொடர்பின் விளைவாக இந்தியச் சமயமும் கலைப்பண்பும் பரவியதாக முன்னர் கூறப்பட்டது. இந்திய அரசுகளின் வளர்ச்சியினுலும், பேரரசு முன்னேற்றத்தினு

லும், அஃது விரைவுபடுத்தப்பெற்றது. இவ்வாறு இந்திய வணிகரால் இந்நாட்டுடன் இணைக்கப்பட்ட நாடுகளில், இந்திய எழுத்துக்கள், மொழி (வடமொழி), கருத்துக்கள், கொள்கைகள், பழக்கவழக்கங்கள், முதலியன பரவலாயின. இத்தொடர்புக்குக் காரணமானோருள், வணிகரையன்றி, சமயப் பரப்பாளரும், போர்வீரரும் அரசியல் அறிஞர்களும் குறிப்பிடப்பட வேண்டும். கிறித்தவ ஆண்டின் தொடக்கம் முதல் 15 நூற்றாண்டுகள் வரை, இன்சுலிந்தியா, இந்துசீன வரலாறுகளில் இந்தியரின் முயற்சிகளின் விளைவாக, மாறுதல் ஏற்படலாயிற்று. பின்னர், முகம்மதிய அரசும், பிறவும் எழுந்ததால் இந்தியர் முயற்சி மங்கியது. இந்திய நாகரிகம், பிற பண்புகளுக்கு அடிப்படுத்தப்பட்டது. சையாம், பாலி இரு நாடுகளைத்தவிர, பிற இடங்களில் இந்தியர் மரபு மறைந்தது. அவ்விரு நாடுகளில் மட்டும் இன்றும், பெரும்பான்மையில் இந்தியக்கலை மரபு நிலவுகிறது. டச்சு, பிரெஞ்சு அறிஞர்களால், பழம்பொருள் ஆராய்ச்சி செய்யப்பட்டதின் விளைவாக, பண்டைக்காலத்திலும், இடைக்காலத்திலும் இந்தோனேசியா, இந்து சீன நாடுகளில் இந்தியர் புரிந்த அருஞ் செயல்கள் சிறப்பாக அறியப்படுகின்றன.

"இந்தியா, சேய்மையிலுள்ள பெரிய கிழக்கு நாடுகள் அனைவற்றிலும், தனது கலை முத்திரையைப் பொறித்துள்ளது. அவைகளிற்சில, சமயம், கலை, தொடர்பான தமது பண்புகளின் சிறந்த பகுதியை இந்தியாவிடமிருந்து பெற்றன; மற்றவை, நாகரிக நாடுகளாக விளங்கும் நிலைக்கு, இந்தியாவுக்குக் கடப்பாடுடையன. பின்னைய நாடுகளில் முதலாவதாக, இந்து சீன குறிப்பிடப்படவேண்டும். — — — — அரசியல், சமய நிலையங்களைப் பொறுத்தவரை பண்டைய இந்து சீன உண்மையில், இந்தியாவின் மகளாக இருந்தது. இம்மகள், பழங்காலத்திலேயே, அவள் இல்லத்தினின்று பிரிக்கப்பட்டனள்.; காலப்போக்கில் அவள் தாயினால் மறக்கப்பட்டாள்"†

† L. Finot, Hindu Kingdoms in Indo China, the Indian Historical Quarterly (1925) P. 599. (Translation.)

## இன்சுலிந்தியாவும் இந்து சீனவும்.

சுமத்திரா, (ஸ்வர்ணத்வீபம்) ஜாவா, (யவத்வீபம்) பாலி, போர்னியோ, மலேயா, சயாம், கம்போடியா, (காம்போஜம்) தெற்கு அன்னும் (சம்பா) ஆகியவற்றின் வரலாறு (கி. பி. 1200 வரை) ஈண்டு வரையப்பெறும். இந்நாடுகளில் முதல் நான்கும் இன்சுலிந்தியா எனப்பெறும் இறுதியான நான்கும் (பர்மாவுடன்) இந்து சீன எனப்பெறும்.

## பகுதி 2.

### சுமத்திரா.

### ஆதிவரலாறு; ஸ்ரீவிசயம்.

கி. மு. மூன்று அல்லது இரண்டாம் நூற்றுண்டில், இந்தியர் சுமத்திராவில் குடியேறியது முதல் அந்நாட்டு வரலாறு தொடங்குகிறது. ஸ்ரீவிசய அரசு (தென்கிழக்கு சுமத்திராவில்) பெரும்பாலும் கி. பி. நான்காம் நூற்றுண்டிலிருந்து உரிமையான ஆட்சியுடன் விளங்கியிருந்தபோதிலும், ஏழாம் நூற்றுண்டிற்றுன் அஃது சிறப்புற்றது. 683, 684, 686, ஆண்டுகளுக்குரிய கல்வெட்டுகளிலிருந்து ஸ்ரீசெயநாசன் என்ற பௌத்தனின்கீழ் ஸ்ரீவிசயம், மிகுந்த அரசியல் பெருமை பெற்று விளங்கியதென்று அறியப்படுகிறது. அவ்வமயம், மலாயு (ஜம்பி, சுமத்திரா) என்ற இடத்தையும், பங்கா என்ற அண்மையிலுள்ள தீவையும் அந்நாடு தன்னுடன் இணைத்துக் கொண்டதுடன், ஜாவாவில் படையெடுக்கவும் (686) முயற்சி செய்து வந்தது. ஸ்ரீவிசயத்தின் அரசியல் பெருமை, வாணிகச் சிறப்பு, ஆண்டுகாணப்பெற்ற புத்தசமயக் கல்வியின் செழிப்பு முதலியனவற்றைப்பற்றி, அந்நாட்டுக்குச் சென்ற சீன யாத்திரிகனை இட்சிங், குறிப்பிடுகிருன். அவன் வடமொழி இலக்கணம் கற்றுக்கொண்டு, அங்கு ஆறு திங்கள்கள் தங்கினன் (ஏழாம் நூற்றுண்டின் முடிவு). அவன் கூறுவதாவது:- "ஆயிரத்துக்கு மேற்பட்ட பௌத்த (மகாயான) குருமார் காணப்படுகின்றனர். அவர்தம் உள்ளம் நற்பழக்கங்களிலும் கல்வியிலுமே செல்லுகின்றது. மத்திய அரசில் (இந்தியா)

உள்ளதுபோலவே, அவர்கள், நிலேத்துள்ள பல நூல்களேயும் ஆராய்ந்து கற்கின்றனர்.'' நாலந்தாவின் தர்மபாலன், சுமத்திரா சென்ருன். 695-க்கும் 742-க்கும் இடைப்பட்ட காலத்தில் ஸ்ரீவிசயம், சீனவுடன் அரசியல் தொடர்பு கொண்டிருந்ததுடன் 775-ல் மலேயாவையும் வென்றது.

## சைலேந்திரப்பேரரசு ; தோற்றமும் பரப்பும்.

கி. பி. 775, 778, 782 ஆண்டுகளுக்குரிய மூன்று கல்வெட்டுக்குறிப்புகள் (ஒன்று மலேயாவிலிருந்தும், இரண்டு ஜாவாவிலிருந்தும்) பௌத்த சைலேந்திர குலத்தினரால், மலேயா, ஜாவா, சுமத்திரா ஆகியன ஆளப்பட்டதை அறிவிக்கும். இறுதியாக உள்ள குறிப்பு, இந்திரசைலேந்திரன் என்ற பெயரை உணர்த்துகிறது. ஆகையால் 8-ம் நூற்ருண்டின் இறுதியில் சைலேந்திரப் பேரரசு நிலேபெற்றிருந்ததென்று அறியக்கிடக்கிறது. ஆனல் அதன் தோற்றத்தைப்பற்றியும், தலேநகரைப்பற்றியும் தெளிவாக அறியப்படவில்லே. சைலேந்திரரின் ஆதி அகம், கலிங்கநாடாக இருக்கலாமென்று சில அறிஞர்கள் கருதுவர். ஆதலால், இன்சுலிந்தியா, அயலார் ஆட்சிக்கு உட்பட்டதென்றும் கருதப்படுகிறது. பேரரசின் சிறந்த நினேவுச்சின்னம், போரபுதூரில் (ஜாவா) நிறுவப்பட்டதைக்கொண்டு, தலேநகர், ஜாவாவிலிருந்ததாகக் கருதப்படுகிறது. பேரரசு, மலேயாவிலிருந்து தோன்றியிருக்கக்கூடுமென்ற கருத்தும் உளது. ஆனல் பெரும்பான்மையான அறிஞர்கள், ஸ்ரீவிசயம் என்ற சுமத்திரா அரசே, சைலேந்திரப்பேரரசாக வளர்ந்ததென்று நம்புகின்றனர். அப்பேரரசு, இன்சுலிந்தியா மட்டுமின்றி, மலேயா, கம்போடியா, (சிறிது காலம், சம்பா) ஆகிய நாடுகளேயும் தன்னுள்ளடக்கியிருந்தது. 854-ம் ஆண்டுக்குரிய, நாலந்தா கல்வெட்டு (தேவபாலனுடையது), பாலபுத்திரதேவன், சமரக்ரவீரன் என்ற இரண்டு சைலேந்திரரைக் குறிப்பிடுகிறது. பரப்பிலும், செழிப்பிலும் சிறப்பு மிகுந்ததும், கடற்படை வலிமை கொண்டதுமான சைலேந்திரப் பேரரசு, ஒன்பதாம் நூற்ருண்டின் நடுப்பகுதி வரை பழுதுருது நிலேத்திருந்தது. ஆனல், 869-க்கும்

879-க்கும் இடைப்பட்ட காலத்தில் கம்போடியாவும், ஜாவாவும் உரிமை பெற்றன. ஆயினும் பத்தாம் நூற்றுண்டின் முடிவுவரை சைலேந்திரரின் சிறப்பு மறையவில்லை. சுமார் 990-ல் ஜாவா, சைலேந்திரரைத் தாக்கி வெற்றிகொண்டது. ஆனல் சுமார் 1003-ல் தோல்வியுற்றது. பதினேரும் நூற்றுண்டின் முற்பகுதியில், சைலேந்திரரும், சோழரும் கொண்டிருந்த அரசியல் உறவைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பட்டது. சுமார் 1025-ல் சோழர் அடைந்தவெற்றி சைலேந்திரரை நிலைகுலையச் செய்தது. கடல் வலிமை மிக்க இரு பேரரசுகளுக்குமிடையே, அந்நூற்றுண்டு முழுவதும் பகைமை நீடித்தது. பனிரெண்டாம் நூற்றுண்டில், சைலேந்திரப்பேரரசு 15-நாடுகளைத்தன்கீழ் அடக்கியிருந்தது என்பதற்கு, சீனரின் குறிப்புகள் சான்ருக உள்ளன. பதின்மூன்ரும் நூற்றுண்டில் அஃது சிதறுண்டது. சைலேந்திரரின் குலவழியும், கால வரலாறும் தெளிவாக அறியப்படவில்லை. பாலர், சோழர் ஆகியோரின் கல்வெட்டுக்களிலிருந்து சைலேந்திரரைப்பற்றித் தெளிவாகச் சிறிது அறியப்படுகிறது. எட்டாம் நூற்றுண்டிலிருந்து பனிரெண்டாம் நூற்றுண்டுவரை உயர் நிலையிலிருந்த அந்த இந்தோனேசியப் பேரரசைப்பற்றி உண்மைச் செய்திகளைவிட மிகுதியாக கோட்பாடுகளே உள்ளன. சைலேந்திரர், மகாயான புத்த சமயத்தினராவர். நாலந்தாவுடனும், நாகப்பட்டினத்துடனும் அவர்கள் கொண்ட தொடர்பு, அவர்தம் சமயப்பற்றையும், கல்வியை ஆதரிக்குந் தன்மையையும் உணர்த்தும். மேலும் 11-ம் நூற்றுண்டில், விக்ரமசீலா பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த அடீசா (Atisa) என்பான், பத்து ஆண்டுகள் சுமத்திராவில் தங்கி, புத்த சமயத்தைக் கற்றறிந்தனன்.

## பகுதி 3.

### ஜாவா.

#### மேற்கு ஜாவா.

ஜாவா, இன்சுலிந்தியாவில் மிகவும் மக்கள் நெருக்கமுள்ள பகுதியாகும். அதன் நிலமும் செழிப்பு வாய்ந்தது.

"யவத்வீபம்" அல்லது "வார்கோதுமைதீவு" என்ற அதனுடைய பெயரும் நோக்கற்பாலது. கி. பி. 132ல் ஜாவாவில் தேவவர்மன் என்ற மன்னன் வாழ்ந்ததாக, சீனக்குறிப்புகள் அறிவிக்கின்றன. இரண்டாம் நூற்றாண்டில் இந்தியர் அத்தீவில் குடியேறியிருந்தனர் என்பதற்கு அது சான்றாகும். இரண்டு, மூன்று, ஐந்தாம் நூற்றாண்டுகளில், ஜாவா, சீனவுடன் அரசியல் தொடர்பு கொண்டிருந்தது. பாஹியன், சீனவுக்குத் திரும்புகையில், ஜாவாவில் ஐந்து திங்கள்கள் (கி. பி. 414ல்) தங்கினன். ஆண்டு, பிராமண சமயம் சிறப்புற்று விளங்கியதையும் புத்த சமயம் மங்கியிருந்ததையும், அவன் குறிப்பிடுகிறான். ஆனால் அச்சீனன், அத்தீவைவிட்டுப் புறப்பட்டபின், குணவர்மன் என்ற ஒரு காச்மீரநாட்டு இளவரசத்துறவி, ஜாவா மன்னனையும் அவன் தாயையும் பௌத்தர்களாக மாற்றிவிட்டு, 424ல் சீன சென்றனன். படேவியாவின் (**Batavia,** மேற்கு ஜாவா) அண்மையில் கிடைத்த சில வடமொழிக் கல்வெட்டுக் குறிப்புகள் பூர்ணவர்மன் என்ற மன்னனைப்பற்றி அறிவிக்கின்றன. பிராமணர்களுக்கு, ஓராயிரம் பசுக்களை அவன் கொடையாக வழங்கினனெனவும், தனது இருபத்திரண்டாவது ஆண்டு ஆட்சியில் ஒரு கால்வாய் வெட்டினனெனவும் அதனின்று அறியலாகும். அக்குறிப்புகள், கி. பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டுக்கு உரியதாகக் கருதப்படலாம். மேற்கு ஜாவாவில் அவ்வமயம் பிராமணர் அரசு நிலவியதென்பதற்கு அவை சான்றுகளாம். சீனவுடன், ஜாவா தொடர்ந்து அரசியல் தொடர்பு பூண்டிருந்தது. 675ல் ஜாவாவிலிருந்த ஒரு அரசியைப்பற்றி சீனக்குறிப்புகள் அறிவிக்கின்றன.

## மத்திய ஜாவா.

கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்குரியதாகக் கருதப்படும் ஒரு வடமொழிக் கல்வெட்டில் சிவனையும், விட்ணுவையும் குறிக்கும் அடையாளங்கள் உள. மத்திய ஜாவாவில் பிராமண சமயம் நிலவியதென்பதற்கு இஃது சிறந்த சான்றாகும். எட்டாம் நூற்றாண்டில், மதராம் அரசு (மத்திய ஜாவா)

ஏற்பட்டது. சக ஆண்டு 654-க்கு (கி. பி. 732) உரிய, சஞ்சய மன்னனின் வடமொழிக் கல்வெட்டு, 'அவனை, சிறந்த, படைவீரன் என்று கூறுகிறது. அவன் ஓர் சைவனும். ஒரு சிவலிங்கமும் அவனால் நிறுவப்பட்டது. அவன் குறிப்பில் சிவன், பிரமன், விட்ணு ஆகியோர் தொழப்படுகின்றனர். அவன் தந்தை மனுவைப்போல் ஆட்சி புரிந்ததாகவும் அவன் அறிவிக்கின்றனன். இச் சான்றுகளைக்கொண்டு, மத்திய ஜாவாவில் இந்திய நாகரிகம் நிலவியதென்று தெளிவாக அறியலாகும். அம் மன்னனின் கல்வெட்டைக்கொண்டு அவன் குலத்தினர், தென்னிந்தியராக இருக்கவேண்டுமென்று உணரப்படுகிறது. சிலர், அவனே, சைலேந்திரர் குலத்தைத் தோற்றுவித்தவன் என்பர். ஆனால் பலர் அவ்வாறு கருத வில்லை. 760ம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில், அகஸ்தியரின் கற்சிலையையும் அவர் கோயிலையும்பற்றிய குறிப்பைக் காண்கிறோம்.

## சைலேந்திரர் ஆட்சிக்காலப் பகுதி

778 முதல் 879 வரை உள்ள காலப்பகுதியில், ஜாவா, சைலேந்திரப்பேரரசுக்கு உட்பட்டிருந்தது. அக்காலத்தில் மதராத்தின் ஜாவா குலத்தினர், கீழ் ஜாவாவுக்குச் சென்று விட்டதாகக் காணப்படுகிறது. சைலேந்திரரின் கீழ் ஜாவா கலைச்செழிப்பை அடைந்தது. டியங் (Dieng) பீடபூமியின் சிவன்கோயில்கள் குப்தர்காலத்திய கோயில்களுக்கு ஒப்பான சிறப்புகளைப் பெற்றிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. § 778ல் மத்திய ஜாவாவில் கலசன் என்ற இடத்தில், மகாயானதேவி தாராவுக்கு ஒரு கோயில் எடுக்கப்பட்டது. இதுவே, ஜாவாவி லேற்பட்ட முதல் பௌத்தக் கோயிலாகும். போராபதூர் கோயிலிலும் கேடு சமவெளி (மத்திய ஜாவா) யின் பிற சின்னங்களிலும், இந்தியக்கலைப் பண்புகளை மிகுதியாகவும், சிறிதளவு ஜாவா கலைப்பண்புகளையும் காண்கிறோம். 750 முதல் 850 வரை உள்ள காலப்பகுதிக்கு உரியதாகக் கருதப்படும். போராபதூர் நினைவுச்சின்னம், "ஒன்பது தளங்களைக்கொண்ட ஒரு குன்று; கல்லில் அமையப்பெற்ற ஒரு

§ Majumdar. Suvarnadvipa Part II (1938) P. 176.

காவியம்; உலகிலேயே மிகச்சிறந்த புத்த ஸ்தூபி'' என்று சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. சுமார் 2000-கல்லோவியங்கள் அதிற் காணப்படும். அவற்றை ஒன்றின் பக்கலில் ஒன்றாக தொடர்ச்சியாக வைத்தால், இரண்டு மைல்கள் நீளத்தில் அமையும். வடமொழியிலுள்ள "லலித விஸ்தாரத்தில் சிறப்பிக்கப்பட்டுள்ள புத்தர் வாழ்க்கையை அவை விளக்குகின்றன. அச்சின்னத்தின்மீது ஏறும் ஒரு யாத்திரிகனுக்கு, ஆன்மீகப் பாதையில் முன்னேறும் உணர்ச்சி ஏற்படுகிறது. அதன் அடிப்புறங்கள் பல வகையாக அணிசெய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் மேற்புறங்கள், அழகு செய்யப்படாமல், தெளிவாக உள்ளன. புத்தரின் தத்துவத்தை இஃது எடுத்துக்காட்டும். போராபதூர் அண்மையில் மேண்டட் கோயிலிலுள்ள அவலோகிதீஸ்வரரின் உருவம், குப்தர் காலத்திய சிற்ப வேலையை ஒத்த சிறப்புகளைக் கொண்டுள்ளது. ஆயினும் பௌத்தக்கலை, ஜாவாவில் இந்துக்கலை வளர்ச்சியில் இடைநிலையாக உள்ளது என்பது நினைவுகூரத்தகும். தொடக்கத்திலும், இறுதியிலும் இந்துக்கலையே, அந்நாட்டில் சிறப்புற்று விளங்கியது.

## பழைய குலத்தின் மீட்சி.

சைலேந்திரர் ஆட்சி முடிவுற்றபின், சஞ்சயனின் பண்டைய சைவகுலம் மீண்டும் தோற்றுவிக்கப்பட்டு சுமார் 927-வரை மத்திய ஜாவாவிலும், கீழ்ஜாவாவிலும் தொடர்ந்து ஆட்சி புரிந்தது. உவாவா என்பானே அதன் இறுதி அரசன். ஆகையால், சைலேந்திரரின் கீழிருந்த காலப்பகுதியைச் சேர்த்து, சுமார் இரு நூற்றாண்டுகள் (732—927) அக்குலம் மத்தியஜாவாவில் நிலைபெற்றிருந்தது. மீட்சிக்காலப்பகுதியில் (879—927) பல இந்து கோயில்கள் எடுக்கப்பட்டன. லோரா ஜாங்ருங் (பிராம்பனம், மத்தியஜாவா) என்றஇடத்தில் தோன்றிய எட்டு கோயில்கள், அவற்றில் மிகவும் சிறப்புடையன. இவற்றில் இடையிலுள்ளது சிவனுக்கும், மற்றவை பிரமன், விட்ணு ஆகியோருக்கும் உரியன. குன்றின்மீதுள்ள இச்சின்னங்களில் காணப்பெறும் சிற்பங்கள் "இராமாயணத்தை'' விளக்குகின்றன. பிராம்பனம், போராபதூர்

சின்னங்கள் இந்தோ-ஜாவானிய கலைப்பண்பின் சிறப்பை நன்கு எடுத்துக்காட்டும். 'மேலும், மீட்சிக்காலத்தில், பண்டைய ஜாவானிய இலக்கியத்தின் தொடக்கத்தைக் காண்கிறோம். அமரமாலை, என்ற வடமொழி அகராதி, மொழி பெயர்க்கப் பட்டது. இராமாயணமும் அக்காலத்தில் இயற்றப்பட்டதாகச் சிலர் கூறுவர். ஆனால், அஃது 11 அல்லது 13-ம் நூற்றுண்டில் தோன்றியதாகக் கூறுவாருமுளர். அக்காவியம், வால்மீகியால் எழுதப்பட்டதினின்று சில செய்திகளில் வேறு படுகிறது.

## கீழ் ஜாவா.

சுமார் 927-ல் கீழ்ஜாவா சிந்தோக் என்ற மன்னனின் ஆட்சியின்கீழ் வந்தது. ப்ரண்டாஸ் ஆற்றுச் சமவெளியில் அவனுட்சிநிலவியது. அவன் சைவ சமயத்தவன். ஜாவாவில் தந்திரிய புத்த சமயம் நிலவியது. 947-ல் பட்டம் பெற்ற சிந்தோக்கின் மகள், புத்தசமயத்தைப் பின்பற்றினுள். தரும வம்சன், பாலிதீவை தன்னுட்சியின்கீழ் கொண்டுவந்தான். அவன் சைலேந்திரப் பேரரசை எதிர்த்துத்தாக்கி வந்தனன். 990-ல் அவன் வெற்றிபெற்றபோதிலும் 1003-ல் தோல்வி யுற்றான். 1008-ல் அவனுட்சி அவலமான முடிவை அடைந் தது. சுமார் 996-ல் மகாபாரதம் மொழி பெயர்க்கப்படுவதை யும், சிவசாசனம் என்ற நூல் இயற்றப்படுவதையும், அவன் ஆதரித்தான். அவன் மருமகன் அயர்லங்கன் என்பான் 1019-ல் ஆட்சி தொடங்கி, 1035-ல் ஜாவாவில் மிகுந்த வலிமையுடன் விளங்கினன். அவன் பல நீர்ப்பாசன சாத னங்கள் செய்ததுடன், வாணிகத்தையும் முன்னேறச்செய்தான் அவனுட்சியில் புகழ்பெற்ற ஒரு விட்ணுவின் உருவச்சிலை செய்யப்பட்டது. அவனுல் ஆதரிக்கப்பெற்ற கண்வன் என் பான், சுமார் 1035-ல் "அர்ச்சுன விவாகம்" என்ற பண்டைய ஜாவானிய நூலை இயற்றினுன். 1042-ல் அவ்வரசன் அரசிருக்கை துறந்தபோதிலும், பின்னரும் அரசியல் செய்தி களில் கருத்தைச்செலுத்தி வந்தான். அவனுடைய இரண்டு பிள்ளைகளுக்கு அவனது நாடு பிரித்துக்கொடுக்கப்பட்டது. கடிரி (கேடிரி — கீழ்ஜாவா) யைத் தலைநகராய்க் கொண்ட

மேற்குப்பகுதி 12-ம் நூற்றுண்டில், தலையான ஜாவா அரசாக வளர்ந்தது.

### கடிரி அரசு.

ஜெயவர்ஷன் என்ற மன்னனின்கீழ் திரிகுணன் என்ற அறிஞன், வாழ்ந்தான். அவ்வறிஞனல் எழுதப்பட்ட "இருட்டிணயனம், என்ற நூல் இருட்டினன் ருக்மணியைத் தூக்கிச் சென்றதைச் சிறப்பிக்கும். அது சுமார் 1104-ல் இயற்றப் பெற்றது. முதலாம் காமேச்வரன் (1115—1130) அல்லது இரண்டாம் காமேச்வரன் காலத்தில் (1185) மாறதகனம் என்ற செய்யுள், தருமய்யன் என்பாஞல் இயற்றப்பட்டது. செயபாயன் (1135—1157) என்ற மன்னனல் ஆதரிக்கப் பட்ட சேடன் 1157-ல் பாரதயுத்தம் என்ற நீண்ட பாடலே இயற்றினன். பாணுலு என்பாஞல் அது முற்றுப்பெற்றது. 1222-ல் கிருதசெயன் தோற்கடிக்கப்பட்டவுடன், கடிரி அரசு முடிவடைந்தது. அதன் இறுதியான 50-ஆண்டுகளில், ஜாவாவில் மிகவும் வலிமைமிக்க நாடாக அது விளங்கியது. பாலி, போர்னியோ, மற்றும் உள்ள கிழக்குத்தீவுகள் யாவும் அதன் ஆட்சிக்குக் கீழ்ப்படிந்தன. சிறப்புக்குரிய கடற்படை அதனிடமிருந்தது. வணிகத்துறையிலும் அதன் மேன்மை போற்றத்தக்கது. 14-ம் நூற்றுண்டில், கடிரிக்கு அண்மையில் தோன்றிய மத்திய பாகிதப்பேரரசின் முன்னறிவிப்பாக அவ்வரசு விளங்கியதாகக் கூறலாம். ஜாவா வரலாற்றில் பனிரெண்டாம் நூற்றுண்டு சிறப்பான பகுதியாகும். பிற்காலத்திய (பதினுன்காம் நூற்றுண்டு) "பொற்காலத்திற்கு" இன்றியமையாத முன்னேற்பாடுகள் அக்காலத்தில் காணப்பட்டதாகக் கருதலாம். "பண்டைய இந்திய மரபை அடிப்படையாகக் கொண்ட ஜாவா தேசியக்கலே, இந்தோனேசியப் பண்புகளுடனும், தனக்கே உரிய சிறப்புகளுடனும்,"† வளர்ச்சியடைந்து வந்தது. ஆனல் கலேத்துறையில் பனிரெண்டாம் நூற்றுண்டின்கீழ் ஜாவாவில் குறிப்பிடத்தக்க அருஞ் செயல் யாதுமில்லே. ஜாவா மங்கையர், இந்தியப் பெண்டிரைவிட உயர்வான நிலேயில் இருந்தனர் என்பது சிறப்பாக நோக்கத்தக்கது.‡

† Coomaraswamy op. Cit p. 207.
‡ Majumdar Ibid p. 12.

## பகுதி 4.

### பாலியும், போர்னியோவும்.

#### பாலி.

பாலி, ஜாவாவின் கிழக்கிலுள்ள தீவு. சுமார் 1½-மைல்கள் அகலமுள்ள குறுகிய நீர்ப்பகுதி, பாலி, போர்னியா தீவுகளைப் பிரிக்கின்றது. அதன்மக்கள், இன்றும் நான்கு சாதியினராகப் பிரிக்கப்பட்டுள்ள இந்துக்களாவர். 1839-ல் டச்சுக்காரரின் ஆதிக்கத்தை அத்தீவு ஏற்றுக்கொண்டது. ஆயினும் 1911-ம் ஆண்டில்தான் டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளுடன். அஃது சிறிதுசிறிதாக இணைக்கப்படும் வரலாறு முடிவுற்றது. 1908-ல் இறுதியான இந்து இளவரசன் தன்னுரிமையைக் காப்பாற்ற முயன்று தோல்வியுற்றான். ஆயினும், பகைவனிடம் அடைக்கலம் புக மறுத்து வாளேந்திய கையுடன் தன் குடும்பத்தாரோடு மாண்டனன். பல நாடுகளைக்கைப்பற்றிய முகம்மதியர், பாலியில் வெற்றிகொள்ளாததற்கு, அத்தீவினரின் உறுதியும், வீரமுமே காரணமாகும். பாலியின் ஆதி வரலாறு அறியப் படவில்லை. சீனக்குறிப்புகளில், ஆறு, ஏழு நூற்றாண்டுகளில் விளங்கிய போலி என்ற தீவைப்பற்றி பேசப்படுகிறது. அதுவே பாலியாக இருக்கலாமென்று ஊகிக்கப்படுகிறது. அத்தீவில் ஆட்சிபுரிந்ததாகக் கூறப்படும் கௌண்டின்ய குலத்தினர், கி. பி. 518-ல் சீனாவுக்குத் தூதுக்குழுவை அனுப்பினராம். சுமார் 616-ல், க்ஷத்திரிய அரசன் அங்கு ஆட்சி புரிந்தனன். சீனாவுடன் அரசியல் தொடர்பு நீடித்து வந்தது. பாலியில் புத்தசமயம் நிலவியதாக இட்சிங் குறிப்பிடுகிறான். ஆகையால், ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பே, பாலியில் இந்துக் கலை பரவியிருக்கவேண்டும். எட்டாம் நூற்றாண்டிலிருந்து உள்ள அத்தீவின் கல்வெட்டுக்களும், செப்பேடுகளும், இந்தியர் இந்நாட்டினின்று நேராக அத்தீவில் குடியேறினரென்றும், ஜாவாவிலிருந்து செல்லவில்லை என்றும் அறிவிக்கின்றன. வரலாற்றில் அறியப்பட்ட பாலியின் முதல் மன்னன் உக்கிரசேனன் என்பானாகும். 915, 933-ஆகிய இரு ஆண்டுகளும், அவனைப்பற்றிய குறிப்பில் காணப்பெறும். சுமார் 933-ல் ஒரு அரசி ஆட்சிபுரிந்தாள். பத்தாம் நூற்றாண்டின்

முடிவில், ஜாவா, பாலியைக் கைப்பற்றிய பிறகு, வெற்றி கொண்ட நாட்டின் கலைப்பண்புகள், அத்தீவில் பரவின. 11, 12-ம் நூற்றாண்டுகளில் பாலி, அரசியலில் உரிமையற்றிருந்தது. பதின்மூன்றும் நூற்றாண்டில், ஜாவாவின் கடிரி அரசின் வீழ்ச்சிக்குப்பின், பாலி உரிமைபெற்றது.

### போர்னியோ.

இன்சுலிந்தியாவின் மிகப்பெரிய தீவான போர்னியோ, ஜாவைப்போல் எட்டுமடங்கு பெரியது. அத்தீவில் கி. பி. 400-ல் இந்து நாகரிகம் நன்கு ஏற்பட்டிருந்தது. ஆகவே, கிறித்தவ ஆண்டின் ஆதி நூற்றாண்டுகளிலேயே, இந்தியர் அங்கு குடியேறியிருக்கவேண்டும். வேள்விமுறைச் சடங்குகளுடன் கூடிய பிராமண சமயம் அங்கு உறுதியாக ஏற்பட்டிருந்ததென்பது கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து புலப்படும். கீழ்போர்னியோவிலுள்ள ஒரு குகையில் (Kombeng) மரத்தாலான கோயிலின் சின்னங்களும், கல்லாலான சிவ, புத்த, கடவுளுருவங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இவை பெரும்பாலும் நான்காம் நூற்றாண்டுக்கு உரியன ஆகலாம். மேற்கு போர்னியோவில் காணப்பட்டுள்ள பழம் பொருள்களும், அத்தீவில், நேராக இந்தியாவிலிருந்து குடியேற்றங்கள் நிகழ்ந்தனவென்றும், ஜாவாவிலிருந்து அல்ல என்றும் உணர்த்தும். பிற்பட்ட நூற்றாண்டுகளில், சீனக் குறிப்புகளைக்கொண்டு, போர்னியோ, சீனவுடன் வணிகத்தொடர்பு பெற்றிருந்ததென்று அறியலாகும். அத்தீவில் நிலவிய இந்து நாகரிகத்தைப்பற்றியும் சீனக்குறிப்புகள் அறிவிக்கின்றன. பனிரெண்டாம் நூற்றாண்டின் முடிவில் போர்னியோ, ஜாவாவின் ஆட்சியின்கீழ் கொண்டுவரப்பட்டது.

## பகுதி 5.

### மலாயா, சையாம், பூனன் (Funan)

#### மலாயா.

கிறித்தவஆண்டின் ஆதிநூற்றாண்டுகளிலேயே, மலாயாவில் இந்தியக் குடியேற்றங்களேற்பட்டன என்று கருதலாம். கி. பி.

இரண்டாம் நூற்றுண்டில், இந்தியாவுக்கும், சீனுவுக்கும் மலாயா வழியாக, வாணிகத்தொடர்பு நிலவியது. மலாயாவில், நான்கு ஐந்தாம் நூற்றுண்டுகளில், சைவ, வைணவ, புத்தசமயங்களை ஆதரித்த பல அரசுகள் இருந்தனவென்று, வடமொழிக் கல்வெட்டுக்களாலும், கட்டடங்களின் சின்னங்களாலும் அறியலாகும். எட்டாம் நூற்றுண்டில் சுமத்திராவின் சைலேந்திரப் பேரரசில் மலாயாவும் அடங்கியது. முதலாம் இராசேந்திர சோழன், சுமார் 1025-ல் கடாரத்தில் படையெடுத்தான், என்று நாமறிவோம். சைலேந்திரப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின், பதின்மூன்றும் நூற்றுண்டில், ஜாவா, மலாயாவில் படையெடுத்தது. அடுத்த நூற்றுண்டில் மலாயா, ஜாவாப்பேரரசின் ஒரு பகுதியாகியது.

## சையாம்.

கி. மு. மூன்றும் நூற்றுண்டில் இந்துசீனுவின் வடகிழக்கு முனையில் அன்னுமியர் காணப்பட்டனர். பிறகு, மேகாங், மேனும் ஆற்றுச்சமவெளிகளில் தாய் என்ற கூட்டத்தினர், தங்கினர். கி. பி. பதின்மூன்றும் நூற்றுண்டில் சையாமில் அவர்களால் அரசியல் ஆதிக்கம் ஏற்படுத்தப்பெற்றது. கம்போடியாவின் வீழ்ச்சி இதற்குச் சிறப்பான காரணமாகும். அந் நூற்றுண்டுக்கு முன்பு, சையாமின் வரலாறு தெளிவற்றதாக உள்ளது. கி. பி. மூன்றும் நூற்றுண்டில் அங்கே, இந்தியக் குடியேற்றமேற்பட்டது. சையாம், முதலில் பூனுனின் அரசியல் ஆதிக்கத்தின்கீழும் பின்பு, கம்போடியாவின்கீழும் அடங்கியிருந்தது. எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றுண்டுக்குரிய ஒரு தமிழ் கல்வெட்டு, சையாமில், தென்னிந்திய வணிகக்குழு இருந்ததைக் குறிப்பிடுகிறது. சிறிது சிறிதாக, மேனும் சமவெளியில் இந்தியக்கலை பரவியது. இந்திராதித்யன் என்ற இந்தியப்பெயரைப் பெற்ற ஒரு ‘தாய்’ குலமரபுத்தலைவனே சையாமின் முதல், உரிமைபெற்ற அரசன். 1939-ல் சையாமின் பெயர் தாய்லந்த் என்று மாற்றப்பட்டது.

## பூனான் (Funan)

கி. பி. முதல் நூற்றாண்டில் இந்தியர், (பெரும்பான்மையினர், தென்னிந்தியர்) இந்துசீனாவில் பூனான் அரசை நிறுவினர். மரபுரையின்படி, கௌண்டின்யன் என்ற அந்தணனே, முதல் அரசனாவன். சுமார் 245-ல் முருந்தன் என்ற ஒரு இந்திய அரசனுக்கு ஒரு தூதுக்குழு அனுப்பப்பட்டதாம். அவ்விந்திய அரசனும், பூனானுக்கு, ஒரு தூதுவனை அனுப்பினன். நான்காம் நூற்றாண்டில் மற்றொரு கௌண்டின்யன், அரசியலைச் சீர்திருத்தி நன்னெறியில் ஆண்டு வந்தனன் என்று கூறப்படுகிறது. அவ்வமயம் புத்த சமயமும், பிராமண சமயமும் அங்கு நிலவின. ஐந்தாம் நூற்றாண்டில் செயவர்மன் (484—514) என்ற அரசன் சீனாவுக்கு இரண்டு தூதுக்குழுக்களை அனுப்பினன். சுமார் 500-ஆண்டுகள் நீடித்திருந்த வலிமைமிக்க பூனான் அரசு, ஆறாம் நூற்றாண்டின் முடிவில், கம்போடியாவால் முறியடிக்கப்பட்டது.

# பகுதி 6

## கம்போடியா.

### குல வரலாறு.

### முதலாம் பவவர்மன்.

கி. பி. முதல் நூற்றாண்டில், பூனானிலும், கம்போடியாவிலும் ஒரே காலத்தில் இந்தியக் குடியேற்றங்களேற்பட்டன. கம்போடிய மக்கள், சிறிது சிறிதாக, இந்தியராயினர். பழங்கதைகளின்படி கம்பு சுவயம்பூவன் என்பான், அரசகுல வழியின் முதல்வன் என்று கருதப்படுகிறது. அவன் மரபினர், கம்பூஜர் எனப்படுவர் ஆதலால், அந்நாடு, கம்போஜம் அல்லது கம்போடியா எனப்பெயர் பெற்றது. வரலாற்றின்படி, சுருதவர்மன் முதல் மன்னனாவன். அவன் பின்போந்த சிரேஷ்தவர்மன், தலைநகரான சிரேஷ்தபுரத்தைத் தோற்றுவித்தான். உருத்திரவர்மன், (சுமார் 570) என்ற மன்னன், கம்போடியாக் கல்வெட்டுக்களில் மிகவும் புகழப்படுகிறான். ஆயுள்வேத முறையில் தேர்ச்சிபெற்ற, பிரம்மதத்தன், பிரம்மசிம்மன் என்ற இருவரும் அவன் அவைக்கள மருத்துவர்களாம்.

நாட்டில் சைவமும், வைணவமும் முன்னேறி வந்தன. முதலாம் பவவர்மன் என்பான் (சுமார் 590) காலத்தில், கம்போடியா உரிமைபெற்றதுடன், அதனை அடிப்படுத்தியிருந்த பூஞனையும் வென்றது. பவவர்மனின் மகன் சித்திரசேனனே பூஞனைத் தோற்கடித்தவனாகும். பவவர்மன், "மகாராசாதி ராசன்" என்ற பட்டத்தைச்சூடினான். பவபுரம் என்ற புதிய தலைநகர் தோற்றுவிக்கப்பட்டது. சைவ, வைணவ சமயங்களை அவ்வரசன் ஆதரித்தனன். சிவலிங்க வழிபாட்டையுடைய அவனால் நான்கு சிவலிங்கங்கள் நிறுவப்பெற்றன. இராமாயணம், மகாபாரதம், புராணங்கள் முதலிய இந்திய இலக்கியங்களை மக்கள் விரும்பிக் கற்றனர். சம்பு — விட்ணு (அரிஹரன்) என்ற கொள்கை வளர்ச்சியடைந்தது. இவை யாவும், கம்போடியாவில் இந்து சமயம் விரைவில் வளர்ச்சியடைந்ததைக் குறிக்கும். பின்போந்த மகேந்திரவர்மன் (604—627) (பட்டம் பெறுவதற்கு முன்பு சித்திரசேனன் எனப்பெயர்கொண்டவன்) காலத்தில் அண்மையிலிருந்த இந்து இராச்சியமான சம்பாவுடன், கம்போடியா நட்பு உறவு கொண்டிருந்தது. 604-ம் ஆண்டுக்குரிய அவன் கல்வெட்டு காலங் குறிப்பிடப்பெற்ற முதல் வடமொழிக் குறிப்பாகும். 627-ல் சிவ — விட்ணு உருவச்சிலை ஒன்று செய்யப்பட்டது. ஈசானவர்மன் என்ற மன்னன், அந்தணர்களுக்கு இலைக் குடில்களை நிறுவினன். மேலும் வேத முறையான வேள்விகளும், மடாலய வாழ்க்கையும், ஆதரிக்கப்பெற்றன. ஈசானதத்தர், வித்தியாவினயர் போன்ற இருடிகள் அக்காலத்தில் வாழ்ந்தனர். 639-ல் இரண்டாம் பவவர்மன், நான்கு கைகளைக்கொண்ட ஒரு தேவியின் உருவச்சிலையை நிறுவினன்.

## முதலாம் செயவர்மனும், இரண்டாம் செயவர்மனும்.

பின்போந்த முதலாம் செயவர்மன் (சுமார் 665) ஒரு சைவனாயிருந்த போதிலும், புத்த சமயத்தை ஆதரித்தான். பிரம்மதத்தனின் குலத்தைச்சேர்ந்த சிம்மதத்தன், அவனுடைய அவைக்கள மருத்துவனாயிருந்தான். இம் மருத்துவர்கள், அமைச்சர்களாகவுமிருந்தனர். அவனாட்சியில் மற்றொரு அரிஹரன் உருவம் அமைக்கப்பெற்றது. சிவ—விட்ணு வழிபாட்

டின் வளர்ச்சியை அது உணர்த்தும். எட்டாம் நூற்றுண்டில், கம்போடியாவில் குழப்பமேற்பட்டு, நாடுசிதறி, அந்நூற்றுண் டின் முடிவில் சைலேந்திரப் பேரரசின் ஒரு பகுதியாகியது. ஒன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில், ஜாவாவிலிருந்து வந்ததாகக் கருதப்படும். இரண்டாம் செயவர்மன், முதலில் பௌத்தனுக இருந்து பின்பு சைவனுகமாறினன். கட்டடங்கள் கட்டப்படும் காலம் அந்நாட்டில் அவனுல் தொடங்கப்பெற்ற தென்று கூறலாம். அங்கோர் தோம், என்ற தலைநகரை அவன் தோற்றுவித்தானென்று சிலர் கருதுவர். அவன் ஆட்சிக்காலம் 802—820§ என்றும், 802—869‡ என்றும் இருவகையாகக் கூறப்படுகிறது. அவன் சைலேந்திர ஆதிக் கத்திலிருந்து கம்போடியாவை, மீட்டிருக்கவேண்டும். பின் வந்த முதலாம் இந்திரவர்மன் (877—889) பல சிவ உருவங்களை நிறுவியும், அந்தணத்துறவிகளுக்கு இலைக்குடில் களைக் கட்டித்தந்தும், புகழ்பெற்றுன்.

## யசோவர்மன் (889—910)

சைவ, வைணவ சமயங்களும், கல்வியும் இவனுல் ஆதரிக்கப்பெற்றன. இவன் சிவ வழிபாட்டினனுகவும் இவனு டைய அமைச்சன் வைணவனுகவுமிருந்தனர். அவ்வமயம் நிலவிய சட்டங்களின்படி, கோயில்களில், உடலுறுப்புக்களில் குறைபாடு உள்ளோர், குட்டையாக இருப்போர், பெரு நோயாளர், குற்றவாளிகள், அயலார் முதலியோர் புகமுடியாது. அங்கோர்-தோம் அல்லது யசோதரபுரம், கட்டடங்களால் அணிசெய்யப்பட்டது. யசோவர்மன், சுஸ்ருதனின் சம்ஹி தையை நன்கு கற்றுணர்ந்ததாகக் கூறப்படுகிறது. இராசேந் திரவர்மனும் (944-968) அவன் அமைச்சனும் பௌத்தர்கள். மகாயான புத்தசமயம் அவர்களால் போற்றப்பட்டது. ஐந்தாம் செயவர்மன், (968—1001) அவனுடைய மருமகனுன பட்ட திவாகரன் (அந்தணன்) என்பானின் உதவியுடன், சைவ, வைணவ சமயங்களை முன்னேறச்செய்தான். முதலாம் சூரிய

§ P. N. Bose. The Hindu Colony of Cambodia (1927) p. 406.
‡ Majumdar. op. Cit. Part I pp 157 & 159.

வர்மன் (1002—1049) அவையில், யோகீஸ்வரபண்டிதன், சிவாசாரியன், சிவவிந்து, சங்கரபண்டிதன் முதலிய பல அறிஞர்கள் காணப்பெற்றனர்.

## இரண்டாம் சூர்யவர்மன் (1112 – 1152)

இவ்வரசனின் ஆசிரியனான திவாகரபண்டிதன், அங்கோர் வாட் என்ற விட்ணுகோயில் தோற்றுவிக்கப்பட்டதற்குக் காரண மாவன். அஃது அங்கோர்தோம் நகருக்கு அண்மையிலுள்ளது. திராவிட சிற்பநடையில் அக்கோயில் அமையப்பெற்றது. இராமாயணம், மகாபாரதம்; அரிவமிசம் முதலியவற்றை விளக்கும் சிற்பங்கள் அங்கே காணப்படுகின்றன. இராமன், மாரீசனைப் பின் தொடர்ந்து செல்லுதல்; வாலி-சுக்ரீவன் போர்; சீதை, தீயில் மூழ்குதல்; கோவர்த்தனமலையை கிருட்டினன் தூக்குதல்; காமன் சிவனால் எரிக்கப்படுதல்; கடலைக்கடைதல் முதலிய காட்சிகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. அங்கோர் வாட்டின் கலைச்சிறப்பு, அறிஞர்களால் மிகவும் புகழப் பட்டுள்ளது.

## ஏழாம் செயவர்மன்.

இரண்டாம் தாராகிந்திரவர்மன் ஆட்சிக்காலத்தில், சம்பாவுடன் போர் நிகழ்ந்தது. ஏழாம் செயவர்மன் (1182–1201) என்பான் சிறப்பான அரசர்களுள் இறுதியானவன். அவன் புத்த சமயத்தவன். சம்பாவையும், பர்மாவையும் அவன் தோற்கடித்தனன். அவன் காலத்தில் கம்போடியாவில் 102 மருத்துவச்சாலைகளிருந்தன. மன்னன், தன்னலத்தைப்பாராது, மக்கள் நலத்தையே போற்றவேண்டுமென்ற அவ்வரசனின் குறிக்கோள், ஒரு கல்வெட்டிலிருந்து தெளிவாக அறியப்படுகிறது. சம்பா, சையாம் நாடுகளுடன், ஏற்பட்ட போர்களின் விளைவாக, பதின்மூன்றும் நூற்றாண்டில் கம்போடியா வீழ்ச்சியுற்றது. பதினான்காம் நூற்றாண்டில் சையாம், வலிமைபெற்று பிறநாடுகளைத்தாக்கியது. பதினைந்தாம் நூற்றாண்டில் அங்கோர் தோம், நகரை கம்போடியர் இழந்தனர்.

### சமயமும், இலக்கியமும்.

கம்போடியாவில், சைவ, வைணவ, புத்த சமயங்கள் நிலவியபோதிலும் சைவம் மற்றவற்றைவிடச் சிறப்பான நிலையிலிருந்தது. உள்நாட்டு மக்கள் இந்தியராக்கப்படும் முயற்சி போற்றற்குரிய வெற்றியை அடைந்தது. இலிங்க வழிபாடு சிறப்புற்றிருந்தது. அரசர்களின் பெயர்கள், கடவுள் வடிவங்களுக்கும் அளிக்கப்பெற்றன. அரிஹரன், கணபதி, பார்வதி முதலிய கடவுளரும் வழிபடப்பெற்றனர். புத்தகங்களையும், அடிமைகளையும் கடவுளருக்கு அளிக்கும் வழக்கம் காணப்பட்டது. சிவனுக்கு உரிய பல தென்னிந்திய நூல்கள், கம்போடியாவிலிருந்தன. மேலும் வேதங்கள், இராமாயணம், மகாபாரதம், பாணினியின் இலக்கண நூல், மகாபாஷ்யம், சுஸ்ருதசம்ஹிதை, வேதாங்கம், யோகம், நியாயம், அர்த்த சாத்திரம், தரும சாத்திரம் முதலிய பலவற்றைப் பற்றியும், கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. சுருங்கச்சொல்லின், இந்துக்களும், கம்போடியமக்களும் ஒன்றுகி, அதன் விளைவாக ஒரு புதிய கலைப்பண்பு தோன்றியது. இந்திய அரசியல், சமூகம், கலைப்பண்பு முதலியவற்றின் தொடர்பான கருத்துக்கள் கம்போடியரால் பின்பற்றப்பட்டன. ஆயினும் உள்நாட்டு நிலைக்கேற்ற மாறுதல்கள் அவற்றில் தோன்றுவது தடுக்கப் படக் கூடியதன்று.

## பகுதி 7.

### சம்பா (Champa)

#### அரசியல் வரலாறு.

கம்போடியாவிற்குக் கிழக்கில், அதற்கும் தென் சீனக் கடலோரத்திற்குமிடையில், ஹியூபட்டினத்திற்குத் தெற்கில் உள்ள நிலப்பகுதி சம்பா எனப்பெற்றது. (தெற்கு அன்னம் அல்லது பிரெஞ்சு இந்துசீன). கி. பி. இரண்டாம் நூற்றுண்டுக்கு முன்பே, இந்தியர் அப்பகுதியில் குடியேறியிருக்க வேண்டும். சம்பாவின் முதல் அரசகுலம், தென்னிந்தியரால் ஏற்படுத்தப்பெற்றதாகும். ஆனல் அதற்கு வட இந்தியப்

பெயரே அளிக்கப்பட்டது. சமர் (Chams) எனப்பட்ட, சம்பாவின் மக்கள், மலாய-பாலினீஷிய இனப்பிரிவைச் சேர்ந்தோராவர். வரலாற்றிலறியப்பட்ட முதல் மன்னனை ஸ்ரீமாரன் கி. பி. 190-ல் அவன் குலத்தைத்தோற்றுவித்தான் அமராவதி மண்டலம் அல்லது வடக்கு சம்பாவில் உள்ள இந்திரபுரம், அவ்வரசின் தலைநகராகியது. ஸ்ரீமாரனின் பின்வந்தோனின் வோசன் (Vochan) கல்வெட்டு, வடமொழியில் உள்ளது. அதன் எழுத்துக்கள் முதலாம் உருத்திரதாமனின் கிர்நார் கல்வெட்டெழுத்துக்களுக்கு ஒப்பாக உள்ளன. அது, மூன்றும் நூற்றுண்டில் வெளியிடப்பட்டதாகக் கருதப்படுகிறது. ஆகவே இன்சுலிந்தியாவிலும், இந்து சீனுவிலும், அதுவே முதல் வடமொழிக் கல்வெட்டாகும். சம்பாவில் பனிரெண்டு இந்திய குலங்கள் ஆட்சிபுரிந்தன. முதற்குலம், இந்து நாகரிகத்தை அந்நாட்டில் தோற்றுவித்தது. சில அறிஞர்கள்† வோசன் கல்வெட்டு, பௌத்தருடைய குறிப்பு என்பர். ஆனுல் பெரும்பான்மையில், அஃது இந்துக்களின் குறிப்பு என்றே கருதப்படுகிறது.

### பத்திரவர்மன்.

சுமார் 340-ல் இரண்டாவது குலத்தின் ஆட்சி தொடங்கியது. பத்திரவர்மன் (380—413) என்பான், தர்மமகாராசன் என்ற பட்டம்பெற்று, சைவ சமயத்தைப் போற்றிவந்தான். மிசோன் (Mison) என்றவிடத்தில் ஒரு சிவன் கோயில் எடுக்கப்பட்டது. அச்சிவனுக்கு பத்ரேச்வரன் என்று பெயர் வைக்கப்பெற்றது. பத்திரவர்மனின் மகன் கங்கராசன் கங்கை ஆற்றைப் பார்ப்பதற்காக, வட இந்தியாவுக்கு வந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவன் அரசிருக்கை துறந்த பின், மூன்றும் குலம் ஆட்சிபுரிந்தது. அக்காலப்பகுதியில் (420—528) சீனுவிலிருந்து, சம்பாவுக்கு இடையூறுகள் தோன்றின. நான்காவது குலத்தின் முதல்வனுன முதலாம் உருத்திரவர்மன் ஓர் "பிரம்மக்ஷத்திரியன்" என்று சிறப்பிக்கப்படுகிறுன். நான்காம் குலம் 529-முதல் 757-வரை ஆட்சிபுரிந்தது. சம்புவர்மன் என்ற மன்னன், சீனரின் படை

---

† Eliot, op. Cit. I p. XXVIII; III pp. 108 & 138, 39.

யெழுச்சியைக் கண்டு அஞ்சி ஓடியதாகவும் அப்படையெடுப்பாளர், 1350-புத்த நூல்களை, சம்பாவிலிருந்து எடுத்துச் சென்றதாகவும் அறியப்படுகின்றன. ஐந்தாவது குலம் 758-முதல் 859-வரை அரசுபுரிந்தது. பாண்டுரங்கமண்டலம் அல்லது தெற்கு சம்பாவில், வீரபுரம் என்ற இடம், நாட்டின் தலைநகராயிருந்தது. 774-க்கும் 787-க்கும் இடைப்பட்ட காலத்தில் சைலேந்திரர் சம்பாவின் கடலோரத்தைத் தாக்கினர். கோயில்கள் சூறையாடப்பட்டன. ஆனால் விரைவில் சம்பா அரசர்கள் தமதாட்சியை நிலைநிறுத்தி, கோயில்களைப் புதுப்பித்தனர். சிவன், சங்கரநாராயணன், கணபதி, பகவதி முதலிய கடவுளரின் உருவச்சிலைகள் நிறுவப்பெற்றன.

## இரண்டாம் இந்திரவர்மன்.

ஆறாவது குலத்தைச் (860 — 900) சேர்ந்த இரண்டாம் இந்திரவர்மன் புத்தரை வழிபட்டனன். இந்திரபுரம் தலைநகராகியது. கி. பி. 875-ல் வெளியிடப்பட்ட அவன் கல்வெட்டில், பௌத்தமடம் நிறுவப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. பின்போந்த முதலாம் செயசிம்மவர்மனும் அவன் தானைத்தலைவன் சிவாசாரியனும், சைவர்கள். ஏழாம் குலத்தின் (900—986) ஹரவர்மன், இந்துமெய்விளக்க நூலின் ஆறு முறைகளையும், இந்து, பௌத்த இலக்கணங்களையும் கற்றவனும். அவனால் நிறுவப்பெற்ற பகவதி உருவச்சிலை, 945-ல் இராசேந்திரவர்மனால் கம்போடியாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டது.

## அன்னமியர் படையெழுச்சிகள்.

கி. பி. 982-ல் சம்பாவின் தலைநகர் இந்திரபுரத்தை, அன்னமியர் சூறையாடி அழித்தனர். அரசுரிமையைக் கைப்பற்றிய ஐந்தாம் இந்திரவர்மன் (989—999) என்பான் எட்டாவது குலத்தைத் (989—1044) தோற்றுவித்தனன். மத்திய சம்பாவிலுள்ள விசயம் அவன் தலைநகராக்கப்பெற்றது. அவன்பின் வந்தோன் மீண்டும் 999-ல் இந்திரபுரத்தைத் தலைநகராக்கினன். 1044-ல் மற்றொரு அன்னமியப்படை

யெழுச்சி ஏற்பட்டு எட்டாம் குலம் அழிந்தது. ஒன்பதாவது குலத்தின் (1044—1074) முதல்வன் தெற்கு சம்பாவில் ஏற்பட்ட கலகத்தை 1050-ல் அடக்கினன். மூன்றும் உத்திர வர்மன் ஆட்சிக்காலத்தில் (1061—1074) மூன்றும் அன்னு மியப் படையெடுப்பு நிகழ்ந்தது (1069). சம்பா சீர்குலைந்தது. பத்தாவது குலத்தின், (1074—1139) மூன்றும் ஹரிவர்மன், அன்னுமியரையும், கம்போடியரையும் தோற்கடித்து, சம்பா அரசையும், தலைநகர் இந்திரபுரத்தையும், மீண்டும் உயர்நிலை எய்தச்செய்தான். 1080-ல் அவன் இறந்தவுடன் அவனுடைய நான்கு மனைவியரும் உயிர் துறந்தனர். நாடு நிலைகுலைந்தது. பதினேருவது குலத்தைச்சேர்ந்த மூன்றும் செயஇந்திரவர்மன் (1139—1144) புத்தரையும், சிவனையும், விட்ணுவையும் வழிபட்டான். கம்போடியாவுடன் போரிடும் பொழுது அவன் மாண்டனன். பனிரெண்டாவது குலம், (1149—1318) ஆட்சிபுரிந்தகாலத்தில் சம்பா, முடிவாகத் தோற்கடிக்கப்பட்டு கம்போடியாவுடன் இணைக்கப்பட்டது. (1203) 1220-ல் உரிமை பெற்றபோதிலும், 1278-முதல் 1285-வரை, மங் கோலியரால் அந்நாடு தாக்கப்பட்டது. முடிவாக 1318-ல் சம்பா, அன்னுமியருக்கு அடிபணிந்தது.

## சமயமும், கலையும்.

சம்பா மூன்று மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அமராவதி—விசயம்—பாண்டுரங்கம். அந்நாட்டு வர்ம குலத் தினர், 1000-ஆண்டுகளுக்கு மேலாக ஆட்சிபுரிந்தனர். சமர் இந்தியராக்கப்பெற்று, சம்பா, சமயம், கலைப்பண்பு ஆகியவற்றில் மட்டுமின்றி பழக்க வழக்கங்களிலும், ஒரு இந்து நாடாகியது. பெரும்பான்மையில், கம்போடியாவிலேற் பட்ட மாறுதலுக்கு இஃது ஒப்பாகும். சைவ சமயம், தலையான சிறப்பைப்பெற்றிருந்தது. வைணவ, சைவ சமயச்சச்சரவுகள் ஏற்படவில்லை. புத்த சமயம் தாழ்ந்த நிலையிலிருந்தது. நான்கு, இந்து சாதிப்பிரிவுகள் நிலவின. கலப்பு மணம் ஏற்றுக்கொள்ளப்பட்டது; குறிப்பாக பிராமண, க்ஷத்திரிய மணவினை உறவு காணப்பட்டது. ஆனல் சமரிடம் நிலவிய

குலப்பிரிவு முறையையும், தாய்வழி உரிமைச்சட்ட முறையை யும் இந்தியரால் மாற்ற முடியவில்லை. வடமொழி இலக்கி யத்தின் பல்வேறு பிரிவுகளும் போற்றி வளர்க்கப்பெற்றன. சம்பா கல்வெட்டுக்களில் 64-அருங் கலைகளைப்பற்றிய குறிப் புகள் காணப்பெறுகின்றன. கம்போடியா, அல்லது ஜாவா கலைக்கு, சம்பா நாட்டுக்கலை கீழ்த்தரமானதே. இலிங்க உருவங்களுடன், நடராசர் உருவங்களும் சம்பாவில் வழிபடப் பெற்றன. பகவதி வழிபாட்டையும் மக்கள் விரும்பினர் கணபதி மிகுதியாக வழிபடப்படவில்லை. ஒரு சில சிறந்த விட்ணு, புத்தர் உருவங்கள் செய்யப்பெற்றன.

## பகுதி 8.

### அறிவாற்றல் துறையில் இந்தியாவின் ஆதிக்கநிலை.

### கிழக்கு ஆசியாவில் இந்தியாவின் பிரபாவம்.

பண்டைய எகிப்தின் கலைப்பண்புகள், இந்தியக்கருத்துக் களால் மிகுதியாக மாற்றப்படவில்லை. ஆயினும், அரேபியா விலும், பாரசீகத்திலும் இருந்த "சூவியப்பிரிவினர்" (Sufis) வேதாந்தக் கருத்துக்களை விரும்பிக்கற்றனர். ஆனால் ஐரோப்பிய நாகரிகத்தின் அடிப்படை இயல்பு, இந்தியாவினால் மாறுத லடையவில்லை. ஸொராஸ்திரிய சமயத்தினரும், இஸ்லாமி யரும், பாரசீகத்திலும், அரேபியாவிலும், இந்தியக்கருத்துகள் புகுவதை ஏற்றுக்கொள்ளவில்லை. இவ்வாறு மேற்கு ஆசியா விலும், ஐரோப்பாவிலும் இந்தியக்கருத்துக்கள் சிதறுதலாகப் பரவியதைக் காண்கிறோம். "ஆனால் கிழக்கு ஆசியாவில் இந்தியாவின் 'பிரபாவம்', பரப்பிலும், வலிமையிலும், காலத் தொடர்ச்சியிலும், குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்ததாகும்.† தென் கிழக்கு ஆசியாவின் தீவுப்பகுதியிலும், கண்டத்தைத் சார்ந்த பகுதியிலும் இந்தியக்கலைச்சிறப்பு போற்றற்குரியதாகும். அவ்வாறே ஈழம், பர்மா, திபெத் ஆகிய நாடுகளையும் குறிப் பிடவேண்டும். திபெத்தில், மங்கோலியர், இந்திய நாகரிகத் துடன் தொடர்பு கொண்டனர். சீனு, ஜப்பான், கொரியா ஆகிய நாடுகளில் இந்தியக் கருத்துக்களின் பிரபாவம்

† Eliot op. Cit I. p. XII

"சீனப்பண்பாட்டின்மேல் அமைக்கப்பெற்ற ஒரு அடுக்கைப் போல் காணப்படுகிறது. ஆயினும் அதனை, வெறுமையான வெளிப்பகட்டுத் தோற்றம் என்று கருதுவதற்கில்லை. இப் பகுதிகளில், வாழ்க்கையின் அறிவுத்துறையில், சீனரின் நெறி முறை, இலக்கியம், கலைகள் முதலியன, மிகவும் சிறப்பான நிலையைப் பெற்றுள்ளன.........ஆனால் இவை யாவற்றிலும், குறிப்பாக, ஜப்பானில், புத்தசமயத்தின் 'பிரபாவம்' மிகுதியாக வும் ஆழ்ந்து ஊடுருவிச்சென்றும் உள்ளது......மூட நம்பிக்கை, உணர்ச்சி வயப்படுதல், புலங்கடந்த நுண்பொருள் ஆராய்ச்சி முதலிய பலவகைப்பட்ட பண்புகள் வாய்க்கப்பெற்றோராலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு கொள்கையை, புத்த சமயம் அவர்களுக்கு அளித்தது. கலை வளர்ச்சிக்கான, குறிப்பாக ஓவியக்கலை முன்னேற்றத்திற்கான, பொருள்கள், மாதிரிகள் ஆகியவற்றை அம்மதம் அளித்து, மக்களுடைய கருத்துல கிலும், மொழியிலும் புகுந்தது."‡ சுமத்திரா முதல் சம்பா வரை, அரசியல் துறையிலும், அறிவுத் துறையிலும் இந்தியப் பண்பாட்டின் சிறப்பைப்பற்றி முன்னர் கூறப்பெற்றது. இனி பர்மா, திபெத், நடுஆசியா, சீனா, கொரியா, ஜப்பான் முதலிய நாடுகளில், இந்தியத்தொடர்பால் விளைந்த சிறப்பை, சுருக்கி வரைவாம். ஆப்கானித்தானத்திலிருந்து ஜப்பான் வரையிலும், மங்கோலியாவிலிருந்து, ஈழம், ஜாவா, வரையிலும் உள்ள கிழக்கு ஆசியாவில், இந்தியப் பண்பாட்டின் சிறப்பு, மறுக்க முடியாத உயர்வு வாய்ந்ததாகும்.

## பகுதி 9.

### ஈழம்.

**கி. மு. ஐந்தாம் நூற்றுண்டு முதல்**
**கி. பி. ஐந்தாம் நூற்றுண்டு வரை.**

இந்நாடு, வடமொழியில் இலங்கை, சிம்ஹலத்வீபம் (சிங்களத்தீவு) என்றும் பாலிமொழியில் தாம்பபண்ணை, சிஹளத்தீபம் என்றும், தமிழில் ஈழம் எனவும், கிரேக்க மொழியில் தப்ரோபேன் என்றும், அரேபியில் சேரன்தீபம்

‡ Eliot. Ibid p. XIII.

என்வும் பெயர்பெறும். வீரகாவியத்தில் குறிப்பிடப்பெறும் இராமன் இலங்கை சென்ற நிகழ்ச்சியையும், புத்தர் அந்நாடு சென்றதாகக் கூறப்படுவதையும், வரலாற்றுடன் இணைத்துக் கூறுவதற்கில்லை. ஈழநாட்டுச் செய்திக் கோவையின்படி (Ceylonese Chronicles) அந்நாட்டின் முதல் மன்னன் விசயன் என்பானாகும்.

ஆரியநாகரிகம் வடஇந்தியாவிலிருந்து பரவியதன் விளைவாக, யக்கர் என்ற உள்நாட்டினர் அதனைப் பின்பற்றினர். இதைப்பற்றிய மரபுரையில் விசயனின் கதையையும் இணைக்கலாகும். சிங்களமொழி, பாலிமொழியுடன் ஒற்றுமைப்பட்டதாகும். ஈழத்தின் ஆதி எழுத்துக்கள், ப்ராமி எழுத்திலிருந்து தோன்றின. மரபுரையின்படி விசயன் புத்தர் காலத்தவனென்று அறியப்பட்டபோதிலும், அவன் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்ததாகவே நாம் கருதலாம். கி. மு நான்காம் நூற்றாண்டில், அனுராதபுரம் தோற்றுவிக்கப்பட்டிருக்கலாம். வரலாற்றின்படி முதல் அரசன், தேவனாம்பிரிய திஸ்ஸா என்பானாகும் (கி. மு. 247—207). அசோகன் அனுப்பிய சமயப்பரப்புக்குழுவினால், அவ்வரசன், புத்தசமயத்தவனாயினன். தலைநகர் அனுராதபுரத்தில் "மகாவிகாரம்" என்ற மடம் அவனால் எடுக்கப்பட்டது. புத்தகயாவிலிருந்து எடுத்துச் செல்லப்பட்ட போதிமரக் கிளையையும் அவ்வரசன் நட்டு வளர்த்தனன். ஒருதூபியும் அவனால் நிறுவப்பட்டது. அவன் நட்டமரம் "உலகில் இன்றுள்ள மரங்கள் யாவற்றிலும், நம்பத்தக்க முறையில் மிகப்பழமையானது"§ திஸ்ஸா பௌத்தனாக மாறியபின், அம்மதம் அந்நாட்டில் சிறப்புற்றது. கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் ஈழரன் என்பான் அரசுரிமையைக்கைப்பற்றி, ஆட்சிமுறையைச் செம்மையாக நடத்தினான். துத்தகமணி (கி. மு. 101—77) என்பான் அவ்வாட்சியை முடிவுறச்செய்து நாட்டில் புத்தசமயத்தை மீண்டும் ஆதரித்து வளர்த்தான். இரண்டு பெரும் தூபிகள் நிறுவப்பெற்றன. வட்டகமணி என்பானாட்சியில், அனுராதபுரம் தமிழரால் கைப்பற்றப்பட்டது. ஆனால், மன்னன் விரைவில், அதனை மீட்டு, அங்கு அபயகிரி தூபியை நிலை நாட்டினன்.

---

§ H. W. Codrington. A Short History of Ceylon (1929) p. 14.

## முதலாம் கயவாகு.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த இவன், (சேரன், செங்குட்டுவனின் காலத்தவன்) சேரருடன், நட்பு உறவுபூண்டிருந்தான். கரிகால் சோழன் காலத்தில், சோழர் ஈழநாட்டுக்கு இடையூறு செய்ததால், கயவாகு அவர்களிட மிருந்து இழப்பீடுபெற்றான். மகாசேனன் என்ற மன்னன் (நான்காம் நூற்றாண்டு) பல தூபிகளையும், மடங்களையும் கட்டிய துடன், நீர்ப்பாசனத்திற்கான ஏற்பாடுகளைச்செய்தான். கி. பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து, ஆறும் நூற்றாண்டுவரை அந் நாட்டில் சிறந்த குளங்கள் வெட்டப்பட்டதாக அறியக் கிடக்கிறது.

## மேகவர்ணன். (352—379)

இவன் சமுத்திரகுப்தனுடன் நட்பு உறவு கொண்டனன். புத்தரின் நினைவுச் சின்னமான பல், கலிங்க நாட்டிலிருந்து இவனால் பெறப்பட்டது. பின்போந்த புத்தசாரன், பத்து ஊர்களுக்கு ஒரு மருத்துவனை அமர்த்தியதுடன், வடமொழியில் சிறந்ததோர் மருத்துவ நூலையும் இயற்றினன் என்று கூறப் படுகிறது. ஐந்தாம் நூற்றாண்டில் பாகியானும், புத்தகோஷ னும் ஈழம்போந்தனர். பின்னவன்அத்தீவில் ஈனயானமுறையை உறுதியாக நிலை நிறுத்தினன். அந்நூற்றாண்டின் முடிவில் சிகிரியா ("சிங்கக்குன்று") ஓவியங்கள் தோன்றின. பதின் மூன்றரை நூற்றாண்டுகளுக்குப் பின்னும் அவ்வோவியங்கள் சிறப்பான முறையில் விளங்குகின்றன. அனுராதபுரத்தில் அயல்நாட்டினர் தங்கினர். நான்காம் நூற்றாண்டின் உரோம நாணயங்கள், கடலோரத்தில் மட்டுமின்றி சிகிரியாவிலும் காணப்படுகின்றன. கிறித்தவ ஆண்டின் முதல் ஐந்து நூற்றாண்டுகளில், ஈழம் செழிப்புற்றிருந்தது என்பதில் ஐய மில்லை.

## ஒன்பது பத்தாம் நூற்றாண்டுகள்.

ஆறு, ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில், ஈழம், உள் நாட்டுப் போர்களால் துயருற்றது. சிம்மவிட்ணு பல்லவன், ஈழத்தை வென்றதாகக் கூறிக்கொள்கிறான். முதலாம் நரசிம்ம

வர்மபல்லவன் பட்டமிழந்த மானவர்மனை, சிங்களநாட்டு அரியணையில் அமர்த்தினன். சுமார் 820-ல் பட்டம் பெற்ற முதலாம் சேனன் காலத்தில் அனுராதபுரம் பாண்டியரால் தாக்கப்பட்டது. ஆனால் இரண்டாம் சேனன், பாண்டிய நாட்டில் படையெடுத்து மதுரையைச் சூறையாடினன். அக் காலந்தொட்டு, பொலோன்ன ருவா (அனுராதபுரத்தின் தென் கிழக்கில்) என்ற இடம் தலைநகராகியது. முதலாம் பராந்தக சோழன், மதுரையை வென்ற காலத்தில் பாண்டிய மன்னன், இரண்டாம் இராசசிம்மன், சுமார் 920-ல் ஈழத்தைப்புகலிட மாகக் கொண்டான். அச்சோழன், ஈழத்தில் படையெடுத்த போதிலும், தான் திட்டமிட்டபடி பாண்டியரின் அரசுமுடிமணி களைக் கைப்பற்ற முடியாது திரும்பினன். சுமார் 959-ல் சோழர் படைத்தலைவன், ஈழநாட்டினரால் தோற்கடிக்கப்பட்டு கொலையுண்டான். "நீண்டகாலத்திற்கு இதுவே, சிங்களரின் இறுதியான வெற்றியாகும்."† ஆகவே 9, 10-ம் நூற்றாண்டு களிலும் ஈழம் சிறப்பான நிலையிலிருந்ததாகவே கூறவேண்டும்.

## பதினொன்று, பனிரெண்டாம் நூற்றாண்டுகள்.

முதலாம் இராசராசசோழன் வடக்கு ஈழத்தைத் தன்னு டன் இணைத்துக் கொண்டனன். முதலாம் இராசேந்திரன் 1018-ல் ஈழமன்னன் ஐந்தாம் மகிந்தனிடமிருந்த, பாண்டிய நாட்டு விருதுகளைக் கைப்பற்றினான். அக்காலப்பகுதியில் அந் நாட்டில் பல சிவ, விட்ணு கோயில்கள் எடுக்கப்பெற்றன. விசயவாகு (1056—1111) என்ற ஈழவேந்தன், சோழ நாட்டில், முதலாம் குலோத்துங்கனுக்கு முன்னர் நிலவிய குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, தனது தலைநகரை மீண்டும் கைப்பற்றிக்கொண்டனன் (சுமார் 1070). 1073-ல் அவன், உரிமையுள்ள மன்னனாக முடி சூட்டிக்கொண்டான். 1088-ல் முதலாம் குலோத்துங்கன், அவனுடன் அமைதியான உடன்பாடு செய்துகொண்டனன். விசயவாகு பெகுவிலிருந்து சென்ற துறவிகளின் உதவியுடன், நாட்டில் புத்த சமயம் மீண்டும் தழைக்குமாறு செய்தான். தலைநகரில், புத்தரின் நினைவுச் சின்னம், கட்டடத்தில் அமைக்கப்பட்டு போற்றப் பெற்றது.

† Codrington, op. Cit. pp 39—40.

## முதலாம் பராக்கிரமபாகு (1153—1186)

திறமை வாய்ந்த இவ்வரசன், விசயவாகு இறந்தபின் ஏற்பட்ட உள்நாட்டுக்கலகங்களை அடக்கி, ஈழம் முழுமைக்கும் தலைவனானன். ஒரு ஈழ நாட்டு இளவரசியை, பெகுவில், வலுக்கட்டாயமாகத் தங்கச்செய்த, அதன் மன்னனைத்தண்டிப்பதற்காக, 1165-ல் பராக்கிரமபாகு ஒரு கப்பற் படையை அனுப்பினன். 1169-ல் ஏற்பட்ட பாண்டியரின் உள்நாட்டுச் சண்டையில், அவன் தலையிட்டான். அவனுடைய தானைத் தலைவன் இலங்காபுரன், தொடக்கத்தில் வெற்றி பெற்ற போதிலும், முடிவில் வருந்த நேர்ந்தது. சோழருக்கு மேலும் மேலும், ஈழ மன்னன் இடையூறுகளை விளைவித்து வந்தான். சமய வளர்ச்சிக்கும் அவன் மிகுதியாகப் பணி செய்தனன். சமயச்சச்சரவுகள் புரிந்து வந்தோரிடை அமைதி ஏற்படுத்தினன். புத்தசமயம், தூய்மையாக்கப்பெற்றது. பல மடங்களும் ஸ்தூபிகளும் நிறுவப்பெற்றன. தலைநகர் நன்கு காக்கப் பெற்றது. தோட்டங்களாலும், மாளிகைகளாலும், அதன் பொலிவு மிகுதியுறுமாறு செய்தான். அவனுடைய முயற்சிகளால், நீர்ப்பாசனம் சிறப்பான நிலையிலிருந்தது. அம்மன்னனின் போர்களாலும், கட்டடங்களாலும், கருவூலத்தில் செல்வம் குறைந்து வரிகள் மிகுதியாக்கப்பட்ட போதிலும் அவனுட்சியில் "சிங்களரின் சிறப்பு அதன் உச்ச நிலையை எய்தியது"† $11\frac{1}{2}$-அடி உயரமுள்ள ஒருஉருவச்சிலை, சிறிது ஐயப்பாட்டுடன் பாரக்கிரமபாகுவினுடையதாக இருக்கலாமென்று கருதப்படுகிறது. தாடியுடன் கூடிய அவ்வுருவம், ஒரு பனை ஓலையைப் படித்துக்கொண்டு இருக்கும் நிலையில் உள்ளது. அஃது "ஈழ நாட்டின் மிகச்சிறந்த சிற்பங்களுள் ஒன்று"§ எனப் புகழப்படுகிறது. நிஸ்ஸங்கமல்லன் (1187—1196) சிறிதுகாலம், இராமேச்வரத்தைக் கைப்பற்றியிருந்தானென்று தோன்றுகிறது. பாண்டியநாட்டிலும் அவன் மூன்று முறைகள் படையெடுத்ததாகக் கூறிக்கொள்கிறன். மூன்றும் குலோத்துங்கசோழனும் ஈழரை வென்றதாகக் கூறிக்கொள்கிறன். பராக்கிரமபாகுவின் சில அருஞ்செயல்களை, நிஸ்ஸங்கமல்லன், தனக்குரிய

† Codrington. op. Cit., p. 64.
§ Coomaraswamy. op. Cit. pp. 164—65.

தாகக் கூறிக்கொண்டபோதிலும். அவன் காலத்தில் நாட்டில் மக்களின் நன்மைக்கான சில செயல்கள் தோன்றின. அவனிறந்தபின், ஈழத்தில் உள்நாட்டுக் கலகங்களும், அரசியல் குழப்பமும் ஏற்படலாயின. "ஈழநாட்டு வரலாற்றில், தெளிவாக உறுதி செய்யப்பட்ட முதல் ஆண்டு 1200-ஆகும்.",† என்பது நோக்கற்பாலது.

**கலை.**

தென்னிந்தியாவின் அரசியல் ஆதிக்கத்திற்கு, ஈழம் உட்பட்டிருந்தது, குறுகியகால அளவுக்கே எனினும், பதினோரும் நூற்றாண்டைத்தவிர்த்து, மற்றகாலம் முழுவதிலும், பண்பாட்டுத்துறையில், அந்நாடு இந்தியாவுடன் நெருக்கமாக இணைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு காலப்பகுதியிலும், அந்நாடு, இந்தியக் கருத்துக்களால் கட்டுப்படுத்தப் பெற்றது. கட்டடங்கள், ஓவியங்கள் முதலியவற்றைப்பற்றி முன்னர் குறிப்பிட்டோம். சேரன் செங்குட்டுவன், முதலாம் கயவாகு முதலியோரின் காலத்தை நமக்கு நினைவூட்டும் பத்தினிதேவியின் உலோகச் சிலை "கலைச்சிறப்பில், இந்தியாவின் சுல்தான்கஞ்ச் புத்த உருவத்திற்கு ஒப்பாகும். அது (ஈழத்தின்) பனிரெண்டாம் நூற்றாண்டின் சிற்பங்களைவிட மிகவும் மேன்மை வாய்ந்தது.‡,, குப்தநடைக்கு ஒப்பான சிறப்பும் அதில் காணப்படுகிறதாம். அச்சிற்பம், பத்தாம் நூற்றாண்டிலேற்பட்டிருக்கலாமென்று யூகிக்கப்படுகிறது. சைவ, வைணவ சமயங்களுக்குரிய ஆண், பெண் தெய்வச்சிலைகளும், அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர்போன்ற தமிழ் நாட்டுத் துறவிகளின் உருவங்களும், செம்பினால் செய்யப்பட்டு, குறிப்பிடத்தக்க சிறப்பு பெற்று விளங்குகின்றன. "சைவத் துறவிகளின் உருவங்களிற் சில, தென்னிந்திய மாதிரிகளைவிட மேன்மையானவை; ஆனால் எல்லா உருவங்களும் திராவிட நடையில் உள்ளன".§ இவை, பொலோன்னருவாவில் காணப்பெற்றவை யாகும்; 1300-க்கு முற்பட்ட காலத்தில் தோன்றியவையாகக் கருதப்படுகிறது.

---

† Codrington. op. Cit. p. 67.
‡ Coomaraswamy. op Cit, p. 167.
§ do ,, ,, ,, ,,

## பகுதி 10.

### பர்மா.

சுமார் கி. மு. 500-ல், மேல் பர்மாவில் மங்கோலிய இனத்தைச்சேர்ந்த, பியஸ் (Pyus) என்பாரும் பிற திபெத்திய-பர்மியக் கூட்டத்தினரும் காணப்பெற்றனர். கீழ்பர்மாவில், மாண் எனப்படும் ஒரு பர்மா கூட்டத்தினர் (தலேங் எனவும் அழைக்கப்பட்டனர்) வாழ்ந்து வந்தனர். சையாமின் தாய் கூட்டத்தினருடன் இணைந்த ஷாண் மக்கள் போன்ற வேறு சிலரும், பிற்காலத்தில், பர்மிய இனத்தில் கலந்தனர். சுமார் கி. பி. முதல் நூற்றுண்டில் இந்தியக் குடியேற்றங்கள் அல்லது இந்நாட்டினரின் "பிரபாவம்" பர்மாவின் பல பகுதிகளிலும் ஏற்பட்டதாக அறியப்படுகிறது. தகௌங், ப்ரோம், தடோன் (Thaton) ஆகிய இடங்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன. ஐந்தாம் நூற்றுண்டில், இறுதியான இரு இடங்களிலும், சைவ, வைணவ, புத்த (மகாயானமும், ஈனயானமும்) சமயங்கள் செழிப்புற்று விளங்கின.

வட இந்தியாவிலிருந்து நிலவழியாகவும், தென்னிந்தியாவிலிருந்து கடல்வழியாகவும், இந்தியக்கருத்துகள் பர்மாவில் பரவின. ஐந்தாம் நூற்றுண்டில் புத்தகோஷன், தடோனுக்குச் சென்று, ஈனயானத்தை உறுதிப்படுத்தினன். எட்டாம் நூற்றுண்டில் ப்ரோமில் விக்கிரம குலம் ஆட்சிபுரிந்து வந்தது. ஒன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் அக்குலம் வீழ்ச்சியுற்று, ஐராவதி, சிந்த்வின் ஆறுகள் கூடுமிடத்தில் 849-ல் பாகன்நகர் தோற்றுவிக்கப்பட்டது. அனவ்ரதன் என்பானுல் ஏற்படுத்தப்பெற்ற குலம் 1044-முதல் 1287-வரை ஆட்சி புரிந்தது. பிந்திய ஆண்டில், குப்ளேகான் பாகன்நகரை அழித்தான். அனவ்ரதனின் குலத்தினர், பர்மாவை ஒற்றுமைப்பட்ட நாடாகச் செய்து, பல கோயில்களையும் எடுத்தனர். ஈனயான சமயம், அவர்களால் தூய்மையாக்கப்பட்டது. பாகனின் கலைச்சிறப்பும் ஓங்கியது. அழிபாடுகளிலிருந்து 5000-க்கு மேற்பட்ட கோயில்களை அவர்கள் கட்டினரென்று அறியலாகும். பெரும்பான்மையானவை, செங்கல்லால் ஆக்கப்பெற்றவை. சிலவற்றில், புகழ்வாய்ந்த சிற்பங்களும், சுவர்

ஓவியங்களும் காணப்பெறும். புத்தரின் வாழ்க்கையும் அவற்றில் விளக்கப்படுகிறது. இந்தியாவின் "பிரபாவம் அவற்றிலிருந்து தெளிவாக உணரப்படுகிறது. ஆனால் பதின்மூன்றும் நூற்றாண்டிலிருந்து அது குறையலாயிற்று.

## பகுதி 11.

### திபெத்.

**லாமெசம்:-** திபெத்மக்கள், கி. பி. ஏழாம் நூற்றாண்டு வரை, வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட நாகரிக நிலையில் வாழ்ந்தனர். அவர்கள் கொடுங் கொள்ளையிடுகிற, நாகரிக மற்றோராயும், மனிதனை உண்ணும் மக்களினத்தில் புகழ் பெற்றோராயும், மொழியை எழுத அறியாதவராயும்...... ...‡ விளங்கினர். சீனாவின் டாயிசம் (Taoism) என்ற சமயத்திற்கு பல பண்புகளில் ஒப்பான, பாணமதம் (Bon) அவர்களால் பின்பற்றப்பட்டது.§ கி. பி. ஏழாம் நூற்றாண்டில், ஸ்ரோன்ஸான்கம்போ (Sron Tsan Gampo) என்ற அரசன் திபெத்தில் புத்தசமயத்தைப் புகுத்தினான். திபெத்திய மொழி எழுதும் முறையில் அமைந்தது. அவ்வரசனின் மனைவியர் சீனாவையும், நேப்பாளத்தையும் சேர்ந்தோராவர். அவர் புத்த சமயத்தினராதலால் அரசனும் அதனைப்பின்பற்ற நேர்ந்தது. சுமார் 650-ல் அவனிறந்தபின் சுமார் ஒரு நூற்றாண்டுவரை, அப்புதிய சமயத்திற்கு உள்நாட்டில் எதிர்ப்பு காணப்பட்டது. டெட்ஸான் (Detsan) என்ற மன்னன், அவனாசிரியனை சாந்தரட்சிதனின் அறவுரையின்படி, பத்மசாம்பவன் என்பானை. 747-ல் திபெத்திற்கு அழைத்தனன். பிந்திய இருவரும், நாலந்தா பல்கலைக்கழகத்துடன் இணைக்கப்பட்டவர்களாவர். அதன் விளைவாக, லாமெஸம் என்ற சமயம் திபெத்தில் தோன்றியது. இதன் கொள்கைகள், திபெத்தின் பண்டைய மதம், சைவசமயம், மகாயான புத்தசமயம் முதலிய பலவற்றினின்று எடுக்கப்பெற்ற சிற்சில கருத்துக்களுடன் மாயவித்தையும் இணைக்கப்பட்டு, வெளியிடப்பட்டவையாகும். பத்மசாம்பவன், திபெத்தில் இரண்டாவது புத்தர் என்று இன்று வழிபடப்படுகிறார்.

---

‡ Waddell. The Buddhism of Tibet or Lamaism 1934. p. 19.

§ Waddell op. Cit. p. 19.

## திபெத்தின் அகஸ்தஸ்.

ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பாதியில் வாழ்ந்த ரல்பசன் என்ற அரசன், 'திபெத்தின் அகஸ்தஸ்' என புகழப்பெறுகிறான். அவன், புத்த சமய சட்டங்களையும், நாகார்ச்சுனனின் நூல்களையும், வேறு சிலவற்றையும் திபெத்திய மொழியில், மொழி பெயர்க்க, பல இந்தியரையும், திபெத்தியரையும் அமர்த்தினான். பொதுச் செய்திகளை, காலமுறையாகக் குறிப்பிடுவதற்கான திட்டத்தையும் அவன் தொடங்கினான். விக்ரமசீலா பல்கலைக் கழகத்தின் துணைவேந்தனாயிருந்த அடீஸா (Atisa) பல முறைகள் அழைக்கப்பட்டதற் கிணங்கி, 1038-ல் திபெத் சென்று, லாமெஸத்தைச் சீர்திருத்தி அமைத்த பின்னர், 1053-ல் அவன் இறக்கும்வரை, அதன் முன்னேற்றத்தைப் பார்த்திருந்தார்.

லாமெஸம், இந்தியாவிலிருந்து பெறப்பட்டபோதிலும், அது, திபெத்தில் புதிய மாறுதல்களை அடைந்தது குறிப்பிடத் தகும். "திபெத்தின் கோயில்களில் காணப்பெறும் வியப்பான சீற்றம் நிறைந்த பேயுருவங்களைப்பார்க்கும் ஒருவன், இந்தியாவிலிருந்து அறியப்பட்ட சிற்பக்கலையின் நாகரிகக் குறைவான போலிப்புனைவை கலைஞர் அதிக கோரமாகச் செய்துள்ளனர் என்று முதலில் கருதக்கூடும். ஆனபோதிலும், திபெத்திய கட்டடக்கலையின் மாட்சிமை மற்றொன்றையும் மனதில் பதிய வைக்கும். அதன் நடையின் எளிய, அணியற்ற தன்மையும், உறுதியான அகன்ற, சிற்பவேலையற்ற சுவர்களும், இந்தியாவை விட மிகுதியாக எகிப்தை நினைவூட்டும்."‡

## பகுதி 12.

### நடு ஆசியா.

நடு ஆசியாவில், ஆக்ஸஸ், டாரிம் (Tarim) ஆறுகளின் பள்ளத்தாக்குகளும் அடங்கும். பிந்தியபகுதி, சீன துருக்கிஸ்தானம் அல்லது செரிந்தியா எனப்பெயர்பெறும். இஃது பெரும்பான்மையில், ஒரு சில இடைச் சோலைகளுடன் கூடிய

‡ Eliot op. Cit III. p. 345. (Translation)

பாலைவனமாகவே, இப்பொழுது இருக்கின்றது. ஆனால் பண்டைக் காலத்தில் இப்பகுதி, பல சமயங்களும், கலைப் பண்புகளும் கூடிப்பரவிய ஒரு சிறப்பான இடமாக விளங்கியது. 1891-ல் குச்சா என்றவிடத்தின் அண்மையில் குப்தர் கால எழுத்துக்களில் உள்ள வடமொழி மருத்துவநூல் கண்டுபிடிக்கப்பட்டது. அஃது நான்கு அல்லது ஐந்தாம் நூற்றுண்டுக்கு உரியது. இதனால் பழம்பொருள் ஆராய்ச்சி, ஆண்டு விரைவுபடுத்தப்பட்டது. அந்நூலின் பௌத்த ஆசிரியன், வாழ்நாளை நீடிப்பதற்காகக் கூறும் பல குறிப்புகள் அதில் காணப்பெறும் மேலும், வெள்ளைப்பூண்டின், மருந்து சார்ந்த உயர்வு வற்புறுத்தப்படுகிறது. பேதன் (Bheda), சுஸ்ருதன் முதலிய மருத்துவ நூலாசிரியர்கள், மேற்கோள் காட்டப் பட்டுள்ளனர். 1892-ல் குட்டானம் (Khotan) அண்மையில் பிரெஞ்சு நாட்டுப் பழம்பொருள் ஆராய்ச்சிக் குழுவினால், காருஷ்டி எழுத்துக்களுடன் கூடிய பிராகிருதமொழியில் உள்ள 'தம்மபதா' கண்டுபிடிக்கப்பெற்றது. அது, கி. பி. இரண்டாம் நூற்றுண்டுக்கு உரியதாகும் என்று கருதப்படுகிறது. இந்திய அரசியலாரின் சார்பில், அறிஞர் A. ஸ்டெய்ன், முறையாக ஆராய்ச்சி தொடங்கினர். ஜெர்மன், ருஷ்ய, ஜப்பானிய, பிரெஞ்சு பழம்பொருள் ஆராய்ச்சிக்குழுவினரும், அப்பகுதியில் ஆராய்ச்சி நடத்தலாயினர்.

## கையெழுத்துப்படிகளும், பழம்பொருட் சின்னங்களும்.

கண்டுபிடிக்கப்பட்டுள்ள, கையெழுத்துப்படிகளும், கல்வெட்டுக்களும் பனிரெண்டு மொழிகளில் உள்ளன. அவற்றில் இரண்டு புதிய மொழிகள். ஒன்று, சகரின்மொழி, மற்றயது குச்சா, டர்பான் (Turfan) பகுதிகளில் பேசப்பட்ட தொக்காரிய மொழி. இம்மொழி, கிரேக்க இலத்தீனிய மொழிகளுடன் தொடர்புகொண்டதாகக் கருதப்படுகிறது. பனை ஓலைகள், மர வகைகள், மரத்தாலும், மூங்கிலாலும் ஆகிய தகடுகள், தோல், தாள் முதலிய பொருள்களும் அப்பகுதியில் காணப்பட்டுள்ளன. புத்தசமய ஆகமங்களைப்பற்றிய இலக்கியமும், வடமொழி இலக்கண, நாடக இலக்கியப் பகுதிகளும் கிடைத்

திருக்கின்றன. சிறப்பாக அசுவகோஷனின் "சாரிபுத்திர பிரகரணம்" (கனிஷ்கன் காலத்துக்குரியது) குறிப்பிடத்தக்கது. தவிர பௌத்ததூபிகள், மடங்கள், சுவரோவியங்களுடன் கூடிய குகைகள், ஓவியங்களைப்பெற்ற, பட்டினுலாகிய தாள்கள் முதலியன, கண்டுபிடிக்கப்பட்ட சின்னங்களிற் சிலவாம். நடு ஆசியக்கலையில், காந்தாரம், இந்தியா ஆகிய நாடுகளின் 'பிரபாவம்' (**Influence**) காணப்படுகிறது.

### சிறப்பான இடங்கள்.

கலைப்பண்புகள் சிறப்புற்று விளங்கிய இடங்களில், காஷ்கர், குச்சா, டர்பான், குட்டானம், மீரான் ஆகியன குறிப்பிடத்தக்கன. "இந்தியக் கல்வியறிவின் களஞ்சியம்" எனப் புகழப்பெற்ற, குமாரவிசயன் என்ற ஈனயான சமயத்தவன், (குச்சாவிலிருந்தவன்) இந்தியாவிலிருந்து அங்கு போந்தோனின் மகன் ஆவன். காச்மீரநாட்டில் அவன் கல்வி கற்று, பின் குச்சா சென்றனன். பின் மகாயானத்தைத் தழுவலாயினன். 383-ல் அவன் சீனுவுக்கு ஒரு கைதியாகக் கொண்டுபோகப்பட்டான். அங்கு கல்வித்துறை ஆணையாளராக அமர்த்தப்பட்டு, மொழி பெயர்க்கும் தொழிலில் அரிய தொண்டாற்றினன். அவன் வேதங்களையும், சாத்திரங்களையும் மிகுதிபாகக் கற்றுணர்ந்திருந்தான். சீனு இந்தியாவுடன், நடு ஆசியா வழியாக அறிவுத் துறையில் தொடர்புகொண்டதென்று, குமாரவிசயனின் வாழ்க்கையிலிருந்து அறியக்கிடக்கிறது. நடு ஆசியாவில் ஈனயான, மகாயான புத்த சமயங்களுடன், சொராஸ்திரிய மதமும் கிறித்தவ மதமும் நெருங்கிய தொடர்புகொண்டு விளங்கின.

## பகுதி 13.

### சீனு.

சீனுவில் புத்த சமயம், கி. பி. முதல் நூற்ருண்டில் (கி. பி. 67-ல் அல்லது அதற்கு முன்னர்) புகுத்தப்பட்டதெனினும், இரண்டு நூற்ருண்டுகளுக்குப் பின்னர்தான் அது சிறப்புற்று விளங்கியது. குச்சாவின் குமாரவிசயன், நான்காம்

நூற்றுண்டில் அந்நாட்டில் அரிய தொண்டுகளாற்றினன். அவன்கீழ் 3000-மாணவர்கள் இருந்தனராம். இப்பொழுதுள்ள 50-மொழிபெயர்ப்பு நூல்கள், அவனுல் இயற்றப்பட்டனவென்று கூறப்படுகிறது. ஐந்தாம் நூற்றுண்டின் தொடக்கத்தில், (424) காச்மீரநாட்டு குணவர்மன், ஜாவாவிலிருந்து சீனுசென்று, அங்கு நூல்களை மொழிபெயர்த்தும், ஓவியங்கள் வரைந்தும், புத்தசமயத்தொண்டாற்றி வந்தனன். அந்நூற்றுண்டின் பிற்பாதியில் பௌத்தக்கலை வளர்ச்சியடைந்தது. 471-ல் புத்தரின் மாபெரிய உருவச்சிலை ஒன்று செய்யப்பட்டது. "சீனுவின் அசோகன்" எனப்புகழப்பெற்ற ஊ-டி (Wu-Ti) என்ற பேரரசன் (502—549) புத்த சமயப்பற்றின் காரணமாக, விலங்குகள் கொலைசெய்யப்படுவதைத் தடுத்து ஒரு ஆணையிட்டனன். புத்தசமயக் கொள்கைகளை விளக்கிக்கொண்டு அவன் ஒரு துறவி முறையில் வாழ்ந்தான். இறைச்சி உணவு அவனுல் நீக்கப்பெற்றது. சுமார் 520-ல் போதிதர்மன் என்ற இந்தியத் துறவி அப்பேரரசனுல் வரவேற்கப்பட்டான். அத்துறவி, "தியானம்" அல்லது உள்ஆராய்ச்சியின் உயர்வை வற்புறுத்தியும், புனித நூல்களைப் படிப்பதனுலும், மொழி பெயர்ப்பதனுலும், கோயில்கள் கட்டுவதாலும், பயன் யாதும் இல்லை என்றும் அறவுரை கூறினன். பேரரசன் பெரிதும் ஏமாற்றமடைந்தான். 539-ல் அவனுல் மகதத்திற்கு அனுப்பப்பெற்ற தூதுக்குழு, 546-ல் மிகுந்த கையெழுத்துப்படிகளுடனும், பரமார்த்தன் என்ற அறிஞனுடனும் சீனு திரும்பியது. (பரமார்த்தன், வசுபந்துவின் வாழ்க்கை வரலாற்றை எழுதியவன்.) இந்தியாவிலிருந்து எடுத்துச்சென்ற நூல்கள், இருபது ஆண்டுகளில் அவனுல் மொழிபெயர்க்கப் பெற்றன. தாங் (620—907) சங் (960—1127) குலங்களின்கீழ், சீனக்கலை, இலக்கியம், மெய்விளக்க அறிவு யாவும், புத்த சமயத்துடன் தொடர்பு கொண்டு உருவாயின. சங் வமிச ஆட்சியில், சீனுவின் ஓவியக் கலையில் பௌத்தக் கலைப்பண்பு சிறப்புற்றிருப்பது குறிப்பாக நோக்கத்தக்கது. போதிதர்மன், ஆழ்ந்து சிந்தனை செய்வதற்கேற்ற ஒரு கலைக்கூடத்தை நிறுவியிருந்தான். கன்பூஷியஸ்ஸின் நூல்களுக்கு விரிவுரை எழுதிய சூ-ஹ்ஸி (Chu-Hsi) (1130—1200) என்ற அறிஞன் சிறிதளவு

ஊழ்வினைக் கொள்கையை ஏற்றுக்கொண்டான். அவன், கொள்கைகளில் ஓரளவு இந்தியக்கருத்துக்களைக் காணலாம். 972-ல் அச்சிடப்பெற்ற பல்பொருள் தொகுதியான சீனத்திரி பீடகம், (பேரரசனின் முன்னுரையுடன் கூடியது) புத்தசமயத்தின் எட்டு பிரிவுகளை விவரித்துரைப்பதுடன், சாங்கிய, வைசேஷிக தத்துவங்களையும், இந்தியாவில் மூலங்கள் கிடைக்கப்பெறாத நிகண்டு நூல்களையும்பற்றிக் குறிப்பிடுகிறது.

## பகுதி. 14.

### கொரியா.

கி. பி. 372-ல் புத்த சமயம் கொரியாவில் புகுந்தது. சுமார் 450-ல் "மும்மணிக் கொள்கை (திரிரத்னம்) நாடு முழுவதிலும் பரவி நிலைபெற்றது. ஆறும் நூற்றுண்டின் இடைப் பகுதியில் ஒரு சமய நிலையம் நிறுவப்பட்டு, ஒரு அரசனும், ஒரு அரசியும், துறவுக்குரிய ஆடைகளை அணிந்திருந்தனர். ஆறும் நூற்றுண்டிலிருந்து பத்தாம் நூற்றுண்டு வரை, புத்தசமயம், கொரியாவில் செழிப்புற்று விளங்கியது. 538-ல் கொரிய மன்னனொருவன், ஜப்பானியப் பேரரசனின் நட்பைப்பெறுவதற்காக, ஒரு புத்தர் சிலையையும், சில பௌத்த நூல்களையும் அனுப்பினன். பின்வரும் செய்தியும் அவற்றுடன் அனுப்பப்பட்டது. "சட்டங்கள் யாவற்றிலும் மிகச்சிறந்ததும், நம்பிக்கை உடையவருக்கு அளவற்ற நன்மையைக் கொடுக்கக் கூடியதுமான "புத்த தர்மம்" இந்தியாவுக்கும் கொரியாவுக்கு மிடைப்பட்ட எல்லா நாடுகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது."

## பகுதி 15.

### ஜப்பான்.

புத்தசமயம் ஜப்பானில் கி. பி. 552-ல் (அல்லது அதற்கு முன்னர்) புகுத்தப் பெற்றது.‡ "ஜப்பானின் கான்ஸ்டண்டைன்" எனப்புகழப்பெற்ற ஷோடகு (Shotoku) (593-622)

‡ Eliot, op, Cit III p. 243.

மன்னன், அதனை அரசியலாரின் சமயமாக்கினன். அவன் மக்களுக்கு வானநூல், மருத்துவம் முதலியவற்றைக் கற்பிப்பதற்காக கொரியாவிலிருந்து துறவிகளைப் பெற்றான். புத்த சமயத்தைக் கற்றறிந்துகொள்ளும் பொருட்டு ஜப்பானிய மாணவர்கள், சீனவுக்கு அனுப்பப்பட்டனர். "ஜப்பானின் அந்தண மதகுரு" என்று சிறப்பிக்கப்பட்ட போதிசேனன் என்ற இந்தியத் துறவி, சம்பா நாட்டிலிருந்து ஜப்பானுக்குச் சென்று, 736-முதல் 760-வரை அரும்பணியாற்றினன். அந் நூற்றாண்டில், நாடு முழுவதிலும் புத்தசமயம் உறுதியாக நிலை பெற்றது. அச்சமயக்கருத்துகள், ஜப்பானில், கலையும், மெய் விளக்க அறிவும் வளர்ச்சியடைய உதவின. ஒன்பதாம் நூற்றாண்டில், சமயத்துறையில் பல உட்பிரிவுகள் தோன்றின. அவற்றில் பெரும்பான்மையானவை, மகாயானக் கொள்கையைப் பின்பற்றியவை. முடிவில், பண்டைய ஷின்டோ மதம் மாறுபாடுகளடைந்து விளங்கலாயிற்று. பழைய கடவுளர், புத்தரின் திருப்பிறவிகள் என்று கருதப்படலாயினர்.

## பிழைத்திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | தலைப்பு | இத்திய | இந்திய |
| 49 | 20 | கோகணம் | கோக்னன் |
| 52 | 3 | கர்ச்கி | கார்க்கி |
| 57 | 18 | பேறறிஞர்கள் | பேரறிஞர்கள் |
| 256 | 27 | மயூரவர்மன் | மயூரசர்மன் |
| 275 | தலைப்பு | இறுதிக்கலாம் | இறுதிக்கால |
| 279 | Foot Note | Yuanchawang | Yuanchwang |
| 287 | 12 | இன்னும் | இன்றும் |
| 307 | 9 | குத்தணிமாதா | குட்டனீமத |
| 345 | 25, 27 | வாக்பாடர் | வாக்படர் |
| 362 | | காலசூரிமரபினர்<br>காலசூரியர் | களச்சூரியர் |
| 374 | Foot Note | Liteature | Literature |
| | ,, | Sera | Sena |
| 429 | 17 | பாண்டிரின் | பாண்டியரின் |